

ந. சிதம்பர சுப்பிரமணியன்

# மண்ணில் தெரியுது வானம்

வாசகர் வட்டம்

# MANNIL THERIYUTHU VANAM

(Novel)

by

N. Chidambara Subramanian

bookventure
Madras-17

வாசகர் வட்டப் பிரசுரம் – 25

இப் பதிப்பு "வாசகர் வட்டம்" — சிறந்த தமிழ்ப் புத்தகச் சங்கத்தின் அங்கத்தினர்களுக்கென — அதன் பதிப்பாளரான "புக்வென்சர்" (bookventure) நிறுவனத்தினரால் நெ. 14, தணிகாசலம் செட்டி ரோடு, தியாகராய நகர், சென்னை-17 — என்ற முகவரியில் வெளியிடப்பட்டது.

அச்சிட்டவர்கள் :

யுனைட்டெட் பிரின்டர்ஸ்

3-27, பிராட்வே, சென்னை-1

மேலுறை, ஓரத்தாள் ஓவியம் :

கலாஸாகரம் ராஜகோபால்





தனிப் பிரதி விலை : ரூ 7-50

மே, 1969

# சமர்ப்பணம்

பணம், பதவி, புகழ்,

ஒன்றையுமே எதிர்பார்க்காமல்,

தங்கள்

உடல், பொருள், ஆவி

மூன்றையும்

தேசத்திற்கே அர்ப்பணித்த

காந்தியுக

தேசபக்தர்களுக்கு

# முன்னுரை

சுமார் ஐம்பது வருஷங்களிருக்கும். நான்காம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்ததாக ஞாபகம். பள்ளியிலிருந்து வீடு திரும்பும் வழியில், ஹிந்து மதாபிமான சங்கம் இருந்தது. அது தேசீய, கலாச்சாரத் துறைகளில் அரிய காரியங்களைச் செய்து வந்தது. இந்தச் சங்கம் பாரதியாரால் பாடப்பெற்ற பெருமை வாய்ந்தது. இந்தச் சங்கத்தில் ஏதோ நிகழ்ச்சி; கூட்டமாயிருந்தது. நானும் என் நண்பனும் அங்கு என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க உள்ளே சென்றோம். அன்று என்ன விசேஷம் என்பது ஞாபகம் இல்லை. ஆனால், அங்கு மாட்டப்பட்டிருந்த பெரிய படத்தைச் சுட்டிக் காட்டினான் என் நண்பன். "அதாண்டா, மகாத்மா காந்தி" என்றான். படத்தைப் பார்த்தேன். சௌகார் பேட்டையில், வயது வந்த மார்வாடிகள், போட்டுக்கொள்வார்களே, அப்படிப்பட்ட பெரிய தலைப்பா; விறுவிறுப்பில்லாத மீசை; நீண்ட அங்கி; அதற்குமேல் ஒரு உத்தரீயம். 'இந்த காந்தி யார்? அவர் என்ன செய்திருக்கிறார்?' என்பது எனக்கும் தெரியாது; என் நண்பனுக்கும் தெரியாது. ஆனால், 'மகாத்மா' என்ற வார்த்தையின் பொருள் அப்பொழுதே எனக்கு நன்கு தெரியும். ஆத்மா, ஜீவாத்மா, பரமாத்மா, தர்மாத்மா, மகாத்மா — இந்த வார்த்தைகள் அடிக்கடி கேட்ட வார்த்தைகள்தான்; அதுவும் மகாத்மா என்ற வார்த்தை மிகவும் பழகிய வார்த்தை. தெய்வாம்சம் கொண்ட மகான்களைக் குறிக்கும் வார்த்தை என்பது, எனக்கு நன்கு தெரியும். நான் முதன் முதலாக அவரைக் கண்டபொழுதே, காந்தியைக் காணவில்லை; மகாத்மாவைத்தான் பார்த்தேன்.

அதற்குப் பிறகும்கூட நான் காந்திஜியைப்பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ளவில்லை; தெரிந்து கொள்ள

வாய்ப்புமில்லை. ஆனால் ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு, காந்தியைப்பற்றி அறிந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. காந்தி பாகவதர் என்பவர், சிப்ளாக்கட்டை, பின் பாட்டு முதலிய கதாகாலட்சேப அம்சங்களுடன், 'மகாத்மா காந்தி சரித்திரம்' என்று காலட்சேபம் செய்தார். (இவரைப்பற்றி பின்னர் ஒன்றும் தெரியவில்லை.) கதா காலட்சேபம் மிகவும் உயர்ந்த முறையில் இருந்தது. அந்தக் காலத்திலேயே நான் ஹரிகதைகள் ஏராளமாகக் கேட்டிருந்தேன். துருவ சரித்திரம், குசேல உபாக்யானம், அம்பரீஷ சரித்திரம், நந்தன் சரித்திரம், இவற்றை எல்லாம் அனுபவித்துக் கேட்டிருக்கிறேன். காந்திஜியின் சரித்திரத்தைப் பாகவதர் கதை சொன்ன முறை நெஞ்சை உருக்கியது. ராமதாஸ், மாணிக்க வாசகர் போன்ற பக்தர்கள், கடவுளுக்காகச் சிறையில் கஷ்டப்பட்டார்கள். ஆனால் காந்தியோ, மக்களுக்காகச் சிறை அனுபவித்துக் கஷ்டப்பட்டார். சிறை அனுபவம் பொதுவானதுதானே. 'பக்தராய்ப் பணிவார்கள் எல்லோர்க்கும் அடியேன்; பரமனையே பாடுவார் அடியார்க்கு அடியேன்' என்றார் சுந்தரர். ஆனால், மகாத்மா காந்தியோ, தாகூர் சொன்னாரே, Here is thy foot-stool and there rest thy feet where live the poorest and lowliest and lost (உன்பாத கமலங்கள், எங்கே ஏழைகள், தாழ்த்தப்பட்டவர்கள், தகுதியற்றவர்கள் இருக்கிறார்களோ அங்கேதான் இருக்கின்றன) — என்றபடி கஷ்டப்பட்ட மக்களை, தரித்ர நாராயணர்களாகவும், ஹரிஜனங்களாகவும் கண்டார் அல்லவா! ஆகவே, மக்களுக்காக அவர் பட்ட கஷ்டங்களும், தியாகங்களும் நெஞ்சை உருக்கின. புராண பக்தர்களைப்போல, உன்னத தர்மங்கள், வாழ்க்கையில் நடைமுறையில் கையாளும் பெரியவர் என்பதை அன்றே தெரிந்து கொண்டேன்.

அதற்குப் பிறகு, ஏழெட்டு வருஷங்களுக்குப் பிறகு, மகாத்மா காந்தி அவருடைய சுற்றுப் பயணத்தின்போது, காரைக்குடிக்கு விஜயம் செய்தார். அப்பொழுது மகாத்மாவை நேரில் காணும் பாக்யம் கிடைத்தது. அன்று, அவருடைய முண்டாசு போய்விட்டது; சட்டை போய்விட்டது; உத்தரீயம் போய்விட்டது, பிற்காலத்தில் எல்லோருக்கும் பழகியிருக்கிறபடி அன்று தோற்ற மளித்தார். இடுப்பில் கச்சம் ஒன்றுதான். 'அரை நிர்வாணப் பக்கிரியாக' அன்று காட்சி அளித்தார். அவரைப் பார்த்த உடனேயே என் உடல் புல்லரித்தது. எதற்கோ நிதி திரட்டிக்கொண்டிருந்தார். எல்லோரும் அணிந்திருந்த நகைகளைக் கொண்டுவந்து அவரது காலடியில் கொட்டிக் கொண்டிருந்தார்கள். நான், அவரிடம் கொட்டிக் கொடுக்கும்படியாக ஒன்றும் நம்மிடம் இல்லையே என்று வருந்தினேன். அவரிடம் ஏதோ ஆகர்ஷண சக்தி இருப்பதைக் கண்டுகொண்டேன். மனிதர்களின் மனங்களை மாற்றும் ஓர் அற்புத மந்திரக் கோலும் இருக்கிறது போலும் என்றும் நினைத்துக் கொண்டேன்.

ஆனால், இந்த மந்திரக்கோலின் முழு மகத்வத்தையும், உப்பு சத்யாக்ரகத்தின் போது, கண்கூடாகக் காண முடிந்தது. 'மகாத்மா காந்திக்கு ஜே' என்பது பெரிய அற்புதத்தை விளைவிக்கும் மந்திர சக்தியாகத்தான் இருந்தது. இந்த மந்திரம் இந்திய மக்களுக்கு ஒரு புதிய விழிப்பைக் கொடுத்து எழச்செய்தது. 'இராமன் ஆண்டால் என்ன, இராவணன் ஆண்டால் என்ன, நம் வேலையை நாம் கவனிப்போம்' என்ற மனப்பான்மை குடிகொண்டிருந்த மக்களை, உணர்ச்சி மயமாக்கி, எல்லா விதத் தியாகங்களையும், செயற்கரிய காரியங்களையும் செய்யுமளவு, அவர்களை வீரர்களாகவும், தீரர்களாகவும்,

உயர்த்திய அற்புத ஜால வித்தையை இந்த மந்திரவாதி தினந்தோறும் செய்துவருவதைப் பார்த்துப் பார்த்து, அதிசயித்திருக்கிறேன்.

அதன் பிறகு, 1933-34ல், சென்னைக்கு நிரந்தரமாக வந்தபிறகு, எழுத்தாளர்களுடனும் பத்திரிகையாளர்களுடனும், தொடர்பு கொண்ட காலத்து, மேலும் மேலும் மகாத்மாவின் கருத்துக்களிலும், வாழ்ந்த வழி முறையிலும் என் மனத்தைப் பறிகொடுக்க ஆரம்பித்தேன். அப்பொழுது என்னை எழுத்து உலகத்திற்குள் இழுத்துச் சென்ற நண்பர்கள் சிறந்த தேச பக்தர்கள், காந்தி பக்தர்கள், சிறை சென்றவர்கள், அடி வாங்கியவர்கள், வாழ்க்கை வசதியை வேண்டாம் என்று உதறியவர்கள், வறுமையையும், கஷ்டத்தையும் விரும்பி மேற்கொண்ட தியாகிகள். முக்கியமாக, தி. ஜ. ர., வ. ரா., கு. ஸ்ரீனிவாசன், சொக்கலிங்கம், சங்கு சுப்ரமண்யன், ஏ. என். சிவராமன், பி. எஸ். ராமய்யா, ரா. நா. போன்றவர்கள், அரசியல் நெருப்பில் முக்குளித்துப் பத்திரிகைக்கு வந்தவர்கள். இவர்கள், அன்போடும், ஆதரவோடும், தங்கள் சங்கப் பலகையில் இடம் கொடுத்து என்னைச் சேர்த்துக் கொண்டார்கள். இவர்களிடம், தினந்தோறும் திருவல்லிக்கேணிக் கடற்கரையில், நான் கேட்டதும் கற்றதும், என்னை உருவாக்கின. அந்த அனுபவங்கள் நான் மறக்க முடியாதவை. என் இதயப் பொக்கிஷத்தில் வைத்து நிரந்தரமாகப் போற்றப்படுபவை.

காந்திய யுகத்தில், நான் அனுபவித்ததையும், கண்டதையும், இந்த நாவலில் காட்ட முயன்றிருக்கிறேன். காந்தி இருந்த காலம், நம் சரித்திரத்தில் ஒரு பொற்காலம். என் வாழ்விலும் இது ஒரு பொற்காலம்தான். மகாத்மாவும் நானும், ஒரே காற்றை ஒரே சமயத்தில் சுவாசித்துக் கொண்டிருந்தோம் என்பதே எனக்குப்

பெருமையாகத்தானிருக்கிறது. இராமன் உன்னத தர்மங்களை நடத்திக் காட்ட வந்த அவதார புருஷன், மகாத்மா காந்திஜியின் இலக்ஷிய புருஷன். அவர் மண்ணிலே வானத்தைக் கொண்டுவர ஆசைப்பட்டு அதற்கு ராம ராஜ்யம் எனப் பெயரிட்டார். இப்படிப்பட்ட இராமனை, வால்மீகி மனிதனாகவும், கம்பன் கடவுளின் அவதாரமாகவும் உருவாக்கியிருக்கிறார்கள் என்று சொல்வார்கள். ஆனால், நான் காந்திஜியை வெறும் மனிதனாக ஒருபொழுதும் பார்க்கவில்லை. மகாத்மாவாகவேதான் தோற்றமளித்தார். தெய்வாம்சம் கொண்ட ஓர் அவதார புருஷனாகவே தோன்றினார். யாரிடமெல்லாம் நற்பண்புகள் மேலோங்கிக் குவிந்து கிடக்கின்றனவோ அவர்களைக் கடவுளின் அம்சமாகக் கொள்வது நம் நாட்டு மரபு. அறுபத்துமூன்று நாயன்மார்களையும், ஆழ்வார்களையும் கோவில்களில் தெய்வமாகக் கொண்டாடவில்லையா? ஆனால், இந்த காந்தி என்ற நாயனாரோ, ஆழ்வாரோ, தம்மைப்போலவே பிறரையும் உயர்த்தினார். ஆகவே, அவரிடம் எனக்கு பக்தி ஏற்பட்டதில் ஆச்சரியமில்லையல்லவா?

ஆனாலும், அவர் நமக்கு உபதேசித்த சத்யம் அகிம்சை என்பன போன்ற தர்மங்கள், அவர் புதிதாகக் கண்டுபிடித்த உண்மைகள் அல்ல; மோட்ச சாம்ராஜ்யத்தை நோக்கி ஏறுவதற்கு ஏற்ற படிகளாக ஒப்புக்கொள்ளப்பட்ட ஸனாதன தருமங்கள்தான் அவை. ஆனால் மோட்சம் என்பது அவனவன் தனித்தனியாக அடைய வேண்டிய இலட்சியம். ஆனால், மகாத்மாவோ தாம் மாத்திரம் அதை அடைய விரும்பவில்லை. அவருக்குக் கிடைப்பது எல்லோருக்கும் கிடைக்கவேண்டும்; பிறருக்குக் கிடைக்காதது அவருக்கும் வேண்டியதில்லை. அதனால் அவருடைய இலட்சியக் கனவான ராமராஜ்யத்தைப் பொது உடைமையாக்க விரும்பினார்.

இதில்கூட ஒருவர் மகாத்மாவை முந்திக்கொண்டிருக்கிறார். ஆசார்ய ராமாநுஜர், வைஷ்ணவ மந்திரத்தை கோஷ்டிபூரணரிடம் உபதேசம்பெற விரும்பினார். அனேக தடவைகள் பிரார்த்தித்தும், அவர் இசையவில்லை. பதினெட்டாவது தடவை ராமாநுஜர் பிரார்த்தித்த பொழுது, பெரியவர் மனம் இரங்கி மந்திரத்தை உபதேசித்தார். கோஷ்டிபூரணர் சொன்னார்: 'இந்த மந்திரத்தை ஜபிப்பவர்களுக்குத் துக்கம் கிடையாது. பிறப்புக் கிடையாது. வைகுண்ட வாசம் உண்டு. ஆகவே, இந்த மந்திரத்தை பத்திரமாக வைத்துக்கொள். கண்டவர்களுக்கு உபதேசம் செய்து வீணாக்கிவிடாதே' என்று ஜாக்கிரதைப் படுத்தினார்.

ஆனால், ராமாநுஜர், மறுவினாடியே கோவில் கோபுரத்தின்மேல் நின்றுகொண்டு, 'வாருங்கள், வாருங்கள். உங்களுக்கு மோக்ஷத்திற்கு வழி சொல்லுகிறேன். உங்கள் கஷ்டங்கள் தீர வழி சொல்லுகிறேன்' என்று அங்கே கூடிய எல்லோருக்கும் அம்மந்திரத்தை உபதேசித்தாராம். இதை அறிந்த கோஷ்டிபூரணர் அளவிறந்த கோபத்துடன் ராமாநுஜரிடம் வந்து, "என்ன காரியம் செய்தாய். தெய்வீக மந்திரத்தை நடுத்தெருவில் வீசி எறிந்து விட்டாயே. உனக்கு நரகம்தான் சித்திக்கும்" என்று கோபித்தாராம். அப்பொழுது ராமாநுஜர் தாழ்மையுடன், 'தாங்கள் சொன்னீர்கள், இந்த மந்திரத்தை ஜபிப்பவர்களுக்கு மோட்சம் கிடைக்கும் என்றீர்கள். தங்கள் வார்த்தை பொய்க்காது. இவ்வளவு பேர்கள் வைகுண்டம் அடையும்பொழுது, நான் ஒருவன்தானே நரகம் அனுபவிக்கப் போகிறேன். இவர்களுக்காக நான் நரகத்தை அனுபவிக்கிறேன்' என்றாராம்.

அதுபோலவே பிறருக்காக மகாத்மாவும் கஷ்டத்தை மனப்பூர்வமாக ஏற்றார். ஆப்ரிக்காவில், கறுப்பனுக்குக்

கிடைக்க வேண்டிய உரிமைகள் அவனுக்குக் கிடைக்க வேண்டும் என்பதில்தான் அவருடைய சத்யாக்ரக தத்துவம் அவருக்குக் கிட்டியது. அத்துடன் இலட்சியத்தையும், அதை அடைய வேண்டிய முறையையும் நன்ருக இணைத்து, தருமத்திற்கு முரண்பாடில்லாமல், அதை எல்லோரும் அனுஷ்டிக்கும்படியாக முயற்சி கொடுத்தது தான் அவருடைய வெற்றிக்குக் காரணம். இந்தப் பயிற்சியிலேதான், தன்னலமின்மை, புலனடக்கம் போன்ற உத்தம தருமங்களையும், அனுசரிக்கும்படி பழக்கிஞர்.

'எவன் ஒருவன், தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்கிருனே, அவன் அதை இழக்கிருன்' என்பது பைபிள் வாசகம். 'எவன் ஒருவன் பிறர் கஷ்டத்தை ஏற்கிருனே, அவன்தான் சுகப்படுகிருன்' என்று வாழ்ந்து காட்டிஞர் காந்திஜி. ஏனென்ருல் தாம் வேறு பிறர் வேறு என்ற பேதங்களை அறியாதவர். 'யஸ்மின் ஸர்வாணி பூதானி ஆத்மைவாபூத்விஜானத: தத்ரகோ மோஹ: கோசோக ஏகத்வனுபச்யத:' எவன் ஒருவன் எல்லாவற்றையும் தாஞகவே பாவிக்கிருனே, அவனுக்கு ஆசை ஏது? சோகமேது? இதை எல்லாம் ஏட்டுச் சுரைக்காய் ஆக்காமல் வாழ்ந்து காட்டியவர் காந்திஜி.

இந்த வருஷம், காந்திஜியின் நூற்ருண்டு விழாக் கொண்டாடப்படும் வருஷம். எத்தனையோ வருஷங்களாக என் உள்ளத்தில் ஊறியுள்ள இந்தக் கரு, இந்த வருஷம் உருப்பெருகிறது என்பதில் நான் பெருமைப்படுகிறேன். ஆனுல், காந்திஜியின் வாழ்க்கை நெறி, பேசப்படவேண்டிய நெறி அல்ல; அது வாழ்க்கை முறை. வாழ்க்கையிலே நாம் கடைப்பிடிக்க வேண்டிய நெறி. வேத நெறி. ஏசு, மகாவீரன், புத்தன், இவர்கள் வகுத்த தருமங்களை உள்ளடக்கமாகக் கொண்ட ஒரு வாழும் வழி. காந்தி சகாப்தத்தில், அவரும் சரி, அவரைப் பின்பற்றிய

வர்களும் சரி, வாழ்ந்து காட்டிச் சென்ற வாழ்க்கை முறை. இதை நடைமுறையில் வாழ்க்கையில் அனுஷ்டிப்பதுதான் அவர் நினைவுக்கு நாம் செய்யக்கூடிய அஞ்சலி.

இது ஒரு தனி மனிதன் கதைதான்; ஆனால், மகாத்மாவின் கதையும்கூட; தேசத்தின் கதையும் கூடத்தான். காந்தி யுகத்தில், மனிதனும் தேசமும் தனித்து நிற்கவில்லை. மகாத்மாவின் ஒளி இரண்டிலும் பிரகாசித்துக்கொண்டிருந்தது. ஆனாலும், இது பொய்யும் மெய்யும் கலந்த கற்பனைக் கதை. சில சமயங்களில் காந்திஜியின் வார்த்தைகளையே உபயோகித்திருக்கிறேன். சில இடங்களில் காந்திஜி எதைச் சொல்லியிருக்கக் கூடுமோ, அதை எழுதி இருக்கிறேன். காந்தி சகாப்தத்தில் நான் கண்ட அற்புதங்களைக் கற்பனையாகக் கொடுத்திருக்கிறேன். நடந்தது, நடந்திருக்கக்கூடியது எல்லாம் இடம் பெற்றிருக்கின்றன. கற்பனையாக உருவாக்கப்பட்ட பாத்திரங்கள் யாவும் கற்பனையேதான்.

இதைப் பிழை இல்லாமல், சரி பார்க்க மனமுவந்து ஒப்புக்கொண்ட தி. ஜ. ர. வுக்கு என் நன்றி. அவர் எனக்குக் குருஸ்தானம் பெற்றவர். ஆகவே, அவருக்கு இருமடங்கு நன்றி.

பதின்மூன்றாவது அத்தியாயத்தில் நான் சேர்த்திருக்கும், கஸ்தூரிபாவின் பெட்டி திருட்டுப்போன கதையை 'நவஜீவன்' பதிப்பகத்தாரின், வெளியீடான, 'பாவும் பாபுவும்' என்ற தலைப்பில் முகுல்பாய் கலார்த்தி தொகுத்தளித்த புத்தகத்திலிருந்து எடுத்துக் கையாண்டிருக்கிறேன். அவர்களுக்கு என் நன்றி.

பதினான்காம் அத்தியாயத்தில், கையாளப்பட்ட விஷயங்கள் பெரும்பாலும், முக்யமாக, ஆசிரமத்து மரத்தை வெட்டிய துஷ்டனைப் பொதுமக்கள் தடுத்த விஷயமும், கம்யூனிசம், காந்தீயம் பற்றிய விஷயங்களும், பொருளாதார சமத்வம் பற்றிய விளக்கமும், மஷ்ருவாலா எழுதிய

'காந்தியும், மார்க்ஸும்' என்ற புத்தகத்திலிருந்து அப்படியே எடுத்துப் போட்டிருக்கிறேன். இது தஞ்சாவூர் சர்வோதயப் பிரசுர வெளியீடு. இதன் ஆசிரியருக்கும், பதிப்பகத்தாருக்கும் என் நன்றி.

இருபத்து நான்காவது அத்தியாயத்தில், லண்டனில் 'ப்ளிட்ஸ்' நடந்துகொண்டிருக்கும்பொழுது, அமெரிக்க யுத்த நிருபர், க்வென்டின் ரெயினால்ட்ஸ், கொடுத்ததாகச் சொல்லப்பட்ட செய்தி, க்வென்டின் ரெயினால்ட்ஸின் 'க்வென்டின் ரெயினால்ட்ஸ்' என்ற தம் வாழ்க்கைச் சரிதப் புத்தகத்திலிருந்து அப்படியே கொடுக்கப்பட்டிருக்கிறது. அவருக்கும், அந்தப் புத்தகத்தின் பதிப்பாளருக்கும் என் நன்றி.

இதை மனமுவந்து வெளியிட முன்வந்த 'வாசகர் வட்ட'த்திற்கும் என் நன்றி.

தி. நகர்.<br>28-6-69 } ந. சிதம்பர சுப்பிரமணியன்.

# 1

எழுந்திருந்து மணியைப் பார்த்தேன். மணி ஆறே கால். வழக்கமாக எழுந்திருக்கும் நேரத்தைவிட இன்று கால்மணி நேரம் 'லேட்'. அப்பா ஸ்நானம் செய்து ஜபம், ஸஹஸ்ரநாம பாராயணம் எல்லாவற்றையும் முடித்து விட்டு, வாசல் அறைப் பக்கம் வந்துகொண்டிருந்தார். வழக்க நேரத்திற்கு முக்கால் மணியாவது முன்னரே எழுந்திருந்தால்தான் இவ்வளவு சீக்கிரத்தில் நியம அனுஷ்டானங்களை முடித்திருக்க முடியும். நான் பல் தேய்த்து, காப்பி குடித்துவிட்டு, வாசற் பக்கம் வந்தேன்.

"என்ன துரைவாள், ஒரே அனந்தசயனமாக இருந்துவிட்டாப் போலிருக்கிறதே."

"என்னப்பா, கால்மணி நேரம்தானே?"

"ஆமாப்பா — இன்னிக்குத் தேதி என்ன?"

"1930 ஜுலை முதல் தேதி!"

"இன்று எப்படி உனக்குத் தூக்கம் வந்தது? நேற்று இரவிலிருந்து எனக்குத் தூக்கமே சரியாக வர வில்லை; நீயோ கவலையே இல்லாமல் ஆனந்தமாகத் தூங்கிக்கொண்டிருக்கிறாய். பொழுது நல்லபடியாக விடிய வேண்டுமே, நல்ல செய்தியாகக் கிடைக்க வேண்டுமே என்று, நான் தவித்துக் கொண்டிருக்கிறேன். உனக்குக் கவலையின்றித் தூங்க முடிகிறது."

"ஆமாப்பா! பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு."

"சரிதாண்டா சவடால். இந்தக் காலத்துப் பசங்களைப் போலவே, உனக்கும் சிறிதும் பொறுப்பும் பயமும் இல்லையே என்றுதான் வருத்தமாயிருக்கிறது."

"சீக்கிரம் எழுந்து என்ன செய்ய அப்பா? நமக்காகத் தினசரிப் பத்திரிகை காலை ஆறு மணிக்கு வந்துவிடப் போகிறதோ? அது வழக்கம்போல 9-30 மணி மெயில் பஸ்ஸிலேதானே வரப்போகிறது."

"அது வரபோது வரட்டும். ஆனால், அதில் ஒரு பரபரப்பு இருக்க வேண்டாமா!"

"அதிலே என்ன பிரயோசனம் அப்பா? இன்று காட்டும் அக்கறையைப் பரீட்சை எழுதும்பொழுது காட்டியிருந்தால் பிரயோசனப்பட்டிருக்கும். தேர்வு வரும் தினத்தில் 'லபோ, லபோ' என்று மண்டையை உடைத்துக் கொள்வதில் யாருக்கு என்ன லாபம்?"

"அழகாயிருக்கு உன் பேச்சு. 'நோயாளியை ஆஸ்பத்திரியில் கொண்டு விட்டாய்விட்டது. இனிமேல் கவலை டாக்டருடையது. நானா மருந்து கொடுக்கப்போகிறேன்' என்று சொல்வது போலிருக்கிறது. நோயாளி பிழைக்க வேண்டும் என்பதில் அக்கறை நமக்கா — டாக்டருக்கா?"

"ஏன் அப்பா, உங்களுக்கு இந்தக் கவலை! நான் தேறாமல் இருந்துவிடுவேனா; எந்தப் பரீட்சையிலாவது தேறாமல் இருந்திருக்கிறேனா!"

"அட, அசடே! நீ தேறமாட்டாய் என்று நான் கவலைப் பட்டுக் கொண்டிருப்பதுபோல நீ பேசுகிறாய். நான் அதற்காக ஸஞ்சலப்படவில்லை. தேர்விலே உன் தரம் என்ன? இரண்டாவது வகுப்பா? முதல் வகுப்பா? டிஸ்டிங்ஷனா? இதற்காகத்தான் நான் கவலைப்படுவது."

"நீங்கள் சொல்லப் போவதும் எனக்குத் தெரியும். இரண்டாம் வகுப்பில் தேறினால், முதல் வகுப்பில் தேறவில்லையே என்று கசந்து கொள்வீர்கள். முதல் வகுப்பில்

தேறிவிட்டால், அதிகப்படி மார்க் வாங்கவில்லை என்பீர்கள். அதையும் வாங்கியிருந்தால், இராஜதானியில் முதல்வன் இல்லையே என்று வேதனைப்படுவீர்கள். பிள்ளையின் சாமர்த்தியத்தை ஒப்புக் கொண்டுவிட்டால், அவனுக்கு அகம்பாவம் வந்து அவனை உருப்படாமல் செய்துவிடும் என்பது உங்களுடைய தீர்மானமான முடிவு. ஆகையினுல், நான் எந்த மார்க் வாங்கினுலும் உங்களுக்குத் திருப்தி தரப்போவதில்லை.''

"அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. நீ இராஜதானியில் முதல்வனுக இருந்தால், அது போதும். எனக்கு திருப்திதான். உன் ஒன்றுவிட்ட அத்தை மகன் வேங்கடேசன் இராஜதானியில் முதல்வனுகத் தேறினுன். அவன் அப்பா கிருஷ்ணசாமிக்குப் பெருமை தாங்கவில்லை, எனக்கும் அப்படிப்பட்ட பெருமை கிடைக்கவேணுமென்று ஆசையாகத்தானிருக்கும். ஆனுல், ஆசை எனக்கு இருந்து என்ன பயன்? உனக்கல்லவோ இருக்க வேண்டும்.''

"சரிதான் அப்பா, நான் ஒன்று கேட்கலாமா?"

"என்ன பெரிய கேள்வி கேட்கப்போகிருய்?"

"சின்னக் கேள்விதான். சர்வகலாசாலை ஆரம்பித்துச் சுமார் ஐம்பது அறுபது வருஷம் இருக்கும் இல்லையா?"

"ஆமாம்!"

"இவ்வளவு வருஷங்களிலும், ஒவ்வொரு பட்டப் பரீட்சையிலும் ஒவ்வொருவர் இராஜதானியில் முதல்வராக இருந்திருக்க வேண்டும். இதுவே ஆயிரக்கணக்காக இருக்கும். ஒவ்வொரு பாடத்தில், அராஜதானியில் முதல்வர் வேறு இருக்கிருர்கள். அவர்களையும் சேர்த்துக் கொண்டால், இந்த எண், பத்து மடங்காகிவிடும், இல்லையா?"

"இருக்கலாம்."

"இவ்வளவு பேர்வழிகளும் யார் யார் எந்த நிலையில் இருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா?"

"அதெப்படி? என்னிடம் அவர்கள் பதிவு செய்து கொண்டிருக்கிறார்களா? ஒன்று சொல்லலாம் — அவர்களில் சிலர் ஐ.ஸி.எஸ்.-காரர்களாக இருப்பார்கள்; வேறு பெரிய உத்யோகங்களில் இருப்பார்கள்; பேராசிரியர்களாக இருப்பார்கள். சிலர் விஞ்ஞானிகளாயிருப்பார்கள்."

"சிலர் குமாஸ்தாவாக இருந்துகொண்டு, 'நானும் தான் ராஜதானியில் முதல்வனாகத் தேறினேன்' என்று வருந்திக்கொண்டு இருக்கலாம். சிலர் அதிசயிக்கத்தக்க உருட்டுப்புரட்டுகளைச் செய்துவிட்டு, சிறையிலிருந்து கொண்டு, 'நானும் இராஜதானியில் முதல். ஆனால், இப்படி இருக்கிறேன்' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு இருக்கலாம். ஆகவே, அவர்கள் தேர்விற்கும் தற்கால வாழ்விற்கும் ஒன்றும் சம்பந்தம் இருக்கப் போவதில்லை என்றுதான் சொல்லுகிறேன்."

"பின், மாணவனுடைய தரத்தை எப்படித்தான் கண்டு பிடிப்பது? அவன் உயரம், பருமன், கனம் இதை வைத்தா?"

"அதைக்கூடக் கணக்கெடுக்கிறார்கள் அப்பா. ஆனால் நீங்கள் 'தரம்' என்பது எது என்று நினைக்கிறீர்களோ அதைப் பொறுத்திருக்கிறது, மாணவர் தரத்தைக் கண்டு பிடிப்பது."

"உங்கள் கல்லூரியில் எல்லோராலும் போற்றப் படும் மாணவன் யார்?"

"எங்கள் கல்லூரியில் மாத்திரம் இல்லை; இதர பல கல்லூரிகளாலும் போற்றப்படுபவன் அவன். அவனைத் தெரியாதவர் ஒருவரும் இருக்க முடியாது. அவன்தான்

சௌரிராஜன். ஹாக்கியிலே அவன்தான், கால்பந்திலே அவன்தான் முதல். ஓட்டத்திலே அவன்தான். தாண்டுவதிலேயும் அவன்தான். அவன் எதிர்க்கட்சியில் இருக்கிறுன் என்ருல் மாணவர்கள் கதிகலங்குவார்கள், இதர கல்லூரி மாணவர்களுக்கு, சௌரிராஜன் என்ருல் கிலி. நான் பள்ளியிலிருக்கும் போதே அவனைத் தெரியும். நான் மூன்ரும் படிவத்தில் இருக்கும் பொழுது, ஆரும் படிவத்தில் இருந்தான். நான் ஆரும்படிவம் போகும்பொழுதும். ஆரும் படிவத்திலேயே இருந்தான். அவன் வீட்டிலே மூன்று அலமாரிகள் நிரம்ப வெள்ளிக் கோப்பைகள், ஷீல்டுகள், பதக்கங்கள் நிரம்பியிருப்பதைப் பார்க்கலாம்.

"அது சரி. அதில் என்ன ஆச்சரியம்!"

"ஆனுல், நானே விளையாட்டிலே பூஜ்யம். வாரத்திற்கு இரண்டு நாளாவது விளையாட்டில் கலந்துகொள்ள வேண்டுமென்று விதி. ஆனுல், மைதானத்தில் நின்று விட்டு, வாத்தியார் நான் வந்திருப்பதைப் பார்த்தவுடன் மெள்ள நழுவி வெளியே வந்துவிடுவேன். ஒருசமயம் நண்பர்கள் கால்பந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். எல்லோருக்கும் விளையாட்டில் கலந்துகொண்டு ஆட வேண்டுமென்ற ஆசை. கோல்கீப்பராக ஒருவரும் வர விரும்பவில்லை; அதில் விளையாடுவதற்கு வாய்ப்பு இல்லையல்லவா? தலைவராக இருந்த கோபால், நான் நிற்பதைப் பார்த்துவிட்டு, 'ராஜா வா, சிறிது கோல்பக்கம் நில்' என்ருர். நானும் இங்கு நின்ருல் என்ன, அங்கு நின்ருல் என்ன என்று இணங்கி, கோல் பக்கம் நின்றேன். பந்தின் போக்கிலோ, விளையாட்டிலோ ருசியும் கிடையாது; கோல்பக்கம் வரும் பந்தை எப்படித் தடுக்கவேண்டும் என்பதும் தெரியாது. அதில் கருத்தும் கிடையாது. நான் நின்ற ஐந்து நிமிஷத்திற்குள் எதிர்க் கட்சியினர் மூன்று கோல் போட்டுவிட்டார்கள். கோபால் என்னை நோக்கி ஓடோடியும் வந்து, 'அப்பா ராஜா, தயவுசெய்து

நீ வீட்டுக்கு போ அப்பா. மறந்துபோய்க்கூட இந்தப் பக்கம் வந்து, எங்கள் ஆட்டத்தைக் குட்டிச்சுவராக்கி விடாதே' என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்! விளையாட்டு மைதானத்தில் சௌரிராஜன்தான் ராஜா; வகுப்புப் பாடங்களில்தான் நான் ராஜா. ஆனால், அந்த ராஜாவிற்குத்தான் அதிகமான புகழ், பெருமை, செல்வாக்கு—எல்லாம்."

"நான் ஒருதரம் படித்தது ஞாபகம் வருகிறது: இரண்டு சகோதரர்கள்—மூத்தவர் உலகம் போற்றும் கணிதமேதை; இரண்டாமவர் உலகம் போற்றும் பந்து விளையாட்டுக்காரர். இருவரும் பஸ்ஸிலே போய்க் கொண்டிருந்தார்கள். இளையவர் இறங்கும்பொழுது 'நான் வருகிறேன், அண்ணா' என்று சொல்லிவிட்டு இறங்கினார். இதைக் கவனித்த பஸ் கண்டக்டர் கணிதமேதையிடம் வந்து, 'ஐயா, இவ்வளவு சிறப்பு வாய்ந்த தம்பியைப் பெற்றிருப்பது பெரும் பாக்யமே!' என்று கணிதமேதையை வாழ்த்தினாராம். உலகம் போற்றும் அந்த கணித மேதையின் பெருமையை அந்த பஸ் கண்டக்டர் அறிந்தாரில்லை."

"நான் சொல்வதைத்தானே நீங்களும் சொல்லுகிறீர்கள்!"

"அப்படி முடிவு செய்துவிட முடியுமா? அப்பொழுது மூட்டை தூக்கும் முத்தையன், ஜஸ்டிஸ் முத்துசாமி அய்யரைவிட மேல் என்று சொல்லிவிடலாமே. தேகத்தின் பலமா, புத்தியின் பலமா - எது சக்தி வாய்ந்தது?"

"இந்த இரண்டுமேயில்லை அப்பா!"

"பின்னென்ன?"

"எங்கள் கல்லூரியிலே, எங்கள் இருவரையும் மிஞ்சிய பலசாலி ஒருவன் உண்டு. அவன்தான் ராஜாதி

ராஜன் ... சார்வபௌமன், சக்ரவர்த்தி, — அவன் பெயர் தியாகராஜன்.''

'' அவன் எதிலே நிறைய மார்க் வாங்கினான் ? ''

'' கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். பரீட்சையில் அதிகமாக ' மார்க் ' வாங்குவதும், விளையாட்டுப் போட்டிகளில் பரிசு வாங்குவதும் அப்படி சிரம சாத்தியமான காரியமல்ல. பத்து மார்க்கு வாங்கும் பையன் சிறிது முயற்சி எடுத்துக்கொண்டால் இருபது மார்க் வாங்கிவிட முடியும். ஐம்பது மார்க் வாங்கக்கூடிய பையன் இன்னும் கருத்தோடு படித்தால் எழுபத்தைந்து மார்க் வாங்கிவிட முடியும். முயற்சியும் அக்கறையும்தான் தேவை. அது போலவே, விளையாட்டிலே நான்கூடச் சிறிது ருசியை உண்டுபண்ணிக் கொண்டு, அதில் மனத்தை ஈடுபடுத்தி, ஒவ்வொரு நாளும் சில நிமிஷங்கள் விளையாடிப் பயிற்சி பெற்றால், சுமாராக விளையாடும் நிலையை அடைந்துவிடக் கூடும். ஆனால், தியாகராஜன் செய்ததை வேறு ஒருவரும் செய்ய முடியாது.''

'' அப்படியா ! என்ன அப்படிச் செய்தான் ? ''

'' இது பல வருஷங்களுக்கு முன் நடந்தது. நான் இரண்டாம் படிவத்தில் படித்துக் கொண்டிருந்தேன். அந்த வருஷம் குற்றாலத்திற்குச் சுற்றுலாச் சென்றிருந்தோம். அப்பொழுது குற்றாலம் இப்பொழுது போல் முன்னேற்றம் அடையவில்லை. ஷண்பகாதேவி சென்று, தேனருவியைப் பார்த்துவிட்டு, மேலும் சிறிது சென்றோம். எல்லோருக்கும் மிகுந்த உற்சாகம். ஒரு பாறை, எதிரே நின்றது. அந்தப் பாறையின் மேலேறிச் சென்று பார்க்க விரும்பினோம் அந்தப் பாறைக்குச் செல்ல ஒரு சிறு பாறைதான் பாலம் போன்று இருந்தது. மிகவும் குறுகிய பாறை. பாறைக்கு அடியில் அருவி ஓடிக் கொண்டிருந்தது. பாறையும் ஈரம்பட்டுச் சிறிது வழுக்க

லாயிருந்தது. ஒருவர்பின் ஒருவராக ஜாக்ரதையாகத் தான் போய்க்கொண்டிருந்தோம். கால் வழுக்கிக் கீழே விழுந்துவிட்டான் மூர்த்தி என்ற பையன். மறு விநாடி, தியாகராஜனும் கீழே குதித்து மூர்த்தியைப் பிடித்துக் கொண்டான். மூர்த்தியை மேலே ஏறச்சொல்லி இரண்டு கைகளாலும் அவனைத் தூக்கிவிட்டான். இரண்டு பக்கத்திலும் பாறை. கால் வைக்கவோ, கை வைக்கவோ, ஒரு பிடிப்பும் கிடையாது. நல்ல வேளையாக, பக்கத்து மரத்திலிருந்து ஒரு விழுது தொங்கிக் கொண்டிருந்தது. அதைப் பிடித்துக்கொண்டு, மேலே எகிறி மூர்த்தியைக் குதிக்கச் சொன்னான், தியாகராஜன். மூர்த்தி அப்படியே செய்தான். மூர்த்தி வேகத்தோடு குதித்துத் தாவி ஏறும் போது, பக்கத்தில் தொத்திக் கொண்டிருந்த ஒரு குண்டுக் கட்டி விண்டு, தொப்பென்று கீழே நின்ற தியாகராஜன் மேல் விழுந்தது.''

"அடடா!''

"மன் உயிரைக் காக்கத் தன் உயிரைக் கொடுத்த மகாராஜன்... தியாகராஜன்.''

"பெரிய தியாகம்தான்! எல்லோரும் எளிதில் செய்யக்கூடிய காரியமில்லைதான்!''

"இதற்கு — 'மார்க்' யார் போடுவது, எவ்வளவு போடுவது, எப்படிப் போடுவது, சொல்லுங்கள் அப்பா.''

"இதற்கும் 'மார்க்' இருக்கும். ஆனால், அது வேறு உலகத்தில். அதற்கு ஒரு தனிக் கணக்கன் இருக்கிறான்.''

"அவனுக்கு மாத்திரம்தானா?''

"எல்லோருக்கும்தான்.''

"எல்லோருடைய கணக்குகளையும்விட, தியாகராஜன் கணக்கிலே அதிக வரவு இருக்கத்தானே செய்யும்?''

"அது சரி. இருந்தாலும், ஒவ்வொருவரும் உயிரைத் தியாகம் செய்துதான் புண்ணியத்தைத் தேடிக்கொள்ள வேண்டுமா ?"

"வேண்டாம், நான் சொல்ல வந்தது இதுதான். தேக பலத்தையும், புத்தியின் பலத்தையும் பற்றிச் சொன்னீர்கள். அதற்கும் மேலாக ஒன்று இருக்கிறது ; அதுவே ஆத்ம பலம் என்று சொல்லத்தான் முற்பட்டேன்."

"வாஸ்தவம்தான். ஆனால், எல்லோரும் அதை எளிதில் அடைந்துவிட முடியுமா? அதற்கு எவ்வளவு சாதனைகள் செய்ய வேண்டியிருக்கிறது !"

"அதெல்லாம் அப்படி சிரமமான காரியமில்லை. இதற்குப் பிடிப்புத்தான் வேண்டும்."

"என்ன பிடிப்பு ?"

"சத்தியத்திலும், தர்மத்திலும் பிடிப்பு."

"என்ன, இன்னிக்கு...தகப்பன்சாமி ஆகிவிட்டாய், உபதேசிக்க ஆரம்பித்து விட்டாய்."

"நீங்கள் படித்துக் கொண்டிருக்கும் உபநிஷத் கதைகளும், வாசகசாலையிலிருந்து வாங்கிவந்த ரோமன் சரித்திரப் புத்தகமும்தான், என் மனத்தைக் கிளறிவிட்டிருக்கின்றன."

"நீ என்ன கண்டு பிடித்தாய் ?"

"சத்யகாமன், குருவிடம் பிரம்ம ஞானத்தைத் தேடி வருகிறான் :

"'நீ யாருடைய பிள்ளை ?' என்று கேட்கிறார் குரு.

"'குருவே, என் தாய் பலருக்குப் பணிவிடை செய்திருக்கிறாள். தந்தை யார் என்று சொல்ல முடியவில்லை' என்றான்.

"'குழந்தாய் உண்மை எவ்வளவு கசப்பானதாயிருந்தாலும் மறைக்காமல் சொன்ன நீதான் பிரம்மஞானத்

திற்குத் தகுதியானவன்' என்று சீடனுக்கு அவர் சொல்கிறார். சத்தியகாமன்—மகா சத்யாக்ரஹி—சத்தியத்தை விடாமல் பிடித்துக் கொண்டவன்."

"மற்றவன் யார்?"

"ரோம் சாம்ராஜ்யத்திலே, சின்சினேடஸ் என்பவன், விவசாயம் செய்து கொண்டிருக்கிறான். எதிரிப் படை வந்து தேசத்தைத் தாக்குகிறது. அதை எதிர்த்து நிற்கும் தகுதி வாய்ந்தவன் 'சின்சினேடஸ்' ஒருவன்தான் என்று அவனிடம் வந்து கேட்டுக் கொள்கிறார்கள். அவனும் சம்மதித்து, எதிரிகளை முறியடித்துவிட்டு நேராகத் தன் இடத்திற்கு வந்து கலப்பையைத் தூக்கிக் கொள்கிறான். போர் முறையும் ஏர் முறையும், வாழ்வும் தாழ்வும், மாடமாளிகையும் மண்குடிசையும் ஒன்றாகவே நினைக்கும் 'சமதிருஷ்டி' வாய்ந்த மகானாக அவன் விளங்குகிறான். பற்றின்மை என்பதை விளக்குகிறான். இவர்கள் செய்திருக்கும் காரியங்கள் எல்லோராலும் செய்யக்கூடிய காரியங்கள்தான். ஒருவரும் செய்ய முன் வருவதில்லையே?"

"ஆமாண்டா, ஜனகமகாராஜன்கூட இப்படித்தான் இருந்ததாகச் சொல்கிறது நம் புராணம். இப்படிப்பட்ட மகான்களைப் புராணத்திலும், கதையிலும் பார்க்கலாம். வாழ்க்கையில் எத்தனை பேரைக் காட்டமுடியும்?"

"இப்பொழுதுகூட இருக்கிறார் அப்பா."

"யாரைச் சொல்கிறாய்?"

"வேறு யார். உலகம் முழுவதும் — மகாத்மா என்று போற்றுகிறதே, அந்த உத்தமன்தான் — மகாத்மா காந்தி."

இதைக் கேட்டவுடன், மாடு குடையைக் கண்டு வெறிப்பதுபோல், அப்பாவும் வெறிப்பார் என்று எனக்குத்தெரியும். இதுவரையில், விளையாட்டாகவோ, வீம்புக்

காகவோ தர்க்கம் செய்துவந்த அப்பாவின் முகத்தில் கோபக் கனல் வீசியது.

"அதிகப்பிரசங்கி, பிரமாதமாகப் பெரிய பெரிய விஷயங்களைப் பற்றித் தர்க்கம் பண்ண வந்துவிட்டான். யாருக்கடா வேண்டும், இந்தக் குதர்க்கமெல்லாம்? உனக்கென்ன தெரியும்? பிரமாதமாக காந்தியைப் பற்றிப் பேச வந்துவிட்டாய். இந்தப் பரீட்சையில் நல்லபடியாகத் தேறி ஐ. ஸி. எஸ். பாஸ் செய். கலெக்டராகி, செக்ரட்டரியாக வருவாய் என்று கனவு கண்டு கொண்டிருக்கிறேன், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தூணைக்கப் பார்க்கிறேன். அந்த சாம்ராஜ்யத்தை அசைத்துக் கொண்டிருப்பவரைப் பற்றிப் பெருமையாகப் பேசுகிறாய். அரசியல் பேச்சே வேண்டாம். ஒழுங்காக மேலே படிக்க முயற்சி எடுத்துக்கொள்" என்று கோபித்துக் கொண்டு அப்பா உள்ளே போய் விட்டார். நான் பேசாமல் வாயை மூடிக்கொண்டு உட்கார்ந்துவிட்டேன்.

சிறிது நேரத்திற்குள், பையன் தினசரிப் பத்திரிகையைக் கொண்டு வந்தான். சைக்கிள் மணி சப்தம் கேட்டு, அப்பாவே வெளியே வந்து, பத்திரிகையைத் தாமே வாங்கிக் கொண்டார். தேர்வு முடிவு வந்திருக்கும் பக்கத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு, "என்ன நம்பர்?" என்றார்.

"அறுநூற்றுத் தொண்ணூற்று நாலு" என்றேன். அவசர அவசரமாக நம்பரைத் தேடினார். மேலே பார்த்தார், கீழே பார்த்தார், பக்கத்திலே பார்த்தார். பக்கத்தைத் திருப்பினார். முகம் இருண்டது. எனக்குப் பயமாகிவிட்டது. ஆச்சரியமாகவும் இருந்தது.

"என்னடா. நம்பரைக் காணோமே?" என்று தயங்கித் தயங்கிச் சொன்னார். எனக்குப் பகீரென்றது. இவ்வளவுதான், என் பேச்சும் வீறாப்பும். 'கடைசியில்

அப்படியும் ஆகிவிடுமோ, அட கிரகசாரமே!' என்று பீதியுடன், நம்பிக்கையோடும் அவநம்பிக்கையோடும் பத்திரிகையை வாங்கிப் பார்த்தேன். முதல் வகுப்பில் அதிக மார்க் வாங்கியதைக் காட்டும் நக்ஷத்திரக் குறியுடன் என் எண் இருந்தது. "இதோ இருக்கே அப்பா" என்றேன்.

"நான் எங்கெல்லாமோ பார்த்திருக்கிறேன் போலிருக்கிறது."

"நீங்கள் மூன்றும் வகுப்பிலும், இரண்டாம் வகுப்பிலும் துழாவியிருக்கிறீர்கள். நீங்கள் விரும்பியபடியே, முதல் வகுப்பிலேயே தேறிவிட்டேனப்பா. அதிக மார்க்கும் வாங்கிவிட்டேன். திருப்திதானா?"

"நீதான் ராஜதானியில் முதல்வன் என்றால், நான் திருப்திப்படுவேன் என்றேனே — அதை மறந்துவிட்டாயா?" என்று சொல்லிவிட்டு, "சரி ராஜா. அடுத்தபடி காம்பெடிஷன் (போட்டி) பரீட்சை எழுதுவதற்குத் தயார் செய்துகொள். பரீட்சை டில்லியில் எழுதிவிடலாம். தேறிவிட்டால், சீமைக்குப் போய் ட்ரெயினிங் ஆகி வந்துவிடலாம்" என்றார். சீமை என்ற அந்த ஸ்வர்க்கத்தையும், வெள்ளையினத்தவரான அந்த தேவர்களையும் நினைத்த மாத்திரத்திலேயே, அவரே ஸ்வர்க்கத்தில் இருப்பது போன்ற ஆனந்தம் அவர் முகத்திலே ஒளிவிட்டது.

# 2

அப்பா, மகாத்மா காந்தியின் பெருமைகளையும் கொள்கைகளையும் அறியாத கத்துக்குட்டி அல்ல, அவர் அரசாங்க ஊழியர். என்னையும், சூரியன் மறையாத பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைத் தாங்குவதற்குத் தயார் செய்ய முஸ்தீப்புடன் இருக்கிறார். அவர் விரும்பியபடி, நான் பரீட்சையில் தேறி, உதவி கலெக்டராக வந்து விட்டேனானால், அவருடைய வாழ்க்கை இலட்சியம் பூர்த்தியாகிவிடும். ஆனால், அதற்கு எதிரிடையாக ஏதாவது செய்துவிட்டால் என்ன செய்வது என்ற பயத்தினால் தான் அவருக்கு அவ்வளவு கோபம்.

இதனால், வயிற்றுப் பிழைப்புத்தான் வாழ்வு என்று முடிவு கட்டிய அற்ப மனிதராகவும் அவரை எண்ணிவிட முடியாது. நான் ஐ. ஸி. எஸ். உத்தியோகம் பார்க்க வேண்டும் என்று அவர் கனவு கண்டதற்குக் காரணம், அந்த உத்தியோகத்திற்கு ஏற்பட்ட சம்பளம், அதிகாரம், மதிப்பு மாத்திரம் அல்ல ; அவருக்கு வெள்ளையரிடமும், பிரிட்டிஷ் ஆட்சியிலும் ஏற்பட்டிருந்த மதிப்புத்தான் முக்கியமான காரணம். என் தகப்பனார், கலெக்டர் ஆபீஸில் தலைமை குமாஸ்தாதான். ஆனால், அந்த அலுவலகத்தில், அவர் வைத்ததுதான் சட்டம்.

எவ்வளவோ கலெக்டர்கள் வருவார்கள் ; எவ்வளவோ கலெக்டர்கள் போவார்கள். ஆனால், எல்லோரும் என் தகப்பனாரின் திறமையையும், ஒழுக்கத்தையும், சேவையையும் பாராட்டிவிட்டுத்தான் போவார்கள். ஹென்றி

ஆர்ம்ஸ்ட்ராங்க் என்ற ஆங்கிலேயர், கலெக்டர் பதவி வகித்துப் பிறகு மத்திய அரசாங்கத்தின் உள்துறை ஆலோசகராக இருந்து பிறகு ஒரு மாகாணத்தின் கவர்னராயிருந்துவிட்டு ஓய்வு பெற்றவர். அவர் 'இந்தியாவில் நான் கற்றது' என்றதோர் அருமையான புத்தகத்தை எழுதியிருக்கிறார். அதில் அவர் பின்வருமாறு கூறியிருக்கிறார் :

"நான் ஐ. ஸி. எஸ் ஸில் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் மதராஸ் இராஜதானியில், இராமநாதபுரம் ஜில்லாவில் தேவகோட்டை என்ற தாலுக்காவில் உதவிக் கலெக்டராகப் போய்ச் சேர்ந்தேன். அங்கே போனதும் தலை கால் ஒன்றும் புரியவில்லை. இடம் வேறு; மக்கள் வேறு; பழக்க வழக்கங்கள் வேறு. ஆளும் முறை, அரசாங்க விதிகள் இவை ஒன்றும் எனக்குப் பரிசயமில்லாதவை. ஆனால், இவை எல்லாவற்றையும் ஆறே மாதங்களில் நான் தெரிந்துகொள்ள முடிந்தது. அதற்குக் காரணம், அங்கே இருந்த அருணசல சாஸ்திரி என்ற உத்தியோகஸ்தர் தான். அவருடைய உத்தியோகம் என்னமோ சாதாரணம் தான். ஆனால், அவர் செய்த வேலை அதுவன்று; புது கலெக்டர்களைத் தயார் செய்யும் ஒரு பெரிய உத்தியோகஸ்தர் என்றுதான் சொல்லவேண்டும். எந்த அரசாங்க விதி எந்த வருஷம் பிறப்பிக்கப்பட்டது, எப்பொழுது மாற்றப்பட்டது, எந்தவிதம் மாற்றப்பட்டது—என்பதெல்லாம் மனப்பாடம் அவருக்கு. இந்த விண்ணப்பத்திற்கு இன்ன பரிகாரம் என்று கண்ணைத் திறக்காமலே சொல்வார். அவருக்குத் திறமை இருந்தது போலவே பண்பாடும் இருந்தது. அவர் செய்வதில் ஒரு குறை இருக்காது, ஒரு தவறு இருக்காது, ஓர் அநீதி இருக்காது. ஒன்றும் அறியாத பையனாக வந்த என்னை, கலெக்டராக மாற்றிய பெருமை அந்த கனவானைத்தான் சேரும். பிரிட்டிஷ் அரசாங்கம் நல்ல முறையில் இயங்குகிறது

என்றால், அருணாசல சாஸ்திரி போன்ற உத்தமர்கள் அரசாங்கத்தில் இருப்பதால்தான் என்று தயங்காமல் சொல்வேன்" என்று எழுதியிருக்கிறார்.

புத்தகம் வெளிவந்த புதிதில், நூலகத்திலிருந்து ஒரு பிரதி எடுத்து வந்து அப்பாவிற்கு அந்தப் பக்கத்தைப் படித்துக் காட்டினேன். அப்பா, புன்முறுவல் செய்தார். "அவன் ரொம்ப நல்லவன். என்னிடம் உள்ள அன்பினால் இவ்வளவு தூரம் புகழ்ந்து எழுதிவிட்டான்! என்னைப் போல வேறு எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். அவர்களையும் அந்தப் பாராட்டுச் சேரும்" என்றுதான் சொன்னார்.

நான் எங்கே சென்றாலும், அருணாசல சாஸ்திரியின் மகன் என்பதனால், எவ்வளவு மதிப்புக் கொடுக்கிறார்கள் என்பதை நன்கு உணர்ந்தேன். அவருக்கு ஏற்பட்டிருந்த மதிப்பு அவர் வகித்த உத்தியோகத்தினால் மாத்திரம் அல்ல என்பதையும் நான் கண்டுகொள்ள முடிந்தது. லஞ்ச ஊழல் எங்கே அதிகமாகத் தாண்டவமாட முடியுமோ, அந்த உத்தியோகத்தைக்கூடக் களங்கமற்றதாகச் செய்து நிர்வகித்தார் என்பதனால் மாத்திரம் அல்ல, மனிதன் என்ற முறையில் கூட அவரிடம் உயர்ந்த பண்பாடு இருந்தது. எந்தப் பண்பாட்டையெல்லாம் நான் பேச்சளவில் உயர்த்திப் பேசினேனோ, அதைச் செயல் முறையில் கடைப்பிடித்துக் காட்டியவர். அதனால் அவருக்கு உத்தியோக முறையில் பல இடைஞ்சல் ஏற்பட்டதுண்டு. ஆனால், அதையெல்லாம் கண்டு மனம் தளராமல் நேர்வழியே போகத் தயங்காதவர்.

ஒரு சமயம் அப்பாவிற்கும் ரங்கப்பா என்ற தாசில்தாருக்கும் அடிக்கடி தகராறு ஏற்பட்டுக்கொண்டேயிருந்தது. என் தகப்பனாரைவிட மேல் உத்தியோகஸ்தர் தான் ரங்கப்பா. மன்னனுக்கு இரண்டு கை போதாது! திடீரென்று "சாஸ்திரி, அதைச் செய்யும்" என்பார்.

மற்ளுரு நாள் "சாஸ்திரி, அந்த உத்தரவை அனுப்ப வேண்டாம்" என்று தடை போடுவார். இதெல்லாம் அப்பாவிற்குச் சிறிதும் பிடிக்காது, அவர்பாட்டுக்கு அவர் வேலையை ஒழுங்காகச் செய்துகொண்டு போவார். பூஜை வேளையில் கரடி விடுவதுபோல அந்தத் தாசில்தாரின் குறுக்கீடுகள், அவருக்கு மிகுந்த சங்கடத்தைக் கொடுத்தன. வரவர இந்த உபத்திரவம் அதிகரிக்க ஆரம்பித்து விட்டது. இவர் ஒருவிதம் செய்ய நினைக்க, அவர் வேறு விதமாக நினைக்க, தகப்பனருக்கு அது அமைதியைக் கெடுத்துக்கொண்டிருந்தது. 'இது என்ன சங்கடம், வேலை ஒழுங்காக நடக்க விடமாட்டார்கள் போலிருக்கிறதே!' என்று நொந்துகொள்வார் அப்பா.

ஆனல், ரங்கப்பா மிகுந்த சாமர்த்தியசாலி. வாய் வார்த்தையாகவே உத்தரவுகளைச் சொல்லிவிடுவார். தாமே பொறுப்பு என்பதற்கு ஆதாரத்தையும் வைக்க விடமாட்டார். ஒரு சமயம், என் தந்தையை ஒருவிதமாகக் குறிப்பு எழுதச் சொன்னர். அப்பா, ஏன் அப்படி எழுதக்கூடாது என்பதற்குத் தக்க காரணங்களைக் காட்டினர். ரங்கப்பாவிற்குக் கோபம் வந்துவிட்டது. "என்ன சாஸ்திரி, எனக்குப் பாடம் சொல்ல வந்து விட்டீர். நான் உம் மாணவனல்ல, இதுமாதிரி செய்யும். இது என் உத்தரவு" என்ருர். அப்பா, "அப்படியானல் கட்டிலே அப்படியே எழுதிவிடுங்கள். உங்கள் குறிப்பு, எழுத்து மூலம் இல்லையானல் செய்யமாட்டேன்" என்று சொல்லிவிட்டார். வேறு வழியின்றி, கட்டிலே ரங்கப்பா தமது குறிப்பை எழுதினர். அதற்குப் பக்கத்திலே அப்பா தமது அபிப்பிராயத்தையும் எழுதிவைத்தார். கலெக்டர் துரை பார்த்துவிட்டு, தாசில்தாரின் குறிப்பு மேல் ஒரு கோட்டை இழுத்துவிட்டு 'அர்த்தமற்றது' என்று எழுதி, அப்பா எழுதியபடி உத்தரவைப் போட்டார். ரங்கப்பாவின் கோபம் அதிகமாயிற்று.

அவருக்கு வேண்டிய நண்பர்களை விட்டு, — அதாவது அப்பாவின் குறுக்கீட்டால் பாதிக்கப்பட்டவர்கள், அப்பாவின் நேர்மையினால் பாதிக்கப்பட்டவர்கள், ரங்கப்பாவின் தயவை எதிர்பார்ப்பவர்கள் — இவர்கள் நாலைந்து பேர்களைக் கொண்டு என் தந்தைமேல் புகார் தயார் செய்தார். எப்படி என் தகப்பனார், 'நீதியுடன் நடப்பதில்லை. தம் இஷ்டம்போல் காரியத்தைச் செய்துகொள்கிறார். பொது மக்களை மதிப்பதில்லை. மேல் அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதில்லை. வேலையையும் சரியாகச் செய்வதில்லை. சக உத்தியோகஸ்தர்களுடன் சரியாகப் பழகுவதில்லை, அகம்பாவம் பிடித்தவர்' என்றெல்லாம் புகாரில் சொல்லப்பட்டிருந்தது. அந்த மனுவின் பேரில் தம் சொந்தக் குறைகளையும் சேர்த்து மேல் அதிகாரிகளுக்குத் தக்க நடவடிக்கைகளுக்கு எழுதியனுப்பினார் ரங்கப்பா. இது அலுவலகத்தில் ஒரு பரபரப்பை உண்டாக்கியது. அப்பாவிற்கும் மிகுந்த கவலைதான். பொதுமக்களையும் அல்லவா சேர்த்திருக்கிறார் ரங்கப்பா.

ஜார்ஜ் ரஸ்ஸல் என்ற ஓர் ஆங்கிலேயர் இதை விசாரிக்க வந்தார். விசாரணையில் அவருக்கு விஷயம் நன்றாகப் புலனாகிவிட்டது. ரங்கப்பாவையும், என் அப்பாவையும், தம் அறைக்கு வரச்சொன்னார் துரை. அவருடைய மேஜைக்கு எதிரே ஒரே நாற்காலிதான் போடப்பட்டிருந்தது. அதில் என் தந்தையை உட்காரச் சொல்லிவிட்டு, ரங்கப்பாவை நிற்கவைத்தபடியே சொன்னாராம் :

"மிஸ்டர் ரங்கப்பா, சொந்த விரோதத்தினாலும், மனக்கசப்பினாலும், அநாவசியமும் அபாண்டமுமான ஒரு பெரிய புகாரைச் செய்து, உங்கள் உத்யோகத்தை இழிவு படுத்திக்கொண்டீர்கள். ஒரு சிறந்த உத்யோகஸ்தருக்கு இழிவு உண்டாக்க முற்பட்டீர்கள். இதனால் அரசாங்கத்திற்கே இழிவு ஏற்படும் ஒரு நிலையை உண்டாக்கி

விட்டீர்கள். அதற்கு நான் விரும்புமளவிற்கு உங்களுக்குத் தண்டனை கொடுக்க எனக்கு அதிகாரம் இல்லையே என்று தான் வருந்துகிறேன். இரண்டு வருஷத்து உயர்வை நிறுத்தியிருக்கிறேன், உங்களை நரகத்திற்கே அனுப்ப நான் விரும்புகிறேன். நரகம் என் ஆதிக்கத்தில் இல்லாததால், அதற்குச் சமமான இடத்தைக் கண்டு பிடித்து அங்கு உங்களை மாற்றியிருக்கிறேன்" என்று சொல்லிவிட்டு, என் தகப்பனாரின் கையைக் குலுக்கி விட்டுச் சென்றாராம்.

இதைச் சொல்லும் பொழுதெல்லாம், ஆங்கிலேயரின் நீதியையும், பெருந்தன்மையையும், உலகம் போற்றும் பிரிட்டிஷ் பண்பையும் அப்பா சொல்லிச் சொல்லிப் பெருமை கொள்வார். இத்தகைய அனுபவங்களே அவரை வெள்ளைக்கார அபிமானியாகக்கூட ஆக்கியிருந்தன. நேர்மையாக வாழ்ந்த அவருக்கு, ஆங்கிலேயரின் நேர்மையும் பெருந்தன்மையும் அவர்களிடம் அபிமானத்தையும் மதிப்பையும் உண்டுபண்ணியிருந்தன. தவிரவும், எல்லா துரைகளும் தகப்பனாரின் குணாதிசயத்தைத் தெரிந்துகொண்டு, மரியாதையாகவே நடந்துகொண்டிருக்கிறார்கள். 'பேனை ஓட்டும் ஒரு புழு' என்று ஒருவரும் அவரிடம் நடந்துகொள்ளவில்லை. எத்தனை விதமான துரைகளை அப்பா பார்த்திருக்கிறார்! முன் கோபக்காரர்கள், கெடுபிடிக்காரர்கள், இந்தியர்களை அவமதிப்பவர்கள், வெள்ளையன் என்ற திமிர் கொண்டவர்கள் எல்லோரும் அப்பாவிடம் மாத்திரம் மரியாதை காட்டாமல் இருந்ததில்லை. சிலரிடம் சில குறைகள் இருந்தாலும், பெரும்பான்மையோரிடம் நாம் கற்றுத் தெரிந்துகொள்ள வேண்டிய சிறந்த அம்சங்களைக் கண்டிருக்கிறார். அதைச் சொல்லிக்கொண்டும் இருப்பார்.

க்ரீன், என்ற கலெக்டர் மிகுந்த கோபக்காரர். அவரைப் பார்த்தாலே, சிப்பந்திகள் அலறி நடுங்குவார்

களாம். குமாஸ்தாக்கள் ஏதோ சிறு தவறு செய்து விட்டாலும், அந்த நபர்களின் பல்லைப் பிடுங்கி அவர்கள் கையில் கொடுத்துவிடுவாராம், அவரைக் கண்டாலே எல்லோருக்கும் திகில்தான். அவருடைய காலத்தில் ஒரு தகராறு ஏற்பட்டது. அந்தத் தாலுக்காவில் ஓர் ஊரில் தேர்த்திருவிழா. அதில் ஒரு பிரச்னை வந்துவிட்டது. தேர் சேர்க்கை சேர்ந்ததும், தாம்பூல மரியாதை, பிள்ளை மாருக்கா, சேர்வைகாரருக்கா என்பதுதான் தாவா. அம்பலகாரர்கள், நாட்டார்கள் தொன்றுதொட்டு அந்த ஊரிலேயே பிறந்து வளர்ந்து தலைமுறை தலைமுறையாக இருந்து வருபவர்கள்; அந்த ஊரிலும் பக்கத்துக் கிராமங் களிலும் இருப்பவர்கள்; அவர்கள் உறவினர்கள்தான்; ஏதாவது பொதுக் காரியம் என்றால், ஆயிரக்கணக்காக ஒன்று சேர்ந்து கட்டுப்பாட்டுடன் காரியத்தை நிறைவேற்றி வைப்பவர்கள். இந்தப் பிராந்தியத்தில் ஏதாவது திருட்டு, கொள்ளை நடந்திருந்தால், இவர்களிடம் முறையிட்டுவிட்டால், இவர்களின் தலைவர் அதைக் கண்டு பிடித்து, உடையவனுக்குச் சொத்தை மீட்டுக்கொடுத்த சம்பவங்கள் பல உண்டு. தேர் இழுப்பதில் இவர்களுக்குத் தான் அதிகப் பங்கு உண்டு; மரியாதையும் இவர் களுக்குத்தான் இருந்து வந்தது.

பிள்ளைமார்களும் வெகு நாட்களாக இருப்பவர்கள் தான்; ஆனால் சேர்வைகாரர்களைப்போல, பழங்காலத்துக் குடிமக்கள் அல்ல. பிள்ளைமார்கள், பணம் படைத்தவர் கள்; வியாபாரத்தில் ஈடுபட்டவர்கள்; கோவில் நிர்வாகத் தில் பண வரவு செலவு இவர்களிடம்தான் இருந்தது; ஊரிலே நல்ல செல்வாக்கு; அதிகாரிகளுக்கு அநுசரணை. இந்த இரண்டு குலத்தினருக்கும் பூசல்கள் இருந்து கொண்டே வந்தன. சில வருஷங்களுக்கு முன்பு, பிள்ளை மார்களில் செல்வாக்குள்ள ஒருவர் இந்த மரியாதை தங்களுக்குத்தான் என்று பிடுங்கிக்கொண்டுவிட்டார்.

அவருடைய சொந்தச் செல்வாக்கினாலோ, எதிர்க்கட்சியில் சிலரைக் கைக்குள் போட்டுக்கொண்டோ காரியத்தைச் சாதித்துக் கொண்டுவிட்டார். இந்த வருஷம் புதிதாக வந்திருக்கும் சேர்வைகாரர்களின் தலைவர், தங்களுக்கு உரித்தான மரியாதையை விட்டுக்கொடுக்கப்போவதில்லை என்று பறைசாற்றிக் கொண்டிருந்தார். அதனால் தேர்த் திருவிழாவின்போது கலகம் விளையுமென்று ஜனங்கள் எதிர்பார்த்தனர். இதை அறிந்த போலீஸ் அதிகாரி விஷயத்தை விளக்கி, கலெக்டருடைய யோசனையையும் உத்தரவையும் வேண்ட, கலெக்டரிடம் நேரே வந்திருந்தார்.

க்ரீன் துரை, போலீஸ் அதிகாரி வரும் சமயத்தில் பக்கத்துக் காட்டில் வேட்டையாடுவதற்குத் துப்பாக்கியோடு கிளம்பியிருந்தார். அவருக்கு வேட்டையாடுவதில் அளவிறந்த ஆசை. தம் விளையாட்டிற்குக் குறுக்கே அதிகாரி வந்தது, மிகவும் ஆத்திரத்தை உண்டுபண்ணியது. பொறுமை இழந்து சிடுசிடுத்த முகத்துடன், "சைத்தானே, என்ன வேண்டும்?" (What in the name of Devil you want) என்று உறுமிக்கொண்டு வந்தார். போலீஸ்காரர் நடுக்கத்துடன் இவர் இருக்கும் நிலையையும், காட்டும் அவசரத்தையும் உத்தேசித்து, ரத்னச் சுருக்கமாக, ஊர் இருக்கும் நிலவரத்தைப் பற்றி விளக்கினார்.

துரையின் முகம் அருவருப்பைக் காட்டியது. "இந்த முட்டாள் ஜனங்களுக்கு, ஆயிரம் வருஷம் ஆனாலும் புத்தி வரப்போவதில்லை. யாருக்கு முதல் மரியாதை! இது பெரிய பிரச்னை! மரியாதை கெட்ட ஜனங்களுக்கு மரியாதை என்ன வேண்டியிருக்கிறது? இதற்கு அரசாங்கத்தின் நேரத்தையும் பணத்தையும் வீணாக்கிப் பாதுகாப்புத் தரவேண்டும்!" என்று முணுமுணுத்துக்கொண்டு, "இந்த மரியாதை செய்வது என்பது கோவிலுக்கு உள்ளேயா வெளியேயா?" என்று கேட்டார்.

"சுவாமி உள்ளே சேர்க்கை சேர்ந்தவுடன் உள்ளே தான் நடக்கும்."

"அப்பொழுது கோவிலுக்குள்ளே கூட்டம் போடக் கூடாது என்று 144-ஐப் போட்டுவிடுங்கள். மீறினுல் உசிதமான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லியபடியே குதிரைமேல் ஏறிக்கொண்டு வேட்டைக்குக் கிளம்பிவிட்டார் துரை.

மறுநாள் உத்தரவு கையெழுத்திற்குத் தயாராயிருந்தது. அப்பாவுக்கு அந்த உத்தரவு பற்றிய சம்பந்தமோ, பொறுப்போ, கிடையாது. ஆனுல், அது பிரச்னையைத் தீர்க்காது என்பது அவருக்குத் தெரியும்; துரையிடம் போய் நின்ருர்.

"என்ன சாஸ்திரி?" என்று மரியாதையுடன் கேட்டார் துரை.

"மன்னிக்க வேண்டும். இது சிக்கலைத் தீர்க்காது" என்று சொல்லிக்கொண்டே டைப் செய்யப்பட்ட உத்தரவை அப்பா நீட்டினுர்.

"வேறு என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறீர்?" என்ருர் துரை.

"இரண்டு கட்சித் தலைவர்களையும் கூப்பிட்டு, சில ஊர்ப் பெரியவர்களையும் கலந்தாலோசித்து, எது சரியென்று தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள்."

"என்ன? பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதியான நான் அந்த உதவாக்கரைத் தலைவர்கள் காலில் வீழ்ந்து கேட்டுக் கொள்ள வேண்டுமா? என்ன பைத்தியக்காரத் தனம்!" என்று சொல்லிவிட்டு, "நீங்கள் போகலாம்" என்று குறிக்கும் தோரணையில் கையை ஆட்டினுர். என் தகப்பனுர் உடனேயே அந்த அறையை விட்டு வெளிக் கிளம்பினுர். கதவண்டை அப்பா வந்ததும், "சாஸ்திரி"

என்று கூப்பிட்டார் துரை. அப்பா, மரியாதையுடன் துரையின் முன்னே போய் நின்றார்.

"சாஸ்திரி, பைபிள் சொல்கிறது, கேளுங்கள் கொடுக்கப்படும் என்று. அது உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் ஷேக்ஸ்பியர் சொல்லியிருப்பது நிச்சயமாகத் தெரிந்திருக்கும்: 'எல்லோருக்கும் உங்கள் காதைக் கொடுங்கள். ஒருவருக்கும் உங்கள் குரலைக் கொடுக்க வேண்டாம்.' ஆகவே, மிஸ்டர் சாஸ்திரி, உங்கள் யோசனையை இனிமேல் வீணாக்கவேண்டாம்" என்று ஒரு ஷொட்டுக் கொடுத்தனுப்பினாராம்.

ஆனால், திருவிழாவின் பொழுது, அப்பா எதிர்பார்த்தபடியே நடந்து விட்டது. கோயிலின் உள்ளே மரியாதை பெறுவது என்பதை மாற்றி, வெளியே வாங்கிக் கொள்வது என்று இரு கட்சிக்காரர்களும் ஒத்துக்கொண்டார்கள். அவர்களின் ஒற்றுமை இத்துடன் நின்று விட்டது. மரியாதை பெறும் கட்டம் வந்ததும், ஆட்சேபங்கள் கிளம்பின. பேச்சில் ஆரம்பித்தது, வார்த்தை தடித்து, கூச்சலாக மாறியது. ஆரவாரம் கிளம்பியது. கை கலக்க ஆரம்பித்தன, இரு கட்சிகளும். கல்லும் சோடா புட்டியும் பறந்தன. பாதுகாப்பிற்கு வந்த போலீசையும் விடவில்லை. துப்பாக்கிப் பிரயோகம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இரண்டு பேர் ஸ்தலத்திலேயே மாண்டனர்; ஏழெட்டுப் பேருக்குக் காயம். இது அரசாங்கத்திற்குத் தெரிந்து, சில சட்டசபை அங்கத்தினர்கள் கோரியதன் பேரில் ஒரு விசாரணைக் கமிட்டியும் ஏற்படுத்தப்பட்டது. அந்த சமயத்தில் க்ரீன் துரை அப்பாவைத் தம் அறைக்கு வரச்சொன்னார். அப்பாவும் அவர் அறைக்குச் சென்று துரைக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு, மரியாதையாக நின்றார். துரையின் முகத்தில் சிறிதும் கோபம் இல்லை; வருத்தம்தான் இருந்தது.

"சாஸ்திரி, அன்று நான் உங்கள் யோசனையைக் கேட்டிருந்தால், இப்படியெல்லாம் நேர்ந்திருக்காது. நான் உங்கள் யோசனையை நிராகரித்துவிட்டதற்கு வருந்து கிறேன்" என்று வருத்தப்பட்டாராம்.

"ஐயா, கலெக்டர் உத்யோகம் இருதலைக் கொள்ளி எறும்பு போன்றது. சில சமயங்களில் இப்படிப்பட்ட விபரீதங்கள் நடப்பது சகஜம்தான். பின்னாலே இன்ன விளையும் என்பதை முன்கூட்டியே அறிந்து கொள்ளக் கூடிய ஞானதிருஷ்டி படைத்தவர்களல்ல நாம். மனச் சாட்சிக்கு விரோதமில்லாமல் தீர யோசித்துச் செய்ய வேண்டும். அப்பொழுதுகூடச் சில தவறுகள் ஏற்பட லாம். அதை மனோ தைரியத்துடன் தாங்கிக் கொள்ளத் தான் வேண்டும்."

"மிஸ்டர் சாஸ்திரி, நீங்கள் பெயரளவில் சாஸ்திரி அல்ல, படித்த, ஞானம் படைத்த, தத்வ சாஸ்திரி. உங்களுக்கு என் நன்றி" என்று வணக்கம் தெரிவித் தாராம்.

அப்பா அடிக்கடி அதைச் சொல்வார்: "மனிதன் தவறுவது சகஜம். ஆனால், அதை உணர வேண்டும்; ஒப்புக்கொள்ள வேண்டும்; மன்னிப்புக் கேட்கவேண்டும். இதை ஆங்கிலேயரிடம்தான் காணலாம். நம் நாட்டவர் களாயிருந்தால், முதலில் தவறு என்பதை அறியமாட் டார்கள். அறிந்தாலும், இவர்களின் அகங்காரம் அதை ஒத்துக்கொள்ளச் செய்யாது. ஒத்துக் கொண்டாலும், இவர்களின் தற்பெருமை இவர்களை மன்னிப்புக் கேட்க விடாது. அதுமட்டுமல்ல, நம்மவர்கள், தவறு நேர்ந்து விட்டால் அந்தப் பழியை வேறு யார்மேலாவது ஏற்றத் தயங்கமாட்டார்கள். தவறு செய்வதை ஒப்புக்கொள்வ தற்குப் பரந்த மனப்பான்மை வேண்டும். அந்த அரிய குணத்தை ஆங்கிலேயரிடம்தான் காணலாம்" என்று

ஆங்கிலேயத் துதி பாட ஆரம்பித்து விடுவார். இந்த ஆங்கிலேய பூஜையே, என்னையும் ஒரு கறுப்புத் துரை யாக்க வேண்டும் என்ற எண்ணத்தை அவர் மனத்தில் வலுப்படுத்திக் கொண்டே வந்தது.

# 3

அப்பாவின் ஆங்கிலேய மோகம், உத்தியோகம் ஏற்றபின் கலெக்டர் துரைகளுடன் பழகியதனுல் மாத்திரம் ஏற்பட்டு விடவில்லை. பார்க்கப் போனுல், அப்பா சிறு பையனுக இருந்த காலத்திலேயே, அதற்கு வித்திட்டாகிவிட்டது. அதற்குக் காரணம், கௌபர் என்ற துரையே. மிஷன் பள்ளிக்கூடத்தை ஆரம்பித்து வைத்தவர் அவரேதான்.

எங்கள் பாட்டனுர், வைதிகத் தொழிலில் ஈடுபட்டு, மிகுந்த கஷ்ட ஜீவனம் செய்து வந்தவர். அவருக்கு அப்பா ஒரே பிள்ளை. அப்பாவிற்குப் பிறகு, ஒரு பெண். ஊருக்குக் கடைசியாக இருந்த ஒரு வீட்டில் குடி இருந்து வந்தார். அன்றாட வாழ்க்கை நடத்துவதே பெரிய பிரயாசை. வேத விற்பன்னர்; கணீரென்று அவர் ஸுஸ்வரத்துடன் சொல்லும் பொழுது, அந்தக் குரல், கேட்பவரைப் புல்லரிக்கச் செய்யும். ஆனுல் வாழ்வதற்கு அந்த வித்தை உபயோகப்படவில்லை. ஆகவே பையனுக்குப் பிழைப்புக்கு லாயக்கில்லாத படிப்பு வேண்டாமென்று, ஆங்கிலப் படிப்புச் சொல்லிவைக்கலாம் என்று நினைத்தார். ஆங்கிலம் கற்றவர்களுக்கு நல்ல மவுஸுள்ள காலம். அரசாங்க உத்தியோகம் அவர்களுக்குக் காத்திருந்தது. நல்ல சம்பளம், முதல் தேதி கையில் வந்து விடும். கௌரவமான பிழைப்பு. ஆயுள் பரியந்தம் கவலையில்லை. ஓய்வு பெற்றுல்கூட, 'பென்ஷன்' உண்டு. காருண்ய கவர்ன்மெண்டில் வேலை பார்த்துக் கொண்டு

கவலையற்று இருப்பதைவிட உலகத்தில் வேறு என்ன வேண்டும்? மிஷன் பள்ளிக்கூடம், அருகிலேயே இருந்தது. அதில் கொண்டுபோய் அப்பாவைச் சேர்த்தார் என் பாட்டனார்.

அப்பா, படிப்பிலே மகா புத்திசாலி. மேதை என்று கூடச் சொல்லலாம். விஷயத்தைச் சட்டென்று புரிந்து கொண்டுவிடுவார். கேட்ட கேள்விக்குப் பளிச்சென்று பதில் சொல்வார். வ்குப்பிலே அவர்தான் சிறந்த மாணவர். அவர் என்னை 'அப்படிப் படிக்கவேண்டும், இப்படி மார்க் வாங்கவேண்டும்' என்று புத்திமதி சொல்கிறாரே — அதிலும் சிறிதும் தவறேயில்லை. அவர் அதே மாதிரி படித்துத் தேர்விலே மார்க் வாங்கிக் காட்டியவர். அப்பா எனக்குக் கொடுத்த சந்தர்ப்பங்கள் போல அவருக்கும் வசதிகள் இருந்திருந்தால், இராஜதானியில் என்ன, இந்தியா முழுவதிலும்கூட முதல்வராகத் தேர்வு பெற்றிருப்பார். அவரால் செய்ய முடியாத காரியத்தை என்னைச் செய்துவிடச் சொல்லவில்லை. 'மெட்ரிகுலேஷன்' மாத்திரம் தேறிய அவர், தமக்கு இவ்வளவு மதிப்பைத் தேடிக்கொள்ள முடியுமானால், உயர்ந்த படிப்பு படிக்கும் சந்தர்ப்பம் இருந்து, உயர்ந்த படிப்பும் இருந்திருந்தால், எந்த உயர்வான உத்தியோகம்தான் அவருக்குக் கிடைத்திருக்காது? அதற்கு வேண்டிய வசதிகளை அவர் பெற்றிருக்கவில்லை. அந்த வசதிகளை எனக்குச் செய்து கொடுத்து, தாம் அடைந்திருக்கக்கூடிய பதவிகளை எனக்குத் தேடித்தர விரும்புகிறார்; தாம் அடையாத இலட்சியத்தைப் பையனாவது பெறட்டுமே; அதுவும் அவருக்கு ஒரு வெற்றிதானே? இப்படித்தான் அவர் கற்பனை செய்து கொண்டிருந்தார். அதில் என்ன தவறு?

அப்பா, முதல் படிவம் படித்துக் கொண்டிருந்த பொழுது, என் பாட்டனார் காலமாகிவிட்டார். ஆகவே

அரைக் கஞ்சிச் சாப்பாட்டிற்கும் ஆபத்து வந்து விட்டது. வேறு வழியின்றி அப்பா படிப்பை நிறுத்தி விட்டு, ஒரு மளிகைக் கடையில் வேலை பார்ப்பது என்று தீர்மானிக்கப்பட்டது. நன்ருகப் படிக்கும் புத்திசாலிப் பையனைப் படிக்கவைக்க முடியவில்லையே என்று நொந்து கொண்டாள் பாட்டி. என்ன பிரயோசனம்? தாம், அம்மா, தங்கை—மூன்று ஜீவன்களையும் காப்பாற்றும் பொறுப்பு, அப்பாவின் தலைமேல் விழுந்துவிட்டது. 'சரி' அவ்வளவுதான் நான் கொடுத்து வைத்தது' என்று கடையில் சேர்ந்துவிட்டார்; மூன்று நாள் வேலையும் பார்த்துவிட்டார். கௌபர், பள்ளியின் முதல்வராயிருந் தாலும், பள்ளி விஷயங்கள் யாவற்றையும் நேரிடையாகக் கவனிக்கும் பழக்கம் இருந்தது. புத்திசாலிச் சிறுவர்கள், முன்னுக்கு வரக்கூடிய பையன்கள், யார் யார் எந்த எந்த வகுப்பில் படிக்கிருர்கள், எப்படிப் படிக்கிருர்கள் என்ப தைத் தெரிந்துவைத்துக் கொள்வார். துஷ்டப் பையன்கள் யார் யார், எந்த வகுப்பில் என்ன செய்து கொண்டிருக்கிருர்கள் என்பதையும் கவனித்துக் கொள் வார். என் தகப்பனர், மூன்று நாட்களாகப் பள்ளிக்கு வரவில்லை என்பதை அறிந்து, அதன் காரணத்தையும் தெரிந்துகொண்டார். அன்று மாலையே, அப்பா இருக்கு மிடத்தை அவர் விசாரித்து அறிந்துகொண்டு, வீட்டை நோக்கித் தமது குதிரை பூட்டிய பீட்டன் வண்டியிலே தம் மனைவியுடன் புறப்பட்டார்.

"அருணசலம் என்கிற பையனின் வீடு எது?" என்று அக்கம் பக்கத்து வீட்டு ஜனங்களை விசாரித்திருக்கிருர், அவர் யார் என்பதைத் தெரிந்துகொண்ட ஜனங்கள், ஓர் ஆளை விட்டு அப்பாவை அழைத்துவரச் சொன்னர் களாம். அவர் வருவதற்குள், பக்கத்து வீட்டு மக்கள், தகப்பனர் இறந்ததையும் அதனல் அப்பா படிப்பை நிறுத்தியிருப்பதையும் அவரிடம் எடுத்துச் சொல்லியிருக்

கிறுர்கள். துரையைப் பார்த்தவுடன் அப்பாவிற்குத் துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்துவிட்டது. தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்துவிட்டாராம். தகப்பனுரை இழந்த துக்கம், படிப்பை இழந்த துக்கம், இரண்டும் சேர்ந்து குமுறிக்கொண்டு வந்தனவாம். கௌபர் துரை, அப்பாவின் தோளைத் தட்டிக்கொடுத்து, "அருணுசலம், நான் விஷயம் தெரிந்து மிக்க வருந்துகிறேன். இப்பொழுது தான் நீ தைரியத்துடன் முன்னுக்கு வருவதற்கு மிகவும் பிரயாசைப் படவேண்டும். நீ படிப்பை நிறுத்தக்கூடாது. நீ பள்ளிக்கூடத்தை விட எண்ணிருலும், நான் உன்னை விடப் போவதில்லை. நாளைக்கே பள்ளிக்கு வந்துவிடு. உனக்கு மாதம் பத்து ரூபாய் உபகாரச் சம்பளம் ஏற்பாடு செய்திருக்கிறேன். கருத்தோடு படித்துக் கெட்டிக்காரன் என்று பெயர் வாங்க முயற்சி செய்" என்று சொல்லி, எல்லோருக்கும் வணக்கம் தெரிவித்து விட்டுப் போய்விட்டார்.

அப்பாவுக்கு ஏதோ கனவு காண்பதுபோல் இருந்ததாம். வந்தவர் கௌபர் துரைதானு? அல்லது கடவுள் தான் அந்த துரை உருவத்தில் இவருடைய கவலை தீர்க்க வந்தாரா? அந்த இளம் நெஞ்சிலே, அந்த மகானிடத்தில் அளவிறந்த பக்தி பெருகிற்று. அந்தப் புண்ய புருஷரான ஆங்கிலேய துரை அவரிடம் காட்டிய அன்பும் பரிவும் ஆங்கிலேய மக்களிடம் அவருக்கு அன்பையும் மதிப்பையும் உண்டாக்கிவிட்டிருந்தன. அவையேதான் மேலும் வளர்ந்து தழைத்தோங்கி நின்றன.

கௌபர் கிறிஸ்து சமயத்தைப் பரப்புவதற்கு வந்தவர் தான் என்றுலும், தவருன முறையில் மதமாற்றத்தைச் செய்தவரல்ல. அன்பு வழியையும் அறவழியையும், விடாமல் கைப்பற்றி நடப்பவர். அவர், செய்யும் பணியையே ஆண்டவன் பணியாக ஏற்று நடத்துபவர். வாழ்விலே குறைவையும் எண்ணத்திலே நிறைவையும் ஏற்று

நடப்பவர். பள்ளி மாணவர்களையெல்லாம் தம் குழந்தைகளைப் போலவே பாராட்டுபவர். அவர்களில் யாருக்காவது துன்பம் ஏற்பட்டால் அவர் மனம் வாடி, அதற்குப் பரிகாரமாக, தம்மாலானது என்ன செய்ய முடியும் என்று பறந்துகொண்டு செய்யத் துடிப்பார்.

ஆங்கிலத்தில் நல்ல புலமை. ஆக்ஸ்போர்டு கலாசாலையில் சிறந்த முறையில் தேர்வு பெற்றவர். இங்கு வந்து வடமொழியையும் தமிழையும் நன்கு கற்றுக்கொண்டவர். திருக்குறள், கீதை, பைபிள் எப்பொழுதும் அவர் கையில் இருந்துகொண்டிருக்கும். நல்ல உயரம், கூரிய நாசி, நீண்ட கைகள்; பார்த்தாலே கம்பீரமான உருவம். அவர் முகத்திலே உள்ள பொலிவும், கண்களிலே பெருகி வரும் கருணையும், எல்லோரையும் அவரிடம் ஈர்க்குமாம்.

அப்பா மெட்ரிகுலேஷன் வகுப்பில் படித்தபொழுது, கௌபர் துரை ஆங்கிலப் பாடம் நடத்த வருவாராம். அவர் குரலின் காம்பீர்யமும், உச்சரிப்பின் அழகும், மொழியின் சிறப்பும், பாடத்தில் இருக்கும் இலக்கியச் சுவையும் மாணவர்களை மெய்மறக்கச் செய்யுமாம். அப்பா படிக்கவேண்டிய பாடத்தில் ஒன்று — கோல்டு ஸ்மித் எழுதிய 'பாழடைந்த கிராமம்' என்பது. அது நெஞ்சை அள்ளும் கவிதைச் சுவை கொண்டது. கௌபர் அந்தப் பாடத்தை நடத்தும்பொழுது, அவர் படிப்பதிலிருந்தே, அந்தக் கிராமத்தின் சித்திரம் கண்முன் வரைந்தாற் போல் தோன்றுமாம். அதில் உள்ள சோகரஸத்தை அப்படியே பிழிந்து தருவாராம். முக்கியமாக அந்தக் கிராமத்து மதபோதகரைப் பற்றிக் கவி வர்ணிக்கிறார்:

To them his heart, his love, his griefs were given
But all his serious thoughts had rest in heaven
As some tall cliff, that lifts its awful form
Swells from the rale and midway leaves the storm

Though round its heart the rolling clouds are spread
Eternal sun shine settles on its head

அவர் எல்லோருக்கும், அவருடைய அன்பையும் இதயத்தையும் கொடுத்திருந்தார். ஆனால், அவருடைய மனமோ கடவுளிடம் லயித்திருந்தது. எப்படி பூமியிலிருந்து நிற்கும் மலையின் நடுபாகத்தில் மேகங்கள் சூழ்ந்திருந்தாலும், உச்சியில் எப்பொழுதும் பிரகாசம் இருந்து கொண்டிருக்குமோ, அப்படியே தெய்வவொளி பெற்றிருந்தாராம். அப்பா சொல்வார்: " இந்தப் பாடத்தை அவர் வாசித்துக் காட்டியபொழுது, அந்தக் கவிஞர் இந்த மகானைத்தான் மனத்தில் கொண்டு எழுதியிருக்கிறார் போலும் என்று நான் மாத்திரம் அல்ல, எல்லா மாணவர்களுமே நினைத்தோம். அந்தக் கவிதை இந்தப் பெரியவரின் குணத்தை விளக்குகிறதா, அல்லது இந்த மகான் அந்தக் கவிதையின் தத்துவத்தை விளக்குகிறாரா என்று எங்களுக்குள்ளே விவாதித்துக் கொண்டிருப்போம்" என்று சொல்லும்பொழுதே அப்பாவின் கண் கசியாமல் இருக்காது.

கௌபர் அவர்களின் குணத்தின் பெருமையை விளக்கும் சம்பவம் ஒன்று, அப்பா மெட்ரிகுலேஷன் வகுப்பில் படிக்கும்பொழுது நடந்தது. பொதுவாக, சௌக்கியமாகவும், கஷ்டமில்லாத காலத்திலும், பலர் நல்லவர்களாயிருத்தல் கூடும். ஆனால், பெரிய ஆபத்து ஏற்படும் காலத்திலோ, மகத்தான துன்பம் ஏற்படும் பொழுதோ, தவிர்க்க முடியாத கஷ்டங்கள் வரும் பொழுதோ, எப்படி நடந்துகொள்கிறார்கள் என்பதைப் பொறுத்துத்தான் அவர்கள் தன்மை இருக்கிறது.

மிகவும் நல்லவரான கௌபர் துரைக்கு மிகவும் பொல்லாத துக்கம் ஏற்பட்டது. அவருடைய ஒரே மகன் யுத்த களத்திலே இறந்தான் என்ற தகவல் வந்தது. அது எல்லோருக்கும் காட்டுத் தீபோல் பரவிவிட்டது. அப்பா

சொல்வார்: "அந்தச் செய்தியைக் கேட்டதும் நானும் என் சக மாணவர்களும் நெஞ்சம் அதிர்ந்து நின்றோம். 'இது என்ன கடவுளின் விபரீதமான சோதனை! இந்த உத்தமருக்கா இவ்வளவு கொடுமையான துக்கத்தைக் கொடுக்க வேண்டும்? பிறர் துன்பங்களை அன்றாடம் துடைக்க முயலும் இந்தப் புண்ணிய புருஷருக்கா இப்படிப்பட்ட சோகம் வரவேண்டும்? ஊரார் பிள்ளைகளைப் போஷிக்கும் இவரா சொந்தப் பிள்ளையைப் பறிகொடுக்க வேண்டும்? என்று நெஞ்சம் புழுங்கிப் பரதவித்தோம். அவர் முன் நின்று அவர் முகத்தைப் பார்த்து எப்படிப் பேசுவது என்று வருந்தித் தயங்கினோம்" என்றார். பிறகு இரண்டு மூன்று நாள் கழித்து அவர் தனிமையிலிருக்கும் நேரம் பார்த்து, அப்பாவும், ராமு என்ற அவருடைய நண்பரும் அந்தப் பெரியவரின் வீட்டை அடைந்தார்கள். இவர்கள் வருவதை அறிந்த துரையும் வரவேற்பு அறையில் வந்து உட்கார்ந்துகொண்டார்.

"ஐயா, எங்களுக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. பேரிடிபோன்ற இந்த துக்கத்தைக் கேட்டு எல்லோருமே அதிர்ந்துபோய் நிற்கிறோம். அன்பே உருவான உங்களுக்கு இந்த சோகம் வந்திருக்கவேண்டாம். இந்த சோகத்தை எங்களாலேயே தாங்க முடியவில்லையே!" என்று சொன்னார்களாம்.

கௌபர் துரை சொன்னாராம்: "இளம் நண்பர்களே! நீங்கள் எனக்கு ஆறுதல் சொல்ல வந்ததற்கு மிக்க நன்றி. என் மகனை இழந்தது பெரிய நஷ்டம்தான். இருந்தாலும், மனிதன் என்று பிறக்கிறானே, அன்றிருந்தே என்றோ நிச்சயமாக மரணமுண்டு. நோயினாலோ, விபத்தினாலோ என் மகன் மாண்டிருந்தால், அது ஒரு சாதாரண நிகழ்ச்சியாக இருந்திருக்கும். அவன் தேசத்திற்காகப் போர்முனையிலே மரணமடைந்தான் என்பதனால், அவன் தியாக வீரன் ஆகிவிடுகிறான். ஒவ்வொருவருக்கும் பல

தர்மங்கள் இருக்கின்றன. உடலுக்குச் செலுத்த வேண்டிய கடமை இருக்கிறது. குடும்பத்திற்குச் செலுத்த வேண்டிய கடமை இருக்கிறது. சமூகத்திற்குச் செய்ய வேண்டியது இருக்கிறது. தேசத்திற்குச் செய்யவேண்டியது இருக்கிறது. கடவுளுக்குச் செய்யவேண்டியது இருக்கிறது. இப்படிப் படிப்படியாகப் பல கடமைகள் இருக்கின்றன. எவன் ஒருவன் தன் கடமைக்காகவோ, கொள்கைக்காகவோ, பிறருக்காகவோ உயிரைத் தியாகம் செய்கிறானோ, அவன்தான் உண்மையில் வாழ்ந்தவன்'' என்றாராம்.

அப்பாவும் அவருடைய நண்பரும் பிரமித்து நின்றார்கள். மேலும் அந்த அறிஞர் சொன்னாராம்: "தந்தை–மகன் என்ற உறவு உடம்பைப்பற்றிய உறவுதான். மகனை நான் இழந்துவிட்டேன். உடலோடு பிணைக்கப்பட்ட மகனை நான் இழந்து நிற்கிறேன். ஆனால், எனக்கு மகன் இல்லையா? உள்ளத்தோடு பிணைக்கப்பட்ட எவ்வளவு மக்கள் இருக்கிறீர்கள்! நீங்கள் எல்லோருமே என் மக்கள் தான். என் மகனுடன் கழித்த காலத்தைவிட மிக அதிகமான காலத்தை உங்களுடன்தான் செலவிட்டு வருகிறேன். உங்களுடைய சுகதுக்கங்களையே என்னுடையவையாக்கிக் கொண்டிருக்கிறேன். அன்றும், இன்றும், என்றும் நீங்கள்தான் என் குழந்தைகள். உங்கள் கீதை சொல்லவில்லையா? —

"ஸமம் பச்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்திதமீச்வரம்-நஹினஸ்தி ஆத்மனாத்மானம் ததோயாதி பராம்கதிம்."

'எவன் ஒருவன், எல்லோரிடமும் ஒன்றுபோல் வீற்றிருக்கும் கடவுளை சமமாகக் காண்கிறானோ, அவன் ஆத்மாவை ஆத்மாவினால் அழிப்பதில்லை. அவன் பரம்பொருளையே அடைகிறான்.'

இதைக் கேட்டதும் அப்பா நினைத்தாராம்: "அடடா, இவர் அல்லவோ உண்மையான பிரம்மஞானி—வியாசர்!

கூட, சுகர் மறைந்ததும் 'சுகா' என்று துக்கித்தாராம். ஆனால் இந்த மகாஞானி வியாசரைக்கூட மிஞ்சிவிட்டார் போலிருக்கிறதே" என்று அவரை வணங்கிவிட்டு அப்பா நண்பருடன் திரும்பி வந்தாராம்.

இந்த சம்பவம் நடந்த ஒரு மாதத்திற்கெல்லாம் இந்தப் பாடம் வந்தது. தாமஸ் கௌபர் என்ற கவி எழுதிய கவிதை அது. இந்த கௌபர், நம் துரையின் முன்னோராவர். தாயின் படத்தைப் பார்த்ததும், இறந்து போன தாயின் நினைவால் உந்தப்பட்டு, பொங்கிவரும் உணர்ச்சியைச் சித்தரிக்கும் கவிதைதான். அந்தக் கவிதை பின்வருமாறு:

Oh ! that those lips had language ! life has passed
With me but roughly since I heard thee last
Those lips are thine-thy own sweet smiles I see
The same that oft in child-hood solaced me
Voice only fails, else how distinct they say
Grieve not, my child, chase all thy fears away

"அந்த உதடுகள் பேசவில்லையா? அந்த உதடுகள் பேசிய காலத்திலிருந்து இப்பொழுது வெகு தூரம், தள்ளாடித் தள்ளாடி வந்துவிட்டேன். நான் சிறுவனாயிருந்த காலத்தில் புன்னகையோடு ஆறுதல் சொன்ன இதழ்கள் இன்றும் சொல்கின்றன, 'கவலைப்படாதே—பயத்தை யெல்லாம் விரட்டிவிடு' என்று."

அப்பா சொன்னார்: "இந்தப் பாடத்தை அவர் நடத்தியபொழுது, எங்கள் கண்களில் நீர் தாரை தாரையாய்ப் பெருகியது. சமீபத்தில் பறிபோன அவருடைய மகன் ஞாபகம் வந்து எங்கள் நெஞ்சத்தைத் திருகி எடுத்து வேதனைப் படுத்தியது. ஆனால், அந்த மகானோ முகத்தில் சிறிதேனும் சோகத்தைக் காட்டவில்லை. கவிதாரஸத்தில் ஈடுபட்டுச் சொல்லிக் கொண்டிருந்தாரே தவிர, தம்

முடைய சொந்த துக்கத்தை நினைவில் கொண்டு வருத்தப் படவில்லை.

"முனிவன் எப்படி இருப்பான் என்பதைப் பற்றி கீதையில் சொல்லியிருப்பது எனக்கு ஞாபகம் வந்தது.

துःகேஷு அநுத்விக்ந மநா: ஸுகேஷு
விகதஸ்ப்ருஹ
வீதராக பயக்ரோத: ஸ்திததீர் முனிருச்யதே

"துக்கத்தைப் பாராட்டாதவனும், சௌக்கியத்தை விரும்பாதவனும், விருப்பம், பயம், கோபம் இவை இல்லாதவனும் எவனோ, அவன், ஸ்திர புத்தி கொண்ட முனிவன் என்று சொல்லப்படுகிறான். முழுக்க முழுக்க இந்தக் குறிக்கோளின் பிரமாணமாக விளங்கினார் கௌபர் என்ற முனிவர்" என்று முடிப்பார் அப்பா.

அப்பாவைக் கண்ணால் பார்த்தேன். என் மனக்கண்களால் கௌபர் என்ற முனிவரைப் பார்த்தேன். அவர் கடைப்பிடித்த சில தருமங்களை என் உள்ளத்தால் உணர்ந்தேன்.

# 4

அம்மா, கூடத்துக் கதவோரம் நின்றபடியே, நான் முதல் வகுப்பில், நல்ல மார்க்குகளுடன் தேறிவிட்டதைத் தெரிந்துகொண்டாள் என்பதை அவள் முகம் காட்டியது.

"வாடா. முதல்லே சுவாமி படத்திற்கு நமஸ்காரம் பண்ணு" என்றாள். நமஸ்காரம் பண்ணினேன். நெற்றியில் விபூதியை இட்டாள். "இந்தா தெருக்கோடியிலிருக்கும் பிள்ளையாருக்கு, சிதறு காயாகப் போட்டுவிட்டு வா. சாயந்திரம் போய்க் கோவில்லே ஒரு அர்ச்சனை பண்ணிண்டு வா." என்று கையிலே ஒரு தேங்காயைக் கொடுத்தாள். திருஷ்டி கழிப்பதற்குத் தலையை ஒரு தரம் சுற்றி ஒரு சொடக்கு சொடக்கிவிட்டு உள்ளே அடுப்பங்கரைக் காரியத்தைக் கவனிக்கச் சென்றுவிட்டாள். கணவனுக்கு இன்னும் அரைமணி நேரத்திற்குள் சாப்பாடு தயாராயிருக்கவேண்டுமே.

நான் பிள்ளையார் கோவில் போய் வருவதற்கும் இராமலிங்கம் அய்யர் வருவதற்கும் சரியாக இருந்தது. இரண்டு வீடு தள்ளியிருப்பவர். அவருக்கும் அரசாங்க உத்தியோகம்தான். தினசரிப்பத்திரிகையில் சரிபாகஸ்தர். அப்பாவும் அவரும் ஆளுக்குப் பாதி பத்திரிகைக் கட்டணத்தில் கட்டுவார்கள். நாங்கள் பார்த்து முடித்தவுடன் அவர் வாங்கிப்போய் விடுவார். வரும்பொழுதே "ராஜா என் வாழ்த்துக்கள்" என்றார்.

"வந்தனம் மாமா" என்றேன்.

"என்ன சாஸ்திரியளே, உம் பையன் உயர்ந்த மார்க்குகளுடன், முதல் வகுப்பில் தேறிவிட்டான். கொடுத்து வைத்தவர் ஐயா, நல்ல பையன், நல்ல புத்தி சாலி."

"உன் பசங்கள் என்ன பண்ணினுர்கள்?"

"ஒரு பாடத்திலே கோட். என் பசங்கள் அவ்வளவு தத்தாரிகள் ஐயா, என் சம்சாரம் அவர்கள் எல்லோ ரையும் குட்டிச்சுவர் பண்ணிட்டா. படிப்பிலே சிறிதும் அக்கறை கிடையாது. எப்போ பார்த்தாலும் புட்பால் மாட்சுக்குப் போகணும். டென்னிசுக்குப் போகணும். ஹாக்கி மாட்சுக்குப் போகணும், அதுதான் பேச்சு. கிரிக்கட் சீசன் வந்துவிட்டால் கேட்கவே வேண்டாம். ஒருநாள் விட்டு ஒருநாள், பேட் வாங்கிக்கொடு. பேணு வாங்கிக்கொடு, கடிகாரம் வாங்கிக்கொடு என்று உயிரை வாங்கிவிடுகிருர்கள். அது போகட்டும், என் தலைவிதி. உம் பையனைக் கல்யாணச் சந்தையில் விடப்போகி றீரா, இல்லையா?"

"கல்யாணத்திற்கு என்ன அவசரம் அப்பா, இராமலிங்கம். அவன் இன்னும் படிக்கவேண்டியது இருக்கிறது, படிப்பெல்லாம் முடியட்டுமே. அதற்குப் பிறகு கல்யாணம் செய்துகொள்வதை யார் தடுக்கப் போகிருர்கள்."

"என்ன சாஸ்திரியளே. இத்தனை வருஷம்தான் நீர் அவனைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வந்து ஆளாக்கிவிட்டீர். இனிமேலும் உமக்கென்னய்யா கவலை. நான் சொல்வதைக் கேளும். மதுரை லக்ஷ்மி நரசிம்ம யரைத் தெரியுமா?"

"ஆமாம். பெரிய வக்கீல் என்று கேள்விப்பட்டிருக் கிறேன்."

"அவர், என் சகலைக்கு ஒன்றுவிட்ட அண்ணுமுறை வேண்டும்; அவருக்கு இரண்டே பெண்கள். வேறு பிச்சுப் பிடுங்கல் கிடையாது. மூத்த பெண்ணை இஞ்சினியர் இராமகிருஷ்ணய்யர் மகனுக்குக் கொடுத்திருக்கிருர். அந்தப் பையனும் இஞ்சினீயர். இரண்டாவது பெண் ணுக்கு வரன் தேடிக்கொண்டிருக்கிருர். நீர் சரி என்று சொல்லும்; ஜாதகத்தை வரவழைக்கிறேன். கல்யா ணத்தை முடித்துவிடலாம். அவரே உங்கள் பிள்ளையை வக்கீலுக்குப் படிக்கவைத்து, தயார் செய்து, கேஸ் களையும், கட்சிக்காரர்களையும், உங்கள் பையனிடமே ஒப்படைத்துவிடுவார். அவருக்கு ஐவேஜி என்ன தெரியுமா ?"

"உம்."

"பதினைந்து லகாரத்திற்குக் குறைவில்லை. இதெல் லாம் கிடைக்கக்கூடிய சம்பந்தமில்லை. சரின்னு சொல்லும். அவர் விரும்புவது, புத்திசாலியான பையன். குணவாளுயிருக்க வேண்டும். பணத்தை அவர் விரும்ப வில்லை. பணம்தான் அவரிடமே ஏராளமாயிருக்கே."

"சரியப்பா இராமலிங்கம். நீ சொல்வது சரிதான். இருந்தாலும், பையனை ஐ. ஸி. எஸ். பரீட்சைக்கு அனுப்ப வேண்டுமென்று வெகுநாளைய சங்கல்பம் எனக்கு. ஏதோ, அவனும் சுமாராக மார்க் வாங்கியிருக்கிருன். இந்தப் பரீட்சையையும் முடித்துவிடட்டுமே. அப்புறம் கல்யாணம் எங்கே போகிறது. அவனுக்கு ஒரு பெண் எங்கோ பிறந்துதானே இருக்கிருள்."

"உயர்ந்த குடும்பம். பெண் லக்ஷணமாயிருப்பாள். ஏதோ, எஸ். எஸ். எல். சி. வரையில் படிச்சிருக்கிருள். குடித்தனப் பாங்கான பெண். எங்கோ ஊர் பேர் தெரியாத இடத்தில் சம்பந்தம் செய்வதற்கு இது எவ்வளவோ சிலாக்யம்."

"அது சரிதானப்பா. அவன் இந்தப் படிப்பை முடிக்கட்டும். என் வெகு நாளைய மனோரதம் பூர்த்தியாகட்டும்."

"நீங்கள்தான் சாஸ்திரியவேள, இதிலே மிகவும் மோகம் கொண்டிருக்கிறீர்கள்."

"அதென்ன இராமலிங்கம் அப்படிச் சொல்றே, பிள்ளையை வைத்திருப்பவன் ஒவ்வொருவனும் காணும் கனவுதான். தெரியாமலா தேவலோக சர்வீஸ் என்று சொல்லுகிறார்கள்."

"அது சரி. அதைவிடப் பத்துப்பங்கு வக்கிலாயிருந்து சம்பாதிக்கலாம்."

"என்ன இராமலிங்கம். பணம்தானா பெரிது. பதவி, கௌரவம் இதெல்லாம் இருக்கவேண்டாமா. வெள்ளைக்காரன், ராணுவத்தினாலும், போலீஸாலுமா நம்மை அரசாட்சி செய்யறான். இந்தியா பூராவும் சேர்ந்தாலும் இரண்டாயிரம் பேருக்குமேல் இருக்காது. இவர்களை வைத்துத்தானே அரசாட்சி நடக்கிறது. இந்த Steel Frame (இரும்புப் பூண்தான்) தேசத்தை ஆளுகிறது. தவிர, அந்த வர்க்கத்தில் சேர்ந்த உடனேயே, தைரியம், பரந்த மனப்பான்மை, இதெல்லாம் வெள்ளைக்காரர் பழக்கத்தினால் ஏற்பட்டுவிடுகிறது."

"நீங்கள் என்னவோ நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். நம் பையன்கள் எத்தனை பேர், விஸ்கி பாட்டில், மாமிச சாப்பாடு, சுருட்டுக் குழாய் என்கிற நாகரிக மனிதர்களாயிருக்கிறார்கள்."

"சிவ, சிவா. எங்க ராஜா அந்த வழியெல்லாம் போக மாட்டான். சிலர் அப்படி நடந்துகொள்ளலாம். எல்லோரும் அப்படிச் செய்வார்களா?"

"யார் கண்டா ஐயா. உங்களுக்கு வெள்ளைக்கார நாட்டுப் பெண் வேணும் என்கிற ஆசை யிருக்காப்போல்

இருக்கு. நீர்தான் வெள்ளைக்கார வர்க்கத்திடமே அபார மான பிரேமை கொண்டவராயிற்றே."

" சரிதானப்பா இராமலிங்கம். ரொம்பவும் கிண்டல் பண்ணுதே. வெள்ளைக்காரர்களை மதிக்கிறேனென்றால் அவர்களுடன் சம்பந்தம் செய்துகொள்ள வேண்டுமா, என்ன? மேல் நாட்டவரிடம் நான் கண்ட நற்பண்பு களால்தான் அவர்களை மதிக்கிறேன். நல்லவர்களை நல்லவர்கள் என்று போற்றுவது ஒரு தவறான காரியமா?"

" ஏதோ ஒரு சில நல்லவர்களைப் பார்த்துவிட்டு நீங்கள் எல்லா வெள்ளைக்காரர்களும் நல்லவர்கள் என்று சொல்லுகிறீர்களே அது மாத்திரம் நியாயமா?"

" சில கெட்டவர்களும் இருக்கலாம். ஆனால் மொத்தத் தில் நல்லவர்கள்தாம்."

" அப்படியா, ராபர்ட்கிளைவ்—நல்லவரா. வாரன் ஹேஸ்டிங்ஸ் நல்லவரா, ஜெனரல் டயர் நல்லவரா, நீலன் துரை நல்லவரா, இப்பொழுது நடக்கும் சுதந்திர இயக்கத்தை நசுக்கும் வகையில் கொடூரமான அடக்கு முறைகளைக் கையாளும் துரைகள் எல்லோரும் நல்லவர்களா?"

" ராமலிங்கம் இது அரசியல். நான் மதிப்பது ஆங்கி லேயர்களான மனிதர்களை. நீ குற்றஞ்சாட்டுவது, வெள்ளைக்கார சாம்ராஜ்யத்தை; அரசாளும் வர்க் கத்தை."

பேச்சு, என் கலியாணத்திலிருந்து, அரசியலுக்கு நல்ல வேளையாக மாறியவுடன் பக்கத்து, அறையிலிருந்த நான் அவர்கள் இருக்கும் அறைக்குப் போனேன்.

" இன்னிக்குச் செய்தியைப் பார்த்தியளா—மாமா" என்று சொல்லிக்கொண்டே வந்தேன்.

" பரீட்சை தேர்வுதானே முக்ய செய்தி?"

"அது நமக்குத்தான் மாமா முக்ய செய்தி. அதை விட முக்கியமான செய்தி வந்திருக்கிறது. மோதிலால் நேரு நேற்றுக் கைது செய்யப்பட்டிருக்கிறார்."

"என்னப்பா ராஜா. நிலைமை வரவர மோசமாகிக் கொண்டே வருகிறதே. தேசபக்தர்களைக் குண்டாந்தடியாலடிப்பதாலும், மக்கள் போற்றும் மாபெரும் தலைவர்களைச் சிறையில் தள்ளுவதாலும் தேசிய ஆர்வத்தை இந்த வெள்ளைக்காரன் அடக்கிவிட முடியுமென்று நினைக்கிறானே, அது நடைபெறுமா? ராஜதந்திரம் தெரிந்தவர்கள் என்று சொல்லப்படும் ஆங்கிலேயர்கள் செய்கிற காரியமா? சாம்ராஜ்யம் போய்விடுமே என்கிற பீதியில், மனச்சாட்சியைக் கொன்றுவிட்டார்களா? நீங்கள், இரண்டாயிரம் ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்கள் தேசத்தைச் கட்டி ஆளுகிறார்கள் என்றீர்கள். அது அபத்தம் சாஸ்திரியவர்களே; இன்று போலீஸ் இராஜ்யம்தான் நடக்கிறது. அது எவ்வளவு நாள்தான் நடக்கும்? உலகம் சிரிக்காதா?"

"மாமா, அப்பா என்னவோ, பிரிட்டிஷ்காரனுடைய அனந்த கல்யாண குணங்களிடம் மிகவும் ஈடுபட்டிருக்கிறார். பத்திரிகையின் கடைசிப் பக்கத்தைப் பாருங்கள். இங் நிருபர்கள்—இவர்களும் மேல்நாட்டவரே—இந்த அடக்குமுறையைப்பற்றி என்ன சொல்லியிருக்கிறார்கள் என்பது தெரியும்."

"ராஜா! நல்ல வேலை சொன்னே. நான் கவனிக்காமல் விட்டிருப்பேன். டெய்லி ஹெரலட் ஜார்ஜ் ஸ்லோகோம் எழுதி இருக்கிறார்: "வடாலாவுக்குச் சுற்றிலுமுள்ள குன்றுகளின் ஒன்றின்மேலிருந்து கொண்டு நடவடிக்கைகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். தேசத் தொண்டர்களுக்கும் அனுதாபிகளுக்கும் நடுவிலே, நான், ஆங்கிலேயன் — ஒருவன் நின்றுகொண்டு, அரசாங்கம் செய்துகொண்டிருக்கும் கேவலமும், அநாகரிகமுமான

காரியத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதே மிகவும் அவமானத்தை உண்டுபண்ணுவதாயிருந்தது.''

வெப் மில்லர் என்பவர் நியூ ப்ரீமன் என்ற பத்திரிகையில் பின்வருமாறு எழுதி இருக்கிறார்: ''நிருபனாக வேலை செய்துவந்த என்னுடைய பதினெட்டு வருஷ அனுபவத்தில் இருபத்திரண்டு நாடுகளில் நடந்திருக்கும் சட்ட மறுப்புகள், கலகங்கள், தெருச் சண்டைகள், தீவிரப் புரட்சிகள் எவ்வளவோ நேருக்கு நேர் கண்டிருக்கிறேன். தர்சனாவில் நடந்தது போன்ற கண்றாவியான காட்சிகளை வேறெங்கும் காணவேயில்லை. சில சோகக் காட்சிகளைக் கண்கொண்டுப் பார்க்க சகிக்காமல், முகத்தைத் திருப்பிக் கொண்டிருக்கிறேன். அதில் வியக்கத் தக்கது, தொண்டர்களின் அடக்கம்தான். காந்தியின் அஹிம்சை நெறியில் அவர்கள் நன்கு ஊறியிருக்கிறார்கள் என்பது நன்றாய்ப் புலனாயிற்று.''

''பேஷ். ராஜா. உண்மையை மறைக்காமல், எவ்வளவு அழகாகச் சொல்லியிருக்கிறான், சாஸ்திரியளே. உம்முடைய வெள்ளைக்காரன் மூட்டைகட்ட வேண்டியது தான்.''

''என்ன, இராமலிங்கம் — அவ்வளவு சுலபமாக நடந்துவிடப் போகிற காரியமா?''

''என்ன சாஸ்திரியளே. வெள்ளைக்காரன் என்றென்றும் இங்கேயே இருக்கவேண்டும் என்று நீர் விரும்பலாம். அவன் போய்விட்டால், உம் சம்பளம், பென்ஷன் எல்லாம் புது சர்க்கார் கொடுக்குமோ கொடுக்காதோ என்று பயப்படுகிறீரோ.''

''அது இல்லை அப்பா. நமக்குள்ளே எவ்வளவு உள்நாட்டு விவகாரங்கள், தொந்தரவுகள் எல்லாம் இருக்கு. இதையெல்லாம் மீறி நம்மிடம் ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டால் ஆளத்தெரிய வேண்டாமா. மிதவாதிகள்

சொல்வதுபோல், சிறிது சிறிதாகச் சுய ஆட்சி வரட்டுமே, அதற்குள் என்ன குடிமுழுகிப் போய்விடப் போகிறது.''

''வெகு நாட்கள் வரையில் காத்திருக்க மாட்டார்கள் ஐயா நம் ஜனங்கள். மகாத்மா காந்தி, தூங்குகிற ஜனங்களை எழுப்பி விட்டிருக்கிறார். தேசத் தலைவர்கள் தங்கள் தியாகத்தினால், மக்களுக்கு ஒரு உத்வேகத்தை உண்டுபண்ணுகிறார்கள். இன்று இயக்கத்தில் ஈடுபட்டிருப்பது அரசியல் வாதிகள் மாத்திரம் அல்ல. பொது மக்கள் ஈடுபடுகிறார்கள். வியாபாரிகள் — தொழிலாளிகள் — மாணவர்கள் — டாக்டர்கள் — வக்கீல்கள் — படித்தவர்கள் — படிக்காதவர்கள் — ஆண்கள் — பெண்கள் — வயது வந்தவர்கள் — இளைஞர்கள் இப்படி சமூகத்தின் எல்லாத் துறையிலிருந்தும் மக்கள் பங்கு கொள்கிறார்கள். அதுவும் அஹிம்சை என்ற ஆயுதத்தைக் கொடுத்திருக்கிறார் மகாத்மா.''

''அதுதான் மாமா இந்த இயக்கத்தின் சிறப்பு. எப்படிப்பட்ட மக்களிடம் எல்லாம் இந்த அஹிம்சா தத்துவத்தைப் பரவச் செய்திருக்கிறார் மகாத்மாஜி. எல்லைப்புற மாகாணத்தில் உள்ள முரட்டுப் பட்டாணியர்களைக்கூட அஹிம்சை வழியில் திருப்புவதென்றால், அது உலகம் கண்டறியாத அதிசயம் அல்லவா. பிரிட்டிஷ்காரனுக்கு வலுப்போய்விட்டது என்பதற்கு இந்த ஒரு நிகழ்ச்சி போதும் மாமா. ஒரு சிப்பாய் எந்த உத்திரவையும் செய்ய மறுக்கக் கூடாது. ஆனால் நிராயுதபாணியான கார்ஹ்வாலிக் கூட்டத்தைச் சுடச் சொன்ன போது சிப்பாய்கள் அதைச் செய்ய மறுத்துவிட்டார்கள். என்பது ஞாபகம் இல்லையா ?''

இந்தச் சர்ச்சை மேலும் விவாதிக்க முடியாதபடி என் தாயார் தடை உத்தரவு போட்டுவிட்டாள். கதவுப் பக்கம் நின்று கொண்டு ''ராஜா — மணி ஒன்பதே முக்கால்'' என்று மணி அடித்துவிட்டாள்.

'' சாஸ்திரிகளே, தடை உத்திரவு வந்து விட்டதே. ஆபீசிற்கு நேரம் ஆகிவிட்டது. நம் விவாதம் எங்கு ஓடிப் போறது. சாயந்திரம் பார்த்துக் கொண்டால் போச்சு'' என்று சொல்லிவிட்டு 'ஹிந்து'ப் பத்திரிகையை எடுத்துக்கொண்டு கிளம்பினார்.

அப்பாவும் நானும் இலையில் உட்கார்ந்து கொண்டோம். '' என்ன இராமலிங்கய்யர் ஏதோ வரன் விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தார் போலிருக்கே.''

'' பாருடா, ராஜா. இவள் இருக்கிறது கோடியிலிருக்கும் சமையற்கட்டு. வாசல் அறையில் என்ன பேசுகிறோம் என்பது ஒன்று விடாமல் இவளுக்குத் தெரியறது!''

'' ஏதோ, போறபோது வர்றபோது விழுந்த ஒன்றிரண்டு வார்த்தைகளை வைத்துக் கேட்டேண்டா ராஜா. உங்கப்பாவா என்னை மதித்து விவரமாகச் சொல்லப் போறார்.''

'' சொல்லாமல் என்ன, சமயம் வரும்பொழுது தானே சொல்லணும். இராமலிங்கம் சும்மா அளப்பான். அவனுக்கு வேண்டுமென்கிற இடமாயிருந்தால் அபாரமாகப் புகழ்வான். வேண்டாத இடமென்றால் மிகவும் குறைத்துப் பேசுவான். அது கிடக்கட்டும் போ.''

'' நல்ல இடமாயிருந்தால் ஜாதகத்தை வாங்கலாமே. எனக்கும் இதயம் பலவீனம் என்று டாக்டர் சொல்லியிருக்கிறார். நான் போறதுக்குள்ளே, ஒரு நாட்டுப் பெண்ணைப் பார்த்துவிட்டுப் போகவேண்டுமென்று ஆசையிருக்காதா?''

'' அதெல்லாம் நீ கவலைப் படாதே. இன்னும் ஒன்று அல்லது இரண்டு வருஷங்களுக்குள் ஒன்றும் வந்து விடாது. படிப்பு மேலே ஏற ஏற இதைவிட உயர்ந்த சம்பந்தம் வந்துவிடப் போகிறது. பல்லைக் கடித்துக் கொண்டு இன்னும் சில மாதங்கள் பொறுத்திருப்போம்.

இந்த ஐ.ஸி.எஸ். பரீட்சை முடியட்டும். உடனே நிச்சயம் செய்து விடலாம்.''

''என்னப்பா — ஐ. ஸி. எஸ். — ஐ. ஸி. எஸ்.— என்று ஜபம் செய்துகொண்டே இருக்கிறீர்களே. எனக்கு அதிலே கொஞ்சம்கூட மனம் செல்லவில்லையே.''

''உனக்கு மனம் எதிலே செல்கிறது ?''

''மேலே படித்துக் கொண்டிருக்கும்படியான உத்தியோகமாயிருந்தால் தேவலை.''

''அப்படி என்ன உத்யோகமிருக்கிறது ?''

''கல்லூரி ஆசிரியர். பத்திரிகாசிரியர். சர்வகலாசாலையில் ஆராய்ச்சி.''

''இதெல்லாம் என்னடா உத்யோகம்? கல்லூரியில் பசங்களைக் கட்டி மேய்ப்பது இனிமேல் சுலபமல்ல. பத்திரிகையில் என்ன சம்பளம் கிடைக்கும்? சம்பளம் இருந்தாலும் மாதா மாதம் கைக்கு வருமா? பத்திரிகையில் வேலை பார்ப்பதும் ஒரு தேசத்தொண்டு என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளலாம். உனக்கு எதற்கு இதெல்லாம். ஐ.ஸி.எஸ். போட்டிப் பரீட்சையில் தேறுவது உனக்குக் கஷ்டமான காரியமல்ல. ராஜபாட்டையை விட்டுவிட்டு எங்கெல்லாம் சந்து பொந்தெல்லாம் போகிறாயே.''

''அதில்லையப்பா. பரீட்சையில் தேறிவிடுகிறேன். தேறிவிட்டால் மாத்திரம் போதுமா. உத்யோகத்தை நிர்வகிக்கத் தெரியவேண்டாமா. பழகத் தெரியவேண்டாமா? மேலதிகாரிகளிடம் எப்படி நடந்துகொள்வது? கீழ் அதிகாரிகளிடம் எப்படி வேலை வாங்குவது? பொது ஜனங்களிடம் எப்படி நடப்பது? இதெல்லாம் தெரிய வேண்டாமா ?''

''இது என்ன கஷ்டம். நானே சரியாகப் பதினைந்து துரைகளுக்குப் பயிற்சி கொடுத்திருக்கிறேன். அவர்கள்

எல்லாம் நன்ருக வேலே செய்யவில்லேயா? தானே பழகப் பழக எல்லாம் தெரியறது."

"அப்பா, உங்களுக்குத் தெரியாததல்ல. நான் நிதானப் போக்குடையவன். எதிலும் திடீர் முடிவுக்கு வருவது என் போக்கிற்கு உகந்ததல்ல. என் உள்ளத்திற்கோ, மனசாட்சிக்கோ, ஒவ்வாத காரியங்களில் ஈடுபடமுடியாதவன். கலெக்டர் உத்யோகத்திற்கு ஒவ்வாத சுபாவம் என்னுடையது. திடீர் திடீர் என்று பிரச்னேகள் வரும்பொழுது உடனுக்குடனே அதற்குத் தீர்வுகாண வேண்டும். இப்படிச் செய்யலாமா அப்படிச் செய்யலாமா என்று தீர யோசித்து முடிவைக் கண்டு பிடிப்பதற்குள் காரியம் மிதமிஞ்சிப் போய்விடும். தவிரவும் இன்று இருக்கும் நிலேமையில் இந்தமாதிரி உத்தியோகத்திற்குப் போவது குறைத்துச் சொல்லப்போனல் தேசத்துரோகமான காரியம் தவிர, வேறு ஒன்றுமில்லே. மக்களின் தலேவர்களே — தேசத்தின் தலே சிறந்த தியாகிகளேத் துன்புறுத்தும் இழிவான காரியத்தைச் செய்யும் ஆங்கிலேயனுக்குக் கையாளாக இருந்து அவன் வாலேப் பிடித்துக் கொண்டு, அவனுக்குப் பல்லேக் காட்டிச் சம்பளம் பெறும் உத்தியோகத்தைவிட, வேறே எந்த ஈனமான தொழிலேயும் செய்யலாம்."

அப்பா ஒரு நிமிஷம் பிரமித்துப் போய்விட்டார். என்ன சொல்வதென்று தோன்றவில்லே போலும்! 'பையன் ஆனர்ஸ் தேறி, ஐ. ஸி. எஸ். பரீட்சைக்குப் போகவேண்டிய வருஷத்திலா இந்த கலாட்டாக்கள் வந்து தொலேயவேண்டும்? சட்ட மறுப்பு, அடக்குமுறை இவை இல்லாத வருஷத்தில் தேறி இருந்தாலும் இந்தப் பேச்சுக்கெல்லாம் இடம் இருந்திருக்காது. இப்பொழுதோ தேச பக்தி வெறி ஒரு பெரிய தொத்து வியாதிபோல் தேசம் பூராவும் பரவியிருக்கிறது. இந்தப் பயலுக்கும் நன்ருகப் பிடித்திருக்கிறது, என்று

யோசித்தவராய் ஒரு சமாதானத்தையும் கண்டுபிடிக்க முயன்ருர்.

"ராஜா, மனிதனுக்கு 104 டிகிரி ஜுரம் இருந்தால் அது வருஷக் கணக்கில் இருக்க முடியாது. ஒன்று, அதிகமாகி ஆள் தீர்ந்து போகவேண்டும். இல்லையேல், குறைந்து வியாதி குணமாக வேண்டும். இந்த தேசீயப் போராட்ட ஜுரமும் அப்படித்தான். அதுவும் வருஷக் கணக்கில் நீடித்துக் கொண்டு போக முடியாது. அது சாத்தியமில்லை. இரு தரப்பிலும் தாங்க முடியாது. அத்துமீறிப்போகும் என்ருல், பிரிட்டிஷ்காரர்கள் இராஜ தந்திரத்தை அனுசரிப்பார்கள். ஒரு மகாநாடு கூட்டு வார்கள், அதில் சில சிபார்சுகள் செய்யப்படும். அது ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பப்படும். அந்தக் கமிட்டியார் இரண்டை மாற்றுவார்கள். இரண்டு சீர் திருத்தங்களைக் குறைப்பார்கள். அதைப் பார்லிமெண்டில் சமர்ப்பிப்பதாகச் சொல்வார்கள். பார்லிமெண்டில் பெரிய கூச்சல் எழும். மேலும் சில வெட்டுகள் இருக்கும். முடிவில் சட்டமாக வரும்பொழுது முதலில் ஆரம்பித்த தற்கும் வெளி வந்ததற்கும் சம்பந்தமே இருக்காது. இந்த அறிக்கையை தேசீயவாதிகள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். மிதவாதிகள் ஒப்புக்கொண்டு பரீட்சை செய்துதான் பார்க்கலாமே என்பார்கள். அரசாங்கத்துக் கையாள்கள் சுதந்திரமே வந்துவிட்டதாகக் கூத்தாடு வார்கள். இதற்குள் வருஷம் பத்து ஆகிவிடும். ஜனங் களுக்கு மறுபடியும் அதிருப்தி மேலோங்கி, கிளர்ச்சி ஏற்பட்டால், மறுபடி இதே கதைதான். இப்படியே உன் ஆயுட்காலம் முடிந்து உன் பையன் காலம் முடியும் வரையில், ஆங்கிலேய ஆட்சி போகாது. அதற்குப் பிறகு பார்த்துக்கலாம். இன்றே அரசாட்சி மாறிவிட்டால், நல்லதாய்ப்போச்சு, சுதந்திர இந்தியாவின் கலெக்டரா

யிருப்பது பெருமைதானே. தேச பரிபாலனம் என்பதும் ஒரு தேசத் தொண்டுதானே.''

அப்பாவுக்கு ஆங்கிலேயரின் ராஜதந்திரமும், அரசாட்சி செய்வதில் உள்ள திறமையும் அத்துபடியாகி யிருந்தன. அவர் புதுடில்லியில் காரியதரிசியாயிருந்தால் கூட அவர் திறம்படச் செயலாற்றுவார் என்பதில் எனக்கு சந்தேகமில்லை.

''எனக்கு இதில் மனமே இல்லையே, அப்பா.''

''எனக்கு இதில் மனம் மிகவும் ஈடுபட்டிருக்கிறது. எனக்காக இதைச் செய்யேன். பித்ரு வாக்ய பரிபாலனம் செய்வதற்கு இராமன் காட்டுக்குப் போனன். பித்ரு வாக்ய பரிபாலனத்திற்கு நீ ஐ. ஸி. எஸ். பரீட்சைக் குப் படியேன்.'' அதற்குமேல் முடியாது என்று சொல்ல மனம் வரவில்லை.

''சரி அப்பா, உங்களுக்கு அதுதான் இஷ்டம் என்ருல் இந்த வருஷம் பரீட்சைக்குப் போகிறேன். ஆனல், அது முழுக்க முழுக்க உங்கள் திருப்திக்காகத்தான்.''

அப்பாவின் முகம் மலர்ந்தது.

''அப்படியே இருக்கட்டும். எனக்காக இந்த தியாகத் தைச் செய்தாய் என்று சொல்லிவிடுகிறேன். பகவத் க்ருபையால் நல்லபடியாகத் தேறிவிட்டாயானல், என் நெஞ்சில் பால் வார்த்ததுபோல்.''

''சரி அப்பா'' என்று அந்த வருஷம் பரீட்சைக்குப் படிப்பதற்கு என்னென்ன செய்யவேண்டும் என்பதைச் சிந்திக்கத் தொடங்கிவிட்டேன்.

# 5

அப்பா கேட்டார். "பரீட்சைக்கு என்ன பாடங்கள் என்ற விவரங்களைத் தெரிந்து கொண்டாயா?"

"ஆம்" என்றேன் நான்.

"புது விஷயங்கள் வேறு படிக்கவேண்டி வருமே."

"ஆமப்பா. நான் படிக்காத பிரிவுகள் இரண்டு இருக்கின்றன. இது தவிர உலக வர்த்தமானங்கள் நன்கு தெரிந்திருக்க வேண்டும். நேர்முகப் பரீட்சையில் இன்னதுதான் கேட்பார்கள் என்று சொல்ல முடியாது."

"அதுதான் நானும் சொல்லவந்தேன். இது சாதாரண 'மார்க்' வாங்குகிற பரீட்சையல்ல. சுமார் ஆயிரம் பேர் பரீட்சை எழுத வருவார்கள். அதிலே பத்துப் பேரைத்தான் பொறுக்குவார்கள். புத்திசாலிகளுக்குள் மகா மேதாவியாக இருந்தால்தான் அதில் வெற்றி பெறமுடியும். இந்த ஊரிலே உனக்குப் படிக்க வசதி கிடையாது. மதராஸ் போ. வேங்கடேசுவரா ஹாஸ்டலில் ஓர் அறை எடுத்துக்கொள். புத்தகங்கள் பார்ப்பதற்குக் கானிமரா வாசகசாலை, சர்வகலாசாலை வாசகசாலை இருக்கின்றன. ஏதாவது பாடத்திலும் உதவி தேவையிருந்தால், ஏதாவது ட்யுடோரியல் கல்லூரியில் சேர்ந்துகொள். அது சௌகரியமில்லை யென்றால் ஒரு பேராசிரியரிடம் ஏற்பாடு செய்து கொண்டு படித்துக் கொள்."

"ஏற்கனவே, இதுவரையில் சிரமத்தோடு படிக்க வைத்து விட்டீர்கள். மேலும் என்னால் உங்களுக்கு

அதிகப்படிச் செலவு ஆகப்போகிறது. அது அநாவசிய மும் கூட.''

''அநாவசியம் என்று சொல்லாதே. தகப்பனுர் கடமை என்ன தெரியுமா? தகப்பனுர் பையனுக்கு எவ்வளவு சொத்து வைத்துவிட்டுப் போகிருர் என்ப தல்ல; தகப்பனுர் பையனை எப்படி ஆக்கிவிட்டிருக்கிருர் என்பதுதான் முக்கியம். ஆஸ்தி இருக்கும், போகும். ஆனுல் அவனுக்குக் கற்றுக் கொடுத்தது அவனேடேயே இருக்கும். அதனுல் சிரமம் ஒன்றும் இல்லை. இன்னும் சிறிது நாள்தானே. பிறகு எனக்குப் பலன் வந்துவிடு கிறது.'' நான் சிரித்தேன்.

''எனக்குச் சிரமம் என்று நீ கவலைப்பட்டுக் கொள்ள வேண்டாம். உன் கவலையை, சிரமத்தைப் படிப்பில்தான் காட்டவேண்டும். எல்லோருக்கும் மேலாக மார்க் வாங்க வேண்டும்.''

ஆனுலும், எனக்காக அவர் எவ்வளவு சிக்கனமாக வாழ்கிருர் என்பது எனக்குத் தெரியாமல் இல்லை. அவர் அப்படி யிருந்ததால் இதுவரையில் என்னை செளகரிய மாகப் படிக்க வைக்க முடிந்தது. நல்லவேளையாகக் குடும்பம் பெரிய குடும்பம் இல்லை. நடுத்தரக் குடும்பம். நடுத்தர வாழ்க்கை. நடுத்தரக் கனவுகள். அப்பா ஊதாரியுமல்ல; கருமியுமல்ல. என் தாயின் மனேபாவ மும், என் மனேபாவமும் அதே போலத்தான். வாழ் விலே, வளமுமல்ல. வறுமையுமல்ல. என் தாய் ஒன்றுக்கும் குறைந்துகொண்டதே யில்லை. எனக்கு மட்டும் பட்டுப் புடவை வாங்கவில்லையே என்று வருந்திய தில்லை; கல்லுக் கல்லாய் நகை போடவில்லையே என்று ஏங்கியதுமில்லை. என் நிலையும் அத்தகையதுதான். என்னை மாணவர்கள் 'பைராகி ராஜா' என்பார்கள். 'இது வேண்டும், அது வேண்டாம்' என்று குறைந்து கொள்வதோ, அதிருப்தி கொள்வதோ பிடிக்காது.

என் தகப்பனரை நினைக்கும்போதெல்லாம் எதிர் வீட்டுக் குப்புசாமி ஐயரையும் நினைத்துப் பார்க்காமல் இருக்க முடிவதில்லை. அவரும் அப்பாவைப் போல ஒரு தலைமை குமாஸ்தாதான்—வேறு ஓர் இலாகாவில் மூன்று பிள்ளைகள். பிள்ளைகள் கல்லூரிகளில் படிக்கிறார்கள். பெண்கள் படிப்பு, பாட்டு, நடனம் எல்லாம் கற்றுக் கொள்கிறார்கள். எல்லாருக்கும் நகைநட்டுகளுக்கும் குறைவில்லை; பட்டுப் புடவைகளுக்கும் குறைவில்லை. குப்புசாமி அய்யர் வரும்பொழுதெல்லாம், பருவகாலத்திற் கேற்ப மாம்பழம், திராட்சை, ஆப்பிள்-ஒன்றுமில்லா விட்டால் சுவீட் தினிசுகள் - எல்லாம் வாங்கிவருவார். எங்கள் வீட்டில் பழதினிசுகளைப் பார்த்ததே கிடையாது. இரண்டு பேருக்கும் கிட்டத்தட்ட ஒரே சம்பளம்தான். ஆனால் வாழ்விலே எவ்வளவு தாரதம்மியம்! கெட்ட வனுக்குக் கடவுள் கூலி கொடுப்பார் என்று சொல்கிறோம். ஆனால் நமக்குத் தெரியும்படியாகக் கடவுள் பாரபட்சம் செய்வதில்லை. சூரியன், மழை, நெருப்பு இவையெல்லாம் நல்லவனுக்கு ஒருவிதத்திலும் கெட்டவனுக்கு ஒருவிதத் திலும் தங்கள் சக்திகளைக் கொடுப்பதில்லை. ஆனால், மனிதன் அதிகமாகத் தீங்கு செய்யாமலிருப்பதற்கு, கடவுள் மனச்சாட்சியின் உருவத்தில் சிலருக்கு இயங்கு கிறார். சமூகம் என்ற உருவத்தில் சிலருக்குப் பயத்தைக் கொடுக்கிறார். 'அரசன் அன்று கொல்வான்; கடவுள் நின்று கொல்வான்' என்ற எண்ணத்தில் என்றாவது நம் குற்றத்திற்குத் தண்டனை உண்டு என்ற பயம் இருக் கிறது. இவற்றிற்கெல்லாம் அஞ்சாமல் குப்புசாமி ஐயர் எப்படி அவர் விரும்பியபடி வாழ்க்கை நடத்த முடிகிறது என்று ஆச்சர்யப்படுவேன். அப்பாவைக் கேட்டேன். "அட சே, அவன் அசத்து. ஆபீசுலே மணிக்குப் பத்துத் தரம் சாகணும் அவன். ஆபீசர் கூப்பிடுகிறார் என்றால் உடனே நடுக்கம். என்ன புகாரோ, யார் எதைச் சொல்லிக்

கொடுத்தாரோ என்ற பயம். இதர உத்தியோகஸ்தர்களுக்கும் இவனுக்கும் ஆகாது. மனச்சாட்சி என்பதை விற்று விட்டால் அவனுக்கு நிம்மதி ஏது'' என்றார். அப்பாவுக்கு இவ்வளவு தைரியம் இருப்பது எதனால் என்பதைத் தெரிந்துகொண்டேன்.

அப்பா, பஞ்சாங்கத்தை எடுத்து ஏதோ கணக்குப் பண்ணினார். ''ராஜா, வியாழக்கிழமை நன்றாயிருக்கிறது. 1½ முதல் 3 வரை ராகு காலம். மூன்றேகாலுக்குப் புறப்பட்டால், 3–35க்குப் புதுக்கோட்டை பஸ் இருக்கிறது. அங்கிருந்து ஆறேகாலுக்கோ ஆறரைக்கோ தஞ்சாவூர் பஸ் இருக்கிறது - போட்மெயிலுக்குப் போய்ச் சேர்ந்து விடலாம். காலை மதராஸ். மறுநாளும் திவ்யமான நாள். அதற்குத் தயார் செய்துகொள். லாண்டிரியிலிருந்து துணிமணிகள் வரவேண்டுமானால் சொல்லி அனுப்பிவிடு. சட்டைத் துணி தைக்கவேண்டுமானால், தைத்துக்கொள். இல்லை, மதராஸிலேயே போய் அங்கே உள்ள பேஷனுக்கு வேண்டுமானால் தைத்துக்கொள். இந்தக் காலத்துப் பசங்களுக்கு பேஷன் வேண்டியிருக்கிறதே; உன் இஷ்டம் போல் செய்துகொள்'' என்றார்.

ஆனால், நான் அவருக்கு அதிக சிரமத்தைக் கொடுக்க வேண்டாம் என்று நினைப்பவனாயிற்றே. ''ஒன்றும் வேண்டாம், அப்பா. இருக்கிறதை வைத்துச் சமாளித்துக் கொள்கிறேன். ஆனால், டில்லி போகும்பொழுது சிலது வேண்டியிருக்கும். பரீட்சை சமயத்தில் குளிர் அதிகமாயிருக்குமாதலால் கம்பளி ஸ்வெட்டர்கள் வேண்டியிருக்கும்.''

''பேஷா - வாங்கிக்கோயேன்.''

வியாழக்கிழமை, ராகுகாலம் போனவுடன் மூன்றே கால் மணிக்கு நான் தயாராக இருந்தேன். அப்பா அலுவலகத்திலிருந்து இதற்காக வீட்டுக்கு வந்திருந்தார்.

அப்பாவையும் அம்மாவையும் நமஸ்கரித்தேன். அப்பா விற்கு முகம் பூரித்து இருந்தது. அம்மா பூஜை அறையி லிருந்து விபூதியை எடுத்துவந்து என் நெற்றியில் இட்டாள். வாசலில் இருந்த ஜட்கா வண்டியில் பெட்டி யையும் படுக்கையையும் ஏற்றினேன்.

"உடம்பைப் பார்த்துக்கோடா, ராஜா" என்றாள் அம்மா. அவள் கண்கள் வழக்கம்போல் கலங்கியிருந்தன.

"போய் லெட்டர் எழுது. வாரத்திற்கு ஒரு தடவை யாவது போடு. நேரத்தை வீணாக்காதே. கஷ்டப்பட்டுப் படி. காலிப் பசங்களோடு சேராதே" என்று புத்திமதி சொன்னார் அப்பா.

அம்மா வாசல் பக்கம் தலையை நீட்டி, சகுனம் பார்த் தாள். "நல்ல சகுனம். யாரோ சுமங்கலி தண்ணீர்க் குடத்துடன் வருகிறாள்" என்று சந்தோஷப்பட்டுக் கொண்டாள். அப்பாவும் வண்டி திரும்பும் வரையில் பார்த்துக்கொண்டே நின்றார்.

பஸ் ஸ்டாண்டிலே ஜட்கா போய் நின்றது. பஸ்ஸும் தயாராய் நின்றது. முன் ஸீட்டிலே உட்கார்ந்துகொண் டேன். பெட்டியையும் படுக்கையையும் மேலே ஏற்றி விட்டான் ஒரு பையன். அவனுக்குக் கூலி கொடுத்து அனுப்பினேன்.

ட்ரைவரும், கண்டக்டரும் பஸ்ஸில் ஏறினார்கள். ஏறின உடனே, பஸ் ட்ரைவர் என்னை ஒரு பார்வை பார்த்தார். அந்தப் பார்வையிலே ஒரு திமிரும் அவமதிப் பும் இருந்தன. நான் பஸ்ஸில் அசங்கியப்படுத்திக்கொண் டிருப்பதுபோல், "இந்தாப்பா, எழுந்திரு; பின்னால் போய் உட்கார்" என்றார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. விழித் துக்கொண்டே சும்மா இருந்தேன். "என்ன, காதில் விழவில்லையா? அந்த இடத்தைக் காலி பண்ணிட்டு, பின்னாலே உட்காருமேன்" என்றார்.

"ஏன், இந்த இடத்தில் உட்காரக்கூடாதா?" என்றேன்.

"என்ன மேன், சொல்றது புரியல்லையா? இங்கு உட்காரக்கூடாது. உடனே எழுந்து பின் ஸீட்டிலே போய் உட்கார்" என்றார்; நான் அதற்கும் மசியவில்லை.

"எனக்கு இந்த இடம் சௌகரியமாயிருக்கிறது. ஏன் பின்னால் உட்கார வேண்டும்?" என்றேன். கண்டக்டர் சிறிது மரியாதையாக, என்னை நோக்கி "ஸார், ஸர்க்கிளும், ஸப்இன்ஸ்பெக்டரும் வர்ராங்க. போறபோது ஸ்டேஷன்லே ஏத்திக்கிட்டுப்போகணும்" என்றார். அதற்குள் ட்ரைவர் சிறிது ஆத்திரத்துடனே, "என்ன மேன், தகராறு பண்றே? பின்னே போய் உட்கார்றியா இல்லையா?" என்றவுடன், எனக்குக் கோபம் வந்து விட்டது. நான் முடிவாகச் சொல்லிவிட்டேன்: "நான் பின்னால் போய் உட்காரமாட்டேன். அவர்களைத்தான் பின்னாலே உட்காரச் சொல்லுங்களேன்."

கண்டக்டர் பதவிசாகச் சொன்னார்: "அவர்கள் மாமூலாக் முன் ஸீட்டிலேதான் உட்காருவார்கள். அதுதான் மரியாதை."

"அதென்னப்பா மரியாதை. ஓசிலே போறவங்களுக்கு முன் ஸீட்டு. காசு கொடுத்துப் போறவங்களுக்குப் பின் ஸீட்டு. நீங்க விடாதேயுங்க ஸார், பார்க்கலாம்" என்று சொன்னார் கதர் உடுத்திருந்த ஓர் இளைஞர்.

பக்கபலம் கிடைத்தவுடன் எனக்குச் சிறிது தெம்புதான். அந்த இளைஞரைப் பார்த்துக்கொண்டே சொன்னேன்: "முதல்லேயே, இந்த இடத்திற்கு ஆள் வர்ராங்கன்னு சொல்லியிருந்தால் இந்த இடத்திற்கு வந்திருக்க மாட்டேன். அல்லது வயதானவர்கள், சீக்காளிகள், வந்து 'பின்னாலே மிகவும் இடைஞ்சலாயிருக்கு, எனக்கு இந்த இடத்தைக் கொடுங்கள்' என்று கேட்டாலும் கொடுக்கத்

தவறியிருக்கமாட்டேன். இவங்க அதிகாரம் பண்றதை நான் இப்பொழுது மறுக்கிறேன் " என்றேன்.

"ரொம்பவும் இவங்களையே குற்றம் சொல்ல முடியாது. போலீஸ்காரன் தயவு பஸ் ஓட்டிகளுக்கு எப்பொழுதும் வேண்டும். வேகம் அதிகம்னு பிடிப்பாங்க. ஓவர்லோடுன்னு பிடிப்பாங்க. ப்ரேக் சரியில்லேன்னு பிடிப்பாங்க. இதற்கெல்லாம் இவர்கள் ஈடுகொடுத்தாக வேண்டும். அதுக்காகத்தான் இவங்க போலீஸ்காரங்களைத் தாஜா பண்ணுறது" என்றார் ஒரு மீசைக்காரர்.

"போலீஸ்காரன் இவங்களை மிரட்டினால், இவங்க பாசஞ்சரை மிரட்டி அவமரியாதை செய்யணுமா?" என்றார் அந்த இளைஞர்.

" தம்பி, நாம்ப ஊருக்குப் பயணம் செய்ய வந்தோமா, இவங்களோடு சண்டை பிடிக்க வந்தோமா? முன்னால் இருந்தால் என்ன? பின்னால் இருந்தால் என்ன? நாம் சரியான நேரத்திற்கு ஊர் போய்ச் சேர வேண்டும். ஆகையினால், அவங்க இஷ்டப்படியே பின்னாலேயே வந்து விடுங்கள்" என்றார் ஒரு பெரியவர்.

"சொல்லப் போனால், முன் ஸீட்டிலே உட்காருவது ஆபத்து. ஏதாவது விபத்து ஏற்பட்டால், முன்னாலே உட்கார்ந்தவனுக்கு அதிக ஆபத்து. பின்னால் அமர்ந்தவர்களுக்கு ஒன்றுமே இருக்காது என்று கூடச் சொல்லலாம்" என்றார் மற்றொருவர்.

"சரிதான், என்ன, ஐயா. அபசகுனம் மாதிரி, விபத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள். நல்லபடியாகப் போய்ச் சேரணுமே, என் அப்பனே, முருகா, செந்திலாதிபா" என்றார் ஒரு கிழவனார்.

கண்டக்டர் கொஞ்சம் கெஞ்சும் தோரணையில், 'ஸார்' என்று கை காட்டி விளக்கிப் பின்னே காட்டினார். ட்ரைவருக்குப் பொறுக்கவில்லை. "என்ன மேன், இப்பொழுது

இடத்தைக் காலி செய்யறயா இல்லையா - நான் யார் என்பது தெரியாது போலிருக்கு'' என்று கீழே இறங்கினர்.

"நீ யாராயிருந்தால் எனக்கென்ன. என்ன பண்ணு வாய். பார்க்கலாம்'' என்றேன்.

"ஏ ட்ரைவர். ஏதாவது தவறு நடந்தது நாங்கள் எல்லோரும் உனக்குப் பாடம் கற்பித்துவிடுவோம்'' என்ருர் அந்தக் கதர் போட்ட இளைஞர்.

"அது சரிதான். ட்ரைவர் அத்துமீறிப் போகப் படாதே'' என்ருர் மீசைக்காரர்.

"சரி தம்பி, நேரமாவுது. இப்படியே விவகாரம் பண்ணிக்கிட்டிருந்தால் வண்டி கிளம்ப வேண்டாமா?'' என்ருர் அந்தப் பெரியவர்.

எனக்கும் இந்த விவகாரத்தை வளர்க்க விருப்ப மில்லை. கடைசியில் எல்லோரும் சேர்ந்துகொண்டு, 'போனல் போகிறது. இங்கேயே வந்துவிடுங்கள்' என்று சொல்லிவிட்டால் 22 பாசஞ்சர்களையும் எதிர்த்துப் போராடுவது உசிதமல்ல. ஆனுல், உடனேயே, இறங்கி விட்டால் பின் ஸீட்டிற்கு வந்து நான் தோல்வி அடைந்து விட்டதாகுமோ அப்படிச் செய்துகொள்ளவும் விரும்ப வில்லை. 'வெற்றியும் வேண்டாம் தோல்வியும் வேண்டாம், மானம் போகாமல் இருந்தால் சரி' என்கிற யோசனைக்கு வந்துவிட்டேன். அதற்கு என்ன உபாயம்!

பஸ் வரும் நேரத்தையும் போகும் நேரத்தையும் குறிக்கும் குமாஸ்தா வந்தார். இளம் வாலிபர்தான். "என்ன, கிளம்பவில்லையா?'' என்ருர். "ஸர்க்கிளும் டிப்டி யும் வரப்போகிருர்கள், இவரு ஸீட்டைக் காலி பண்ண மாட்டேங்கிருர். இவர் காலி செய்யாதவரையில் நான் கிளம்பப்போறதில்லை'' என்ருர் ட்ரைவர். அந்த குமாஸ்தா என்னைப் பார்த்து "இவ்வளவுதானே, ஸார்; நீங்கள் எல்லாம் படித்தவர்கள், இப்படித் தகராறு செய்ய

லாமா? உங்களுக்கு முன் ஸீட்டுதான் வேண்டுமென்றிருந்தால், அடுத்த பஸ்ஸிலே முன் ஸீட்டே தர்றேன். இன்னும் $1\frac{1}{4}$ மணி நேரத்தில் அடுத்த பஸ் கிளம்பறது, அதிலே ரிசர்வ் செய்து விடுகிறேன்" என்றார்.

"அப்படியாவது செய்யுங்கள்" என்றார் பெரியவரும் மீசைக்காரரும், ஒரு முடிவைத் தேடி.

"கட்டாயம் முன் ஸீட் கொடுப்பீங்களா?" என்று ஊர்ஜிதப் படுத்திக்கொண்டேன்.

"நானே உங்களை முதல் ஸீட்டில் உட்கார்த்திவிடுகிறேன், காரண்டி; அதுவரையில் ஏதாவது பேப்பர் பார்த்துக் கொண்டிருங்கள்" என்றார் அவர், மரியாதையுடன்.

கீழே இறங்கினேன். பெட்டியையும் படுக்கையையும் இறக்கிக்கொண்டேன், பஸ் புறப்பட்டது. ஒரு குதிரை வண்டியைக் கூப்பிட்டேன். பெட்டியையும் படுக்கையையும் ஏற்றினேன்.

"ஏன் ஸார்! அடுத்த வண்டியில் போகவில்லையா?" என்றார் அந்த குமாஸ்தா.

"இல்லை, ஸார்! எனக்குத் தஞ்சாவூரில் இனி போட்மெயில் கிடைக்காது. ஆகவே வீட்டிற்கே போகிறேன். கிளம்பின நேரம் சரியில்லை. வீண் சண்டையில் என் பயணத்தை ஆரம்பிக்க எனக்கு விருப்பமில்லை."

வீடு போய்க் கதவைத் தட்டினேன், அம்மா என்னைப் பார்த்தவுடன் மிகவும் ஆச்சரியப்பட்டாள். "பஸ்ஸிலே இடம் கிடைக்கவில்லையா?" என்றாள். ஆமாம் என்று சொல்லும் வகையில் தலையை ஆட்டிவிட்டு, சாமான்களை உள்ளே எடுத்துவைத்தேன். அப்பா வந்து என்ன சொல்வாரோ என்ற பீதி உள்ளூர இருந்தது.

வழக்கமான நேரத்திற்கு அப்பா வந்தார். என்னைப் பார்த்ததும் திடுக்கிட்டார். "என்னடா நடந்தது?" என்ற

திலேயே அவர் உணர்ச்சியின் வேகம் விளங்கியது. விஷயத்தைச் சுருக்கமாக எடுத்துச் சொன்னேன். அவருக்கு அளவிறந்த கோபம் வந்துவிட்டது.

“நீ படித்த முட்டாளடா! முன்னுல் இருந்தால் என்ன! பின்னுல் இருந்தால் என்ன! முன்ஸீட் முதல் கிளாஸ் - கடைசி ஸீட் மூன்ரும் கிளாஸா?”

“அப்பொ, அதிகாரிகள் பின்னுல் உட்கார்ந்தால் என்ன? பின்னுல் மூன்ரும் கிளாஸாம்; மரியாதை குறைந்து போய்விடுமாம்.”

“ஏதோ வழக்கமாய் அங்கேதான் உட்காருவான்.”

“அதற்காக அவர்களுக்கு உரிமை வந்துவிடுமா? இல்லையப்பா அதிகாரத் திமிர்! நான் போட்ட சண்டை உரிமை பற்றிய சண்டை; சுயமரியாதைபற்றிய சண்டை; அதிகாரத்தின் ஆணவத்தை எதிர்க்கும் சண்டை,”

“அதற்கு நீதான் அகப்பட்டுக் கொண்டாயா!”

“ஒவ்வொரு மனிதனும் தனித்து நிற்க முடியாதப்பா. ஒவ்வொருவனும் மற்ற எல்லோருக்கும் பிரதிநிதி, சமூகத்தின் சின்னம்.”

“அதெல்லாம் சரி! ஓர் அற்ப விஷயத்திற்குச் சண்டை போட்டிருக்கிருயே! உலக அனுபவமே இல்லாமல் இருக்கிருயே! அதுதான் கஷ்டமாயிருக்கிறது.”

“அற்பவிஷயமா? இதுமாதிரி அற்ப விஷயம்தான் வெறும் மனிதனை மகாத்மா ஆக்கியிருக்கிறது.”

“என்ன!”

“தென் ஆப்ரிக்காவில், மோஹன்தாஸ் காந்தி என்ற சாதாரண மனிதர், டர்பனிலிருந்து, ப்ரிடோரியா என்ற நகரத்திற்கு முதல் வகுப்பிலே போய்க்கொண்டிருந்தார். மாரிட்ஸ்பர்க் என்ற ஊரில், ஒருவெள்ளையன், அவர் இருந்த வண்டியிலேறினுன். வண்டியில்கறுப்புமனிதனிருப்பதைப்

பார்த்துக் கீழே இறங்கி இரண்டு உத்யோகஸ்தர்களை அழைத்து வந்து காந்தியை அந்தக் குளிர் நடுக்கும் நள்ளிரவில் இறக்கிவிட்டான். கறுப்பன் முதல் வகுப்பில் அந்த நாட்டில் போகக் கூடாது. காந்தி யோசித்தார். ஒன்று, நீங்கள் இப்பொழுது சொன்னது போல, நமக்கென்ன, இந்த நாட்டு வழக்கம் இப்படித்தான் என்று சமாதானப்படுத்திக் கொண்டு, அவமானத்தை மென்று விழுங்கி ஏப்பம் விட்டுவிடலாம். மற்றது, இந்த நாட்டுக்கும் நமக்கும் பொருந்தாது என்று சொந்த நாட்டிற்குக் கிளம்பி விடலாம். இரண்டையும் செய்யவில்லை. வெள்ளையர் ஆட்சியில், அன்று கண்ட நிறத்திமிருக்கு எதிர் நின்று சட்ட மறுப்பு ஆரம்பித்தார். சத்யாக்கிரகம் என்ற ஆயுதத்தையே அங்கேதான் தயார் செய்துகொண்டார். மகாத்மா ஆனார்."

"அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?"

"அங்கு வெள்ளையனின் நிறத்திமிர். இங்கு வெள்ளையனின் அதிகாரத் திமிர். இரண்டும் ஒன்றேதான்!"

அப்பா, ஒன்றும் பேசவில்லை. ஆனால் அவருக்கு அளவற்ற கோபம் என்பதை முகம் காட்டிற்று. கோபத்தை மிகவும் சிரமப்பட்டு, அடக்கிக் கொண்டிருக்கிறார் என்பதையும் புரிந்து கொண்டேன். தலையைக் குனிந்து கொண்டு பேசாமல் உள்ளே புக எண்ணினேன். "ராஜா, இங்கே வா" என்று சாவதானமாகக் கூப்பிட்டார் அப்பா. நான் திரும்பி அவரை நோக்கினேன்.

"உன் போக்கே வரவர ஒன்றும் புரியவில்லை. போன தடவை வந்ததற்கும், இப்பொழுது இருப்பதற்கும் மிகவும் மாறி இருக்கிறாய். எப்பொழுதும் மகாத்மா, சத்யாக்கிரகம், போராட்டம் இப்படியே பேசிக் கொண்டிருக்கிறாய். ஏதோ சிறு பிள்ளை உற்சாகத்தில் பேசுகிறாய் என்று இதுவரையில் பொறுத்திருந்தேன். இனிமேல்,

இந்தப் பேச்சே வேண்டாம். நான் உனக்குப் பார்த்திருக்கிற வழி என்னவென்று உனக்குத் தெரியும். இனி அதற்கு வேண்டிய காரியத்தைக் கருத்துடன் முனைந்து செய். அதற்கு எதிரிடையான காரியங்களைச் செய்து என் மனத்தை நோகச் செய்யாதே" என்றார்.

'இனிமேல், நீங்கள் பார்த்திருக்கும் வழியாக என்னால் போக முடியாது போலிருக்கிறதே, அப்பா' என்று சொல்லிவிடலாமா என்று நினைத்தேன். ஆனால் உடனேயே அவர் மனத்தைப் புண்படுத்த மனம் வரவில்லை.

பதில் ஒன்றும் சொல்லாது பேசாமல் இருந்தேன்.

# 6

போகிற பஸ்ஸிலே நடந்தது, அன்றாடம் நடக்கும் நிகழ்ச்சியேதான். அதிகார வர்க்கத்தின் மரியாதை ஏற்றி வைக்கப்பட்டது. பொது ஜனத்தின் மரியாதை இறக் கப்பட்டது. ஆனல் தேசம் பூராவும் வேறுவிதமான நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. ஒல்லியான பொக்கை வாய்க் கிழவர் அதிகார வர்க்கத்தின் பெருமையைக்கீழே இறக்கி, பொது ஜனத்தின் பெருமையை ஏற்றிக் கொண் டிருந்தார். அப்பாவைத் திருப்தி செய்ய ஐ. ஸி. எஸ். பரீட்சை எழுத முன் வந்த நான், அன்று தடங்கல் இல்லாமல் இருந்திருந்தால் பரீட்சை தேறி உத்யோகம் பெற்றிருக்கலாம். ஆனல், அன்று திரும்பியது, என் வாழ்க்கையிலே ஒரு பெரிய திருப்பம் என்பதை நான் நன்ருக உணர்ந்து கொண்டேன். அதுவரையில் தேசீயப் போராட்டம், கிளர்ச்சி, அடக்குமுறை எல்லாம் பத்திரி கைச் சமாசாரங்களாகவே அனுபவித்து வந்தேன். ஆனல் அன்று ஒரு புது விழிப்பு வந்தது. யாரோ சிலர் அடி வாங்குவது, யாரோ சிலர் சிறைக்குப் போவது, பாக்கியிருப்பவர் பத்திரிகைகளைச் சுவாரஸ்யமாகப் பார்த்துவிட்டுக் கீழே போடவேண்டியது என்பதுபோல், நானும் நடந்துகொள்வதா என்று என்னையே கேட்டுக் கொண்டேன். 'அந்த அடியிலும், உதையிலும் எனக்கும் பங்கு உண்டா? வேடிக்கை பார்ப்பதுடன் முடிந்து விட்டதா?' என்றும் கேட்டுக் கொண்டேன். புட்டுக்கு மண் சுமந்த பெருமானை அடித்தபோது, அந்த அடி

உலகம் பூராவும் விழுந்தது. அதுபோலவே அடி வாங்கிய தொண்டர்கள், தேசம் பூராவிற்காகவும்தான் அடி வாங்கினார்கள். எனக்காகவும்தான் அவர்கள் அந்த அடியை வாங்கிக் கொண்டார்கள். ஆனால் அந்த அடி உள்ளத்தில்தானே விழுகிறது ; என் உடலில் தைக்கவில்லையே ? 'அந்தத் தொண்டன் வேதனையில் எனக்குப் பங்கு வேண்டாமா'? என்று வருத்தப்பட்டேன்.

அப்பா மறுபடியும் நான் சென்னை புறப்படுவதற்கு நாள் பார்த்துவிட்டார். ஆனாலும் அந்த நாள் என்னையும், அப்பாவையும் எப்படியெல்லாம் பாதிக்கப் போகிறதோ என்று வியந்து நின்றேன்.

"இருபத்திரண்டாம் தேதி நன்றாய் இருக்கிறதடா ராஜா" என்றார், மறுபடியும் என்னை மூட்டை கட்டி அனுப்ப. என் மனம் அவர் சொன்ன தேதியிலோ, பயணத்திலோ நிற்கவில்லை.

"இரண்டு ஜோடி வேஷ்டி இருந்தால் தேவலை" என்றேன்.

"நன்றாய் வாங்கிக்கோயேன். நான் அன்னிக்கே சொன்னேனே" என்று பணத்தை எடுத்துக் கொடுத்தார் அப்பா.

நான் இரண்டு ஜோடி கதர் வேஷ்டி வாங்கிக் கொண்டேன். அப்பாவிற்கு பயந்து இதுவரையில் கதர் கட்டவில்லை. ஆனால் அன்று ஒரு பொதுக்கூட்டம். அதற்குக் கதர் வேஷ்டி இல்லாமல் போகவும் இஷ்டம் இல்லை. கதர் வேஷ்டியுடன் கூட்டத்திற்குப் போவது என்று தீர்மானித்தேன். போதுக்கூட்டத்திற்கு 144 தடை உத்தரவு போடப்பட்டிருந்தது. அதை மீறி ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் மீனாட்சிசுந்தரமும், அவர் மனைவி சங்கரி அம்மாளும் கூட்டத்தில் பேசுகிறார்கள். அதற்குப் பிறகு, மீனாட்சிசுந்தரம் அந்நியத் துணிக்கடை மறியலும், சங்கரி

அம்மாள் கள்ளுக்கடை மறியலும் செய்வதாக ஏற்பாடு. ஆனால் அன்று என்ன நடக்கும் என்பது எல்லோருக்கும் தெரியும். போலீஸ் தடியடி — சிலர் கைது. இதேதான் தேசம் முழுவதும் நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் ராட்சஸ அடக்கு முறைக்கு ஜனங்கள் பயந்தார்களா? தைரியம் இழந்தார்களா? ஒருவர் போனால், நூறு பேர் வருவதற்குத் தயாராக நின்றார்கள். இந்த வெறியாட்டம் ஜனங்களுக்கும் ஓர் ஆவேசத்தை உண்டு பண்ணிக் கொண்டிருந்தது.

'காந்தி' சதுக்கத்திலிருந்து திரு. மீனாட்சிசுந்தரம், அவருடைய மனைவியார், தொண்டர்கள், எல்லோரும் "கத்தியின்றி, ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது" என்று பாடிக்கொண்டே வந்தனர். வரும் வழியில் ஒரு காவாங்கரை (கால்வாய்), அதற்குக் கீழே ஒரு பெரிய மதில் சுவரைக் கொண்ட கிடங்கு. அந்தக் கிடங்குக்குச் சிறிது தள்ளி எதிர்த்தாற்போல் ஒரு குளம். நான் கிடங்குச்சுவரின் நிழலில் நின்று கொண்டிருந்தேன். போலீஸ் லாரிகள், ஒவ்வொன்றாய்க் குளத்தின் பக்கம் வந்து நின்றன. கால்வாய்க்கும், குளத்தின் பக்கத்திற்கும், சுமார் அறுபது கஜ தூரம் இருக்கும். காங்கிரஸ் தலைவர்கள் பாலத்திற்கு வந்ததும், போலீஸ் படை அரை வட்டமாக நின்று கொண்டு, அந்தக் கால்வாயை நோக்கி வந்தது. இவர்கள் வரும் வேகத்தில், நானும் இன்னும் அங்கு நின்ற சிலரும் அந்தக் காவாங்கரைப் பக்கம் தள்ளப்பட்டோம். முன் நோக்கி வரும் ஊர்வலக் கூட்டத்தைச் சூழ்ந்து கொண்டதுபோல் நின்றது போலீஸ். கையில் குண்டாந் தடியோடு சூழ்ந்து கொண்டது மலபார் ரிசர்வ் போலீஸ். கூட்டம் நெருங்கியதும், தடியால் கூட்டத்தைப் போலீஸ் தாக்கியது. இடம் குறுகியதாக இருந்ததால், ஒரே நெரிசல். கூட்டம் கலவரம் அடைந்தது. ஒரே கூச்சல். ஒரே குழப்பம். நான் இடிபட்டு நசுக்கப்பட்டேன். முன்

வரிசைக்காரர்களுக்கும், போலீசுக்கும் நடுவில் அகப்பட்டுக் கொண்டேன். முதுகில் உலக்கை போல் விழுந்தது, தொடையில் ஏதோ சுர்ரென்றது — அவ்வளவு தான் தெரியும்.

பிறகு எனக்கு நினைவு வந்து, கண்ணைத் திறந்து பார்த்தபொழுது, அப்பாவும், அம்மாவும் எதிரில் நின்று கொண்டிருந்தனர். முதுகைச் சுற்றிக் கட்டுப்போட்டிருந்தது. தொடையை அசைக்கவே முடியவில்லை. சிறிது அசைந்து கொடுத்தாலும் நரக வேதனையைக் கொடுத்தது. நான் படுத்திருப்பது மணி ஐயர் ஆஸ்பத்திரியில் என்பதை அறிந்து கொண்டேன்.

"என்னடா, ராஜா...? உனக்கேண்டா இந்தக் கருமம் எல்லாம்? எப்படி இதில் வந்து மாட்டிக் கொண்டாய்?" என்றார் அப்பா.

"ஏண்டா, ராஜா. இந்த அடிதடியில் அகப்பட்டுக் கொள்ளலாமா? எப்படி இதிலே சேர்ந்தே?" என்றாள் அம்மா.

நான் சிறிது யோசித்து நினைவுப்படுத்திக் கொண்டேன். வேடிக்கை பார்க்கச் சென்றதும், கூட்டத்தில் உந்தப்பட்டதும், போலீஸ்படை பின்னே வந்து தாக்கியதும், முதுகிலும் துடையிலும் அடி விழுந்ததும், ஒவ்வொன்றாக ஞாபகம் வந்தது. நடந்ததைச் சொன்னேன்.

என்னைப்போல் நன்றாக அடிக்கப்பட்டு மயக்கம் வந்து இங்கே கொண்டுவரப்பட்டவர்கள் நாலைந்து பேர்கள். சுமார் பத்துப் பதினைந்து பேருக்குச் சாதாரணக் காயம். தலைவர் மீனாட்சிசுந்தரமும், அவர் மனைவியும், கைது செய்யப்பட்டு, போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகப்பட்டார்கள். மயக்கமுற்றிருந்த எங்களை டாக்டர் மணி ஐயர் தம்முடைய வேனில் ஏற்றிக்

கொண்டு வந்து, தமது ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டார். டாக்டர் சிறந்த தேச பக்தர். மாபெரும் தியாகி. போலீ சாரால் தாக்கப்பட்ட தொண்டர்களுக்கு மருத்துவம் செய்வது, ஒரு பெரும்பாக்யம் என்று கருதுபவர். எந்த தேசத்தலைவர் வந்தாலும், அவர் வீட்டில்தான் தங்குவது வழக்கம். தேசீய காரியங்கள் என்றால் பணத்தை வாரி வழங்குவார்.

"நான் ஊர்வலத்திலோ, மறியலிலோ கலந்து கொள்ள வேண்டும் என்று போகவில்லையப்பா. என்ன நடக்கிறது என்று பார்க்கலாமே என்றுதான் போனேன். எதிர்பாராத விதமாக, போலீஸ்தான் நான் இருந்த பக்க மாக வந்து என்னையும் தள்ளிக்கொண்டு போய்விட்டது" என்றேன். பேசும்பொழுதே வலி தாங்க முடியவில்லை.

அந்த சமயம் டாக்டர் மணி அய்யர் என் பக்கம் வந்தார். "என்ன வருங்கால ஐ. ஸி. எஸ்.? நீ அடி வாங்க வந்துவிட்டால், அடிக்கிறதுக்கு ஆள் கிடைக்க மாட்டாங் களே. நீ எப்படி சத்யாக்ரகி ஆகிவிட்டாய்?" என்றார்.

"கல்யாணம் பார்க்க வந்தவனுக்கு மாலையைப் போட்டுத் தாலி கட்டச் சொன்னதுபோல், எனக்கு இந்தப் பதக்கம் கிடைத்திருக்கிறது. எல்லோரும் அடி வாங்குகிறார்கள். நாம் மாத்திரம் வேடிக்கை பார்க் கிறோமே என்று என் மனச்சாட்சி குத்திக் கொண்டிருந் தது. அதற்குப் பரிகாரமும் கிடைத்துவிட்டது."

"ஏண்டா, ராஜா. ரொம்ப புத்திசாலித்தனமாகப் பேசுகிறதாக நினைக்கவேண்டாம். நீ போய் சத்யாக் கிரகம் செய்யாததால்தான் இன்று வரையில் சுயராஜ்யம் கிடைக்கவில்லை, இல்லையா? நீ சத்தியாகிரகம் செய்வ தாலும், சிறைக்குப் போவதாலும் பிரிட்டிஷ் அரசாங்கம் நடுங்கிப்போய் உன் காலில் வந்து விழும்? இல்லையா?" என்றார் அப்பா.

அப்பாவைப் பார்த்து மணி ஐயர் சொன்னார்; "ஐயா, நீர் அரசாங்க உத்யோகஸ்தர். சம்பளம் வருகிறது. பென்ஷன் வரப்போகிறது. கௌரவம் இருக்கிறது. இவ்வளவையும் கொடுப்பதால்தான் இந்தக் காருண்ய அரசாங்கம் என்றும் நிலைக்க விரும்புகிறீர். உம் பையனும், இதே அரசாங்கத்தில் சர்க்காரின் கருணையில் வாழவேணும் என்று நினைக்கிறீர். ஆனால் எனக்குத் தெரியும், உம் பையனுக்கும் தெரியும் - இந்த அரசாங்கத்திற்குக் கருணையுமில்லை, இது நிலைக்கவும் போறதில்லை என்பது" என்றார்.

"அப்பாவிடம் அவ்வளவு கடுமையாகச் சொல்லிவிடாதேயுங்கள். டாக்டர். அன்னிய ஆட்சியானாலும் அது நல்லாட்சியே என்பது அப்பாவின் கருத்து. நமக்குச் சுய ஆட்சி வந்தாலும், அது உருப்படாது, மோசமான ஆட்சியாகத்தான் இருக்கும் என்பது அவருடைய திடமான அபிப்பிராயம்" என்றேன்.

"சரிதானப்பா, நம் வீட்டு நிர்வாகம் செய்யத் தெரியல்லேன்னு வேறு யாரையாவது வந்து வீட்டு நிர்வாகம் செய்யக் கூப்பிடுவோமா?" என்றார் டாக்டர். அப்பாவிற்கு, இந்த விவகாரத்தில் ஈடுபட இஷ்டமில்லை.

"டாக்டர், பிள்ளையாண்டான் இன்னும் எவ்வளவு நாள் இங்கு இருக்கவேண்டும்?" என்று கேட்டார்.

"எக்ஸ்ரேயிலே பார்த்துட்டேன். எலும்பு முறியல்லே. ஊமைக்காயம்தான் பட்டிருக்கிறது. இரண்டு நாளில் அனுப்பிவிடுகிறேன். அதன் பிறகு நாலஞ்சு நாளைக்கு மருந்து போட்டுக்கொள்ள வேண்டியிருக்கும்" என்றார் டாக்டர்.

"ஈசுவரா, இரண்டாம் தரம் பார்த்த நாளும் விலகி விடும் போலிருக்கிறதே" என்று ஆயாசப்பட்டார் அப்பா.

"பரீட்சையைப்பற்றி இப்ப என்ன? குழந்தை நல்ல படியாக உடல் சரியாகி வரட்டும். பரீட்சைக்குப் பின்னால் போகிறது. இல்லாதபோனால் வேறு படிப்புப் படித்தால் போகிறது" என்றாள் அம்மா.

"சரிதான். நீயும் அவன் பக்கம் சேர்ந்து கொண்டு விட்டாய். உருப்பட்டாப்போலத்தான்."

அப்பா விடாப்பிடியாக அதே தியானத்தில் இருந்து வருகிறார். நானோ, ஒவ்வொரு நாளும், அவரது கனவு உலகத்திலிருந்து விலகி, விலகி வந்து கொண்டிருக்கிறேன். அப்பாவின் கனவு பலிக்குமா? நானோ எங்கே போய்க் கொண்டிருக்கிறேன் என்பது எனக்கே தெரியவில்லை. 'இந்தப் பிரச்னை எப்படித் தீரப்போகிறது' என்று கவலை கொண்டேன்.

ஆஸ்பத்திரியிலிருந்து இரண்டு நாட்களில் வீட்டுக்கு அனுப்பப்பட்டேன். அதற்குப் பிறகு, மூன்று நாட்கள் ஆஸ்பத்திரிக்குச் சென்றேன்; கட்டையும் அவிழ்த்து விட்டார் டாக்டர். டாக்டரிடம் போய் விட்டு வீட்டில் வந்து உட்கார்ந்து கொண்டு, காலையில் பத்திரிகை சரியாகப் பார்க்காததால், பத்திரிகையைத் துருவித் துருவிப் படித்துக் கொண்டிருந்தேன். மணி பதினொன்றிருக்கும்; அப்பா ஆபீசுக்குப் போயிருந்தபடியால் நான் மாத்திரம் அவருடைய அறையில் உட்கார்ந்திருந்தேன். ஒரு போலீஸ் கான்ஸ்டேபிள் வந்து நின்றார். சில சமயங்களில் அப்பாவைத் தேடி வருவார்கள்; போலீசுக்கும் கலெக்டர் ஆபீசுக்கும் தொடர்பு உண்டல்லவா?

"அப்பா இல்லை" என்றேன்.

கான்ஸ்டேபில் தயங்கி நின்றார்.

"என்ன வேண்டும்? யார் வேண்டும்?" என்றேன்.

"நீங்கள்தானே நடராஜன்" என்றார்.

"ஆமாம்" என்றேன்.

"ஐயா, அருணாசல சாஸ்திரி ஐயா மகன் நீங்க தானே?" என்றார்.

"ஆமாம்" என்றேன்.

"சிறிது ஸ்டேஷனுக்கு வாருங்கள். சர்க்கிள் ஐயா கூட்டிண்டு வரச் சொன்னார்" என்றார்.

"எதற்காக?" என்றேன்.

"எனக்குத் தெரியாது. கையோடு கூட்டியாரச் சொன்னாங்க" என்றார். அம்மாவிடம் சொன்னேன். அம்மாவிற்குக் கிலி பிடித்துக் கொண்டது.

"எதுக்கடா உன்னைக் கூப்பிடறா?" என்றாள் நடுநடுங்கிக் கொண்டே.

"ஒண்ணும் விஷயமிருக்காது. தெரிஞ்சுண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, கான்ஸ்டேபிளுடன் சென்றேன். எதற்காகக் கூப்பிட்டிருக்கிறார்? அன்று பஸ் தகராறு செய்ததைத் தெரிந்து கூப்பிடுகிறாரா? அப்படியும் கூப்பிட முடியுமா? அது ஒரு குற்றமா? குற்றம் செய்த உடனேதானே, போலீஸ் அதிகாரம் பெறுகிறது. நான் சட்டத்திற்கு விரோதமாக என்ன குற்றம் செய்தேன்? அப்படியே குற்றம் செய்திருந்தாலும், ஏதோ அந்தரங்க விஷயத்தைப் பேசுவதற்குக் கூப்பிடுவதுபோல், கூப்பிட்டனுப்ப மாட்டார்களே? என்ன விஷயமாயிருக்கக்கூடும்? அப்பாவும் சர்க்கிளும் சிநேகிதர்கள்; அப்பாவுக்கு ஏதாவது சமாசாரம் சொல்வதற்கு என்னை வரச்சொன்னாரா?

ஸ்டேஷனில் சர்க்கிள், ஜரிகை தலைப்பாகை பளபளக்க உட்கார்ந்திருந்தார்.

"ஏன் அப்பா, நீதான் அருணாசல சாஸ்திரியின் பிள்ளையா?"

"ஆம்."

"உன் பெயர் என்ன?"

"நடராஜன்."

"நீதானே, டாக்டர் மணி ஐயர் ஆஸ்பத்திரியில், அடிபட்டதற்குக் கட்டுப்போட்டுப் படுத்துக்கொண்டு, நாலு நாளைக்கு முன்பு வீட்டிற்கு அனுப்பப்பட்டது?"

"ஆமாம்."

"உன் அப்பா கௌரவம் என்ன? அவர் பெருந் தன்மை என்ன? அவர் குணம் என்ன? அவர் பிள்ளை யென்று சொல்லிக்கொண்டு அவர் பெயரைக் கெடுத்து, அவர் முகத்திலே கரியைத் தீத்தறியே. ஏன் இப்படி யெல்லாம் செய்யணும்?" என்றார்.

"எனக்கு ஒன்றும் புரியவில்லை. எதைச் சொல்கிறீர் கள்? நான் என்ன தவறுதலான காரியம் செய்திருக் கிறேன்?"

"அன்று அடிபட்டு விழுந்தவர்களின் பெயர்களை யெல்லாம் ஜாப்தா எடுத்தோம். இவர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள் என்பது, அடிபட்டதனாலேயே ருசுவாகிவிட்டது. 144 இருக்கும்பொழுது, கூடுவது சட்டத்தை மீறிய செயலாகும்; ஆகவே, அந்தக் குற்றத் திற்குச் சம்பந்தப்பட்டவர்கள் பேரில், நடவடிக்கை எடுக்கிறோம். அப்படிப்பட்டவர்களில் நீயும் ஒருவன்" என்றார்.

எனக்கு ஆச்சரியமாயிருந்தது. ஆனால் திடுக்கிட வில்லை. ஒரு விதத்தில் எனக்கு மிகவும் திருப்தியாகவும் இருந்தது.

"அப்படியா?" என்று சொன்னேன்.

"உன் தகப்பனருக்குச் சொல்லி அனுப்பியிருக் கிறேன். அவர் வந்தவுடன் அவரிடம் சொல்லிவிட்டு, உன்னை என்ன செய்யவேண்டும் என்பதைத் தீர்மானிக் கிறேன்" என்று சொன்னர்.

சில நிமிஷங்களுக்குள், அப்பாவே வந்து விட்டார். பதறித் துடித்துக்கொண்டிருந்தார். அவர் முகத்தில் தென்பட்ட கோபமும், அச்சமும் அளவிட முடியாதபடி இருந்தன. அப்பாவை வரவேற்று உட்கார வைத்தார் இன்ஸ்பெக்டர்.

"அவனை எதற்கு இங்கே கொண்டு வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டார். இப்படிப்பட்ட ஓர் ஈனமான நிலை வந்துவிட்டதே என்று எண்ணி உடல் கூனிக் குறுகி நின்றார். இன்ஸ்பெக்டர், நான் அங்கு இருக்கும் காரணத்தை எடுத்துச் சொன்னார்.

"அட கண்ராவியே! அவன் அன்று வேடிக்கை பார்க்கவன்றோ போனான். விளையாட்டு அவனுக்கு வினையாகியது" என்றார் அப்பா, வருத்தத்துடன்.

"அப்படியானால், சாஸ்திரியவளே, உங்களுக்காக ஒரு வழி சொல்கிறேன். அதன்படி செய்யுங்கள். இனிமேல், சத்தியாக்கிரக இயக்கம் ஒன்றிலும் ஈடுபடவில்லை என்று எழுதிக்கொடுக்கச் சொல்லுங்கள். மேல் நடவடிக்கை ஒன்றும் நான் எடுக்கவில்லை. அதுவும் உங்கள் கௌரவத்தையும் நம் சிநேகிதத்தையும் உத்தேசித்துத்தான். எங்களுக்கு இது பற்றிக் கண்டிப்பான உத்தரவு வந்திருக்கிறது."

அப்பாவின் முகம் மலர்ந்தது. "ரொம்ப தாங்க்ஸ் இன்ஸ்பெக்டர். இவ்வளவுதானே. அப்படியே நீங்கள் கேட்கிறபடியே எழுதித்தரச் சொல்லிவிடுகிறேன். இதற்கெல்லாம் ஒரு முழுக்குப் போட்டுவிடச் சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு, "ராஜா, பரமமுட்டாள்தனமாக நடந்துகொண்டு விட்டாய். இனிமேல் இது மாதிரி காரியங்களில் ஈடுபடுவதில்லை என்று எழுதிக் கொடுத்து விடு. அது அவர் மாத்திரம் கேட்பதாக நினைத்துக் கொள்ளாதே. நானும்தான் கேட்கிறேன். இப்பொழுதே

இதற்கு முடிவு காணவேண்டும். நீ தேசத்திற்குத் தொண்டு செய்வதற்கு முன், உன்னைப் பெற்று வளர்த்து, உருவாக்கி, வாயைக் கட்டி வயிற்றைக் கட்டிப் படிக்க வைத்து, மனிதனுக்கி இருக்கிறார்களே, உன் அப்பாவும் அம்மாவும், அவர்களுக்கு உன் கடமை இருக்கிறது என்பதை மறந்து விடாதே. நீ சம்பாதித்துப்போட்டு என் வயிறு நிரம்ப வேண்டுமே என்று இல்லை. நான் எந்த மனக்கோட்டை கட்டி உன்னை உருவாக்கியிருக்கிறேனே, அதைத் தகர்த்தெறிந்து விடாதே" என்றார். அவர் நாக்குத் தழுதழுத்தது. எதற்குமே கலங்காத அவர் நெஞ்சமே அதிர்ந்து போனதைப் பார்த்ததும், என் கல்நெஞ்சம்கூடக் கரைந்தது. என்ன செய்வது, என்ன சொல்வது என்று தயங்கினேன்.

'வந்தேமாதரம், மகாத்மா காந்திக்கு ஜே' என்ற கோஷம் வந்தது. என்னுடன் அடிப்பட்டுக் கிடந்தவனும், என்னோடு இங்கே குற்றஞ்சாட்டப்பட்டவனுமான 'குட்டி காந்தி'யின் குரல் அது. குட்டி காந்தி என்னைவிடச் சிறு வயது. கூட்டத்திற்குத் தமுக்கு அடிப்பது, மேஜை கொண்டு போடுவது, லைட் தூக்கி வருவது எல்லாம் குட்டி காந்திதான். எங்கள் ஊர் நடவடிக்கைகள் எல்லாவற்றிற்கும் ஆணிவேர் குட்டி காந்திதான். அவனுக்கு உடல் நலம் சிறிதும் சரியில்லை. உடல் பூராவும் சொறி சிரங்கு அழுகிச் சொட்டிக்கொண்டிருந்தது. படு அவஸ்தை. உடல் சீர்குலைந்திருந்ததே தவிர உள்ளம் சீர் குலையவேயில்லை. நான் தயங்கி நிற்பதைப் பார்த்தே கோஷம் செய்திருக்கிறான் குட்டி காந்தி. பக்கத்தில் நின்ற கான்ஸ்டேபிள் தம் குச்சியால் அவன் முதுகில் அடித்தார்.

மறுபடியும் "மகாத்மா காந்திக்கு ஜே, வந்தே மாதரம், புரட்சி ஓங்குக" என்று குட்டி காந்தி கத்தினான். இன்ஸ்பெக்டர், கான்ஸ்டேபிளைச் சும்மா இருக்கும்படி

சைகை செய்தார். குட்டி காந்தியின் கோஷம் எனக்குப் புத்துயிரூட்டியது. உடல் தளர்ந்திருந்த இந்தச் சிறுவன் தன் உள்ளத்தைத் தளரவிடவில்லை. அப்படியிருக்க நான் ஏன் வெறும் பாசத்திற்கு அசைந்து கொடுக்க வேண்டும் என்று எண்ணியபடி, "சிறிது தயவு செய்து மன்னி யுங்கள். நான் மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுக்க மாட்டேன்" என்றேன்.

அப்பா சாவதானமாகத்தான் சொன்னார்: "நீதான் இதில் சேரவேண்டுமென்று போகவில்லையே. அப்படி யிருக்க அந்தக் கடிதம் கொடுப்பதில் தவறில்லையே."

"அது சரி, அப்பா. அவர்கள் கேட்டது, இனிமேல் நான் இயக்கத்தில் ஈடுபட மாட்டேன் என்று உறுதி மொழி கேட்கிறார்கள். அதுதான் நான் கொடுக்க விரும்ப வில்லை. என்னை மன்னித்து விடுங்கள்."

அப்பாவின் முகம் கடுகடுத்தது. "டேய் ராஜா. கடைசித் தடவையாகச் சொல்கிறேன். எழுதிக் கொடுத்துவிடு."

"மன்னியுங்கள், அப்பா."

இன்ஸ்பெக்டர் என்னைப் பார்த்துச் சொன்னார்:

"ஏன் அப்பா, நீ பாடப் புத்தகத்தில் படித்திருப் பாய். சூரியன் அஸ்தமிக்காத பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இது. இதை எதிர்த்துப் பணிய வைக்க, நெப்போலியன், கெய்ஸர் போன்றவர்களாலேயே முடியவில்லை. காந்தியும், நீயும் குண்டாந்தடி வாங்குவதனால் அவர்களை மூட்டை கட்டி அனுப்பிவிடலாம் என்று நினைக்கிறீர்களே? என்ன புத்தி, என்ன புத்தி!" என்றார்.

காந்தியையும், என்னோடு சேர்த்து அவமதித்தது எனக்குக் கோபத்தை உண்டு பண்ணியது.

"ஸார், நாங்கள் வெள்ளைக்காரனுக்காக அடி வாங்க வில்லை. கோபுரத்தைப் பொம்மை, தான் தாங்குவதாக

நினைத்துக் கொண்டதாம். அதுபோல, வாங்குகிற சம்பளத்திற்காக, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைத் தங்கள் தோள் மேல் வைத்துத் தாங்குவதாக நினைத்துக்கொண்டு, இந்த இழிவான காரியத்தைச் செய்யும் உங்களைப் போன்றவர்கள் மனம் மாறுவதற்காகத்தான் " என்றேன்.

" சை அதிகப்பிரசங்கி ! ஏ 128, இவனைக் கொண்டு போய் லாக்கப்பிலே தள்ளு. நானே சார்ஜ் ஷீட் தயார் செய்து கோர்ட்டிலே ஆஜர் செய்யலாம் " என்று, அப்பாவிடம் " ஸாரி, சாஸ்திரி !" என்றார்.

" இன்ஸ்பெக்டர், அவனைச் சட்டப்படி எது செய்ய வேண்டுமானாலும் செய்யுங்கள். இன்று முதல் இவனுக்கும் எனக்கும் ரத்த சம்பந்தத்தைத் தவிர வேறொன்றும் கிடையாது " என்று சொல்லிவிட்டு, என்னைத் திரும்பிப் பார்க்காமலேயே அப்பா வெளியே போய்விட்டார்.

அன்று மாலை, ரிமாண்டிலிருக்கும் எனக்கும், குட்டி காந்திக்கும் உணவு வந்தது. அப்பொழுது அம்மா ஞாபகம் வந்தது. லீவிற்கு வீட்டுக்கு வரும்பொழுதெல்லாம், எனக்கு என்னென்ன பதார்த்தங்கள், பலகாரங்கள் எல்லாம் பிடிக்குமோ, அவற்றைத் தினம் ஒன்றாக எனக்குப் பிடித்தமான வகையில் பக்குவம் செய்து பரிமாறுவாள். ஹாஸ்டலில் தினம் விதம் விதமான வகையில் சாப்பாடும், சிற்றுண்டியும் சாப்பிட்டாலும், அம்மா போடும் சாப்பாட்டில்தான் என் நாக்குத் திருப்தி அடையும். அம்மா போட்டால்தான் வயிறும் நிரம்பும். அன்று லாக்கப்பில், கொடுத்த கஞ்சியின் வாடை, அதைக் கொண்டு வரும்பொழுதே என் மூக்கை துளைத்தது. ஒரு குவளையில் கொண்டு வந்து கொடுத்தார்கள். அதை வாங்கிக் கொண்டு கஞ்சியைப் பார்த்தேன். அதில் முரட்டுப் புழு ஒன்று கிடந்தது. அந்தப் புழுவையும், கஞ்சியையும் பார்த்தவுடனேயே வாந்தி எடுக்கலாம் போலிருந்தது. அப்படியே வைத்துவிட்டேன். அன்றிரவு

பட்டினி. சரி, சிறையில் மாத்திரம் வடை பாயசத்துடன் சாப்பாடு கிடைக்கப் போகிறதா? அங்கும் இதுமாதிரி ஆகாரந்தானே. இங்குள்ள விருந்துதானே அங்கும் கிடைக்கும். அங்கும் பட்டினி கிடப்பதா? எவ்வளவு நாள் கிடப்பது? அது சாத்தியமா? இது ஒரு பெரிய பரீட்சையல்லவா? இந்தப் பரீட்சையில் தேறுவதுதான் சிரமம். புத்தகத்தைப் படித்து மார்க் வாங்கும் பரீட்சை அல்ல இது. புலனடக்கம் செய்து ஆத்மிக வெற்றி யடையும் பரீட்சை. காந்தி சொன்னது ஞாபகம் வந்தது: "எவ்வளவுக்கெவ்வளவு தியாகம் செய்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நாம் உயருகிறோம். தியாகம் பரிசுத்தம் அடைய அடைய நம் வெற்றியும் நெருங்குகிறது." ஆகவே, தியாகமும், துன்பமும், புலனடக்கமும் நிறைந்த இந்தப் பெரிய பரீட்சையில், எவ்வளவு தூரம் மனோதிடத்துடன் நின்று வெற்றி அடையப் போகிறேன் என்று சிறிது தயங்கினேன். என் யோசனைக்கு எதிரொலிபோல், குட்டி காந்தி கர்ஜித்தான்: "வந்தேமாதரம்", "மகாத்மா காந்திக்கு ஜே". நானும் சேர்ந்து கொண்டேன். இந்த கோஷங்கள் 'குட்டி காந்திக்கு' ஒரு 'டானிக்' போல இருந்தனவோ என்னவோ. உண்மையில் அவை எனக்குத்தான் டானிக்காக இருந்தன. மனம் சோர்வுற்ற காலத்தில் இந்த கோஷங்கள் எனக்கு தைரிய மூட்டி, உத்வேகப் படுத்திக் கொண்டிருந்தன.

மறுநாள் என்னையும், குட்டி காந்தியையும், கோர்ட்டுக்கு அழைத்துச் சென்றனர். குற்றவாளியாக நின்றேன். கோர்ட் நடவடிக்கைகள் சட்டத்தை அனுசரித்து நடந்தன. நான் ஒன்றிலும் கலந்து கொள்ளவில்லை. குட்டி காந்தி மாத்திரம் எல்லாக் கேள்விகளுக்கும் "வந்தே மாதரம்", "மகாத்மா காந்திக்கு ஜே" என்று கோஷித்துக் கொண்டிருந்தான். விசாரணை முடிந்தது. மாஜிஸ்ட்ரேட், தண்டனையை வாசித்தார். எனக்கும் குட்டி காந்

திக்கும் தலா ஆறு மாதம் சிறை. தண்டனையைக் கேட்ட வுடன் சிறிது மயிர்க் கூச்செறிந்தது. பயத்திஞலல்ல.

வாசலில் போலீஸ் வான் நின்றது. போலீஸ்காரர்கள் பக்கத்திலே வர, காரில் ஏறிக்கொண்டோம். வேடிக்கை பார்க்க வந்த கும்பலில் சிலர், "மகாத்மா காந்திக்கு ஜே" என்று கூச்சலிட்டனர். கார் கிளம்ப ஆரம்பித்தது. "குட்டி காந்திக்கு ஜே", "நடராஜனுக்கு ஜே" என்ற கோஷம் வானளாவக் கிளம்பி எங்களுடன் வந்தது. நான் எதை ஜயிக்கப் போகிறேன்? உடலைக் கட்டுப்படுத்து பவன் எதைத்தான் ஜயிக்கமாட்டான். என் உடல் சிறையில் கட்டுப்பட்டுக் கிடக்கப் போகிறது. அவ்வளவு தானே? அப்பா சொன்னபடி பரீட்சைக்குப் போயிருந் தால் வெற்றி கிடைத்திருக்கும். ஆனுல், அது ஆத்மிக வெற்றிக்கு வழி காட்டியிருக்காது. ஆகவே, இதுதான் எனக்கு உண்மையான வெற்றி. ஜே போடுவதில் தப்பு ஒன்றும் இல்லை என்று திருப்திப் பட்டுக் கொண்டேன்.

கார் கிளம்பி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. இரண்டு அல்லது மூன்று மணி ஆகியிருக்கும். திருச்சியை நோக்கிப் போவதாய்த் தெரிந்தது. சிறிது நேரத்தில் சிறைக்கு வந்துவிட்டோம். குட்டி காந்தியை மாத்திரம் உள்ளே கூட்டிக்கொண்டு போனுர்கள்.

"என்ன, என்னை விட்டு விட்டீர்களே?" என்றேன்.

"விடவில்லை. உங்களுக்கு வேலூர்" என்றுர் கான்ஸ் டேபிள். திருச்சி ஜங்ஷனில் வண்டியேறி, விழுப்புரத்தில் வண்டி மாறி வேலூர் போய்ச் சேர்ந்தோம்.

சிறைக்குள் நுழைந்ததும், சம்பிரதாயச் சடங்குகள் நடந்த பின்னர், நான் உடுத்த உடைகளைக் கழற்றிவிட்டு, கைதியின் உடைகளை மாட்டிக் கொண்டேன். ஒருசமயம் கல்லூரியில் 'பான்ஸி டிரஸ்' போட்டியில் கைதியின் வேஷம் போட்டு வந்தேன்; எதற்காக, அந்த வேஷத்தை

விரும்பிப் போட்டுக் கொண்டேன் என்பது ஞாபகமில்லை. அப்பொழுது மாணவர்கள் என்னைப் பார்த்துச் சிரித் தார்கள். ஆனால் இன்று என்னையே நான் பார்த்துச் சிரித்துக் கொண்டேன். இந்தக் கோட்டை போன்ற மதிற்சுவருக்குள் நான் நடராஜன் அல்ல; மனிதன் அல்ல. வெறும் எண்தான் — 394.

# 7

சிறைக்கு ஒரு மறு பெயர் உண்டு. சிறை செல்வதையே ஒரு பிழைப்பாகவும், வழக்கமாகவும் கொண்ட மற்றவர்கள், 'மாமனார் வீடு' என்று செல்லப் பெயர் அதற்குக் கொடுத்திருக்கிறார்கள். ஒரு விதத்தில் அவர்களுக்கு அது மாமனார் வீடு போலத்தானே. வெளியே இருந்தால்இரண்டு வேளைச் சோற்றுக்கு எவ்வளவு தெகிடுதத்தங்கள், ஆபத்தான காரியங்கள் செய்து சம்பாத்யம் செய்யவேண்டும். அந்த 'மாமனார் வீட்டிலோ' காலம் தவறாமல் நேரம் தவறாமல், இரண்டு வேளைச்சாப்பாடு உத்தரவாதமாகக் கிடைக்கிறது. இது மகிழ்ச்சிக்குரிய காரியமல்லவா. இவர்களைப்போல் மெத்த மகிழ்ச்சியுடன் நான் போகவில்லை. சிறை என்பது 'மாமனார் வீடோ', 'முதல் தர ஹோட்டலோ', 'உயர் தர ஹாஸ்டலோ' அல்ல என்பது தெரியாமல் இல்லை. ஆனாலும், 'ஐயோ இந்த நரகத்தில்போய் இருந்து தொலைய வேண்டுமே' என்ற வருத்தத்தோடும் போகவில்லை வாழ்க்கையில் அபரிமிதமான சௌக்கியத்தையும் ஏற்காதவன், அதிகமான கஷ்டத்தையும் அனுபவிக்காதவன் நான். சிறைவாசத்தில் ஏற்படக்கூடிய கஷ்டங்களையெல்லாம் ஒருவாறு கற்பனை செய்துகொண்டிருக்கிறேன். ஆனாலும் கற்பனையும் அனுபவமும் வெவ்வேறுதானே.

சிறை அதிகாரிகள், எனக்கு உடுக்கக் கொடுத்திருந்த மாற்று உடைகளும், படுக்கக் கொடுத்திருந்த கோணிச் சாக்குக் கம்பளியும், சாப்பிடுவதற்கு உதவக் கொடுத்

திருந்த தட்டும் குவளையும், சிறிதேனும் என் நாக்கிற்கும் மூக்கிற்கும் வயிற்றுக்கும் ஒத்துவராத புழுங்கலரிசிச் சோறும், கஞ்சியும், மசாலைக்குழம்பும், இரயில் சிறிது கூடத் தூங்கவிடாமல் உபத்திரவம் செய்யும் கொசு, மூட்டைப்பூச்சி முதலியவற்றின் உபாதைகளும், திடீர் திடீரென்று எதிர்பாராத இடத்தில், எதிர்பாராத சமயத்தில் தோன்றி அச்சத்தை உண்டு பண்ணும் தேள், நட்டுவாக்களி, பாம்பு முதலிய ஜந்துகளின் நடமாட்டமும், சிறை வாழ்க்கையை ஓர் இன்பக்கனவாகச் செய்யவில்லை. சிறையைப்பற்றி ஆஸ்கார் ஒயில்டு எழுதிய பாடல் ஞாபகத்திற்கு வந்தது :

I know not whether laws be right
Or whether laws be wrong
All that we know who lie in gaol
Is that the wall is strong
And each day is like a year
A year whose days are long

சட்டம், சரியா தப்பா — எனக்குத் தெரியாது. சிறையில் எங்களுக்குத் தெரிந்தது — சுவர்கள் உரமானவை. ஒருநாள் ஒரு வருஷம் போல, அந்த வருஷமோ நீண்டு கொண்டேயிருக்கிறது.

நம்முடைய ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாளாம். அதுபோல, சொல்லப்போனால், வெளியே ஒருநாள் என்பது சிறையில் ஒரு வருஷம் என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் எப்படிப்பட்டவர்கள் எல்லாம் வந்திருக்கிறார்கள் என்று பார்க்கும்போது, நெஞ்சிலிருந்து ஆயாசம் போய், ஒரு பெருமையே கூட ஏற்பட்டது. கட்சிக்காரர்களால் மொய்க்கப்படும் வக்கீல்கள், இரவில்லை பகலில்லை என்று உழைத்துக்கொண்டிருக்கும் டாக்டர்கள், கண் சமிக்ஞை பார்த்து ஏவல் புரியக்

காத்திருக்கும் சிப்பந்திகள் கொண்ட பிரபுக்கள், வியாபாரிகள் எல்லோருமே தங்கள் சௌகரியத்தை யெல்லாம் குறைத்துச் சிறை வாழ்க்கையை ஆனந்தத் தோடு அனுபவிக்க வந்தார்கள் என்பதைக் கண்டறிந்த போது எனக்கும் அதில் இன்பம் இல்லாமலில்லை.

இந்தக் கட்டிடத்தாலான சிறை, இந்த தேசத்தலைவர் களின் உடலை மாத்திரம்தான் சிறைப்படுத்தும்; ஆனால், உள்ளத்தை—மனத்தையும் ஆத்மாவையும்—கட்டுப் படுத்த வல்லதல்ல. வெளியே ஓய்ச்சல் ஒழிவு இல்லாமல் உழைத்துக் கொண்டிருந்த அநேகம் தலைவர்களுக்கு, இது ஒரு நல்ல விடுமுறை ஆயிற்று. அநேகம் தலைவர் களுக்குத் தங்கள் சிந்தனையைத் தெளிவாக்கிக்கொள்ள, சந்தர்ப்பத்தையும் கொடுத்தது. அநேகருக்கு ஆசிரம வாழ்க்கை போலவே ஆகிவிட்டது.

மற்றொரு கவி சொன்னான்:

Stone walls do not a prison make
Not iron bars a cage
Minds innocent and quiet take
That for a hermitage
If I have freedom in my love
And in my soul am free
Angels alone that soar above
Enjoy such liberty

மதிற்சுவர்கள் சிறையாகிவிடுவதில்லை. இரும்புக் கிராதி கூண்டாகிவிடுவதில்லை. தூய்மையும், அமைதியும் பெற்ற மனம், அதை ஆசிரமமாக்கிக்கொள்ளும். அன்பில் சுதந்திரம் இருந்தால், ஆத்மா சுதந்திரமாயிருந்தால், அதற்கு, மேலே பறந்து செல்லும் தேவதைகளைத்தான் இணை சொல்ல முடியும்.

மதிற்சுவர்கள் சூழ்ந்த சிறை, அரசாங்கத்தால் கட்டப்பட்ட சிறை. அரசாங்கத்தினுல், அப்போதைக்கப்போது கடைப்பிடிக்கப்படும் சட்டப்படி குற்றவாளிகள் இருக்கும் சிறை. இது ஒன்றுதானே? சிறை! நம் பெரியவர்கள் எத்தனைவிதமான சிறைகளை அடுக்கடுக்காகக் கண்டார்கள்? சித் என்ற பர வஸ்து, கர்ம சேஷங்களினுலும், பூர்வ ஜன்ம வாசனையினுலும், புத்தி அகங்காரத்தின் வசப்பட்டு, 'தான்' என்ற சிறையை அடைகிறது; இது எல்லா மனிதப் பிராணிகளுக்கும் ஒரேவிதமான தண்டனைதான்; பத்தே மாதம்தான்; அதற்குப் பிறகு, தாய் தந்தை, அண்ணன் தம்பி, மனைவி குழந்தை என்ற ஆசாபாசங்களால் கட்டுப்படுத்தப்பட்ட குடும்பம் என்கிற சிறை; அத்துடன், சட்டதிட்டங்கள், பழக்க வழக்கங்கள், இவற்ருல் பிணைக்கும் சமூகம் என்கிற சிறை; பிறகு தேசம்—இப்படிப் பலவிதமான சிறைகள். "இவற்றிலிருந்து விடுபடுவது என்பது சுலபமான காரியமா? பல இடங்களில் பிணைக்கப்பட்டிருக்கும் நீ விடுதலை பெறவேண்டுமானுல் 'ஆண்டவன்' என்ற ஒன்றைப் பிடித்துக்கொள். மற்றதெல்லாம் தானே போய் விடும்" என்ருர்கள், பெரியவர்கள். ஆசாபாசங்கள் நம்மைக் கட்டிப் பிடிக்க, அதர்மம் நம்மை விழுங்கிவிடும் பொழுது, 'அறம் சுவர் ஆகி நின்ற அரங்கன்தானே' நமக்கு விடுதலை கொடுக்க முடியும். தொண்டரடிப்பொடி யாழ்வார் சொன்னுர்:

மறம் சுவர் மதில் எடுத்து மறுமைக்கே வெறுமை பூண்டு
புறம் சுவர் ஓட்டை மாடம் புரளும்போது அறியமாட்டீர்;
அறம் சுவர் ஆகி நின்ற அரங்கனுர்க்கு ஆட்செய்யாதே
புறம் சுவர் கோலம் செய்து புள் கௌவக் கிடக்கின்றீரே.

'இந்தச் சிறையான உடலின் சௌகரியத்திற்கே அதர்மம் செய்துகொண்டு போகிருயே, இந்த உடல் படுக்கும்பொழுது நீ என்ன செய்யப் போகிருய்?' என்று

பக்திமான்களும், ஞானிகளும் நம்மைக் கேட்டுக் கொண்டேயிருக்கிறார்கள். இது என்ன தத்துவம் என்று கேட்டுவிடலாம்? ஆனால் வாழ்க்கை என்பது என்ன என்று ஆரம்பித்துவிட்டால், அது தத்துவத்தில்தானே கொண்டு போய்விடுகிறது.

சிறைச்சாலையில் பல தத்துவ சித்தாந்தங்களையும் தெரிந்துகொள்ள ஆரம்பித்தேன். பார்க்கப்போனால், சர்வகலாசாலையில் பல வருஷங்கள் கற்றதைவிட, அங்கு இருந்த சில மாதங்களில் பல அரிய விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். தேசத் தலைவர்களில் பலர் மேதா விலாசம் பெற்றவர்கள்; பன்மொழியில் புலமை பெற்றவர்கள். அவரவர் புலமை பெற்றிருந்த விஷயங்களை மற்றவர் களுக்கு எடுத்துச் சொல்வார்கள். ஒருவர் இராமாயணம் படித்து வியாக்கியானம் செய்வார். மற்றொருவர், சுதந்திரப்போராட்டங்களில் எந்த எந்த தேசங்களில் எப்படியெல்லாம் நடந்திருக்கிறது என்பதை எடுத்துச் சொல்வார். முக்யமாக, இங்கிலாந்தை எதிர்த்து நின்ற ஐரிஷ் தியாகிகளைப் பற்றியும், பல துண்டுகளாக இருந்த பகுதிகளை ஒன்று சேரச் செய்து, இத்தாலியில் ஒற்றுமையை உண்டாக்கி, தேசீயத்தை வளர்த்த கரி பால்டி, மாஜினி போன்றவர்களின் வாழ்வையும், போராட்டத்தையும் பற்றியும் அவர் விவரமாக எடுத்துச் சொல்வார். அதைப் பற்றி விவாதங்கள் நடத்துவார். அதில் நானும் கலந்துகொள்வேன். மற்றும் ஒருவர், கார்ல் மார்க்ஸ் பக்தர். அவருடைய சித்தாந்தத்தையும் கொள்கைகளையும் பரப்புவதே தாம் ஜன்மம் எடுத்ததன் பயன் என்று எண்ணினார். உலகத்தின் நல்வாழ்வு 'கார்ல் மார்க்ஸ்' சித்தாந்தத்திற்குள் அடங்கிக் கிடக்கிறது என்பது, அவருடைய திட்டமான அபிப்பிராயம்.

இப்படிப் பல விஷயங்களைப் பற்றி அறியவும், பேசவும், விவாதிக்கவும் சிறை எனக்கு சந்தர்ப்பத்தை

அளித்தது. இரவில் லேசில் தூக்கம் வருவதில்லை. கொசு உபத்திரவம், புழுக்கம், உறுத்தும் படுக்கை—இவை தூக்கத்தை விரட்டி அடிக்கும். அப்பொழுதெல்லாம், நான் சிந்தனையில் ஆழ்ந்துபோவேன். அன்று பேசப்பட்ட விஷயங்களை, ஆராய்வேன்; அசைபோடுவேன்; எடை போடுவேன். இதனால் என் சிந்தனைச் சக்தியும் கூர்மை யானது. எதையும் அலசி ஆராயும் ஒரு பழக்கமும் ஏற்பட்டது.

பெரிய, பெரிய தலைவர்கள் எல்லாம் இந்தச் சிறையில் இருந்தார்கள். அவர்களுடன் இருப்பதே பெரும் பாக்யம் என்று நான் எண்ணினேன். உலகத்தில் எத்தனை விதமான மனிதர்கள் உண்டோ, அத்தனை விதமான மனி தர்களும் இங்கே இருந்தார்கள். ஆனால், எல்லோருக்கும் குறிக்கோள் ஒன்றுதான். இவர்கள், எல்லாவற்றையும் உதறி எறிந்துவிட்டு, ஒரு லட்சியத்திற்காக, ஒரு கொள்கைக்காக, கஷ்டத்தையும் இன்னல்களையும் மனத்தில் மகிழ்ச்சியுடன் ஏற்க வரக்கூடும் என்பது ஒரு விந்தை அல்லவா? புகழுக்காகவா? பணத்திற்காகவா? செல்வாக்கிற்காகவா? ஏசுநாதர் சொன்னார்; "சிலுவையை எடுத்துக்கொண்டு, என்னைத் தொடருங்கள்" என்று. அதுபோலவே, காந்திஜி, "தன்னலத்தை விடுங்கள்; சத்யம், அஹிம்சை என்ற இரண்டு ஆணிவேரையும் பிடித்துக்கொள்ளுங்கள்" என்றார். இந்த மந்திரத்தில் தான் கட்டுண்டு, ஒவ்வொருவரும் பிறருக்காகச் சிலுவையை ஏந்தத் தயாரானார்கள். அன்று சிறையில் இருந்த ஒவ்வொருவரும், ஏசுவைப்போலச் சிலுவையைத் தாங்கியவர்கள்தானே.

எனக்கு சாலிவாகனன் கதை ஞாபகம் வந்தது. விக்கிரமாதித்தியன் பெரிய அரசன். பிரம்மாண்டமான படை பலம் கொண்டவன். அவனை எதிர்க்க விரும்பினான் சாலிவாகனன். அவனிடம் சைன்யம் இல்லை. சாலிவாக

னன், குயவன் வீட்டில் வளர்கிறவன். அங்கு ஏராளமான மண்பொம்மைகள் இருக்கின்றன. மேலும் அநேகம் மண்பொம்மைகளைச் செய்யச் சொல்கிறான். பிறகு அந்த மண் பொம்மைகளுக்கு உயிர் ஊட்டி, பெரிய சைன்ய மாக்கிவிடுகிறான். விக்கிரமாதித்தியனை வெல்கிறான். சாலிவாகனன் சகாப்தத்தில் பிறந்த மகாத்மா காந்தியும், அது மாதிரியே ஓர் அற்புதத்தைச் செய்து காட்டினார். உணர்ச்சியற்று, உத்சாகமற்று, மண்ணுக்கும் கேவல மாக, அவலநிலையில் இருந்த மக்களுக்கு உயிர் ஊட்டி, அவர்களை மகத்தான வீரர்களாக்கினார், மகத்தான தியாகிக ளாக்கினார். 'எவன் எக்கேடு கெட்டால் நமக்கென்ன?' என்று இருந்த மக்களுக்கு, எந்த சிரமத்தையும் பொருட் படுத்தாத மனோதிடம் பெறும்படியாக ஒரு சக்தியை ஏற்றுவது என்றால் அது சாதாரண காரியமா? அப்படிப் பட்ட அதிசயப் புரட்சியைச் செய்து காட்டிக்கொண் டிருந்தார் காந்திஜி. சிறையில் இருந்த நாங்கள் அதற்குச் சாட்சி.

ஒருநாள் சாப்பாடு மிகவும் மோசமாயிருந்தது. மிகவும் மட்டமான புழுங்கலரிசி. கல்லுரலில் ஆட்டினாலும் மசியாது. வேகாத கீரை, 'அவிஞ்சு'போன முள்ளங்கிக்கறி; மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திணறினேன். ஓர் அளவு இந்த ஆகாரத்திற்குப் பழக்கப்படுத்திக்கொண்டு விட்டேனானாலும், அன்று என் 'பாச்சா' பலிக்கவில்லை. அந்தக் கீரை அம்மாவின் நினைவை மூட்டிவிட்டது. கீரை அம்மா பக்குவம் செய்ய வேண்டும், சாப்பிட வேண்டும். நினைக்கும்பொழுதே, நாக்கிலே ஜலம் ஊறிவிட்டது. அம்மா சாதம் போட்டு, என்று சாப்பிடப்போகிறோம் என்று நெஞ்சம் துடித்தது. அம்மாவின் கண்ணீர் தோய்ந்த முகம், திரைப்படம்போல் கண்முன் தோன்றியது. அப்பா கோபக்காரர். உடம்பிலே பாச்சையோ, கரப்போ விழுந்தால் எப்படி உதறி எறிந்து

விடுவோமோ, அப்படித்தான் என்னை உதறிவிட்டார். அம்மா வாயில்லாதவள். எதையும் தனக்குள்ளேயே வைத்துக்கொண்டு, தானே அவஸ்தைப்படும் உத்தம ஸ்திரீ.

நான் இப்படி நினைத்துக் கொண்டதற்குச் சொல்லி வைத்தாற்போல், இராமலிங்கையரிடமிருந்து ஒரு கடிதம் கிடைத்தது. அம்மாவிற்கு ஏற்கனவே இதயம் மிகவும் பலவீனமாகியிருந்தது. நான் சிறைக்குச் சென்ற அதிர்ச்சி மிகவும் இதயத்தைத் தாக்கி இருக்கிறது. உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டுவிட்டது. அவர் எழுதியிருந்தார்; "அம்மா உயிர், இனிமேல் அதிகம் தாங்காது. உன்னைத் தான் சதா நினைத்து நினைத்து வருந்திக்கொண்டிருக்கிறாள். உன்னைப்பெற்ற தாயைப் பரிதவிக்கவிட்டு, நீ தேச சேவை செய்வது எனக்கே அருவருப்பாயிருக்கிறது. அவள் உன்னைப்பெற்றதற்கு, அவள் உயிரை விடுமுன் வந்து பார்த்தாயானால், அவளுக்குச் சிறிதளவாவது துக்கம் மறையும். அவள் மனம் சாந்தியடையச் செய்ய நீ மன்னிப்பு எழுதிக்கொடுத்து வந்தாலும் அது தவறாகாது. காலம் தாமதித்து வந்தாயானால், நீ உன் தாயைப் பார்க்க முடியாது" என்று எழுதியிருந்தார். இதை சாதாரணக் கடிதமாக நான் கருதவில்லை. என்னை மன்னிப்புக்கேட்டு வெளிவரச் செய்வதற்காக, ஏற்பட்ட சூழ்ச்சியல்ல என்பதையும் அறிந்தேன். அம்மா எப்பொழுதும் பூஞ்சைதான். ஆகவே இராமலிங்கையர் தந்த தகவலில் சிறிதும் பொய் இருக்காது என்பதை என் மனம் அறிந்தது.

நான் ஒன்றும் தோன்றாமல், பிரமைபிடித்தவன் போல் உட்கார்ந்திருந்தேன். சிறையிலே எனக்கு அரிய நண்பர்கள் ஏற்பட்டிருந்தார்கள். ஒருவர் எனக்குக் குருவாக ஆனவர். 'தி. ஜ.' என்ற பெயரில் எழுத்துலகில் பிரசித்திபெற்ற ஜகன்னாதன். மற்றவர் நல்லதம்பி

என்பவர். இவரும் தி. ஜ.வின் சிஷ்யர். அநேகமாக நான் எப்பொழுதும் இவர்களுடனேதான் இருந்து கொண் டிருப்பேன்.

"என்ன நடராஜ், என்னமோ கவலையாக இருக்கிறாய் போலிருக்கிறதே?" என்றார் தி. ஜ.

"ஆமாம், சின்னையா முகத்திலே சுரத்தையே காணோமே!" என்றார் நல்லதம்பி.

என் தாயின் உடல்நிலையைப்பற்றி எனக்கு வந்திருக்கும் கடிதத்தின் சாரத்தை எடுத்துச் சொன்னேன்.

"நடராஜ், சத்யாக்கிரகிகளுக்கு இப்படியெல்லாம் பலவித சோதனைகள் வந்தேதான் தீரும். முன் வைத்த காலைப் பின் வைக்கக்கூடாது என்பார்களே, அதுபோலத் தான் நாம் நடந்துகொள்ள வேண்டும். போர்முனையில் இருக்கும் சிப்பாய், தாய்க்கு உடல் சரியில்லை என்று துப்பாக்கியைக் கீழே எறிந்துவிட்டு, வீடு நோக்கித் திரும்பி வரமுடியுமா? நாம் அகிம்சைப்போரின் சிப்பாய் கள்; வரமுடியுமா? சொந்த சௌகரியங்கள், அசௌகரி யங்களால் நெஞ்சைத் தளரவிடக்கூடாது. இங்கே சிறையில் இருக்கும் ஒவ்வொருவரையும் பாருங்கள். இவர்களில் ஒருவரும் துறவியல்ல. ஒவ்வொருவருக்கும் எத்தனையோவிதக் குடும்பத் தொல்லைகள் இருக்கத்தான் இருக்கின்றன. ஆனால் அவை நம் கடமையை எதிர்க்க இடம் கொடுக்கலாகாது" என்றார். நல்லதம்பியும், "ஆம் ஐயா, பெரிய ஐயா சொல்றது முற்றும் சரி. மனத்தைத் தளரவிடாதீர்கள். அம்மாவின் உடம்பு குணமாகிவிடும். நீங்கள் விடுதலையாகி அம்மாவை நன்றாகத் தரிசிக்கலாம்" என்று சமாதானப்படுத்தினார்.

* * *

மறுநாள் கஞ்சியை அவரவர்களின் குவளையில் வாங்கிக் கொண்டிருந்தோம். நண்பர்கள் பக்கத்திலிருந்தார்கள். கஞ்சியை வாயில் வைக்கப்போனேன். குவளையில் ஒரு பிராணி மிதந்தது. ஒரு முரட்டுப்புழு. அது ஜெயில் புழுவாகையால் ரிமாண்டில் இருந்ததைவிடப் பெரிதாகவே இருந்தது. தி. ஐ.விடம் காட்டினேன்.

" நீங்கள்தான், முள்ளங்கியையும், கீரையையும் தவிர வேறு ஒன்றும் போடமாட்டார்கள் என்று புகார் செய்தீர்களே; அதற்காகத்தான் இந்தப் புதுப் பதார்த்தம்" என்றூர் தி. ஐ.

"அதற்காக என்னை அசைவமாக மாற்றிக்கொள்ள வேண்டுமா ?"

" இப்பொழுது என்ன செய்வதாக உத்தேசம் ?"

" என்னுடன் படித்த நண்பர் ராணுவ ஆபீசர். அவர் சைவம். ஆனால் ராணுவத்தில் அசைவச் சாப்பாடுதான். எது மாமிசம் என்று தோன்றியதோ, அதை மாத்திரம் ஒதுக்கிவிட்டுப் பாக்கியெல்லாவற்றையும் விளாசி விடுவார்."

" நடராஜ், எனக்கு ஒரு விகடத்துணுக்கு ஞாபகம் வருகிறது. ஒரு ஹோட்டலில் நாலு தேசத்தவர் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். காப்பியில் ஈ விழுந்து கிடந்தது. காப்பி கொண்டு வந்த ஆளிடம் காட்டி, அதை எடுத்துப் போகச் சொல்லி, வேறு காப்பி கொண்டு வரச் சொல்லி அதைச் சாப்பிட்டானும் பிரஞ்சுக்காரன். புதுக் காப்பி கொண்டு வரச்சொல்லி, ஈ விழுந்த காப்பி, புதுக் காப்பி இரண்டையும் சாப்பிட்டானும் ஸ்காட் தேசத்தவன். பேசாமல் ஈயைத் தூக்கி எறிந்துவிட்டு, காப்பியைக் குடித்துவிட்டுச் சென்றானும் இங்கிலீஷ் காரன். இந்த மட்டும் கிடைத்ததே என்று மிக்க சந்தோஷத்துடன், ஈயைச் சாப்பிட்டுக் கொண்டிருந்

தானும் சைனுக்காரன்; இதில் எந்த வழியைப் பின்பற்றப் போகிறீர்கள்?" என்று கேட்டார் தி. ஜ.

"நமக்கு விரோதி இங்கிலீஷ்காரன், அவன் செய்ததைத்தான் நாம் செய்யவேண்டும்" என்றேன்.

"பேஷ் அதுதான் சரி. இதுவும் ஒரு சத்யாக்கிரக தருமம்தான். நமக்குப் பிடிக்காத விஷயத்தில் சகிப்புத் தன்மையையும், பொறுமையையும் காட்டுவது சத்யாக்கிரகியின் கடமை. மற்ற எல்லோருக்கும் இதே கஞ்சி தானே உபயோகப்படப்போகிறது. பேசாமல் குடிக்க வேண்டியதுதான்" என்றார்.

* * *

இரவு தூக்கம் வரவில்லை. ஒவ்வொரு ரயில் ஊதும் சப்தத்தையும் கேட்டுக் கொண்டிருந்தேன். சுவர்க் கோழி வேறு நிசப்தத்தைக் கெடுத்துக் கொண்டிருந்தது. மனம் என்னவோ அமைதியற்று இருந்தது. மனம் அம்மாவை நாடிச் சென்றது. அம்மாவின் உடம்பு எந்த நிலையில் இருக்கிறதோ? நான் விடுதலை பெறும் வரையிலாவது உயிரை வைத்துக்கொண்டிருக்கலாகாதா? சில வாரங்கள் கூட அவள் இருப்பது சிரமம் என்று இராமலிங்கையர் எழுதி இருந்தார்; அப்படியே ஏதாவது அம்மாவுக்கு நேர்ந்துவிட்டால் அப்பாவின் கதி? அவருடைய வாழ்க்கை முறைக்கு அம்மா இல்லாவிட்டால், அப்பாவினால் ஒரு நிமிஷம்கூட வாழமுடியாது. அப்பாவுக்கு உழைத்ததைத் தவிர அம்மா வேறு என்ன சுகம் கண்டாள்? அப்பா மனம் கோணாமல் நடப்பது ஒன்றுதான் அவள் கண்ட பாக்யம்.

நான் சிறையில் சுவர்க்க பதவி வகிக்கவில்லை என்பது அப்பாவுக்குத் தெரியும், அம்மாவுக்கும் தெரியும். அப்பாவுக்கு என் பேரில் அனுதாபம் இருக்காது. கோபம் தான் இருக்கும். "நான் படித்துப்படித்துச் சொன்னேன்.

அதையெல்லாம் விட்டுத் தேசத்தொண்டு செய்யக் கிளம்பி விட்டான் அதிகப்பிரசங்கி. நன்றாகத் திண்டாடட்டும் கழுதை" என்று வைதுகொண்டிருப்பார்.

ஆனால் அம்மாவோ, 'வாராவாரம் எண்ணெய் முறை தவறினால், கண்பொங்குமே. என்ன பண்ணுகிறானோ? காப்பி இல்லாவிட்டால் தலைவலி வந்துவிடுமே. எப்படித் தவிக்கிறானோ? அவியல் என்றால் பிடிக்குமே. அவனுக்கு இல்லாமல் நான் கொட்டிக்க வேண்டியிருக்கிறதே' என்றெல்லாம் நினைத்து உருகிக்கொண்டிருப்பாள். இப்படியெல்லாம் இரவு வெகுநேரம் அம்மாவையே நினைத்துக் கொண்டிருந்தேன். கடைசியில் என்னை மறந்து கண் அயர்ந்தேன். கட்டிலிலிருந்து கீழே விழுந்தாற்போல் ஒரு பிரமை தட்டியது. கட்டிலாவது, மெத்தையாவது, சணற்படுக்கைக்கு அப்பால் புரண்டு படுத்திருந்தேன். இருள் பிரிந்து லேசாக வெளிச்சம் வரத் தலைப்பட்டது. படுக்கையை விட்டு எழுந்திருந்தேன்.

ஒருநாள் கழிந்தது. ஒரு நாள் பிறந்தது. சிறைக்கு வெளியேயுள்ள மனிதர்களின் கணக்கில் ஒரு வருஷம். புதுநாள் பிறந்தது. இறந்த காலமும், வருங்காலமும் சேரும் யுகசந்தியல்லவா அது. எனக்கு மாத்திரமா? தேசத்துக்கே சென்ற காலமும் வரப்போகிற காலமும் இணையும் நேரமது. ஒரு யுகம், சரித்திரத்தில் ஒரு பாகம், ஒரு வாழ்க்கை முறை இவையெல்லாம் மாறும் காலமது. இருள் மறைந்தது. புத்தொளி பிறந்தது. சிறையின் சங்கு ஒலித்தது.

நண்பர்கள் பிரார்த்தனைக்குக் கூடினர். நானும் அணிவகுத்து நின்றேன். நண்பர் அழகிரிசாமி பாட ஆரம்பித்தார். அந்தப் பாடலிலேதான் என்ன சக்தி? என்ன ஆழம்? நண்பர் பாடினார்.

தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடு
சூழ்கலைவாணர்களும் — இவள்
என்று பிறந்தவள் என்றுணராத
இயல்பினளாம் எங்கள் தாய்.
முப்பது கோடி முகமுடையாள் உயிர்
மொய்ம்புற வொன்றுடையாள்—இவள்
செப்புமொழி பதினெட்டுடையாள் எனில்
சிந்தனை ஒன்றுடையாள்.
வெண்மை வளரிமயாசலன் தந்த
விறன் மகளாம் எங்கள் தாய் — அவள்
திண்மை மறையினும் தான்மறையாள் நித்தம்
சீருறுவாள் எங்கள் தாய்.

அழகிரிசாமியின் கணீரென்ற குரல், அந்த நிசப்தத்திலே, இருளைப் போக்கி வரும் அந்தக் காலைக் கதிரவனின் ஒளியைப்போல, வெளியைப் பிய்த்துக் கொண்டு வான் நோக்கிச் சென்றது. ‘எங்கள் தாய்’, ‘எங்கள் தாய்’ என்ற வார்த்தைகள் திரும்பத் திரும்ப என் காதில் விழுந்தபடியே இருந்தன. ‘எங்கள் தாய்’, ‘எங்கள் தாய்’ என்ற வார்த்தைகள், என்னுடைய ஒவ்வொரு நரம்பையும் சுண்டிச் சுண்டி இழுப்பதுபோல் தோன்றியது. எங்கேயோ ஒளிந்து கொண்டிருந்த நீர், கண் வழியாகப் பெருகிற்று. பிரார்த்தனை முடிந்தது. கூட்டம் கலைந்தது. என் கால்கள் நடக்க மறுத்தன. அப்படியே மெய்மறந்து நின்றுகொண்டிருந்தேன்.

வார்டர் என் பக்கம் வந்தான். ‘394-க்கு ஒரு தந்தி’ என்று தந்தியை என்னிடம் நீட்டினான். பார்த்தேன். தலை ‘கிடுகிடு’ என்று சுற்றுவதுபோல் இருந்தது. நல்ல வேளை கீழே விழாமல் சமாளித்து நின்றேன். சிறிது தூரத்தில் போய்க் கொண்டிருந்த தி. ஐ.வும், நல்லதம்பி

யும் திரும்பிப் பதற்றத்துடன் என்னை நோக்கி வந்தனர். தந்தியைத் தி. ஜ.விடம் நீட்டினேன்.

"நடராஜ், என் மனமார்ந்த அனுதாபங்கள். தாயை இழப்பது என்பது அவ்வளவு சுலபத்தில் தேற்றுவதற்குரிய காரியமல்ல. ஆனால், நாம், 'தாய்' என்று மனமாறப் போற்றி வரும் தாய்மார்கள் எல்லோரும் வளர்ப்புத்தாய்கள்தான்; நம் உண்மைத் தாய், சிறிது நேரத்துக்குமுன் பிரார்த்தனை செய்தோமே அந்தத் தாய்தான். உங்கள் துயரத்தை மன வலிமையுடன்தான் நீங்கள் அடக்கிக் கொள்ள வேண்டும்" என்றார்.

நேராக என் இடத்துக்குத் திரும்பினேன். கம்பளியை மேலே போட்டுக் கொண்டேன். நெருப்பை அவிப்பதற்குக் கம்பளியைச் சுற்றி அமுக்குவார்களாம். அன்னை இட்ட தீ அடி வயிற்றிலிருந்து பொங்கி வந்து கொண்டிருந்தது. அதை அணைப்பதற்குக் கம்பளியினால் என் உடலையும், முகத்தையும் மூடிக்கொண்டு குப்புறப் படுத்துக்கொண்டேன்.

# 8

என் சிறை வாழ்க்கை தேசத்துக்குப் பலனைக் கொடுத்ததோ, இல்லையோ? எனக்கு அது ஒரு பூரண மான பயனைக் கொடுத்தது. அதுதான் தி. ஜ. அவர் களின் நட்பு. தி. ஜ. அவர்கள் சமுத்திரத்தில் மிதக்கும் பனி மலையைப் போல. அவர் பெருமையின் அரைக்கால் பாகத்தைத்தான் உலகம் கண்டுகொள்ள முடியும். பாக்கிப் பெரும்பாகம் நம் கண்ணுக்கு அகப்படாமல் பதுங்கிக் கிடக்கும். அவருடைய எண்ணங்கள், செயல்கள் எல்லாம் எனக்கு வியப்பை ஊட்டும். அவர் செய்யும் சிறு காரி யங்கள் எப்படி மகத்தானவை யாகிவிடுகின்றன என்ப தைக் கண்டேன். பெரிய காரியங்கள் என்று நான் போற்றும் காரியங்களை, எவ்வளவு சுலபமாகவும், சாதா ரணமாகவும் அவர் செய்திருக்கிறார் என்பதையும் கண் டேன். பார்க்கப் போனால், பெரும் தியாகங்கள், செயற் கரிய செயல்கள் என்பவற்றுக்கு அவரையும், அவரு டைய செயல்களையுமே உரைகல்லாக வைத்துப்பார்க்கும் பழக்கத்தை மேற்கொண்டேன்.

அவர் எனக்கு ஞானத் தந்தையாக ஆனார். என் சிந்தனை சக்தியை விரிவுபடுத்தி, அதற்கு ஓர் உருக்கொடுத் தவர் அவர்தான். அரசியல் சித்தாந்தத்திலோ, கொள் கைகளிலோ, நடப்பு முறையிலோ ஏதாவது எனக்குக் குழப்பம் ஏற்பட்டால், அதைத் தெளிவுபடுத்தி, பிரச்னை யின் மையத்தைத் தொட்டு விளக்குவார். அவருடைய சிந்தையில் தெளிவு இருப்பதனால் அவர் எதைப்பற்றி

எழுதினாலும், அதில் தெளிவு இருக்கும்; பண்டிதனும் சரி, பாமரனும் சரி, அவர் எழுதியதைப் படித்துவிட்டு, எனக்குப் புரியவில்லை என்று சொல்லிவிட முடியாது. அவ்வளவு எளிமையானதாகவும், கவர்ச்சியுள்ளதாகவும் இருக்கும்.

எனக்குப் 'புத்தகப் புழு' என்று பெயர். எப்பொழுதும் புத்தகமும் கையுமாக இருப்பவன். கலாசாலைப் படிப்புக்கு உட்படாத, தற்கால மேல்நாட்டு அறிஞர்களின் புத்தகங்களை விரும்பிப் படித்தவன். அரசியல் ஞானிகள், தத்துவ ஞானிகள் இவர்களின் தத்துவங்கள், சிறந்த இலக்கியப் படைப்புக்கள், இலக்கிய ஆராய்ச்சிகள் இவற்றை எல்லாம் ஏராளமாகப் படித்து ஜீரணித்திருக்கிறேன். ஆனால். தி. ஜ.வின் படிப்புக்கு முன்னால் நான் ஒரு 'கத்துக் குட்டி'. அவரது படிப்பின் பரப்பு என்னை அதிசயிக்கச் செய்யும். அவர் சர்வ கலைகளையும் படித்து ஆராய்ச்சி செய்து டாக்டர் (அறிவாளி) பட்டம் வாங்கியவராயிருக்க வேண்டும் என்று நான் நினைத்ததுண்டு. ஆனால், ஆரம்பப் பள்ளிக்கு மேலே, பெரிய பள்ளிக்கூடத்துக்குக்கூட அவர் சென்றதில்லை என்பதை நான் அறிந்து கொண்டபோது, நான் அடைந்த ஆச்சரியத்தைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது.

தி. ஜ வின் தகப்பனார் மிகவும் சொற்ப வருமானத்தைக் கொண்டவர். தி. ஜ. மூத்த தாரத்து மகன். இளைய தாரத்துக்குப் பல குழந்தைகள். குடும்பச் செலவுக்கே வருமானம் சிறிதும் போதவில்லை. அப்படியிருக்க, தி. ஜ.வின் படிப்புக்கு அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அதில் அக்கறை காட்டவும் இல்லை. ஆகவே, தி. ஜ.வின் திண்ணைப் பள்ளிக்கூடப் படிப்பு முடிந்தவுடன், அவருடைய பள்ளிப் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்தாகி விட்டது. ஆனால், தி. ஜ. படிப்பை நிறுத்திவிடவில்லை. படிக்கும் முயற்சியை விட்டுவிடவில்லை. அந்தச் சிறு

பிராயத்திலேயே, கணிதத்தில் இன்னொரு ருசி ஏற்பட்டிருந்தது. பக்கத்து வீட்டுப் பையன், பள்ளிக்கூடத்தில் படித்த யூக்லிட் வடிவகணிதப் புத்தகம் (Euclid Geometry) இவருக்குக் கிடைத்தது. அதை வைத்துக் கொண்டு கணிதம் பயில ஆரம்பித்தார். ஆனால், புத்தகம் ஆங்கிலத்தில் இருந்தது. இவருக்கோ ஆங்கிலம் தெரியாது. ஆங்கில அரிச்சுவடி ஒன்றை வாங்கிக் கொண்டார். அதிருஷ்டவசமாய் ஆங்கில அகராதி ஒன்றும் கிடைத்துவிட்டது. இந்த மூன்றையும் வைத்துக் கொண்டு, கணிதத்தின்மூலம் மொழியையும், மொழியின்மூலம் கணிதத்தையும் கற்க ஆரம்பித்தார். இவருடைய கடைசி கணிதப் பாடம் முடிவதற்கும், இவர் ஆங்கிலத்தில் புலமை அடைவதற்கும் சரியாக இருந்தது. அதன்மேல் கணிதத்தை விட்டு, ஆங்கிலத்தில் நேரடியாகவே, இலக்கியம், அரசியல், தத்துவம் போன்ற பல துறை நூல்களையும் படித்துப் பயிற்சி பெற்றார். பிற்காலத்தில் இவர் பல பத்திரிகைகளில் வேலை பார்த்தபொழுது, மேலும் தமது அறிவை விரிவு படுத்திக் கொண்டிருந்தார். தமிழில் எழுதுவது போலவே, ஆங்கிலத்திலும் தெளிவாகவும், அழகாகவும் எழுதும் ஒரு தேர்ச்சியையும் பெற்றிருந்தார். தமக்குத்தாமே ஆசான் ஆகி, தம்மையே தமக்கு நல்கும் ஓர் அபாரமான பேற்றைப் பெற்றவர் தி. ஜ. செயற்கரிய செயல் என்று இதையல்லவா சொல்லவேண்டும் என்று நான் நினைத்ததுண்டு. பல வருஷங்கள், பள்ளியிலும், கல்லூரியிலும், கொட்டை நூற்ற நான், எந்தப் பள்ளிக்கும் போகாத மேதையிடம், விபூதி வாங்கிக்கொள்ள வேண்டியிருப்பதை நினைக்கும்போதெல்லாம், இவருடைய சாதனையை நினைத்து நினைத்து ஆச்சரியப்படுவேன். 'முயற்சியும், ஊக்கமும் இருந்தால், மனிதனால் சாதிக்க முடியாதது எது?' என்று எனக்குத் தோன்றும். தி. ஜ. எனக்குச் சிறந்த ஓர் ஆதர்ச புருஷராகத் தோன்றினார்.

அது மாத்திரமன்று. மகாத்மா காந்தியின் சத்யாக்கிரக தர்மத்தை நன்றாகப் புரிந்துகொண்டவர். அந்த நெறி பிறழாது வாழ்க்கை நடத்துபவர். 'சத்தியம்', 'சத்தியாக்கிரகம்', என்பதன் உட்பொருளையும், எனக்கு விளக்கிக்காட்டியவர். நம் சிந்தனை, செயல், சொல் மூன்றும் இணைந்து ஒன்றுபட்டு இருக்கும் பொழுதுதான் நாம் சத்தியத்தைக் கைப்பிடிக்கிறோம். அதில் பல தரும சங்கடங்களும், சிரமங்களும் வந்து சேருகின்றன. சத்தியத்தைக் கைப்பிடிப்பதனால் பிறருக்குத் தீங்கு ஏற்படுமானால், அப்பொழுது என்ன செய்வது? ஹிம்சையைத் தோற்றுவிக்கும் சத்தியம், சத்தியமாகுமா? அதற்கு, தி. ஜ. ஓர் உதாரணம் கொடுத்தார்.

தெருவில் சில சிறுவர்கள் ஆமையை அடித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் ஆமையின் ஓடு மிகவும் கனமானதல்லவா. ஆகவே, இவர்கள் எவ்வளவு ஹிம்சை செய்தும் அது சாகவில்லை. காஷாயம் தரித்த ஒரு பண்டாரம் அந்த வழியாகப் போய்க் கொண்டிருந்தார். சிறுவர்கள் செய்வதைப் பார்த்துவிட்டு, அவர் வாய்க்குள்ளேயே முனகிக்கொண்டார். "சிவா...சிவா .. ஆமையைத் திருப்பிப்போட்டு அடிக்கணுமே சிவா...... சிவா..." என்றார். சிறுவர்கள் அதைக் கேட்டு, ஆமையைத் திருப்பிப்போட்டு அடித்துக்கொன்றார்கள். பண்டாரம் என்னவோ, உண்மையைத்தான் சொன்னார். சிறுவர்களிடம் நேரிடையாகவும் சொல்லவில்லை. சிவனைக் கூப்பிட்டுத்தான் சொல்லியிருக்கிறார். அந்த ஆமை சாவதில் அவருக்கு லாபமோ, நஷ்டமோ இல்லை. இருந்தாலும், இது சத்தியமாகுமா? வள்ளுவர் இதற்கெல்லாம் விளக்கம் தந்திருக்கிறார்.

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்

எப்படித் தெளிவாய் இருக்கிறது வள்ளுவர் வாக்கு என்று விளக்கிக்காட்டினார் தி. ஜ.

பல சந்தர்ப்பங்களில், இப்படி வாய்மையைப் பற்றியும், வாய்மை காப்பாற்றப்படுவதையும், பொய்யைப் பற்றியும், பொய் ஏன் பிறக்கிறது என்பது பற்றியும் விவாதிப்போம். அவர் தமக்கு ஏற்பட்ட ஓர் அனுபவத்தைப்பற்றிச் சொன்னார். அதைப் பிற்காலத்தில், 'பொய் பிறந்த கதை' என்று ஒரு கட்டுரையாகவே எழுதியிருக்கிறார். அந்தக் கட்டுரையின் விஷயம் இதுதான் :

தி. ஜ.வின் தகப்பனருக்கு இளைய தாரம் என்று சொன்னேனல்லவா? சிறிய தாய், மூத்த தாரத்து மகனான தி. ஜ.வை வெல்லம் வாங்க அனுப்புவாளாம். இவர் வாங்கிக் கொண்டு வருவார். பொட்டணத்தை வாங்கியபடியே, சிறிய தாய். "நீ எவ்வளவு வெல்லம் வாயில் போட்டுக்கொண்டாய்" என்று கேட்பாளாம். "நான் வாயில் போட்டுக்கொள்ளவேயில்லை" என்று உண்மையைச் சொல்வாராம் தி.ஜ. "பொய் சொல்லாதே. நிஜத்தைச் சொல்லு. எவ்வளவு வாயில் போட்டுக் கொண்டாய்" என்று திரும்பவும் கேட்பாள் சிற்றன்னை. மறுபடியும் இதே பதில். இப்படி ஒரு தரம், இரண்டு தரம்—ஒருநாள், இரண்டு நாள், மூன்று நாள் என்று அடிக்கடி நிகழ்ந்தவுடன் அவருக்குத் தோன்றியதாம்; 'நாம் தின்னாமல் இருக்கும்போதே, தின்றதாகக் குற்றம் சாட்டுகிறாள் சிற்றன்னை. வீணாகப் பொல்லாப்பை ஏன் அடைய வேண்டும்? குற்றம் செய்யாமல் தண்டனை அடைவதைவிட, குற்றம் செய்தே அடையலாமே' என்று வெல்லத்தைத் தின்ன ஆரம்பித்தாக அவர் கட்டுரையில் எழுதியிருந்தார். அதில் பொய், எப்படிப் பொய்யைத் தோற்றுவிக்கிறது என்பதையும், ஓர் அபாண்டமான குற்றச்சாட்டு, எப்படி நிரபராதியான ஒருவனைக் குற்றம்

செய்யத் தூண்டுகிறது என்பதையும் விளக்கவே அப்படி எழுதினர்.

ஆனால், இது கற்பனையாக, நடந்ததைத் திருத்தி எழுதப்பட்ட நிகழ்ச்சி. உண்மையில் அப்படி அவர் மாறவில்லை. சிற்றன்னை எவ்வளவுதான் குற்றம் சாட்டினாலும், அவர் சத்தியத்திலிருந்து நழுவவில்லை. நான் அவரிடம் கேட்டேன். "நீங்கள் கட்டுரையில் எழுதியிருந்ததே உலகியலுக்குப் பொருத்தமாயிருக்கிறது. தினந்தோறும் அந்தக் குற்றச்சாட்டையும் கேட்டுக் கொண்டு, சத்தியத்தைக் கைவிடவில்லை என்பதுதான் ஆச்சரியமாயிருக்கிறது" என்றேன்.

அவர் சொன்னார்: "சத்தியம் என்பது ஆதார சுருதியைப்போல. அதை இடம், பொருள், ஏவல் இவற்றுக்குத் தகுந்தாற்போல் மாற்றிக்கொண்டே போக முடியாது. சத்தியத்தைக் கடைப்பிடிக்கிறேன் என்றால், அது சத்தியத்திற்காகவேதான், எனக்காகத்தான். என் கொள்கைகள் எனக்காகவேதான்; பிறருக்காக அல்ல. வேறு ஒருவர் என்ன நினைக்கிறார், எதை விரும்புகிறார் என்பதற்காகவெல்லாம் நம் வாழ்க்கை முறைகளை மாற்றிக்கொண்டே போகமுடியாது. அப்படி மாற்றிக் கொண்டு போவது நடைமுறையில் நமக்குக் கஷ்டத்தைத் தான் உண்டு பண்ணும். சத்தியத்தை மாத்திரம் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, மற்றது எதை வேண்டுமானாலும் விட்டுவிடலாம். நஷ்டம் ஒன்றுமில்லை. சத்தியம் என்பதுதான் கடவுள் என்கிறார் நம் காந்திஜி. நம் பெரியோர்கள் தினந்தோறும் எதைப் பிரார்த்திக்கிறார்கள்?

பொய்யிலிருந்து சத்யத்துக்கு என்னை அழைத்துச்செல்.
இருளிலிருந்து ஒளிக்கு என்னை அழைத்துச் செல்.
மரணத்திலிருந்து நித்யத்துவத்திற்கு என்னை
அழைத்துச் செல்.

இவற்றிலிருந்து விடுபட்டவன் ஜீவன் முக்தன்தான். ஆனால் இது எல்லாவற்றுக்கும் அடிப்படை 'சத்தியம்' என்பதுதான்" என்று விளக்கிச் சொன்னார் தி. ஜ.

தி.ஜ.வுடன் பழகினவர்களுக்கு இதெல்லாம் தெரிந்து விடும். ஆனால், அவர் தேசத்துக்குச் செய்திருக்கும், தியாகம், பட்டிருக்கும் கஷ்டம், அவர் இதயத்திலே உள்ள துறவு மனப்பான்மை என்பதையெல்லாம், நாம் சட்டென்று கண்டுபிடித்துவிட முடியாது. அவர் வாழ்க்கையில் ஏற்பட்ட மற்றொரு சம்பவத்தையும் தெரிந்து கொண்டால்தான், அவருடைய தன்மையை ஓரளவாவது அறிய முடியும்.

இதைக் கிருத்திவாஸ் என்ற தேசபக்தர் சொன்னார். தி. ஜ. 'தேசசேவகன்' என்ற பத்திரிகையின் உதவி ஆசிரியராக இருந்தார். அந்தக் காலத்தில் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவரும் நண்பர்களின் விருப்பத்துக்குக் கட்டுப் பட்டு, கருத்துடன் காங்கிரஸ் வேலையைப் பார்த்து வந்தார். அவர் செயலாளராயிருந்த வருஷத்தில், தமிழ் நாடு மாகாணக் கமிட்டி மகாநாட்டை அங்கு நடத்த ஏற்பாடாகியிருந்தது. அந்த மகாநாடு மிகவும் முக்கியத் துவம் பெற்றிருந்தது. மாண்டேகு – செம்ஸ்போர்டு இரட்டை ஆட்சி முறையின்கீழ், சட்டசபைத் தேர்தல் களில் காங்கிரஸ் கலந்து கொள்வதா அல்லது பகிஷ்கரிப்பதா என்பதைத் தீர்மானிக்க இந்த மகாநாடு கூட்டப்பட்டிருந்தது. ஸி. ஆர். தாஸைப் பின்பற்றிச் சில தலைவர்கள் தேர்தலில் ஈடுபட விரும்பினார்கள். ராஜாஜி யைப் பின்பற்றிச் சிலர் அதை எதிர்த்தனர். அந்த மகாநாடு தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் முடிவு காணவிருந்தது. தலைவர்களும் எல்லா அங்கத்தினர்களும் வந்திருந்தனர். தி.ஜ.வுக்கு மூச்சுவிட நேரமில்லை. பம்பரம் போல் சுற்றிச்சுற்றி வந்து காரியங்களைக் கவனித்து

வந்தார். குளிக்கவோ, சாப்பிடவோ, தூங்கவோ சிறிது கூட நேரம் கிடையாது. நின்றுகொண்டே, தோசையையோ, இட்டலியையோ வாயில் போட்டுக்கொண்டு, காப்பியை இரண்டு வாய் மடக்கு மடக்கென்று குடித்து விட்டுப் பசியாறுவார். காரில் போகும்பொழுதோ, உட்கார்ந்துகொண்டிருக்கும் பொழுதோ, அர்த்தமில்லாத 'கடபட' பிரசங்கத்தின் பொழுதோ, கண்ணை மூடிக் கொள்ளும் பூனைத் தூக்கம்தான்.

மகாநாடு வெற்றிகரமாக முடிந்தது. வந்திருந்த தலைவர்களும் பிரதிநிதிகளும் போய்விட்டனர். ஜில்லா கமிட்டித் தலைவர் 'அப்பாடா' என்று நாற்காலியில் உட்கார்ந்தார். "மாணிக்கம், குளுமையாத் தண்ணீர் கொண்டா குடிக்க" என்று உத்தரவு போட்டுவிட்டு, "என்ன, தி. ஜ.! எல்லோரும் போய்விட்டார்கள். உங்களுக்குத்தான் மூன்று நாளும் சாப்பாடு இல்லை. தூக்கம் இல்லை. வாருங்கள் இங்கேயே சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள்ளலாம். சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு பிறகு நீங்கள் வீட்டுக்குப் போகலாம்" என்று அந்தரங்க அபிமானத்தோடு சொல்லியிருக்கிறார்.

"இல்லை, சோமசுந்தரம். நான் உடனே வீட்டுக்குப் போகவேண்டும். வீட்டிலே ஒரு முக்கியமான வேலை இருக்கிறது" என்றார்.

"என்னையா வேலை? மூன்றுநாள்தான் மூச்சுத்திணற வேலை பார்த்தாகிவிட்டதே. உம் வீட்டு வேலை, என்ன தலைபோகிற வேலை? எதுவேண்டுமானாலும் கிடக்கட்டுமையா. சாப்பிட்டுவிட்டு, சிறிது தூங்கிவிட்டு, உம் வீட்டு வேலையைக் கவனியுமே. யார் குறுக்கே நிற்கப் போகிறார்கள்?"

"இல்லை சோமசுந்தரம். எனக்கென்ன, உபசாரம் செய்யவேண்டுமா? நான் அவசியம் போகவேண்டும். தலை போகிற காரியம்தான்."

"உம்மை விடமாட்டேன், ஐயா. சொன்னபடியே கேளும். காரியம் என்ன சொல்லும்? நான், மாணிக்கத்திடம் யாரையாவது அனுப்பி, கவனிக்கச் சொல்றேன்" என்று பிடிவாதம் பிடித்தார்.

"இல்லை, இல்லை. மன்னியுங்கள். என்னை தயவுசெய்து போக அனுமதி கொடுங்கள். முக்கியமானதாயில்லாவிட்டால், நான் இப்படி வாதாடிக்கொண்டிருக்க மாட்டேன்" என்று பதற்றத்துடன் சொன்னார், தி. ஜ. அவர் முகத்தில் இருந்த சோர்வும் துக்கமும், ஏதோ இதில் விஷயம் இருக்கிறது என்பதைக் காட்டின.

"என்ன தி. ஜ., அவசியம் போகத்தான் வேண்டுமா? அப்படி என்ன விஷயம் என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?"

தி. ஜ. தயங்கினார். அவர் தயங்குவதைப் பார்த்து, "சொல்லக் கூடாத விஷயமென்றால், வேண்டாம்" என்றார் சோமசுந்தரம். அவர் ஏதாவது தவறாக நினைத்து விடுவாரோ என்று எண்ணிய தி. ஜ., "மன்னியுங்கள், நான் சொல்ல வேண்டாமென்றுதான் நினைத்தேன். இப்பவும் இஷ்டமில்லை. ஆனால் நான் சொல்லாவிட்டால், நீங்கள் வருத்தப்படுவீர்கள். விஷயம் இதுதான்: என்னுடைய கடைசிக் குழந்தைக்கு, மூன்று நாளாக உடம்பு சரி இல்லாமல் இருந்தது. நேற்றிரவு மூன்று மணிக்கு அது இறந்துவிட்டது. அந்திமக் கிரியைகள் செய்தாக வேண்டும். வீட்டில் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பார்கள்" என்றார்.

சோமசுந்தரத்தின் தலை சுழன்றது. "என்னையா, இது? குழந்தைக்கு உடல் மோசமாயிருக்கிறது என்று ஒரு வார்த்தை என்னிடம் சொன்னீரா? ஏன் ஐயா, உயிருக்கு மன்றாடும் குழந்தையை விட்டுவிட்டு, மகாநாடு என்னையா வேண்டியிருக்கிறது?" என்று வருத்தத்துடன் கோபித்துக் கொண்டார்.

"நான் மாத்திரம் அங்கிருந்து என்ன செய்திருக்கப் போகிறேன். டாக்டர் மருந்து கொடுத்தார். நான் அங் கிருந்தால், போகிற உயிரைத் தடுத்திருக்க முடியுமா? பார்க்கப்போனால், இந்த வேலையில், க்லோரபாம் போதை போல, வீட்டுக் கவலை இல்லாமல் இருக்கமுடிந்தது, இனி மேல் அதற்குத் தப்பமுடியாது."

"நீர் என்னையா மனிதன்தானா?" என்று வேதனைப் பட்டார் சோமசுந்தரம்.

"இல்லை, நான் ஒரு தொண்டன்" என்றார் தி. ஜ.

கிருத்திவாஸ் சொன்ன இந்தக் கதையைக் கேட்ட பொழுது, எனக்குப் புராண புருஷர்களின் ஞாபகம் வந்தது. அப்பூதி அடிகள், கபீர்தாஸ், சிறுத்தொண்டர் முதலிய பெரியோர்களின் ஞாபகம் வந்தது. இந்த நூற் றாண்டில் புராண புருஷர் ஒருவர் இருக்கமுடியும் என்று கற்பனைகூடச் செய்யமுடியவில்லை என்னால். இதைக் கேட்டவுடன் அப்பாவின் குருவான கௌபர் துரையின் ஞாபகம் வந்தது. இருவரிடமும் உள்ளடக்கமாயிருந்த துறவு மனப்பான்மையில் உள்ள ஒற்றுமை என்னைப் புல்லரிக்கச் செய்தது. கர்ம வீரன் என்றோ, தீரன் என்றோ இவர்களை அல்லவா சொல்லவேண்டும் என்று நினைத்து நினைத்து நெஞ்சுருகினேன்.

"என்ன தி. ஜ. நீங்கள் இப்படிச் செய்தீர்களாமே? அது சரிதானா? தேசத்துக்குக் கடமை என்றிருந்தாலும், குடும்பத்துக்கும் உங்கள் கடமை இருந்ததல்லவா?" என்று கேட்டேன்.

"நீங்கள் சொல்வது வாஸ்தவம்தான். ஆனால் இந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்லத் தேவையில்லை. நான் சொல்ல வேண்டிய பதிலை இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பே ஒரு மகாபுருஷன் சொல்லியிருக்கிறான்" என்றார்.

"எந்த மகாபுருஷன், என்ன சொன்னான்?" என்று கேட்டேன்.

"ஏசுநாதரிடம் தொண்டு செய்ய விரும்பிய ஒரு தொண்டன், வீட்டுக்குப் போய்ச் சொல்லிக் கொண்டுவர விரும்பினான். பகவான் ஏசு சொன்னார்: "கலப்பையில் கையை வைத்துக் கொண்டு, திரும்பிப் பார்ப்பவன், கடவுளின் ராஜ்யத்துக்குத் தகுதியில்லாதவன்" என்று அவனை விலக்கிவிட்டார். அதே வார்த்தைகள்தான், எனக்காகவும் சொல்லிக் கொள்ள முடியும். கடவுளின் தொண்டு ஆனால் என்ன? தேசத்தின் தொண்டு ஆனால் என்ன?" என்றார்.

எனக்குப் பேசுவதற்கு வாயில்லை.

# 9

தி. ஜ. வைப் போலவே, நான் சிறையில் நெருங்கிப் பழகியவர் நல்லதம்பி. தி. ஜ.வுக்கும் எனக்கும் முற்றும் மாறுபட்ட சுபாவத்தைக் கொண்டிருந்தாலும், அவருடைய அன்பு எங்கள் இருவரையும் அவருடன் சேர்த்தது. தி. ஜ. வும் நானும் படித்தவர்கள். எங்கள் இருவரிடையேயும் பேசுவதற்கு அநேக விஷயங்கள் இருந்தன. இலக்கியச் சர்ச்சையில் ஈடுபடுவோம். அரசியல் தத்துவங்களை அலசுவோம். பக்தி இலக்கியத்தில் திளைத்து நிற்போம். நாங்கள் இருவரும், நியதியும் கட்டுப்பாடும் உள்ள மத்ய தரக் குடும்பத்தின் சட்டதிட்டங்களை விடாமல் வாழ்ந்தவர்கள்.

ஆனால் நல்லதம்பி, அகமடியர் எனப்படும் சேர்வைகாரர் குடும்பத்தில் பிறந்தவர். 'வெட்டுப்பழி, குத்துப்பழி' என்று சொல்வார்களே அதற்கெல்லாம் அஞ்சாத குலத்தில் பிறந்தவர். ஜலத்தை விட்டால் வெட்டு, மறித்தால் குத்து, வரப்பை நகர்த்தினால் கொலை — என்ற சூழ்நிலையில் வந்தவர். இவரும் ஆதியிலே சண்டை சச்சரவுகளில் அதிகமாக ஈடுபட்டவர்தான். மிகவும் கோபக்காரர் என்று பெயர் வாங்கியவர். இவருடைய மாமன், வேறு ஒருவரைக் கொன்றதற்குத் தூக்கிலிடப்பட்டார். அதுபோலவே இவரும் தூக்குமேடைக்குத்தான் போவார் என்று ஊர் ஜனங்கள் பேசிக்கொள்வார்களாம். ஆனால், இவர் கதரைக் கட்டிக்கொண்டு, 'காந்தி ஆள்' ஆனதும்,

இவர் குணமும் மாறிவிட்டது; வாழ்க்கைமுறையும் மாறி விட்டது.

"நீங்கள் எப்படி, காந்தி பக்தர் ஆனீர்கள், நல்ல தம்பி?" என்று பேச்சுக் கொடுத்தேன்.

"அதை ஏன் கேக்கிறிய, சின்னையா. மகாத்மாவை நான் மதுரையில் பார்த்தேன். அந்த நொடியிலே, என்னை மாற்றிவிட்டார், ஐயா."

"அதெப்படி நிகழ்ந்தது?"

"நான் கோவிலுக்கெல்லாம் போயிருக்கிறேன். அப்படி ஒன்றும் ஆவேசமடைந்தோ, மெய்மறந்தோ போய்விடவில்லை. ஆனால் இவர் கிட்டே நின்றேனோ இல்லையோ, தலை சுற்றுறாப்போல, ஏதோ எனக்குச் சொல்லத் தெரியவில்லை, ஐயா. இப்பக்கூட, உடம்பிலே அவரை நினைச்சா புல்லரிக்கிறது" என்று கையைக் காட்டினார்.

"பிறகு?"

"பார்த்ததிலே, மந்திரசக்தியோ, காந்தசக்தியோ, சொக்குப் பொடியோ — அவரிடம் உள்ள ஏதோ சக்தி என்னை ஆட்கொண்டுவிட்டது. அன்று முதல் நான் மாறியே போனேன்."

"எப்படி மாறினீர்கள்?"

"அதற்குமுன் நான் மனிதனாகவா இருந்தேன்? விலங்காட்டமாயிருந்தேன். விலங்கு என்ன செய்கிறது? பசித்தால் சாப்பிடுகிறது. தூக்கம் வரும்பொழுது, தூங்குகிறது. தனக்கு ஆபத்து என்று தெரிந்தால் சீறுகிறது. அதுபோலத்தான் நான் இருந்தேன். அந்தப் பொக்கைவாய்க் கிழவர், என்னைப் பொட்டிப் பாம்பா அடக்கிக் கட்டிப் போட்டுவிட்டார்."

"எப்படிக் கட்டிப் போட்டார்?"

—

"சத்தியாக்கிரகத்தினாலும், சத்தியத்தினாலும், தருமத்தினாலும்தான்."

"அதற்குக் கட்டுப்பட்டுவிட்டீர்கள்!"

"ஆமாம், சின்னையா. அதற்குக் கட்டுப்படாமல் இருக்க முடியுமா? நான் கேக்கிறேன், இந்தக் கடல், ஒரு நாள் 'உலகத்தையே அழித்து விடுகிறேன்' என்றால், உலகம் என்ன ஆகும்?"

"அழிந்து போகும்."

"அது ஏன் அழிக்கவில்லை? ஒரு வரம்புக்கு உட்பட்டு இருக்கிறது. அது சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு இருக்கிறது. அதுபோலத்தான், நம் உணர்ச்சிகளைப் பொங்கி எழச்செய்வதில், ஒரு பலனுமில்லை. பொங்கும் உணர்ச்சிகளை நாம் அடக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். அது இந்த மகாத்மா எனக்குக் கொடுத்த வரப்பிரசாதம், ஐயா."

"புலன்களை அடக்குவது மிகவும் சிரமமான காரியம் ஆயிற்றே. ஆனால் உங்களுக்கு எப்படியோ, அது சாத்தியமாகிவிட்டது."

"எல்லாம் பழக்கத்தில் வந்து விடுகிறது" என்றார் நல்லதம்பி.

எப்படி இருந்துவந்தவர், எப்படி இருக்கிறார் என்பதைப் பார்த்தபொழுது, மகாத்மா ஒரு பெரிய மந்திரவாதியே என்று எனக்குத் தோன்றியது. தம் பார்வையாலேயே ஓர் அற்புதத்தை நிகழ்த்தியிருக்கிறாரே என்று ஆச்சரியப்பட்டேன்.

நல்லதம்பிக்குப் பள்ளிப் படிப்புத்தான் இல்லை. உலகத்திலே அவர் நல்ல பாடம் கற்றறிந்தார். உலக வர்த்தமானங்களை சூக்ஷ்மமாகக் கவனிப்பார். தமிழ்ப் பத்திரிகைகளை விடாமல் படித்துவிட்டு அரசியல் நுட்பங்களைப் புரிந்துகொள்வார். நல்ல புத்திசாலி என்பதோடுகூட,

ஒரு தந்திரசாலியும் ஆவார். காங்கிரஸ் போராட்டம் நடந்த காலத்தில், இரகசிய வேலைகளுக்கெல்லாம் நல்ல தம்பிதான் வந்தாக வேண்டும். போலீஸுக்குத் தெரியாமல் அந்தரங்கத்தில் செய்கிற காரியங்களுக்கெல்லாம் நல்லதம்பிதான் வந்தாக வேண்டும். நல்லதம்பி மேல் நாட்டில் பிறந்திருந்தால், ஜேம்ஸ் பாண்ட் வீரராகத்தான் தோன்றியிருப்பார்.

காங்கிரஸ் இயக்கம் வலுத்து நடந்துகொண்டிருந்த சமயம், நல்லதம்பி மதுரையிலிருந்து ரூபாய் 5000 பணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு வருகிறார். திருநெல்வேலியில் ஒரு தலைவரிடம் அந்தப் பணத்தைச் சேர்த்தாக வேண்டும். திருநெல்வேலிப் பாலத்தைக் கடந்துகொண்டிருக்கிறார். இரவு மணி எட்டு இருக்கும். நல்ல நிலாக் காய்ந்து கொண்டிருந்தது. சிறிது தூரத்தில் தம்மை எவனோ பின்தொடர்கிறான் என்பது தெரியவந்தது. தம்மைத்தொடர்பவன் ஓர் உளவாளி என்பதையும் அறிந்துகொண்டார், பாம்பறியும் பாம்பின்கால் என்பது போல. சிறிது வேகமாக நடையைக் கட்டினார். உளவாளியும் தன் நடையை வேகப்படுத்தினான். அதைப் பொருட்படுத்தாதது போல், அவர்பாட்டுக்கு மேலே போய்க்கொண்டிருந்தார். எதிர்த்தாற்போல் ஓர் உருவம் தம்மைநோக்கி வருவதைக் கவனித்தார். அவனும் ஓர் உளவாளிதான், சந்தேகமில்லை; அவருக்குத் தெரியாதா என்ன? இரண்டு பேரில் எவன் ஒருவன் கையிலாவது மாட்டிக்கொள்ள வேண்டியதுதான். ஒரு நிமிஷம், சிறிது யோசித்தார். சிறைக்குப் போவதாகவோ, அடி வாங்குவதாகவோ இருந்தால், அவர் பொருட்படுத்தி யிருக்கமாட்டார். கம்பீரமாக அவர்கள் இருவரையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்திருப்பார். ஆனால், போராட்டத்துக்கு இன்றியமையாத பணத்தைப் பறிகொடுத்துவிடக் கூடாதே: தபால் மூலம் அனுப்பக்கூடிய பணமும் அல்லவே. பணம்

பறிமுதல் ஆனால் அதோடு விடுவார்களா? "இதை யார் கொடுத்தார்கள்? எவரிடம் சேர்க்கப்போகிறாய்?" என்றெல்லாம் கேட்டு, இம்சிப்பார்கள். தலைவர்களை மாட்டி விடக்கூடாது. பேசாமலிருந்தால் அவர்களாக ஊகித்துக் கொண்டு, வேறு யாரையாவது ஹிம்சை செய்யப் பார்ப்பார்கள். போலீஸ் ஒற்றர்கள், முன்னேயும் பின்னேயும் நெருங்கி வருகிறார்கள். நல்லதம்பி அப்படியே பாலத்தின் மேலே ஏறினார். ஓடும் தாம்பிரபரணியில் தொப்பென்று குதித்துவிட்டார். உளவாளியில் ஒருவன் விடாக்கண்டன் போலும். அவனும் குதித்துவிட்டான். நல்லதம்பிக்குச் சிறிதளவு நீந்தத் தெரியுமேயல்லாது நல்ல தேர்ச்சி கிடையாது. இருந்தாலும் நெஞ்சில் வைரம் அல்லவா பாய்ந்திருக்கிறது. அப்படியே மூச்சைப் பிடித்துக் கொண்டு ஜலத்தின் உள்ளே முக்குளித்தபடியே, எதிர்க் கரைக்குச் சென்று ஒரு மரத்தின் ஓரத்தில் பதுங்கி நின்று, தம்மை ஒருவரும் பார்த்துவிடவில்லை என்பது நிச்சயமானவுடன், ஈரத்துணியைப் பிழிந்துவிட்டு, பக்கத்திலே இருந்த ஒரு முஸ்லீம் நண்பரின் வீட்டுக் கதவைத் தட்டினார். "தாவூத் பாய், கதவைத் திறவுங்கள். அவசரம்" என்று மெதுவாகச் சொன்னார். வீட்டுக்காரர் கதவைத் திறந்தவுடன், உள்ளே பாய்ந்து சென்று கதவைத் தாளிட்டுவிட்டார். முஸ்லீம் நண்பர், காந்தி இயக்கத்தில் சம்பந்தப்பட்டவரல்ல. இயக்கத்துக்கு விரோதம் செய்யக் கூடியவரும் அல்ல. தையல் வேலை செய்து பிழைக்கும் ஒரு நல்ல தொழிலாளி. நல்லதம்பியிடம் மிகுந்த நட்புக் கொண்டவர். சிநேகத்துக்கு மிகவும் கட்டுப்பட்டவர். அந்த இரவில் நல்லதம்பியை அங்கேயே இருக்கச் செய்து, சாப்பாடு செய்துவைத்தார். நல்லதம்பி அங்கேயே படுத்திருந்துவிட்டு, விடியற்காலையில் சுமார் நாலு மணிக்கு எழுந்திருந்து நண்பரிடம் விடைபெற்றுக் கொண்டு, சேரவேண்டிய இடம் சென்று பணத்தைப் பத்திரமாகச்

சேர்ப்பித்தாராம். இப்படி அவர் செய்திருக்கும் காரியங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல.

நல்லதம்பி விஷயத்தில் இவற்றை யெல்லாம் ஓர் அரிய காரியமாகச் சொல்லமாட்டேன். துணிச்சலேயும், சாகஸத்தையும் காட்டும் வீரச் செயல்கள் என்பதில் சந்தேகமில்லே. ஆனுல், அவர் செய்த மற்ருேர் அதிசயச் செயலிலோ, ஆன்மிக வெற்றியைக் காட்டியிருக்கிருர். கோபத்தைக் காட்டவேண்டிய இடத்தில் கருணையைக் காட்டியிருக்கிருர். பகைமைக்குப் பதிலாக அன்பைக் கொடுத்திருக்கிருர்.

தின்ன வரும்புலி தன்னேயும் அன்பொடு
    சிந்தையில் போற்றிடுவாய் — நன்னெஞ்சே
அன்னே பராசக்தி யவ்வுருவாயினள்
    அவளேக் கும்பிடுவோம் — நன்னெஞ்சே
பகைவனுக் கருள்வாய் — நன்னெஞ்சே
    பகைவனுக் கருள்வாய்.

என்ற பாரதியின் வாக்கை நடத்திக் காட்டும் அளவுக்கு வளர்ந்துவிட்டார் என்ருல், அது அதிசயமல்லவா ?

தி. ஜ.தான் இந்த சம்பவத்தைப் பற்றி என்னிடம் சொன்னுர். நல்லதம்பி அதற்குமுன் சிறைவாசம் இருந்த காலத்தில் நடந்தது. 'சௌரி சாரா' காலத்தில் நடந்த சத்தியாக்கிரகம் அது. ஒரு வருஷம் நல்லதம்பிக்குக் கடுங்காவல் தண்டனே. நல்லதம்பிக்கு நல்ல வாலிப வயது. முப்பதுக்குள்ளேதானிருக்கும். அப்பொழுது தான் அவருக்குக் கல்யாணமாகியிருந்தது. இளம் மனேவி. சுமார் இருபது வயது இருக்கலாம்.

இவர் இருந்த வீட்டுக்கு எதிரே சிறிது தள்ளி ஒரு மோட்டார் ரிப்பேர் செய்யும் கூடமிருந்தது. அதில் தங்கப்பன் ஒரு மெக்கானிக். நல்ல தம்பியின் நண்பன். அடிக்கடி நல்லதம்பியின் வீட்டுக்கு வருவான்.

நல்லதம்பி சிறைக்குப் போய்விட்டார்; விட்டுச் சென்ற மனைவி தனிமையில் என்ன செய்வாள்? உணவுப் பொருள்கள் யார் வாங்கிக் கொடுப்பார்கள்? நல்லதம்பி பெரிய ஜமீனை விட்டுச் சென்றாரா? 'நான் வரும் வரையில் செலவுக்கு வைத்துக் கொள்' என்று பெட்டி நிறையப் பணத்தை வைத்துவிட்டுப் போனாரா? அல்லது வருவாய்க்கு ஏதாவது வகை செய்துவிட்டுப் போனாரா? அந்தச் சிறுபெண் என்ன செய்வாள்? பிறந்த வீட்டிலும், ஒன்றும் வழியில்லை. தங்கப்பன்தான் நண்பனை உத்தேசித்து, அவளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்துவந்தான். நல்லதம்பியின் மனைவி காளியம்மையும் நல்ல பெண். கண்யமாகவே நடந்து வந்தாள். ஒன்றும் விபரீதம் ஏற்படவில்லை.

ஆனால், நாளாவட்டத்தில் அவர்களின் உறவில் சிறிது சிறிதாக மாறுதல் ஏற்படத்தான் தொடங்கியது. அவர்களிடையே நட்பு நெருக்கமாகி, பாசம் உண்டாக ஆரம்பித்தது. கணவனையும் நண்பனையும் உத்தேசித்து, அவர்கள் இருவரும் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள முயன்றார்கள். ஆனால் அந்த வைராக்கியம் நிற்கவில்லை. ஒருவருக்கொருவர் இன்றியமையாதவர்கள் ஆகிவிட்டார்கள். தங்கப்பன், நல்லதம்பியின் வீட்டிலேயே வந்து வசிக்கத் தொடங்கிவிட்டான். இருவரும் முறையாகக் குடித்தனம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள்.

நல்லதம்பிக்கு இந்த விஷயம் சிறையில் இருக்கும் போதே தெரிந்துவிட்டது. முதலில் சிறிது கோபமும் வருத்தமும் ஏற்பட்டாலும், அதை அடக்கிக் கொண்டு விட்டார். அவர் காந்தி பக்தராகவும் அஹிம்சைவாதியாகவும் இல்லாவிட்டால், அவர் நேரே வீட்டுக்குச் சென்று இளநீர் சீவுவதுபோல் இரண்டு தலையையும் சீவி ஒவ்வொரு கையிலும் ஒவ்வொன்றைத் தூக்கிக் கொண்டு, போலீஸிடம் சரண் அடைந்திருப்பார். ஆனால் இப்

பொழுது அவர் என்ன செய்ய வேண்டும்? அதையும் முடிவு செய்துகொண்டார்.

சிறையிலிருந்து வந்ததும், நேராக தங்கப்பன் இருக்கும் தொழிற்சாலைக்குச் சென்றார். அவரைத் திடீரென்று பார்த்ததும், வெட்கமும் பயமும் கொண்டு தங்கப்பன் வெலவெலத்துப் போனான். என்ன பேசுவதென்று தெரியாமல் பேந்தப் பேந்த விழித்துக் கொண்டிருந்தான். நல்லதம்பி அமைதியுடன், "வீடு வரையில் போய்விட்டு வரலாம்" என்று அவனை அழைத்தார். தங்கப்பன் ஒன்றுமே புரியாமல் திகைத்தபடி, அவரைப் பின் தொடர்ந்தான்.

வீட்டுக்குள் புகுந்த இருவரையும் பார்த்து, மனைவி திக்பிரமை கொண்டாள். நல்லதம்பியின் முகத்திலோ, சிறிதேனும் கோபக்குறி தோன்றவில்லை. தங்கப்பன் மனம் கலங்கி நின்றான்; மனைவி பதறி நின்றாள். "இங்கே வா, தங்கப்பா" என்றார் நல்லதம்பி. நடுங்கிக் கொண்டு அவன் வந்தான். "இந்தப் பொம்பிளையை உன் வாழ் நாளில் கைவிடமாட்டேன் என்று என் கையில் அடித்துச் சத்தியம் செய்து கொடு" என்றார் அவர். தங்கப்பன் ஸ்தம்பித்து நின்றான்; ஒரு நிமிஷம் கழித்து, "மன்னியுங்கள், அண்ணே" என்று நல்லதம்பியின் காலில் விழுந்தான். அவளும் இவருடைய காலைப் பிடித்துக்கொண்டு ஸ்தம்பித்து, தேம்பித் தேம்பி அழுதாள். "அது சரி, இப்ப என்ன வந்திடுச்சு?" என்று சொல்லிக் கொண்டே, "தங்கப்பா, சத்தியம் செய்து கொடுக்கப் போறியா? இல்லையா?" என்று குரலை உயர்த்திக் கேட்டாராம். தங்கப்பன் அவர் கையில் அடித்துச் சத்தியம் செய்து கொடுத்தானாம்.

"சரி, நீங்கள் செளக்கியமாயிருங்கள்" என்று சொல்லிவிட்டு, அப்படியே வெளியேறினாராம் நல்லதம்பி.

இந்த வரலாற்றை அறிந்தபோது, தி ஜ கேட்டா ராம்: "என்ன, நல்லதம்பி, உனக்கு எப்படி இவ்வளவு பெருந்தன்மை வந்தது?"

"என்ன ஐயா, நீங்களும் பெருந்தன்மை என்று சொல்றீங்க. கட்டின பெண்டாட்டியைத் தவிக்க விட்டுட்டு நான் தேசத்தொண்டு செய்யக்கிளம்பிட்டேன். அது சிறு பெண்ணு. தனியா என்ன செய்யும்? குற்றம் என்பேரில்தான் தேசத்துக்குப் பாடுபடவேண்டு மென்றால், கலியாணம் செய்திருக்கக் கூடாது. கட்டிக் கிட்ட பின்னே, பெண்டாட்டியை விட்டுத் தேசத் தொண்டு செய்யப் புறப்பட்டிருக்கக் கூடாது ஒன்று, மனைவியை விட்டுடணும்; அல்லது தேசத்தை விட்டுட ணும். தேசத்தை விட மனம் இல்லை; மனைவியை விட்டு விட்டேன்" என்றார் நல்லதம்பி.

"தி. ஜ., இது நம்பமுடியாத மகத்தான சம்பவமா யிருக்கிறதே! வள்ளுவர் சொல்லியிருக்கிறாரே —

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்

என்று; அதை நினைத்து, என்ன உயர்ந்த லட்சியம், என்று நினைப்பேன். ஆனால் இந்த உயர்ந்த லட்சியத்தை ஒருவர் நடத்திக்காட்டியிருக்கிறார் என்பதை நினைக்குந் தோறும், இது என்னைப் பரவசப்படுத்துகிறது" என் றேன்.

"இது ஓர் உதாரணம். இப்படிப் பல தரப்பட்ட மனிதர்களிடமிருந்து பலபலவிதமான துன்பங்களையும், தியாகங்களையும் நம் பாரத மாதா பலி வாங்கியிருக்கிறாள்" என்றார் தி. ஜ.

"எப்படிப்பட்ட தியாகம்!" என்றேன் நான்.

"தியாகிகளுக்கு ராஜா யார் தெரியுமா? தியாக ராஜன், பரமேச்வரன். அவன் விஷத்தை விழுங்கினான்.

மற்றவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்தான். அதையே தான் நம் காந்தியும் நம்மைச் செய்யச் சொல்கிருர்" என்ருர் தி. ஜ.

"அதையேதான் நல்லதம்பியும் செய்திருக்கிருர்" என்றேன் நான்.

# 10

மாதம் கிட்டத்தட்ட ஆறு ஆகிவிட்டது. வஜா கிடைத்த நாட்களைக் கழித்து, வரும் திங்கட்கிழமை எனக்கு விடுதலை என்று வார்டர் சொல்லிவிட்டுப் போனான். ரயில் சிநேகம் என்று சொல்வார்கள். சில மணி நேரம் சேர்ந்து பயணம் செல்லும் காரணத்தாலோ, பகிர்ந்துகொள்ளும் பயண சிரமங்களின் அனுபவத்தாலோ ஒரு சிநேகம் ஏற்பட்டுவிடுகிறது. அப்படியிருக்க, ஆறு மாதம், ஒரு வருஷம், ஒரே லட்சியத்துக்காக, ஒரே கொள்கைக்காக, குடும்பத்தாரை உதறி எறிந்து விட்டு, கஷ்டங்களை மனமுவந்து ஏற்க வந்திருக்கும் நண்பர்களை விட்டுப் பிரிவது மிகவும் துன்பத்தைத் தரும் காரியமாகத்தான் இருந்தது. இப்படிப்பட்ட சமயங்களில் சிறைதான் சுவர்க்கமாகவும், சிறைக்கு வெளியே இருப்பதுதான் உண்மையான சிறையாகவும் தோன்றும்.

"என்ன நடராஜ், எப்போ திரும்பி வர்றே?" என்றார் முத்துராமன்.

"வராம எங்கே. இந்தக் கஞ்சியையும், முள்ளங்கிக் குழம்பையும் சாப்பிட்ட நாக்குக்கு வேறு ஒன்றும் ருசிக்காது. அதுக்காகவாவது பறந்துண்டு வந்துவிடுவார் பாரு, நண்பர் நடராஜ்" என்றார் வீரமுத்து.

தி. ஐ.விடமும், நல்லதம்பியிடமும் சொல்லிக் கொண்டேன். அவர்களை விட்டுப் பிரிவது, என் உடலையே பிய்த்துக்கொண்டு போவது போலத்தான் இருந்தது.

எல்லாப் பிரிவுகளும் துக்கத்தைக் கொடுப்பவைதான் ; ஆனாலும் சிறையில் இருந்து ஏற்படும் பிரிவு ஒரு தனித் தன்மை கொண்டது. சிறை என்பது ஒரு சிறு உலகம். அதற்கென்று சில சட்டதிட்டங்கள், அதற்கென்று சில பழக்கவழக்கங்கள். அதற்கென்று சில வாழ்க்கை முறைகள். வெளியிலே ஒன்றையும் பொருட்படுத்தாத நல்ல மனிதன், ஒரு சிறு பீடித் துண்டுக்காக அல்பத்தன மாகச் சிறையிலே நடந்துகொள்வான். வெளியிலே வாமனனாயிருந்தவன் இங்கே திரிவிக்ரமனாக வளர்வதும் உண்டு. சிறையின் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலை பெற்றதும், அருமை நண்பர்களின் பிரிவுதான் வேதனை யைத் தூக்கிக் காட்டியது. டெபுடி ஜெயிலர் என்னை அலுவலகத்துக்கு அழைத்துச் சென்றார்.

வழக்கமாக, அனுசரிக்க வேண்டிய சடங்குகள் முடிந்தன. அங்க அடையாளங்களைப் பரிசோதித்து விடுதலையாக வேண்டிய நபர் நான்தான் என்று ஆதாரத் துடன் உறுதி செய்தார்கள். சிறை உடுப்புக்களை வாங்கிக் கொண்டு, என் உடுப்புக்களை எனக்குத் திருப்பித் தந்தார் கள். கீதையில் கண்ணன், "துணிகளை எப்படிக் களைந்து விட்டுப் புதிதாக வேறு உடைகளை அணிகிறோமோ, அப்படித்தானப்பா மரணமும்" என்று சொல்கிறார். சிறை உடைகளை ஏற்றுக்கொண்டபோதும், அவற்றைக் களைந்து எறிந்தபோதும், எனக்கு அத்தகைய எண்ணமே உண்டாயிற்று. இந்த வாழ்வு வேறு, வரப்போகும் வாழ்வு வேறு என்று இரண்டு சமயத்திலும் எனக்குத் தோன்றியது. ஊருக்குத் திரும்புவதற்கு ரயில்வாரண்டும் கொடுத்தார்கள். இதுவரையில் நான் ஓர் எண் ; இப்போது ஒரு மனிதன்; இதுவரையில் ஒரு கைதி ; இப்போது சுதந்திரம் பெற்ற பிரஜை. உயிரற்ற ஓர் எண்ணுக்கும் உயிருள்ள ஒரு ஜீவனுக்கும் எத்தனை வித்யாசம் ? கைதிநிலைக்கும், சுதந்திரத்துக்கும் எவ்வளவு

வித்யாசம்? கூண்டிலடைபட்ட பறவைக்கும், வெட்ட வெளியில் ஆனந்தமாகப் பறந்து செல்லும் பறவைக்கும் என்ன வித்யாசம்? 'எர்னஸ்ட் டாலர்' (Ernest Toller) சிட்டுக்குருவியைப் பற்றி எழுதிய கவிதை எனக்கு ஞாபகம் வந்தது. மனிதன் சுதந்திரமாகத்தான் பிறக்கிறான். ஆனால் அவனைப் பிணைத்துக்கட்ட ஆயிரம் தளைகள் இருக்கின்றன என்று ஓர் அறிஞன் சொல்லவில்லையா? சிறையின் பெருங்கதவு திறந்தது. சிறை என்னை உமிழ்ந்துவிட்டது. சிறைக்கு வெளியே வந்துவிட்டேன். ஆனால், இது விடுதலையா? தேசம் விடுதலை அடையாதபொழுது, தனி மனிதனுக்கு விடுதலையா? தலைவன் சிறையில் இருக்கும்போது, தொண்டனுக்கு விடுதலையா? இந்த தேசமே பெரிய சிறைச்சாலை என்று சொன்னார் ஒரு தலைவர். ஆகவே, சின்னச் சிறையிலிருந்து பெரிய சிறைக்கு என்னை மாற்றியிருக்கிறார்களா? சிறையைத் திரும்பிப் பார்க்காமல் வேகமாக நடந்தேன்.

காற்று லேசாக அடித்து, வீசியது. சிறைக்கூட்டில் அடைபட்ட காற்றல்ல; பிரபஞ்ச வெளியிலே சுயேச்சையாகத் திரியும் காற்று. ஒரு ஜட்கா வண்டியைப் பிடித்துக் கொண்டு ரயில்நிலையத்தை அடைந்தேன். வழக்கம் போல ஏகக்கூட்டம், வியாபாரிகளின் விற்பனைக் கூச்சல், பிரயாணிகளின் புரியாத கூச்சல், ரயில் வண்டிகளின் இயந்திரக் கூச்சல் இதெல்லாம் இணைந்தொரு ஜீவகீதமாகத் தோன்றியது. இரண்டு வாழைப்பழங்களையும், ஓர் ஆரஞ்சுப்பழத்தையும் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, ஒரு கலர் வாங்கிக் குடித்தேன். என்ன தேவாமிர்தமாக இருந்தன. இது பூலோக சுவர்க்கம்தான். எத்தனை கோடி இன்பங்கள் நம் இந்திரியங்களுக்கு, சேவை செய்யக் கைகட்டிக் காத்திருக்கின்றன!

எங்கிருந்து கூட்டி வந்தார்களோ, அந்த ஊருக்குச் செல்வதற்கு சர்க்கார் செலவில் வாரன்ட் இருந்தது.

ஆனால் அங்கு நான் எதற்காகப் போகவேண்டும்? அங்கு யார் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்? அம்மா இருந்திருந்தால் அது என் வீடு—அது என் ஊர். ஆனால் இன்று? வேறு எங்கேதான் போவது? ஆகவே சர்க்கார் செலவில் பிரயாணத்தைச் செய்வதில் என்ன நஷ்டம். இன்று அம்மா இருந்திருந்தால்? பார்த்தவுடன் 'கலகல' வென்று கண்ணீரைக் கொட்டுவாள். வெந்நீர் போடுவாள். எனக்குப் பிடித்தமான பதார்த்தங்களை வாங்கி எனக்குப் பிடித்தபடி சமையல் செய்வாள். "வாரா வாரம், விடாமல் எண்ணெய் தேய்த்துக் கொண்டாயா?" என்று கேட்பாள். அது ஜெயிலில் சாத்தியமில்லை என்று தெரிந்தால், "ஐயோ, குழந்தையின் உடல் மிகவும் சூடாகியிருக்குமே" என்று கலங்குவாள். இத்தனைக்கும் அம்மாவுடன் நான் கலகலப்பாகப் பேசமாட்டேன். அவளும் அதிகம் பேசமாட்டாள். மௌனமாகத்தான் எந்தக் காரியத்தையும் செய்வாள். மிருகங்கள் ஊமைகள். ஆனாலும்அவற்றுக்கு இதயம் உண்டு. பார்க்கப்போனால் அவற்றிடம்தான் அதிகமான அன்பைக் காணலாம். பேசத் தெரியாத அவையே அப்படி என்றால், அம்மாவின் மௌனம் எவ்வளவு உயர்ந்தது! அப்பாவிடம்தான் அதிகம் பேசுவேன். சர்ச்சை செய்வேன். அவரும் என் வாயைக் கிளறுவதற்காகவே, சர்ச்சை செய்வார். நான் பல விஷயங்கள் கற்றுக்கொள்ள வேண்டும்; பல பரீட்சை களில் உயர்ந்த விகித மார்க்குகளுடன் தேறவேண்டும்; நல்ல உத்தியோகத்தில் அமரவேண்டும்; இவருடைய பையன் பெரிய உத்தியோகம் பார்க்கிறான் என்று பிறர் பெருமையுடனும், பொறாமையுடனும் இவரிடம் சொல்ல வேண்டும்; அதைக் கேட்டு இவர் சந்தோஷமடைய வேண்டும். நான் இவருக்குப் பெருமை தரும் அலங்காரப் பொருள். அலங்காரமாயும், பெருமை தரக்கூடியவனாயு மிருக்கும் வரையில்தான் நான் இவருக்குப் பிள்ளை.

இன்று நான் கைதியாக, சிறையிலிருந்து வெளி வருவது, அப்பாவுக்குப் பெருமையைத் தரக்கூடியதா யிருக்காது. அவர் தாம் தேடிச் சம்பாதித்து வைத்த கௌரவத்தைக் குலைக்க வந்தவனுகிவிட்டேன்; பெருமைக் குப் பதில் அவமானத்தை உண்டாக்கிவிட்டேன். நான் இப்படி ஆனதற்கு அவர் பலருக்குச் சமாதானம் சொல்ல வேண்டியிருக்கும். இது வேறு அடிக்கடி அவருக்கு மனக் கசப்பைக் கொடுத்துக்கொண்டிருக்கும். அம்மாவுக்கோ, நான் கலெக்டராலுைம் பிள்ளை தான், கைதியாலுைம் பிள்ளைதான்.

அம்மா இல்லாமல் அப்பாவிலுல் சிறிது நேரம்கூடச் சமாளித்துக்கொள்ள முடியாது. அவருடைய நோக்க மறிந்து, குறிப்பறிந்து, செய்வாள் அம்மா. இனி யார் அவருடைய நோக்கமறிந்து தேவைகளைப் புரிந்து கொண்டு பூர்த்தி செய்ய முற்படுவார்? என்னைவிட அப்பாதான் தாயில்லாக் குழந்தைபோல் தவிப்பார் என்பதை நினைக்கும்போது, அப்பாவிடம் சிறிது அனுதாபம் உண்டாயிற்று. அப்பா முன் கோபக்காரர். இனிக் கோபத்தை யார்மேல் அவர் காட்ட முடியும்? அவர் எப்படி அம்மாவின் மறைவைச் சமாளித்துக் கொள்கிருர் என்று பார்க்க விரும்பினேன். இல்லாது போனுல் இங்கு நான் வரவேண்டிய காரியமே இல்லை. அம்மா இருந்ததால், இந்த வீட்டில் எனக்கு ஓர் உரிமை இருந்தது. தகப்பன், மகன் இருவரையும் பிணைத்தது அம்மாதான். அம்மா இல்லாத வீட்டில், நாங்கள் ஒருவருக் கொருவர் அந்நியர்கள்தான். 'இங்கே ஏன் வந்தாய்?' என்று அப்பா அவமதிக்கவும் கூடும் என்பதையும், நான் எதிர்பார்க்காமல் இல்லை. இருந்தாலும், கடமை, பாசம், பழக்கம் எல்லாம் சேர்ந்து கொண்டு அப்பாவிடம் என்னை ஈர்த்தன.

பஸ்ஸில் வந்து இறங்கியதும், சில காங்கிரஸ் அன்பர்கள் என்னை அடையாளம் கண்டு கொண்டு

விட்டார்கள். "நடராஜ் விடுதலையாகி வருகிறார்போலிருக்கிறதே" என்றார் ஒருவர். "ஆமாண்டா, அவரேதான்" என்றார் மற்றொரு பேர்வழி. 'கிடுகிடு' என்று கூட்டம் கூடிவிட்டது. அதற்குள் ஒரு நண்பர் மாலையைத் தூக்கி வந்து கழுத்தில் போட்டார். 'மகாத்மா காந்திக்கு ஜே', 'பாரத மாதாவுக்கு ஜே'! என் கழுத்தில் மாலை விழுந்தாலும் அது மகாத்மா காந்திக்குப் போடப்பட்ட மாலைதான். நான் காந்தியின் சிறு சின்னம். அவர் தளபதியாயிருந்து நடத்தும் போராட்டத்தில், ஒரு சிறு சிப்பாய். "நான் திருநாவுக்கரசுக்கும் சக்திவேல் அண்ணனுக்கும் சொல்லிட்டு வர்றேன்" என்று ஒரு சிறுவன் சைக்கிளில் பறந்தான். அவர்கள் ஜில்லாக் கமிட்டியின் தலைவரும், காரியதரிசியும் ஆவார்கள். "அடுத்தாற்போல் என்ன செய்யப்போறீங்க?" என்று ஒரு நண்பர் கேட்டார். தேசத்தின் கதி என் கையிலிருப்பது போலத்தான். இந்த மரியாதை முழக்கம், கௌரவம் எல்லாம் அவர்களின் உணர்ச்சிக்குச் சின்னமாக இருந்ததால்தான், அவர்களுக்கு சத்யாக்கிரகத்தினிடமும் சத்யாக்ரகிகளிடமும் உள்ள மதிப்புத்தான் இவ்வளவு மரியாதைக்கும் காரணமாயிருந்தது. "நான் முதல்லே வீட்டுக்குப்போக வேண்டும். மற்ற விஷயங்கள் பிறகுதான் யோசனை செய்து முடிவு கட்ட வேண்டும்" என்று சொல்லிவிட்டு, ஒரு ஜட்கா வண்டியில் ஏறி வீட்டை நோக்கி வண்டியை விடச் சொன்னேன்.

ஜட்கா, வீட்டு வாசலில் நின்றது. அப்பா, வந்திருக்கிறது யார் என்று பார்க்க, நாற்காலியிலிருந்து எழுந்திருந்து வாசல் பக்கம் தலையை நீட்டினார். என்னைப் பார்த்ததுதான் தாமதம், ஓர் அதிர்ச்சி அடைந்தவர் போல் திடுக்கிட்டு நின்றார். மறுநிமிஷம் ஏதோ அருவருப்பு அடைந்தவர்போல் முகத்தைச் சுளித்துக்கொண்டு, வேறு பக்கம் திரும்பி, ஏதோ பத்திரிகையில் ஆழ்ந்திருப்பது

போல் பாசாங்கு செய்தார். இது நானும் எதிர்பார்த்தது தான். "வாடா" என்று பல்லைக்காட்டி வரவேற்க, அம்மா இல்லை. அம்மாதான் வீடு முழுவதும் நிரம்பிப்பொங்கி வழிந்து கொண்டிருந்தாள். இன்று வீடு சூன்யம். முகத்தைத் திருப்பிக்கொண்ட அப்பாவின் திருமுகத்தைப் பார்த்தாகிவிட்டது. நானும் என் உடலைத் திருப்பிக் கொண்டு திரும்ப வேண்டியதுதானே.

உள்ளே சென்றேன். சமையல் அறையில் எங்கள் தூரத்து உறவுக்காரப் பாட்டி சமையலுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறாள் போலும். காரியங்களைக் கவனித்துக்கொண்டிருந்தவள், என்னைப் பார்த்ததும், "என்னடா அம்பி, இப்பத்தான் வறியா. அம்மாவின் கடைசிக் காலத்திலே இல்லாமல் போயிட்டியே" என்ற குற்றச் சாட்டுடன் முகமன் கூறினாள். நான் ஒன்றும் சொல்லப் பிரியப்படாமல் வாசல் பக்கம் வந்தேன். நான் வந்த தகவல் தெரிந்து இராமலிங்கம் ஐயரும் வந்துவிட்டார்.

"என்னடா ராஜா, இப்பத்தான் வறியா? என்னிக்கு உனக்கு விடுதலை? எங்கிருந்து இப்போது வருகிறாய்?" என்று கேட்டார்.

"நேரே வேலூர்ச் சிறையிலிருந்து இங்கேதான் வறேன் மாமா" என்றேன்.

"நல்லபிள்ளை போ. நீ இப்படி மாறி விடுவாய் என்று நான் நினைக்கவே இல்லை. உன்னைப் பிள்ளை என்று பெற்றதற்கு நீ செய்யக்கூடிய கடமை ஒன்றுதான். அதைச் செய்ய உனக்குக் கொடுத்து வைக்கவில்லை. பெற்ற தாய்க்குச் செய்யவேண்டிய கடமையை உதறி விட்டுத் தேசத்துக்கு சேவை செய்யக் கிளம்பிட்டே. என்னத்தைச் சொல்வது" என்றார்.

"மாமா, உலகத்திலே நாம் ஒரு பொருளுக்கோ விஷயத்துக்கோ கொடுக்கும் மதிப்பு மனிதனுக்கு மனிதன்

மாறலாம். ஆனால் நிரந்தரமாகச் சில விஷயங்களுக்குத் தான் தனி மதிப்பு உண்டு. தாயின் சேவையைவிட, தாய்நாட்டின் சேவை பெரிதல்லவா?" என்றேன்.

"இதென்ன வாதம், தேசத்துக்கு எத்தனையோ சமயங்களில், எத்தனையோ விதங்களில், தொண்டு செய்யலாம். நீ தொண்டு செய்யாவிட்டாலும் தேசத்துக்கு ஒன்றும் நஷ்டம் இல்லை. இன்னும் கோடிக்கணக்கில் மக்கள் இருக்கிறார்கள். ஆனால், உன் அம்மாவுக்கு நீ ஒரே பிள்ளை. அந்த ஒரே பிள்ளையும் செய்யவேண்டிய அந்த ஒரு காரியத்தைச் செய்யத்தவறி விட்டாய். இனி அந்த சந்தர்ப்பம் வரப்போகிறதா?"

"சரி, மாமா. அப்படியே இருந்தாலும் அதற்கு ஒரு சமாதானமும் இருக்கிறது. விதுரர், திருதராஷ்டிர னுக்குச் சொன்னார்; அவசியம் ஏற்படும்பொழுது, ஒரு குடும்பத்தைக் காப்பதற்கு, ஒரு மனிதனைத் தியாகம் செய்யலாம். ஓர் ஊரைக் காப்பதற்கு ஒரு குடும்பத்தைத் தியாகம் செய்யலாம்; ஒரு தேசத்தைக் காப்பதற்கு ஓர் ஊரையே தியாகம் செய்யலாம். ஆத்மாவைக் காப்பதற்கு உலகத்தையே தியாகம் செய்யலாம். அப்படியிருக்க நான் செய்தது அவ்வளவு தவறான காரியம் என்று நினைக்க வில்லை" என்றேன்.

இதற்குள் திருநாவுக்கரசும், சக்திவேலும், இன்னும் நாலைந்து நண்பர்களும் வந்துவிட்டார்கள். சக்திவேல், ஒரு மாலையைக் கொண்டு வந்திருந்தார். என் கழுத்தில் விழுந்தவுடன், எல்லோரும் கைதட்டி 'வந்தேமாதரம்', 'பாரதமாதாவுக்கு ஜே', 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று கோஷம் செய்தனர். இந்த சப்தம் கேட்டவுடன் தெருவில் கும்பல் சேர்ந்து விட்டது.

இதுவரையில் பல்லைக்கடித்துக் கொண்டிருந்த அப்பாவுக்கு, அதற்கு மேல் தாங்கமுடியவில்லை. நல்ல வேளையாக ராமலிங்கையர் அங்கேயே இருந்தார். அவரைப் பார்த்தபடி, "ராமலிங்கம், இது வீடப்பா. அதுவும்

அரசாங்க உத்தியோகஸ்தன் வீடு. இது காங்கிரஸ் மண்டபம் இல்லை. இது என்ன கலாட்டா? போகச் சொல்லு, வெளியே" என்று வெறுப்புடன் சொன்னார்.

திருநாவுக்கரசும், சக்திவேலும் இந்த வார்த்தைகளைக் கேட்டு, பிரமித்து நின்றார்கள். அவர்கள் முகத்தில் ஈயாட வில்லை. நான் சொன்னேன், ராமலிங்கையரைப் பார்த்தபடி, "மாமா, வெகுநாள் ராஜவிசுவாசத்துடன் வேலை செய்தவருடைய பெயருக்கோ, பென்ஷனுக்கோ, ஆபத்து வேண்டாம். நான் கிளம்பிப்போகிறேன். பிறப்பு என்று யத்ருச்சையாக நேர்ந்த ஒரு தொடர்பைத் தவிர அவருக்கும் எனக்கும் என்ன இருக்கிறது? அவர் யாரோ, நான் யாரோ" என்று சொல்லிவிட்டு, "வாருங்கள்" என்று நண்பர்களை அழைத்தேன்.

அவர்கள் கிளம்பிக்கொண்டே "என்ன செய்யப் போகிறீர்கள்?" என்றார்கள்.

"எது வேண்டுமானாலும் செய்யலாம். இப்பொழுது, வீடு இல்லை. தாய் இல்லை, தகப்பன் இருந்தும், இல்லை. மனைவி இல்லை. தொழில் இல்லை. வெறும் ஆள். தேசத் தொண்டுக்குச் சரியான ஆள். சென்னையில் தீவிரமாக இயக்கம் நடந்துகொண்டிருக்கிறது. அங்கே போகலாம் என்று நினைக்கிறேன்."

"நாங்கள் இருக்கிறோம். எங்களுடன் இருந்து இரண்டு நாட்கள் ஓய்வெடுத்துக்கொண்டு, பிறகு போகலாமே" என்று, உள்ளன்புடன் சொன்னார் திருநாவுக்கரசு.

"சூட்டோடு சூடாகப் போவதே நல்லது. இன்றே கிளம்பிப்போகிறேன். சீக்கிரம் போனால்தான் இயக்கத்துக்கு உதவும்படியாக இருக்கும்."

அவர்களும் என்னை அன்புடன் வழி அனுப்பினார்கள். நேரே சென்னைக்கு வந்து சேர்ந்தேன்.

# 11

சென்னை வந்து சேர்ந்தேன். அப்பொழுது இயக்கத்தின் தலைமை அலுவலகம், உதயவனம் என்ற இடத்தில் இருந்தது. அங்கே போய்ச் சேர்ந்தேன். இயக்கத்தின் முழுவேகத்தையும், வலிமையையும் அங்கு நான் காண முடிந்தது. தமிழர்கள், மலையாளிகள், கன்னடர்கள், ஆந்திரர்கள், ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், ஆண்கள், பெண்கள். கிழவர்கள், சிறுவர்கள், பணக்காரர்கள், ஏழைகள் எல்லோரும் போட்டி போட்டுக் கொண்டு, சிறை செல்வதற்கும், அடிவாங்குவதற்கும் வந்து கொண்டிருந்தார்கள். தியாகம் செய்வதில் போட்டி. கஷ்டத்தை மேற்கொள்வதில் போட்டி. உலகத்திலே மனிதனை இயக்குவிக்கும் சக்தி சுயநலம்தான் என்ற சித்தாந்தம் எவ்வளவு தவறானது, அர்த்த மற்றது என்பதை நான் புரிந்து கொண்டேன். எவ்வளவுக் கெவ்வளவு மக்கள் சுயநலத்தை விடுகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு சமூகமும் தேசமும் முன்னடையும் என்பதையும் நான் அன்று கண்கூடாகக் கண்டு, புரிந்து கொண்டேன்.

என்னுடைய சேவையை சமர்ப்பித்தேன். ஆனால் என்னைப்போல், பலர் எனக்கு முன்பாக, தடியடிப் பிரசாதத்துக்குக் காத்துக் கொண்டு வரம் கிடந்தார்கள். ஆகவே, எனக்கு உடனே ஒரு சந்தர்ப்பம் கிடைக்காது போலிருந்தது. நான் சிறைக்குப்போய் ஆறு மாதம் இருந்து விட்டிருக்கிறேனே, அது ஓர் அத்தாட்சியாகி

விட்டதே நான் சத்யாக்கிரகி என்பதை ருசுப்படுத்த; இருந்தாலும் ஒன்றும், உடனே ஒப்பேருதுபோல் தோன்றியது. என்னுடைய படிப்பு முதலிய யோக்யதைகளைச் சிறிது விளம்பரப் படுத்திக் கொண்டேன். அங்கிருந்த ஒரு தலைவர் அப்போதும் உதட்டைப் பிதுக்கிவிட்டார். "இங்கே இருப்பவர்களுக்கே ஒன்றும் கொடுக்க முடியவில்லையே. மேலும் மேலும் ஆட்களைச் சேர்த்துக் கொண்டு போவதில் என்ன பிரயோசனம்? இன்னும் ஆறு மாதம் கழித்து வாருங்கள். அப்போதைய நிலைமையைக் கவனித்து உங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்க முடியுமா பார்க்கலாம்" என்று சொல்லிவிட்டார். நான் மிகவும் ஏமாற்றம் அடைந்து நின்றேன். அப்போது பக்கத்திலிருந்தவர், முன் பேசியவரிடம் சொன்னார்: "சேவா தளப் பயிற்சிக்கு வேண்டுமானால் அனுப்பலாமே" என்றார். அதைக்கேட்டதும், முதலில் பேசியவர், "ஆமாம், அது வேண்டுமானால் செய்யலாம்" என்று என்னை நோக்கி, "நீங்கள் பம்பாய் போகிறீர்களா? அங்கே சில யுவர்களை அனுப்புகிறோம். அங்கு ஹார்டிகர் சேவாதளம் ஒன்று நிறுவிப் பயிற்சி அளிக்கப்போகிறார். நீங்கள் சம்மதித்தால் உங்களையும் அனுப்புகிறோம்" என்றார். நான் மிகுந்த மகிழ்ச்சியுடன் சம்மதத்தைக் கொடுத்தேன். பம்பாயில் இருந்தால் பல மாபெரும் தலைவர்களைப் பார்க்கலாம், மகாத்மாஜியை அடிக்கடி பார்க்கலாம் என்பதே என் மகிழ்ச்சிக்கு முக்ய காரணம். நல்லவேளையாக, என் பெயரையும் பம்பாய் போகிற தொண்டர் வரிசையில் சேர்த்து விட்டார்கள். மூன்று நாட்களில் நாங்கள் பம்பாய்க்குக் கிளம்பிவிட்டோம்.

ஆனால் இந்தப் பயிற்சி எனக்கு ஒத்து வராதோ என்ற சந்தேகம் என் மனத்தில் எழுந்தது. நான் கல்லூரியில் இருக்கும்பொழுதே, விளையாட்டு, கசரத் முதலியவற்றில் கலந்து கொள்ளாதவன். ஆனால் இந்த சேவா

தளப் பயிற்சியை ராணுவ மோஸ்தரில் அமைத்திருக் கிறாராம். அணிவகுப்பு, உடற்பயிற்சி முதலியவற்றை இங்கே கருத்தோடு செய்யவேண்டும். பார்க்கப்போனால் அதுபோன்றவற்றுக்குத்தான் முக்கியத்துவம். தலைவர் களைப் பார்க்கும் ஆசையில் சிறுபிள்ளைத்தனமாக இதில் சேரச் சம்மதித்தோமே என்று என்னையே நொந்து கொண்டேன். சேர்ந்து அவமானப்பட்டு விடுவோமோ என்கிற பயம் உண்டாயிற்று. என்னுடன் வரும் சக நண்பர்கள் பயத்தை அதிகப்படுத்தினார்கள்.

"சேவாதளத்தின் தலைவர் மிகவும் கண்டிப்புக்காரர். ராணுவத்தின் முறைகளையே அநுசரிக்கப் போகிறார். ஒரே ஒரு வித்யாசம், இது அஹிம்சை சேனை. துப்பாக்கி கிடையாது. மற்ற எல்லாக் கஷ்டமான பயிற்சிகளும் உண்டு."

"ஹார்டிகர் கறார்ப் பேர்வழி. தயை தாட்சிண்யம் கிடையாது. சட்டதிட்டங்களில் இரும்புப்பிடி. உடலை வாட்டிப் பிழிந்து விடுவார்."

இப்படி ஒவ்வொன்றும் சொன்னதும், என்னுடைய அதைரியம்தான் அதிகமானது. "ஏன் இதில் போய் மாட்டிக்கொள்ள வேண்டும்; ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லி நழுவிக் கொண்டுவிடலாம்" என்றுகூட நினைத் தேன். இருந்தாலும் முன்வைத்த காலைப் பின்வைக்கப் படாதல்லவா? ஏன், இயன்ற வரையில், இதையும் செய்து பார்க்கலாகாது? ஏன் இதிலேயும் சிறிது வெற் றிப்பெறக் கூடாது? சோம்பேறித்தனத்தின் ஆட்சியில் தேகப்பயிற்சி வேண்டா வெறுப்பாகி விட்டது; ஏன் அதிலிருந்து விடுபட முயலக்கூடாது?" என்று என்னையே கடிந்து கொண்டேன்.

இந்த கோஷ்டியில், கிருஷ்ணமணி என்ற ஒருவரும் இருந்தார். சட்டக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந் தாராம், காந்தி குரல் கொடுத்தவுடன் 'காந்திக்கு ஜே'

என்று படிப்புக்கு முழுக்குப் போட்டுவிட்டுக் கிளம்பிவிட்டார். இவர் வக்கீலாகப் போகிறார் என்று நினைத்துக் கல்யாணம் செய்துகொடுக்கப்பட்ட பெண்ணையும், அப்பொழுதுதான் பிறந்திருந்த குழந்தையையும் (பிரசவத்துக்கு நல்லவேளையாக மனைவி பிறந்தகம் சென்றிருந்தாள்) மாமனார் வீட்டிலேயே விட்டுவிட்டு, பொது 'மாமனார் வீட்'டுக்குப் போகத் துடித்துக் கொண்டிருந்தார். 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று சொல்லும்பொழுதே அவருக்கு ஆவேசம் வந்துவிடும். ஆவேசம் வந்துவிட்டால், எதைச் செய்யவேண்டும், எதைச் செய்கிறோம் என்பதைச் சிந்திக்கக்கூட மாட்டார். பேச்சிலே கவர்ச்சி இருக்கும். அவருடன் பேசிக்கொண்டிருந்தால் ஆவேசத்துடன் பேசுவார் என்பதற்காகச் சிறிது குதர்க்கம்கூடச் செய்வேன்.

"என்ன மணி, பிறந்த குழந்தையையும், மனைவியையும் இப்படி விட்டு வரலாமா?" என்றேன்.

"என்னையா, நீர் மெத்தப் படித்தவர், இப்படிக் கேட்கிறீர். சித்தார்த்தன் என்ற ராஜகுமாரன், இப்படித்தான் செய்தான்; அவன் புத்தனாகி விட்டான்; ஆனால் அதே காரியத்தைச் செய்ததற்கு வெறும் பித்தன், காந்திப் பித்தன் ஆகிவிட்டேன். இவ்வளவுதானே."

"இல்லை மணி, குழந்தையையும், மனைவியையும் விட்டுத் தேசத்தொண்டு செய்யப் புறப்பட்டான் என்று சொல்ல மாட்டார்களா?"

"நீரும் நானும் எதைச் செய்தாலும் அதைக் குற்றம் என்றுதான் சொல்வார்கள். கொள்கையளவில் எந்த விஷயத்தையும் போற்றுவார்கள். ஆனால் வாழ்க்கையில் அந்த லட்சியத்தைக் கையாளும்பொழுது அதைப் புரிந்து கொள்ள மாட்டார்கள். 27 குழந்தைகளையும் மனைவியையும் பரிதவிக்கவிட்டுவிட்டு, குசேலஸ்வாமி பக்தி பண்ணிக்

கொண்டிருந்தார். அவர் பக்தன்; நாம் எல்லோரும் பொறுப்பு இல்லாத தொண்டர்கள்!''

"இன்னும் ஆறு மாதம் படித்திருந்தால் சட்டப் பரீட்சை கொடுத்திருக்கலாமல்லவா? ஏன் அதற்குள் அவசரப் பட்டுவிட்டீர்கள்?''

"இங்கிலாந்திலே சட்டக் கல்லூரியில் ஒரு பேராசிரியர் சட்டத்தில் ஒரு பாடத்தை விளக்கிக் கொண்டிருந்தாராம். ஒரு விஷயத்தைப் பற்றிச் சொல்லும்பொழுது, சட்டரீதியாக இது சரிதான் என்றாராம். அது ஒரு மாணவருக்கு ஒப்பவில்லை. 'ஐயா, நீங்கள் கூறுவது தருமத்தின்படி இல்லை போலிருக்கிறதே' என்றாராம். பேராசிரியர் மாணவரை நோக்கி, 'இளம் நண்பரே, நீர் சொல்வது உண்மைதான். ஆனால், நாங்கள் இங்கே சட்டத்தைத் தான் சொல்லிக் கொடுக்கிறோம். தருமத்தைப் பற்றிக் கற்க வேண்டுமானால், நீர் அந்தக் கல்லூரிக்குப் போக வேண்டும், என்று, எதிரேயிருந்த மதபோதகர்கள் படிக்கும் சமயதத்துவக் கல்லூரியைக் காட்டினாராம். அது போலவே, எனக்கும் தோன்றியது; சட்டத்தைப் படித்தவர் சட்டத்தை எதிர்க்கிறாரே, இவரிடம் படிப்பதுதான் சிறந்தது என்ற முடிவுக்கு வந்தேன். இவர் பாடத்தில் தான் கடவுளின் சட்டமும், மனிதனின் சட்டமும் ஒன்றாக, ஒன்றுக்கொன்று முரண்பாடு இல்லாமல், இணைந்து நிற்கின்றன என்று எனக்குப் பட்டது'' என்றார்.

அடே, இவர் பெரிய ஆளாக இருப்பார் போலிருக்கிறதே என்று நான் உள்ளூர வியந்து கொண்டேன்.

இப்படியெல்லாம் பேசிக்கொண்டிருப்பார் கிருஷ்ணமணி. ஆங்கில அரசாங்கத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் ஆவேசம் வந்துவிடும். வெள்ளைக்காரன் என்று நினைத்து நம்மையே அடித்துவிடுவாரோ என்று எதிரில்

இருப்பவர்களுக்குத் தோன்றும். அவருடன் பழகுவதே ஓர் அதிசய அனுபவம்தான்.

சேவாதளத்தின் பயிற்சி நடந்து கொண்டிருந்தது. ராணுவப் பயிற்சியைப் போலவே, அணிவகுத்தல், உடற் பயிற்சி, டிரில் முதலியவையும் இருந்தன. நானும் ஏதோ ஒருமாதிரியாக இவற்றையெல்லாம் செய்யப் பழகிக் கொண்டேன். ரொம்பவும் மோசம், ஒன்றுக்கும் உப யோகமில்லை என்ற பெயர் வாங்காமல், தப்பித்துக் கொண்டேன். நான் எதை நினைத்து வந்தேனே, அதுவும் பூர்த்தியாகி வந்தது. பெரிய தலைவர்கள் நகருக்கு வந்தால், சேவாதளத்தைப் பார்வையிட வருவார்கள். அப் பொழுது, அந்தத் தலைவர்களுக்கு நாங்கள் அணிவகுத்து நின்று மரியாதை செய்வோம். ஹார்டிகர், தலைவர்களை அழைத்துவந்து எங்கள் படையைச் சுற்றிக் காண்பிப் பார். ஜவாஹர்லால் நேரு, வல்லப்பாய் படேல், சுபாஷ் போஸ் போன்ற தலைவர்கள் வந்து எங்களைப் பார்வை யிட்டுச் சென்றனர். அது எங்களுக்கு மிகுந்த உற்சாகத் தையும் ஆர்வத்தையும் தூண்டிவிட்டது. ஆனால் இதற் கெல்லாம் சிகரம் வைத்தாற்போல், மகாத்மா காந்தியே, எங்கள் படையைப் பார்வையிடுவதாக ஏற்பாடு செய்யப் பட்டது. எனக்கும், கிருஷ்ணமணிக்கும், ஏனைய தொண்டர்களுக்கும் மகிழ்ச்சி சொல்ல முடியாதபடி ஆகி விட்டது. நாங்கள் இங்கு வந்ததற்கு இது ஒன்று போதுமே என்று நினைத்தோம். கிருஷ்ணமணியோ, மகாத்மாவைப் பார்ப்பதே, தாம் பெற்ற பிறவியின் பயன் என்று எண்ணி, அப்படிப்பட்ட சந்தர்ப்பம் இவ்வளவு சீக்கிரத்தில் கிடைக்கப் போகிறதே என்று மகிழ்ச்சி பொங்கிக் கிடந்தார். "நடராஜ், புராணங்களில் கடவுள் ராமராகவும், கிருஷ்ணனாகவும் அவதரித்திருக்கிறார் என்று படித்திருக்கிறோம். ஆனால், இந்த அவதார புருஷன் கடவுள்தான் என்று எல்லோருமே தெரிந்து

கொள்ளவில்லை. சில பெரியார்கள் — அநேக ரிஷிகளும் தான் — அவர்களுடைய கடவுள் தன்மையைக் கண்டு வழிபட்டு வணங்கி நின்றார்கள் என்று படித்திருக்கிறோம். புராண காலத்துக்குப் பிறகு இந்தக் கலியுகத்திலே, வெள்ளைக்காரன் ஆட்சியிலே, கடவுளையே கண்கூடாகக் காணும் பேறு நமக்குத்தான் கிட்டியிருக்கிறது. அந்தக் காலத்து ரிஷிகள் எவ்வளவோ தபசினாலும் பக்தியினாலும், மனித உருவில் வந்த கடவுளைக் கண்டு கொண்டார்கள். நாம், சில குண்டாந் தடியாலும், சிறைவாசத்தினாலும் அத்தகைய பாக்யத்தை அடைகிறோம்" என்று பூரித்தார்.

குறித்த தினம் வந்தது. காலையில் நாங்கள் அணி வகுத்து நின்றோம். குறிப்பிட்ட நேரத்தில் மகாத்மாஜி வந்து விட்டார். ஹார்டிகர், மகாத்மாவை அழைத்துக் கொண்டு, ஒவ்வொரு வரிசையாகப் பார்வையிட்டு வந்தார். தொண்டர்கள் விறைப்பாக நிற்கவேண்டும் என்பது சம்பிரதாயம். அதன்படி எல்லோரும் நின்று கொண்டிருந்தோம். கிருஷ்ணமணி எனக்கு அப்பால் நாலைந்து பேர்களுக்குப் பிறகு நின்று கொண்டிருந்தார். பாபுஜி எங்கள் வரிசைக்கு வந்துவிட்டார். ஒவ்வொரு வராகப் பார்வையிட்டு வந்தார். நான் ரொம்ப ஜாக்கிரதையாக எவ்வளவு விறைப்பாக நிற்கமுடியுமோ, அப்படி நின்று கொண்டிருந்தேன். காந்திஜியும், ஹார்டிகரும் என்னைத் தாண்டிக் கிருஷ்ணமணியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள். கிருஷ்ணமணியின் அருகில் வந்ததும்,கிருஷ்ணமணி ஆவேசம் வந்தவர்போல் காந்திஜியின் காலடியில் விழுந்தார். வாயிலிருந்து வார்த்தை வரவில்லை. கண்ணிலிருந்து நீர் தாரை தாரையாகக் கொட்டிக் கொண்டிருந்தது. ஹார்டிகர் அவரைக் கோபத்துடன் எரித்து விடுவதுபோல் பார்த்தார். ஆனால் கிருஷ்ணமணி, இந்த உலகத்தில் இருந்தால்தானே ; ஒரு நிமிஷம்தான். கிருஷ்ணமணிக்குச் சுய நினைவு வந்தது. எழுந்திருந்து

எல்லோரையும்போல் நின்று கொண்டார். ஹார்டிகரும், காந்திஜியும் மற்ற வரிசைகளையும் பார்த்துவிட்டு, மேடைக்குச் சென்றார்கள். மகாத்மாவை இரண்டு வார்த்தைகள் சொல்லும்படி கேட்டுக் கொண்டார் ஹார்டிகர். மகாத்மாஜி பேசினார்; கிருஷ்ணமணியை மனத்தில் வைத்துக் கொண்டே பேசினாரோ என்று தோன்றியது.

அவர் சொன்னார்; "உங்களைப் பார்ப்பதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன். அரசாங்கத்திடம் ராணுவம் இருக்கிறது. ஆனால் அது வன்முறையில் இயங்குகிறது. உங்களுக்கு அஹிம்சையின் பலம் இருக்கிறது. ஆனால் இரண்டுக்கும் கட்டுப்பாடு அவசியம். கட்டுப்பாடும் ஒழுங்கும் இல்லாத சேனை, கரையில்லாத நதியைப் போலத்தான், பிறரையும் அழித்துத் தானும் அழியும். தனி மனிதனின் வளர்ச்சிக்குக்கூட, கட்டுப்பாடு இன்றியமையாதது. உணர்ச்சிவசப்பட்டவன் அறிவை இழந்தவனாகிறான். ஆகவே, உடலையும், உள்ளத்தையும், அறிவையும், கட்டுப் படுத்துவதனால்தான் நாம் வளர முடியும்.

"அஹிம்சா தத்துவத்தைப் பிறருக்குப் போதிக்க முடியாது. அதை ஒவ்வொருவரும் அனுபவத்தில்தான் உணர முடியும். வன்முறையில் நடந்து வரும் ராணுவத்தின் பாடங்களைக் கற்பதற்குப் பல வசதிகள் இருக்கின்றன. சுடுவதை எடுத்துக் கொண்டால், முதலில் குறியைச் சுடவேண்டும். பிறகு மிருகங்கள்மேல் குண்டு போடவேண்டும். பிறகு கொலைத் தொழிலையும் செய்து சிறந்தவர்கள் என்று சிலாகிக்கப்பட வேண்டும். ஆனால் அஹிம்சா ராணுவத்துக்கு ஆயுத பலம் கிடையாது. அதற்கு ஆத்ம பலம்தான் ஆயுதம்.

"ஆனால் அஹிம்சையில் பல சூக்ஷ்மங்கள் இருக்கின்றன. நான் மிகவும் இனிமையாகப் பேசிவிடலாம்; ஆனால் உள்ளத்திலே, சிறிதும் அன்பில்லாமல் இருக்கும்.

அன்பு ததும்பும் உள்ளத்தைக் கொண்டிருக்கலாம்; ஆனால் பேச்சிலும் நடத்தையிலும் கடுமை இருக்கலாம். அஹிம்சையைப் பூரணமாக அனுசரிப்பவனிடம் உள்ளும் புறமும் வேறுபட்டிருக்க முடியாது. ஆகவே, மனம், வாக்கு, காயம் மூன்றிலும் அஹிம்சையைப் பின்பற்ற வேண்டும். பிறரை அடக்க முன்வருபவன், தன்னை முதலில் அடக்கத் தெரிந்துகொள்ள வேண்டும்" என்றார். அது கிருஷ்ணமணிக்கே சொன்னது போலிருந்தது.

அணிவகுப்புக் கலைந்ததும், ஹார்டிகர் கிருஷ்ணமணியை அழைத்துவரச் சொன்னார். நல்ல தண்டனை கிடைக்கப் போகிறது என்பதை முன்கூட்டியே முடிவு கட்டிவிட்டோம். சிறிது நேரத்தில் கிருஷ்ணமணி வந்துவிட்டார். "என்ன நடந்தது?" என்று கேட்டேன்.

"நான் காந்தியின் காலில் விழுந்தது, சேவாதளப் பயிற்சிக் கட்டுப்பாட்டுக்கு முரணானதே என்று கோபித்துக்கொண்டார். நான் சொன்னேன், 'என்ன செய்வது காப்டென்ஜி. அந்த மகாபுருஷர் அருகில் வந்ததும், என்னை அறியாமல் விழுந்துவிட்டேன். இனி ஒரு தரம் வந்தாலும் நான் விழமாட்டேன் என்று சொல்வதற்கில்லை' என்று உண்மையைச் சொன்னேன்." என்று அவர் சொன்னார்.

"நீ ஒரு தொண்டன். உனக்குத்தான் மகாத்மாவிடம் பக்தியும், மதிப்பும்; மற்றவர்களுக்கெல்லாம் இல்லையா? எல்லோருக்கும் உன்னைப் போலவே அவை இருக்கின்றன. ஆனால், மற்றவர்களிடம், அடக்கம் இருக்கிறது; கட்டுப்பாடு இருக்கிறது. நீயோ உன் உணர்ச்சியைப் பகிரங்கப் படுத்தி, கேலிக் கூத்தாக்கிவிட்டாய். சேவாதளத்துக்கு அவமானத்தை உண்டுபண்ணிவிட்டாய்" என்று ஹார்டிகர் சொல்லியிருக்கிறார்.

கிருஷ்ணமணி பதில் பேசவில்லையாம்.

“ நாளைக் காலை 9 மணியிலிருந்து 12 மணி வரையில் வெயிலில் நிற்கவேண்டியது என்று தண்டனையையும் கொடுத்துவிட்டார் ” என்று என்னிடம் கிருஷ்ணமணி சொன்னார்.

“ இதோடு விட்டாரே ? ” என்றேன்.

“ காந்திஜி காலில் விழுவதற்குத் தண்டனையா ? இல்லை, காணிக்கை. அவர் காலில் விழுவதற்கு எந்தக் காணிக்கையையும் கொடுக்கத் தயார் ” என்று சிரித்துக் கொண்டே அவர் சொன்னார்.

“ ஐயா காந்தி பக்தரே, மற்றொரு பக்தசிகாமணி சொன்னது ஞாபகம் வருகிறது. கேளும் ; துகாராம் சொன்னாராம் : ‘ கடவுளைக் காண்பதற்கு நான் எந்த அதர்மத்தையும் புரிவேன் ’ என்று. எப்படி ? ”

“ ஆம், நடராஜ் ; கடவுளையும் பக்தியையும், எந்தச் சட்டமும், எந்தத் திட்டமும், எந்தக் கட்டுப்பாடும் கட்டுப் படுத்தவே முடியாது ” என்றார் கிருஷ்ணமணி.

# 12

எங்கள் பயிற்சிக்காலம் முடிந்தது. எல்லோரையும் அவர்களின் பிராந்தியத்திற்குப் போகச் சொல்லிவிட்டார்கள். வெகு சிலரை மாத்திரம் அங்கேயே நிறுத்திவைத்துக் கொண்டார்கள். அந்தச் சிலரில் நானும், கிருஷ்ண மணியும் இடம் பெற்றோம். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, சமீபத்தில் கூடுவதாயிருந்தது. மகாத்மா காந்தி, காரியக் கமிட்டி நடக்கும் முன்பே பம்பாய் வந்து சில நாட்கள் தங்கப் போவதாகச் செய்தி வந்தது. இதையெல்லாம் உத்தேசித்துத்தான் சில தொண்டர்கள் வேண்டியிருக்கும் என்று நிறுத்தி வைத்துக் கொண்டார்கள்.

இதை எங்களுடைய அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். கிருஷ்ணமணிக்கு ஹிந்தி நன்றாக வரும். நானும் சிறிதளவு பேசக் கற்றுக் கொண்டேன். அங்கு இருக்கும் வாய்ப்புக் கிடைத்ததை, ஹிந்தி அறிவைப் பெருக்கிக்கொள்ள தக்க வாய்ப்பாகக் கருதினேன். ஹிந்தி அரிச்சுவடி, பாலபாடம் இவற்றை வைத்துக்கொண்டு பாடம் படிக்க ஆரம்பித்துவிட்டேன். ஸம்ஸ்கிருதத்தில் நல்ல பரிசயம் இருந்தபடியால், ஹிந்தி கற்றுக்கொள்வது சிரமமாக இல்லை. அன்றாட நடைமுறையில் எல்லோராலும் ஹிந்தியே பேசப்பட்டு வந்ததால், அதைப் புரிந்து கொள்ளவும் பதிலுக்கு ஓரிரு வார்த்தைகள் திருப்பிப் பேசவும் ஓர் அவசியம் ஏற்பட்டது. படிப்படியாக என் ஹிந்தி அறிவு வளரத்தொடங்கியது.

மகாத்மாஜி, எதிர்பார்த்த தினத்திலேயே வந்து சேர்ந்தார். அவருக்கு ஜாகை, ஒரு பெரிய தேசபக்தரின் மாளிகையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மகாத்மாஜீ வந்துவிட்டால், நிர்வாகிகளை மிகவும் தொந்தரவு செய்யும் விஷயம், அவருடைய தரிசனத்துக்கு வந்து சேரும் ஜனங்களைச் சமாளிப்பதே. பொதுவாக நம் நாட்டு மக்களுக்குத் தங்கள் உள்ளத்தைக்கவர்ந்த தலைவர்களிடம் ஓர் ஒப்பற்ற அபிமானம் (Hero Worship) ஏற்படுவது வழக்கம். அந்தத் தலைவர்களைத் தெய்வமாகவே வழிபடும் அளவுக்கு ஒரு வெறி வந்துவிடுகிறது. அதற்கேற்றாற் போல அதிகமான பண்பாடு உடையவர்களைக் கடவுளின் அவதாரம் என்று வழிபடுவதும் நமது மரபு. ஆகவே, மகாத்மாஜி போன்ற தலைவர்கள் வந்துவிட்டால், மக்களின் உணர்ச்சி கடல் போல் கொந்தளித்துக்கிளம்பி விடுவது இயல்பானதே. எவ்வளவோ ஆயிரம் ஆயிரம் வருஷங்களுக்கொருதரம் மகாத்மாக்கள் தோன்று கிறார்கள். அப்படிப்பட்டவர்களிடம் ஏதோ அமானுஷ்ய மான சக்தி இருப்பதால்தானே, லட்சக்கணக்கான — கோடிக்கணக்கான — மக்களின் இதயத்தில் அவர்கள் ஆட்சி செய்யமுடிகிறது. மகாத்மாஜியோ, அவருடைய லட்சியம், வாழ்க்கை எல்லாவற்றையும் உயரத் தூக்கி, தாமும் வெகு தூரம் உயர்ந்து, தம்மைப் பின்பற்றுபவர் களையும், அதுபோலவே உயர்த்திய அசாதாரண மனிதரல்லவா? ஆகவே அவரைக் காணவேண்டும், அவர் பேச்சைக் கேட்கவேண்டும், அவர் அருகில் சிறிது நேரம் இருக்கவேண்டும் என்று ஜனங்கள் விரும்பியதில் சிறிதேனும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை ஆகவே, இப்படிப்பட்ட ஜனங்களை எப்படிச் சமாளிப்பது, எப்படித் திருப்தி செய்வது என்பது நிர்வாகிகளுக்கு ஒரு பெரும் தலைவலி.

தவிரவும் மகாத்மாஜி, மதகுருவாகவோ, அல்லது துறவு பூண்ட சமயாச்சாரியராகவோ இருந்தால்,

அவருக்கு நேரம் இருக்கும். பார்க்க வருபவர்களுக்கும் சந்தர்ப்பம் இருக்கும். மகாத்மாவோ, மாபெரும் தலைவர் களுக்கு ஆலோசனை சொல்லவேண்டும். நிருபர் கூட்டங் களில் கேள்விக்கும் பதில் சொல்லியாகவேண்டும். வெளி நாட்டுப் பிரமுகர்களுக்கும் பத்திரிகையாளர்களுக்கும் பேட்டியளிக்க வேண்டும். பொதுக் கூட்டங்களுக்குப் போய்த்தீர வேண்டும். காரியக் கமிட்டிகள், அந்தரங்கக் கூட்டங்கள் இவற்றில் கலந்துகொள்ளவேண்டும். நூல் நூற்றாகவேண்டும். பிரார்த்தனை செய்தாக வேண்டும். 'யங் இந்தியா'வுக்குக் கட்டுரைகள் எழுதியாகவேண்டும். இவற்றைத் தவிர, சாப்பாடு, தூக்கம், இயற்கைக் கடன் கள் முதலிய ஜீவாதாரமான காரியங்களுக்கும் நேரம் வகுத் துக்கொடுத்தாக வேண்டும். ஆனால், ஒரு நாளில் இருப்பது இருபத்துநாலு மணி நேரம்தானே. அதை நீட்டவோ, குறைக்கவோ நம்மால் முடியாதே. ஆகவே, மகாத்மாவின் காலத்தைப் பங்கு போடுவதிலும் நிர்வாகிகளுக்கு மிகுந்த சிரமம் ஏற்படும்.

மகாத்மாஜி, இப்பொழுது வருவது, தேசத்தின் பிற்காலத்தைப் பாதிக்கும், முக்கிய திட்டங்களையும், தீர்மானங்களையும், பல தலைவர்களுடன் விவாதித்துப் பரிசீலனை செய்வதற்காகத்தான். ஆகவே, மகாத்மாவுக்குப் பொதுமக்களால் அதிகத் தொந்தரவு இருக்கக்கூடாதே, அவருடைய அருமையான நேரத்தை வீணாக்கிவிடக் கூடாதே என்று நிர்வாகிகள் கவலைப்பட்டதில் புதுமை ஒன்றும் இல்லை.

மகாத்மாஜி தங்கியிருந்த அறைக்கு, முன்புறம் ஒரு கூடமிருந்தது. அந்தக் கூடத்துக்கு முன்பாக ஒரு வாசற்படி. அந்த வாசலுக்கு முன்புறம் என்னையும், கிருஷ்ணமணியையும் துவாரபாலர்கள் போல் நிறுத்தி வைத்தார்கள். பல தலைவர்களுக்கு பேட்ஜ் கொடுக்கப் பட்டிருந்தது. வேறு சிலருக்கு அனுமதிச் சீட்டுக் கொடுக்

கப்பட்டிருந்தது. இவர்களைத்தான் நாங்கள் உள்ளே அனுமதிக்கலாம் என்று உத்தரவு. வேறு யாராவது வர வேண்டுமானால், நிர்வாகிகளில் ஒருவரோ பியாரேலாலோ அனுமதி கொடுப்பாரானால், உள்ளே அனுப்பலாம். வேறு ஒருவரையும் அனுமதிக்கக்கூடாது என்று கண்டிப்பான உத்தரவு. எங்களுக்கு உதவி செய்யுமாறு சில தொண்டர்களையும் கொடுத்திருந்தார்கள். ஆனால் நானும் கிருஷ்ண மணியும்தான் இதற்குப் பொறுப்பாளிகள்.

பொதுவாக, யாவரும் இதற்கு உட்பட்டுத்தான் நடப்பார்கள். ஆனால் உலகம் பலவிதம் அல்லவா? மனிதர்களில் எத்தனை வேறுபாடுகள்! யாராவது ஒரு மனிதர், இந்த முறையை ஆட்சேபிப்பார். 'இந்த முறையை யார் ஏற்படுத்தியது? அவருக்கு இதற்கு யார் அதிகாரம் கொடுத்தது? பாபுஜியின் அனுமதி இந்தக் கட்டுப்பாட்டுக்கு உண்டா?' என்ற பெரிய சட்டப் பிரச்சனைகளைக் கொண்டுவருவார். வேறு ஒருவர், 'யார் ஐயா நீ, என்னை நிறுத்துவதற்கு? நான் யார் தெரியுமா? உங்க நிர்வாகியைப்போல நூறு பேரை வேலை வாங்கியிருக்கிறேன்' என்று தமது பிரதாபத்தைத் தாமே மெச்சிக் கொண்டிருப்பார். மற்றொருவருக்கு நாங்கள் இருப்பதாகவே கண்ணில் படாது. நிறுத்தினாலும், 'அட, சை' என்று உதறி எறிந்துவிட்டு உள்ளே போகப் பார்ப்பார். இன்னொருவர், 'இங்கெல்லாம் மிகவும் கண்டிப்பாக இருக்கக்கூடாது. மனிதர்களைப் பார்த்து நீங்கள் அனுப்பலாம். இருபது வருஷமாக பாபுவின் சிநேகிதன் நான். என்னைப்போல் உள்ளவர்களை அனுப்பினால் ஒன்றும் மோசம் போய்விடாது' என்று உபதேசிப்பார். 'தயவு செய்து என்னை உள்ளே விட்டுவிடுங்கள். ஒருவருக்கும் தெரியாமல், ஒரு நிமிஷம் மகாத்மாவைத் தரிசனம் செய்து விட்டு, போன சுவடு தெரியாமல் வந்துவிடுகிறேன். உங்களுக்கு ஒரு தொந்தரவும் வராதபடி பார்த்துக்

கொள்கிறேன்' என்று கெஞ்சுவார். ஒருவர் இப்படிப் பலதரப்பட்ட மனிதர்களைச் சமாளிக்க வேண்டும்.

நல்லவேளையாக முதல் இரண்டு நாட்களிலும் அசந்தர்ப்பம் ஒன்றும் ஏற்படவில்லை. எல்லாம் ஒழுங்காக நடந்து வந்தது. மூன்றும் நாள் பிற்பகல் மூன்று மணி இருக்கும். மகாத்மாஜி, நேரு, வல்லபபாய் படேல், ராஜாஜி, ராஜேந்திரப்பிரசாத் எல்லோரும் தீவிரமாக ஏதோ விஷயத்தை விவாதித்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது ஏழெட்டுப் பெண்மணிகள், நாங்கள் இருக்கும் பக்கம் நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். நாங்கள் இருப்பதைக் கவனித்தோ, கவனிக்காமலோ உள்ளே போக முயன்றனர். நாங்கள் அவர்களை மரியாதை யுடன் கும்பிட்டு, உள்ளே போகக்கூடாது என்று தடுத்தோம்.

"நாங்கள் மகாத்மாவைப் பார்க்க வந்திருக்கிறோம்."

"தாய்மார்களே, பாபுஜி பெரிய தலைவர்களுடன் ஏதோ முக்கிய விஷயங்கள் பேசிக்கொண்டிருக்கிறார். இப்பொழுது அவரைப் பார்க்க சந்தர்ப்பம் இல்லை. தயவு செய்து போய்விடுங்கள்" என்று வேண்டிக்கொண் டோம். வந்தவர்கள் பெரிய இடத்துச் சீமாட்டிகள். நாங்கள் சொல்வதை அவ்வளவு சிக்கிரத்தில் கேட்டு விடுவார்களா? ஒரு பெரிய மாது சொன்னாள்: "என்ன ஐயா, நீங்கள் சொல்வது? தலைவர்களுக்குத்தான் மகாத்மா உரிமையோ? எங்களுக்கெல்லாம் மகாத்மா வைக் காட்டவே கூடாதோ?" என்று கோபித்துக் கொண்டாள்

"அப்படியில்லை. இப்பொழுது அவர்களைத் தொந்தரவு செய்யக்கூடாது; நீங்கள் மகாத்மாவைப் பார்க்கவேண்டுமானால், இன்று மாலை சௌபாத்தியில் ஒரு பெரிய பொதுக்கூட்டம் நடக்கிறது. அங்கே போய்ப் பாருங்கள்" என்றார் கிருஷ்ணமணி.

"அங்கே மகாத்மாவை தூர திருஷ்டிக் கண்ணுடி வைத்துப் பார்க்கவேண்டும். நாங்கள் இங்கேதான் பார்க்க விரும்புகிறோம்."

"அது முடியாது, அம்மா. தயவு செய்து தொந்தரவு செய்யாதீர்கள்."

"தொந்தரவா? நீங்கள்தான் எங்களை உள்ளே போக விடாமல் தொந்தரவு கொடுத்துக்கொண்டிருக்கிறீர்கள். சாமி வரம் கொடுத்தாலும், பூசாரி வரம் கொடுக்கவில்லை என்ற கதையாக இருக்கிறதே. நாங்கள் மகாத்மாவைப் பார்க்காமல் இருக்க மாட்டோம்" என்று சொல்லிக் கொண்டு, எங்களை மீறி உள்ளே புக யத்தனித்தார்கள். நாங்கள் அதைத் தடுக்கும் முயற்சியில் கதவை அடைக்க முயன்றோம். அவர்கள் கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே புக யத்தனித்தார்கள். இதற்கிடையில், எங்களுக்கு உதவிக்காயிருந்த சில தொண்டர்கள் எங்கள் உதவிக்கு வந்தனர். அதில் ஒரு பையன், சிறிது உள்ளே காலடி வைத்த ஒரு பெண்மணியைப் பிடித்துத் தள்ளிவிட்டான். அவ்வளவுதான். அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து கூக்குரலிட ஆரம்பித்தனர். தொண்டர்கள், மரியாதைக் குறைவாக நடந்துகொண்டதாகக் கூச்சல் போட ஆரம்பித்தனர். இந்தக் கூக்குரல், உள்ளேயிருந்த தலைவர்களுக்கும், மகாத்மாவிற்கும் காதில் பட்டுவிட்டது. முக்கிய நிர்வாகி வந்து என்னவென்று விசாரித்தார். விஷயத்தை அறிந்துகொண்டவுடன், அவர்களை வணங்கி, "பாபுஜி ஒரு முக்கியமான காரியத்தில் ஈடுபட்டிருக்கிறார். ஆகையால், இப்பொழுது அவரைக் காணமுடியாது. ஆனால் மாலைக் கூட்டத்தில் மேடைக்குப் பக்கத்தில் முக்யமானவர்களுக்கு இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு அனுமதிச்சீட்டுத் தருகிறேன். மகாத்மாவையும் பார்க்கலாம்; பல தலைவர்களையும் பார்க்கலாம்; கூட்டத்தையும் பார்க்கலாம். ஓர் அரிய சந்தர்ப்பம்" என்று

சொன்னார். அவர்களும் அதற்குச் சம்மதித்து அனுமதிச் சீட்டை வாங்கிக்கொண்டு சென்றார்கள்.

"நான் சொன்னேன், 'பீச்சில் பாருங்கள்' என்று; அவர்கள் கேட்கவில்லை. இப்பொழுது சரி என்கிறார்கள்" என்றார் கிருஷ்ணமணி.

"இப்பொழுது பக்கத்தில் உட்கார அனுமதிச் சீட்டுடன் அல்லவா போகிறார்கள்" என்றேன்.

"அதுசரி, நடராஜ். இவர்கள் போட்ட கூக்குரலுக்கு மேல் விசாரணை இல்லாமல் இருக்கவேண்டுமே" என்றார் கிருஷ்ணமணி.

"அதுதான் எனக்கும் 'வெதக்கு', 'வெதக்கு' என்று உள்ளுக்குள் உதைத்துக்கொண்டிருக்கிறது" என்றேன்.

சொல்லிவைத்தாற்போல், அன்று இரவு மகாத்மாவிடமிருந்து எங்களுக்கு அழைப்பு வந்துவிட்டது. தூக்கு மேடைக்குச் செல்லும் கைதியைப்போல நடுநடுங்கிக் கொண்டு அவர்முன் போய் நின்றோம். ஆனால் மகாத்மாவின் முகத்தில் தவழ்ந்த புன்னகை ஓரளவு எங்களுக்கு தைரியத்தைக் கொடுத்தது. பொக்கை வாயைக் காட்டியபடி அவர் சொன்னார்: "என்ன, வருங்காலத்தில் தேசத்தைக் காக்கப்போகும் சிப்பாய்களே, உங்கள் வீரம், ஸ்திரீ ஸாகசத்துக்கு முன்பு தவிடுபொடியாகிவிட்டது போலிருக்கிறதே" என்றார். அவமானமாயிருந்தாலும் எங்களாலும் சிரிக்காமல் இருக்கமுடியவில்லை.

"இல்லை பாபுஜி, அவர்கள்தான் அத்துமீறி நடந்து கொண்டார்கள்" என்றார் கிருஷ்ணமணி.

"மகாத்மாஜி, இது ஒரு சட்டம் ஒழுங்குப் பிரச்னை. நாங்கள் செய்ததில் தவறு ஒன்றுமில்லை" என்றேன் நான்.

"இந்த இளம் நண்பர், போலீஸ் பாஷையிலும், அரசாங்க தோரணையிலுமல்லவா பேசுகிருர்; மந்திரி சபைக்கு லாயக்கானவர்" என்று சிரித்தார் அண்ணல்.

"இல்லை, பாபுஜி, சட்டமும் ஒழுங்கும் பற்றியமட்டும் போலீஸ் படையாயிருந்தால் என்ன, சேவாதளமாயிருந்தால் என்ன, பிரச்னை ஒன்றுதானே" என்றேன்.

"ஒரே ஒரு வித்யாசம்தான். ஹிம்சைக்கும் அஹிம்சைக்கும் உள்ள வித்யாசம்" என்று முறுவலித்தார் மகாத்மாஜி.

"சரி, பாபுஜி; அந்த ஸ்திரீகள், நாங்கள் தடுப்பதையும் மீறி உள்ளே நுழைந்தது அஹிம்சையா, பலாத்காரமா? அப்படிக் கட்டுப்பாட்டை மீறி உள்ளே நுழைவதை அஹிம்சை முறையில் எப்படித் தடுக்க முடியும்?" என்றேன் நான்.

"எந்தப் பிரச்னைக்கும் அஹிம்சை முறையில் வழி இருக்கத்தான் இருக்கிறது. இன்ன இன்ன பிரச்னைகளுக்கு இன்ன இன்ன வழிகள் என்று வகைப்படுத்திச் சொல்லமுடியாது. அஹிம்சா தத்துவத்தில் ஊறித் திளைத்துவிட்டால், அநேக வழிகள் அவரவர்களின் உட்பக்குவத்திற்கும், மனோபலத்திற்கும் தகுந்தாற்போல் தோன்றும். அஹிம்சையில் திடநம்பிக்கையும் பற்றும் தான் வேண்டும்."

"சரி, பாபுஜி; இந்த சந்தர்ப்பத்தில் நாங்கள் என்ன செய்திருக்கவேண்டும் என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?" என்று கேட்டார் கிருஷ்ணமணி.

"சுலபமான ஒரு காரியத்தை நீங்கள் செய்திருக்கலாம். தொண்டர்கள் எல்லோரும் தரையில் படுத்துக்கொண்டு, 'நீங்கள் போவதாயிருந்தால், எங்களை மிதித்துக்கொண்டு போங்கள்' என்று கீழே கிடந்தீர்களானல், அவர்கள் உங்களை மிதித்துக்கொண்டு போயிருப்பார்களா?"

எங்களுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. 'இவ்வளவு சுலபமான வழி தோன்றவில்லையே' என்று வெட்கப் பட்டோம்.

"அவர்கள் ஸ்திரீகளானபடியால், எங்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை" என்று ஒரு நொண்டிச் சமாதானத்தைச் சொல்லிப்பார்த்தார் கிருஷ்ணமணி.

"பெண்களாயிருக்கட்டும், ஆண்களாயிருக்கட்டும்; யுத்தமாயிருக்கட்டும், சமாதானமாயிருக்கட்டும் — அஹிம்சையின் வழி ஒரே மாதிரிதான். அஹிம்சையைப் பின்பற்றுபவன் கற்றுக்கொள்ள வேண்டிய முக்கிய விஷயம் இதுதான்: பிறரைத் திருத்துவதற்குமுன், தன்னைத் திருத்திக்கொள்ள வேண்டும். பிறரை ஜயிக்கும் முன்பு தன்னைத்தானே ஜயித்துக்கொள்ள வேண்டும். அஹிம்சையைக் கடைப்பிடிப்பவன் முதலில் ஆத்மசுத்தி பெறவேண்டும்; அகங்காரத்தை ஒழிக்கவேண்டும்" என்றார் மகாத்மாஜி.

பக்கத்திலிருந்த ஒரு பெரியவர், "பாபுஜி, மேலும் அஹிம்சையின் மேன்மையைச் சிறிது விளக்கிச் சொல்லுங்கள். நம் நாட்டு வாலிபர்கள் அதில் மிக ஈடுபட வேண்டும்" என்றார்.

"அஹிம்சையைப்பற்றி எவ்வளவுதான் சொல்லக் கூடாது. மனிதனுக்கு வேண்டிய நற்பண்புகள் யாவை என்பதைக் கிருஷ்ணபகவான் வரிசைப்படுத்திச் சொல்லி யிருக்கிறார். சொல்லுகிறேன், கேளுங்கள் :

அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ்த்யாக:
சாந்திரபைசுனம் |
தயா பூதேஷ்வலோலுப்த்வம்
மார்தவம் ஹ்ரீரசாபலம் ||

தேஜ : க்ஷமா த்ருதி : சௌசமத்ரோஹோ
நாதிமானிதா |
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய
பாரத ||

"அதாவது—பயமின்மை, இதயத்தூய்மை, ஞானம், யோகம் பற்றிய திடசித்தம், தானம், புலனடக்கம், சேவை, தூய நூல் பயிற்சி, தவம், நேர்மை, அஹிம்சை, சத்தியம், கோபமின்மை, தியாகம், சாந்தி, புறங்கூறாமை, தயை, பேராசையின்மை, மென்மை, பணிவு, சஞ்சல புத்தியில்லாமை, தேஜஸ், பொறுமை, மனந்தளராமை, தூய்மை, வெறுப்பின்மை, கர்வமின்மை – இவை தெய்வ ஸம்பத்துக்கள்.

"இவை ஒவ்வொரு மனிதனும் கடைப்பிடிக்க வேண்டிய நற்பண்புகள். இவற்றுக்கு ஆணிவேர் சத்யமும் அஹிம்சையும். இந்த இரண்டையும் கைப்பிடிப்பவர்களுக்கு, மற்றவையெல்லாம் தாமாகவே வந்துவிடும். ஏனென்றால், அஹிம்சையைப் பின்பற்றுபவன் நேர்மையற்றவனாகவும், சத்யத்தைக் கைப்பிடிப்பவன் கெட்ட எண்ணம் உள்ளவனாகவும் இருக்கமுடியாது. பகவான் சொன்ன நற்பண்புகள் கொண்ட அறவழி வாழ்க்கைக்கே அஸ்திவாரம், சத்யமும் அஹிம்சையும்தான். சிரமமாயிருந்தாலும் அவற்றைக் கடைப்பிடிக்கத் தவறாதீர்கள்" என்றார்.

அளவற்ற ஆவலுடனும் பக்தியுடனும் கேட்டுவிட்டு வெளியே வந்தோம்.

"நடராஜ், கீதை ஒரு மகத்தான நூலப்பா."

"அதற்கென்ன சந்தேகம், கிருஷ்ணமணி. வாழ்க்கைக்கு வழி காட்டியாக நிற்கும் தலைசிறந்த நூல் அல்லவா அது."

"அதை உபதேசித்த கிருஷ்ணபரமாத்மா எவ்வளவு பெரியவர்?"

"இதென்ன கேள்வி, கிருஷ்ணமணி? பைத்யக்காரக் கேள்வி. அவர் அவதார புருஷனல்லவா? பரமாத்மா அல்லவா?"

"பரமாத்மா உபதேசித்தார். மகாத்மா வாழ்ந்து காட்டினர். இந்த இரண்டு பெரியாத்மாக்களுள் யார் சிறந்தவர்?"

நான் திகைத்து நின்றேன்.

# 13

அதிருஷ்டம் என்ற வார்த்தையைக் கேட்கவே என் நண்பர் ஒருவருக்குப் பிடிக்காது. முயற்சி திருவினையாக்கும் என்பதுதான் அவரது சூத்ரம். முயற்சியும் உழைப்பும் இருந்தால் எதையும் சாதித்துவிடலாம் என்பது அவர் நம்பிக்கை. மனிதன் முயற்சி செய்வதெல்லாம் எண்ணியபடி நடந்து விடுவதில்லை. உழைப்புக் கேற்ற படி ஒரே சீராகப் பலன் அடைய முடியும் என்பதில்லை. மனிதனுக்கு மீறிய சக்திகள் எவ்வளவு இருக்கின்றன? அவற்றைத்தான் அதிருஷ்டம் என்று சொல்லிவிடுகிறோம். அந்த வார்த்தை பிடிக்காவிட்டால், கடவுள், ஊழ்வினை, சந்தர்ப்பம் என்று சொல்லிக் கொள்ளலாம். விரும்பியது நடக்காமலும், விரும்பாதது நடந்தும், நம்மைத் திணறவைக்கும் சக்திகளை எந்த வார்த்தையைப் போட்டுத்தான் சுட்டிக் காட்டுவது? பம்பாயில் இதைப் போன்ற ஒரு சந்தர்ப்பம்தான் என்னைக் கை தூக்கி விட்டது. பல தொண்டர்களை அனுப்பிவிட்டார்கள்; கிருஷ்ணமணியையும் அனுப்பி விட்டார்கள். என்னை மாத்திரம் நிறுத்திவைத்துக் கொண்டார்கள். என் அரசியல் அறிவு, ஆங்கிலப் புலமை, வடமொழிப் பயிற்சி, இவை காரணமாக இருக்கலாம். மகாதேவ் தேசாய், பியாரேலால் போன்ற பெரியவர்களுக்குக் கீழேயிருந்து பணிபுரியும் பாக்யம் எனக்கு ஏற்பட்டதை அதிருஷ்டம் என்று சொல்லாமல் எப்படி இருப்பது? சிறிது காலத்திற்குத்தான் என்றாலும், அது எவ்வளவு அரிய வாய்ப்பை

எனக்குக் கொடுத்திருக்கிறது! மகாத்மாவை நெருங்கி அவரது லட்சியத்தையும், அந்த லட்சியத்தை வாழ்க்கையில் அவர் நடத்திக் காட்டிய விதத்தையும் நேரில் காண முடிந்தது. சிறிது காலத்திற்குள்ளேயே அவர் என்னை எடைபோட்டு விட்டார். அன்புடன் கூப்பிடும்பொழுது 'ராஜ்' என்று அழைப்பார். பரிஹாசமாகப் பேசுகையில், தென்னாட்டுக் குட்டி வேதாந்தி (The Young philosopher from the South) என்று அழைப்பார். அவருடைய புன்னகைக்குத்தான் என்ன மோகன சக்தி!

ஒருநாள், பிற்பகல், காந்திஜி தனிமையில் இருந்தார்; கூட்டம் ஒன்றும் இல்லை. மகாத்மாஜி ராட்டையில் நூல் நூற்றுக் கொண்டிருந்தார். நானும் தக்ளியைச் சுற்றிக் கொண்டு நின்றேன். அப்பொழுது ராம் என்ற பிரபல பத்திரிகாசிரியர் வந்தார். அவர் காந்திஜியின் வாயைக் கிளறுவதில், மிக்க வல்லவர். பத்திரிகாசிரியர் அல்லவா? சாதுர்யமாகப் பேசுவார். அவருக்கு ஒவ்வொருவரிடமும் மதிப்பு உண்டு. சிறந்த முறையில் பத்திரிகை நடத்துபவர் என்று புகழ்பெற்றவர். நானும் அவரை வணங்கி வரவேற்றேன்.

"என்ன ராம், பத்திரிகையில் என்ன விசேஷம் (Scoop) செய்யப் போகிறாய்?"

"அதற்காகத்தானே இங்கே வந்திருக்கிறேன்" என்று சொல்லிவிட்டுச் சிரித்தார் ராம். என்னைப் பார்த்துச் சுட்டிக்காட்டி, "புது சிஷ்யன் எப்படி இருக்கிறான்? அன்று பெண்கள் பலாத்காரத்திற்கு அஹிம்சையை எப்படி உபயோகிப்பது என்று உபதேசம் செய்துகொண்டிருந்தீர்களே. பையன் உங்கள் தத்துவத்தைப் பின்பற்றிக் கடைப்பிடிக்கிறானா?" என்று கேட்டார்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. 'இவர் ஏன் வந்ததும் வராததுமாய் என்னைப் பிடித்து வம்புக்கு இழுக்

கிறார். இவருக்கு வேறு விஷயம் கிடைக்கவில்லையா ?' என்று சங்கடப்பட்டேன்.

"ராம், நீ ஒரு நாஸ்திகன். உனக்கு ஒன்றிலும் நம்பிக்கை கிடையாது. கடவுளிடமே நம்பிக்கை கிடையாது. அஹிம்சையிலும் நம்பிக்கை கிடையாது. இதற்காக சிஷ்யனைப் பரிஹாசம் செய்யவேண்டாம்" என்றார்.

'நல்ல வேளை, பாபுஜி காப்பாற்றி விட்டார்' என்று சந்தோஷப்பட்டேன். ராம் மேலே கேட்டார்:

"நீங்கள் சொல்லுவது உண்மைதான், பாபுஜீ. எதற்கெடுத்தாலும் அஹிம்சை, அஹிம்சை என்று சொல்லுகிறீர்கள். எல்லா இடங்களிலும், எல்லா சந்தர்ப்பங்களிலும், அதை உபயோகப்படுத்த முடியும் என்றும் சொல்லுகிறீர்கள். போலி வைத்தியர்கள் தங்கள் மருந்தை சர்வ ரோக நிவாரிணி என்று விளம்பரப் படுத்துவது போலத்தான் இருக்கிறது. எல்லா வியாதியையும் போக்கும் மருந்து இருக்கமுடியுமா ? அதுபோலவே, எல்லா சமயங்களிலும் உபயோகப்படுத்தக்கூடிய ஆயுதமாக அஹிம்சையை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை" என்றார்.

"சரி, ஹிம்சையை உபயோகப் படுத்தக்கூடிய இடத்திலாவது அஹிம்சையை உபயோகப் படுத்தக்கூடும் என்று நினைக்கிறாயா ?"

"அதுகூட எப்படி சாத்யம்? வீட்டிற்குள்ளே திருடன் வந்துவிட்டான். பலாத்காரத்தினால், அவனை உதைத்து அனுப்பலாம்; அல்லது பிடித்துப் போலீசாரிடம் ஒப்புவிக்கலாம். ஆனால், அஹிம்சை முறையில், இதை எப்படி சமாளிக்க முடியும்? 'என்னைக் கொன்று விட்டுப் பணத்தை எடுத்துக்கொள்' என்று சொல்வதா? 'பணத்தை எடுத்துக்கொள்; தயவு செய்து உயிரை விட்டுவிடு' என்று கெஞ்சி பேரம் பேசுவதா ?" என்றார் ராம்.

மகாத்மாஜி சிரித்தார். "என்ன, தென்னுட்டுக் குட்டி வேதாந்தி? இதற்கு நீயே பதில் சொல்லலாமே" என்று என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே சொன்னர். "பாபுஜி, வாழ்க்கையில் அஹிம்சா நெறிப்படி, இந்தப் பிரச்னையை எப்படி சமாளிப்பது என்று சொல்லும் அள விற்கு நான் பக்குவம் பெறவில்லை. ஆனால், இலக்கியத்தில் இது எப்படிக் கையாளப்பட்டிருக்கிறது என்று வேண்டு மானுல் சொல்லலாம்" என்றேன்.

"எப்படிக் கையாளப் பட்டிருக்கிறது?"

"விக்டர் ஹ்யூகோவின் நாவலில் வருகிருரே ஒரு பாதிரி; அவர் வீட்டில் ஜான்வால்ஜான் என்ற கைதி, வெள்ளி விளக்கைத் திருடிக்கொண்டு போய்விட்டான். வழியில் போலீஸார் அவனைப் பிடித்து இந்த விளக்கு அவனுக்கு எப்படிக் கிடைத்தது என்று கேட்கிருர்கள். 'பாதிரியார் எனக்குக் கொடுத்தார்' என்று சொல்கிருன் திருடன். பாதிரியாரிடம், அந்தத் திருடனை விளக்குடன் கூட்டிவந்து, 'இந்த விளக்கை இவனுக்குக் கொடுத்தீர் களா?' என்று கேட்டார்கள். 'ஆம், நான்தான் அவ னுக்குக் கொடுத்தேன்' என்று சொல்கிருர் அந்த முனிவர் பாதிரி. இந்த வார்த்தை, அந்தக் கைதியின் வாழ்வையே மாற்றிவிடுகிறது. திருடன் தியாகியாக மாறுகிருன்; அதருமன் தருமனுக மாறுகிருன்; அரிய பெரிய காரியங் கள் செய்து சமூக சேவை புரிகிருன்."

"பேஷ், குட்டி வேதாந்தி! பொருத்தமாகச் சொல்லி விட்டாய். அஹிம்சா ஆயுதத்தின் பலமே அதுதான். அது கொடுப்பவனையும் உயர்த்துகிறது; பெறுபவனையும் உயர்த்துகிறது" என்ருர் காந்திஜி.

"அது சரி, இலக்கியத்தில் எது வேண்டுமானுலும் கற்பனை செய்யலாம். வாழ்க்கையில் லட்ச ரூபாய் கொடுத்தாலும், ஒரு திருடனை இம்மாதிரி திருத்திவிட முடியாது" என்ருர் ராம்.

"பார்த்தாயா? நான்தான், நீ நாஸ்திகன் என்று சொன்னேனே? உனக்கு ஒன்றிலும் நம்பிக்கை ஏற்பட்டாது. உன்னை ஒன்றுமே திருப்தி செய்யவும் முடியாது."

"மகாத்மாஜி, இன்னோர் உதாரணம் கொடுக்கலாம். ஆனால், புராணம் என்று நண்பர் தள்ளிவிடுவாரே என்றுதான் தயங்குகிறேன்" என்றேன்.

"சொல்லு, பரவாயில்லை. அவருக்குப் பிடிக்காவிட்டாலும் நான் கேட்கிறேன்."

"எங்கள் தியாகராஜர் இருந்தாரே?"

"ஆம், சிறந்த ராமபக்தர்; சங்கீத யோகி" என்று சிரத்தையோடு கேட்க ஆரம்பித்தார் பாபுஜி.

"அவர் கோவூர் சுந்தரேச முதலியார் என்பவரின் அதிதியாக இருந்தார். தியாகராஜ ஸ்வாமிகள் கிளம்பும் பொழுது, அந்தப் பிரபு ஒரு பணப்பையைக் கொடுக்க விரும்பினார். பணத்தை ஓட்டாஞ் சல்லியாக நினைக்கும் ஸ்வாமிகள், அதை ஏற்க மறுத்துவிட்டார். ஆனால் ஸ்ரீராம நவமி உற்சவத்திற்கு இருக்கட்டும் என்று ஸ்வாமிகளுக்குத் தெரியாமல், பல்லக்கில் வைத்துவிட்டார் முதலியார். பணத்தின் அருமையையும், பெருமையையும் அறிந்த சிஷ்யர்கள் அதை ஸ்வாமிகளுக்குத் தெரியாமல் மறைத்து வைத்துவிட்டனர். பல்லக்கு காட்டு வழியே செல்லும்பொழுது சிஷ்யர்களுக்குத் திருடர் பயம் வந்துவிட்டது. ஸ்வாமிகளிடம் தங்கள் பயத்தைத் தெரிவித்தார்கள். "நாம் ஏன் பயப்பட வேண்டும். நம்மிடம் என்ன இருக்கிறது?" என்று தைரியப் படுத்தினார் ஸ்வாமிகள். தயக்கத்துடன், 'ஸ்ரீராம நவமிக்கு இருக்கட்டும் என்று பணப்பையைப் பல்லக்கில் வைத்திருக்கிறார் முதலியார்' என்றார் ஒரு சிஷ்யர். 'அப்பொழுது உனக்கும் எனக்கும் என்ன கவலை? ராமன் பணத்தை

ராமனே காப்பாற்றிக் கொள்ளட்டும்' என்று சொல்லி விட்டு, 'முந்துவெனுக' என்ற கீர்த்தனத்தைப் பாடினுராம் ஸ்வாமிகள். உடனே ராமனும், லட்சுமணனும், வில்லுடனும் அம்புடனும் தோன்றவே, திருடர்கள் ஸ்வாமிகளின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டு நல்லவர்களாக மாறினுர்களாம்."

"ராம லட்சுமணர்கள் என்பதற்குப் பதிலாக ஸ்வாமிகளின் பக்தியையும், தபசையும் கண்டு திருடர்கள் மனம் மாறினுர்கள் என்று வேண்டுமானுல், வைத்துக் கொள்ளலாம்" என்ருர் ராம்.

"ஏன் இப்படியிருக்கக் கூடாது? முன்னேயும், பின்னேயும் இரு பக்கங்களிலிருந்து கொண்டு, நம் நல்வாழ்வைத் திருடும் ஆத்மசத்ருக்களிடமிருந்து 'என்னைக் காப்பாற்று' என்றும் பாடியிருக்கலாம் அல்லவா?" என்ருர் பாபுஜி.

"அப்படியும் பொருள் கொள்ளலாம்" என்றேன் நான்.

"அதிருக்கட்டும், என் நாஸ்திக நண்பனே. ராமன் மேலிருந்த கோபத்தில் முக்யமான விஷயத்தை நழுவ விட்டுவிட்டாய். தியாகராஜ ஸ்வாமி என்ன சொன்ஞர்? 'அது ராமனுடைய சொத்து, ராமன் சொத்தை ராமனே காப்பாற்றிக் கொள்ளட்டும்' என்ருர். சொத்து உன்னுடையதா, என்னுடையதா என்பதில்தான் திருட்டு ஏற்படுகிறது. பார்க்கப்போனுல், எவனும் தன் தேவைக்கு அதிகமாக வைத்துக் கொள்பவையெல்லாம் திருட்டு சொத்துத்தான். பிறர் நலனுக்காக தரும கர்த்தா முறையில் பாதுகாக்கப் படாதவையும், திருட்டு சொத்துத்தான். 'சொத்துரிமை என்பதே ஒரு திருட்டு' என்று ஒருவன் சொல்லவில்லையா" என்ருர் மகாத்மாஜி.

"ஆம், பாபுஜி. பிரவ்தான் என்ற பிரஞ்சு அறிஞன் தான் அப்படிச் சொல்லியிருக்கிருன்" என்றேன் நான்.

அப்பொழுது, சில நிமிஷங்களுக்கு முன்பாக வந்து உட்கார்ந்து கொண்ட மகாதேவ் தேசாய், "பாபுஜி, முன்பு சபர்மதி ஆசிரமத்தில் நடந்த திருட்டைப்பற்றி ஞாபகம் இருக்கிறதா?" என்ருர்.

"நன்ருக ஞாபகம் இருக்கிறது" என்ருர் பாபுஜி.

"அது என்ன?" என்ருர் செய்திப் பசி கொண்ட பத்திரிகையாளர் ராம்.

மகாதேவ் தேசாய் சொல்ல ஆரம்பித்தார்.

சபர்மதி ஆசிரமத்தில் சில நாளைக்கொருதரம் திருடர்கள் புகுந்து அங்கிருந்த ஆசிரமவாசிகளுடைய துணிமணிகள், பாத்திரங்கள், குவளைகள், இவற்றை யெல்லாம் திருடிக் கொண்டு போவார்கள். ஆசிரமவாசிகள், பாபுஜியின் ஆணைப்படி, வறுமையை ஏற்றுக் கொண்டு வசித்து வந்தபடியால், அவர்களிடம் திருடும் படியாக ஒன்றும் கிடையாது. ஒருசமயம் திருடர்கள் கஸ்தூர்பா அம்மையாரின் இரண்டு பெட்டிகளைத் திருடிக்கொண்டு போய்விட்டார்கள். அதில் துணிகள் தான் இருந்தன. அந்தத் துணிகளை எடுத்துக் கொண்டு, திருடர்கள் பெட்டியைப் பக்கத்து வயலில் போட்டுவிட்டார்கள். இது பாபுஜிக்குத் தெரிந்தவுடன் அவர் கேட்டார்: "இரண்டு பெட்டிகள் நிறையத் துணிமணிகள் இருந்தன என்ருல், எப்படி பாவிற்கு அவ்வளவு புடைவைகள் கிடைத்தன? பாவென்னவோ புதிது புதிதாகப் புடைவைகள் கட்டிப் பார்த்ததில்லையே" என்ருர்.

கஸ்தூர்பா சொன்ஞர்: "தாயில்லாக் குழந்தைகளான ராமியும், மனுவும் (காந்திஜியின் பேத்திகள், ஹரிலால்பாயியின் புதல்விகள்) சில சமயங்களில் இங்கு வந்து தங்குவார்கள். எனக்கு அப்போதைக் கப்போது யாராவது கொடுக்கும் துணிமணிகளைச் சேர்த்துவைத்து அவர்களுக்குக் கொடுப்பேன். அதற்காகத்தான் சேர்த்து வைத்திருந்தேன்."

காந்திஜி சொன்னார்: "அது சரியல்லவே; யாராவது நமக்கு ஏதேனும் அன்பளிப்பாகக் கொடுத்தாலும், அது நம்முடையதாகிவிடாதே. அதைக் காரியாலயத்தில் சேர்த்திருக்க வேண்டுமேயொழிய, நீ எப்படி அவர்களுக்குக் கொடுக்க நினைக்கலாம்" என்றார்.

அன்று மாலை பிரார்த்தனை முடிந்த பின்பு, அவர் சொன்னார்: "நாம் உடைமையை உதறும் விரதத்தை மேற்கொண்டிருக்கிறோம். நாம் எப்படிப் பிறருக்குக் கொடுக்க முடியும்? அந்தப் பெண்கள் இங்கு வந்தால் அவர்களை இங்கே தங்க அனுமதிக்கலாம்" என்றார்.

அது முதற்கொண்டு, கஸ்தூர்பா அம்மையார், புடைவை துணிமணிகளைச் சேர்த்து வைப்பதேயில்லை.

இந்த நிகழ்ச்சியை மஹாதேவ் பாயி சொல்லி முடித்தார்.

ராம் பொல்லாதவர், துணிச்சல்காரர் என்று சொன்னேனல்லவா? அவர் சிரித்துக் கொண்டே மகாத்மாஜியைக் கேட்டார்: "என்ன பாபுஜி, திருடனை தண்டிப்பதற்குப் பதிலாக, கஸ்தூர்பா அன்னையாரை தண்டித்து விட்டீர்கள்!" என்று சிரித்துக் கொண்டே ஒரு போடு போட்டார்.

"நீ, காமாலைக் கண்ணோடு பார்க்கிறவன். அஹிம்சை நெறியில் நம்பிக்கை இல்லாதவன். அஹிம்சை நெறியில் கையாளப்படும் தண்டனையைப் பற்றி உன் மனத்தில் எப்படிப் படப்போகிறது" என்றார் பாபுஜி.

"சொல்லுங்களேன். கேட்டுக் கொள்கிறேன்" என்றார் ராம்.

"அஹிம்சை நெறியில் எல்லாக் குற்றங்களுக்கும் ஒரே தண்டனைதான். அது மன்னிப்பதும், அன்பு காட்டுவதுமாகும்" என்றார் மகாத்மா.

# 14

ஒரு வாரம் கழித்து, ஸ்ரீ. ராம் மறுபடியும் வந்தார். அவருடன் வர்கீஸ் என்ற கேரள கம்யூனிஸ்ட் ஒருவரும் வந்திருந்தார். இவரும் காந்திஜிக்குப் பரிசயமானவரே. ஆரம்பத்தில் தேசீயவாதியாகவும், காங்கிரஸ்காரராகவும் இருந்தவர். இப்பொழுது மார்க்சீய சித்தாந்தத்தில் மனத்தை ஈடுபடச் செய்தவர். காந்திஜி ஓய்வெடுத்துக் கொள்ளும் நேரம்; சர்க்காவில் நூல் நூற்றுக் கொண்டிருந்தார். ராமும் சமயம் தெரிந்துதான் வருவார். அந்த சமயத்தில் அம்ருத் பாபு என்ற பழைய சபர்மதி ஆசிரம வாசியும் வந்து சேர்ந்தார்.

"என்ன, ராம்? இன்று பத்திரிகையில் என்ன விசேஷம்?" என்று ஆரம்பித்தார் காந்திஜி.

"உங்கள் விஷயம்தான். உங்களைப் பற்றி வரும் விஷயம்தானே பத்திரிகைகளுக்கு முக்கியச் செய்தியாக இருக்கிறது" என்று சிரித்துக்கொண்டே சொன்னார் ராம்.

"எதைச் சொல்கிறாய்?"

"பர்னட் ஷா, உங்கள் அஹிம்சையைக் கிண்டல் செய்திருக்கிறாரே, அதுதான்" என்றார்.

அன்று பத்திரிகைகளில் எல்லாம் அடிபட்ட முக்கியச் செய்தி அதுதான். "பசுவின் அஹிம்சா தர்மம், புலியின்

மனத்தை மாற்றிவிட முடியாதே" என்று சொல்லியிருந்தார் பர்னுட் ஷா.

"அது சரி, மனிதனும் மிருகமும் ஒன்று என்று ஒப்புக்கொள்ளப்பட்டால், ஷா சொன்னது சரியாக இருக்கலாம்" என்றார் மகாத்மாஜி.

"அது போகட்டும், பாபுஜி. அஹிம்சை, மனிதனின் மனத்தை மாற்றுவதற்காவது பூரண வலிமை பெற்றிருக்கிறது என்பதை நிச்சயப்படுத்திச் சொல்லமுடியுமா?" என்றார் ராம்.

"அதில் எனக்குச் சிறிதேனும் சந்தேகமில்லை" என்றார் பாபுஜி.

"நற்பண்புகள் உள்ளவனின் மனத்தை வேண்டுமானால் மாற்றக்கூடும். ஒரு துஷ்டனுடைய மனத்தையும் ஓர் அயோக்யனுடைய மனத்தையும் அஹிம்சை முறையில் மாற்றக்கூடும் என்று என்னால் நம்ப முடியவில்லை" என்றார் வர்கீஸ்.

அப்பொழுது, அம்ருத் பாபு, மகாத்மாவைப் பார்த்து, "பாபுஜி, இதற்கு நான் பதில் கொடுக்க முடியும். நம் ஆசிரமத்தில் நடந்த விஷயத்தை உதாரணமாகச் சொல்லலாம்" என்றார். மகாத்மாஜி தலையை அசைத்தார்.

"ஆசிரமத்துக்குப் பக்கத்தில் உள்ள ஒரு துஷ்டன், ஆசிரமத்து மரங்களை வெட்டி, விறகாக விற்றுக்கொண்டிருந்தான். வயல் நடுவே வரும் பாதைக்கு ஈடாகப் பணம் கொடுத்தும்கூட, தன்னுடையது என்று விதண்டாவாதம் செய்து கொண்டிருந்தான். இதற்கு வழக்குப் போடச் சொன்னார்கள். பாபுஜி அதற்கு இணங்கவில்லை. 'இந்த ஆசிரமம் பொதுமக்களின் நலனுக்கென்றால், இப்படி அவனைச் செய்ய விடாதீர்கள். உங்களுக்கு இஷ்டம் இல்லையானால், ஆசிரமத்தை வேறு இடத்திற்கு மாற்றிவிடுகிறேன்' என்று மாத்திரம்

சொன்னார். அது நன்றாகப் பிடித்துக் கொண்டது. அந்த துஷ்டனின் பந்துக்களே, அவன் மேலும் ஹிம்சை செய்யாதபடி தடுத்துவிட்டனர்" என்று சொல்லி முடித்தார் அம்ருதபாபு.

"பாபுஜி, நான் அதிகப் பிரசங்கி, நாஸ்திகன் என்று எப்பொழுதும் புகார் செய்கிறீர்கள். அம்ருத பாபு நல்ல உதாரணம்தான் கொடுத்திருக்கிறார். பிரகலாதனுடைய அஹிம்சை, ஹிரண்யனின் மனத்தை மாற்றவில்லை. உக்ர நரசிம்மனின் பலாத்காரம்தான் ஹிரண்யனின் பலாத்காரத்தை எதிர்க்க முடிந்தது. அதுபோலவே, அஹிம்சையினால், துஷ்டனின் மனத்தை மாற்றியதாகத் தெரியவில்லையே; அந்த துஷ்டன் தன் உறவினர்களின் கட்டாயத்தினாலல்லவா விட்டுக் கொடுத்திருக்கிறான் போலிருக்கிறது" என்றார் ராம்.

மகாத்மாஜி சிரித்துக் கொண்டு, "துஷ்டர்கள் நல்லவர்கள் ஆவதைப் பார்த்ததில்லையா? பகவான் புத்தர், தீயவர்களைத் தூயவர்களாக்கவில்லையா? பகவான் ஏசு, அதமர்களை உத்தமர்களாக்கவில்லையா? சரித்திரம் படித்த உனக்கு இவையெல்லாம் தெரியாத விஷயங்களா?" என்றார்.

"பாபுஜி, ஏசுவிடமும், புத்தரிடமும்கூடப் போக வேண்டாம். உங்கள் காலத்திலேயே, உங்களாலேயே அப்படிப்பட்ட அற்புதங்கள் நிகழ்ந்திருப்பதைக் கண்டிருக்கிறேன். ஆனால், அது வேறு விஷயம்"

"பார்த்தாயா, அதில் ஒரு ஷொட்டு வைக்கிறாயே?"

"இல்லை, பாபுஜி. நான் உங்களுடன் வாதாட விரும்பவில்லை."

"அதற்குத்தானே இங்கே வருகிறாய்?" என்றார் காந்திஜி முறுவலுடன்.

"இல்லை, காந்திஜி. முக்கியமானதொரு விஷயத்தில் தெளிவுகாணத்தான் இன்று வந்தேன். அதற்காகவே தான் வர்கீசையும் அழைத்து வந்தேன். வர்கீசின் தோழர்கள் ஏதாவது சொன்னால், 'ஆமாம், காந்திஜியும் அதைத்தான் சொல்கிறார்' என்று உங்களையும் சேர்த்துக் கொள்கிறார்."

"அதில் தவறு என்ன, ராம்? ஏழைகள், எளியவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள், ஒதுக்கப்பட்டவர்கள் இவர்களுடைய நலத்தை நான் பெரிதும் விரும்புகிறேன். வர்கீசும் அவருடைய நண்பர்களும் அதையேதானே வேண்டுகிறார்கள்."

"அப்பொழுது, பொதுவுடைமையும் அஹிம்சையும் காந்தீயம் என்றோ, பொதுவுடைமையும் கடவுளும் காந்தீயம் என்றோ, சொல்கிறார்களே, அது ஓர் அளவு சரி என்று ஒப்புக்கொண்டுவிடலாமா?"

"அதை எப்படி ஒப்புக்கொள்ள முடியும், ராம்? எங்கள் இருவர் லட்சியங்களும் ஒன்றாயிருந்தாலும், நாங்கள் போகும் வழிகள் முற்றும் மாறுபட்டிருக்கின்றன. எனக்கு லட்சியத்தைவிட, மார்க்கத்தில் மிகுந்த அக்கறை உண்டு. கம்யூனிச நண்பர்களுக்கு வழியைப்பற்றி அக்கறையில்லை. 'இடம் போய்ச் சேர்ந்துவிட்டால் சரி, என்று அவர்கள் நினைக்கிறார்கள். அதைத் தவிர வேறு ஒரு முக்கியமான வித்யாசமும் இருக்கிறது."

"அது என்னவோ?"

"கடவுள்; இந்தப் பிரபஞ்சம் பூராவும் ஈசுவரனால் வியாபிக்கப்பட்டிருப்பதை நான் உணர்கிறேன். எல்லா உயிரும் ஒன்றே. இந்தப் பிரபஞ்சம் பூராவும் கடவுளின் அம்சமாகவே சம்பவித்து நிற்கிறது. அப்படியிருக்கையில் ஒருவனைப் புறக்கணிக்கவோ, வெறுக்கவோ, இயலுமா? என்னிடம் குற்றமோ தீமையோ உள்ளது என்பதற்காக, நான் தற்கொலை செய்து கொள்ள விரும்ப

வில்லை. அப்படியிருக்க மாற்றானிடம் குற்றமோ, தீமையோ இருக்கிறது என்பதற்காக அவனைக் கொலை செய்ய வேண்டும் அல்லது தண்டிக்க வேண்டும் என்று எப்படி நான் விரும்பலாம்.''

''வாஸ்தவம்தான், பாபுஜி'' என்றார் அம்ருத பாபு.

''தவிரவும், கம்யூனிசவாதிகள் பொருளாதார வசதிகளைத்தான் முக்கியமான லட்சியமாகத் தேடுகிறார்கள். பொருளாதார முன்னேற்றம் மனிதனுக்கு அவசியம் தான். ஆனால், அது மாத்திரம் இருந்தால் போதாது. அவனுடைய தார்மிக வாழ்விலும், முன்னேற்றம் பெற வேண்டும். நற்பண்புகள், உயர வேண்டும். பொருட் செல்வம் மாத்திரம் பூமியில் சுவர்க்கத்தை நிறுவிவிடப் போவதில்லை. ஏசுநாதர் சொல்லவில்லையா, 'மனிதன் ரொட்டியினால் மாத்திரம் ஜீவிப்பதில்லை' என்று? அவன் உலகுடன் இணைந்து வாழ்வதற்கு அவசியமான நல்லெண்ணங்கள், நல்ல பழக்க வழக்கங்கள் வேண்டும். எல்லோரையும் நேசிக்கும் மனப்பான்மை வேண்டும்'' என்று சொன்னார் காந்திஜி.

''அது சரி, பாபுஜி. இந்த நிலைக்கு மக்கள் எல்லோரையும் உயர்த்துவதென்றால், அது எவ்வளவு காலம் பிடிக்கும்?''

''உலகத்தில் ராமராஜ்யத்தை ஸ்தாபிப்பது உடனடியாகச் செய்து முடிக்கக்கூடிய காரியமா?''

''சரி, பாபுஜி. உங்கள் கொள்கைக்கும், கம்யூனிசத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கிக் கொண்டிருந்தீர்கள். அது இன்னும் முடியவில்லையே?'' என்றார் அம்ருத பாபு.

''மகாத்மாஜி, சிறிது காலத்திற்கு முன்பு, எச். ஜி வெல்ஸ் மனிதனுடைய ஜீவாதார உரிமைகள் என்ன என்பதைப் பல அறிஞர்களைக் கேட்டிருந்தார். ஒவ்வொரு

வரும் ஒவ்வொன்றைச் சொன்னுர்கள். உங்களைக் கேட்ட தற்கு உரிமைகளை நிர்ணயம் செய்வதற்குமுன் கடமைகள் எவை என்பதை முதலில் நிர்ணயம் செய்தாக வேண்டும் என்று பதிலளித்தீர்கள். அதுகூட இப்பொழுது பேசப் படும் விஷயத்திற்கு சம்பந்தப்பட்டதுதான் என்று நினைக்கிறேன்" என்றேன் நான்.

"பேஷ், தென்னுட்டுக் குட்டி வேதாந்தி. நன்முக ஞாபகமூட்டினுய். உரிமைகளை மாத்திரம் பேசிக்கொண் டிருந்தால் போதாது. கடமைகளையும் அதே மூச்சில் சொல்ல வேண்டும். இரண்டும் ஒன்றையொன்று தழுவி நிற்கும் விஷயங்கள். தவிரவும் 'உன்னைத் திருத்திக் கொள்' என்று சொல்வதற்கு முன், நான் திருந்தியாக வேண்டும். இல்லையென்ருல், நான் அப்படிச் சொல்வ தற்கு எனக்கு அதிகாரம் கிடையாது. ஆகவே, என் சித்தாந்தம், என்னைத் திருத்திக்கொள்வதில் ஆரம்ப மாகிறது. கம்யூனிசமோ மாற்ருனைத் திருத்துவதில் ஆரம்பிக்கிறது" என்ருர் பாபுஜி.

அம்ருத் பாபு சொன்னுர்: "பாபுஜி, வினேபாஜி, ஒரு வரிடம் 'சாந்தி சாந்தி' என்ருராம். அவரோ, 'கிராந்தி, கிராந்தி' (புரட்சி, புரட்சி) என்ருராம். இந்த மனேபாவ மும் கொள்கை வித்தியாசங்களின் அடிப்படையில் இருக் கிறது இல்லையா?"

"உண்மைதான், அம்ருத் பாபு. நான், மனம் மாறு வதில் நம்பிக்கை கொண்டவன். ஆனுல் கம்யூனிச நண்பர்கள், புரட்சியில் நம்பிக்கை கொண்டவர்கள். புரட் சியினுல் என்ன பலனைக் காணபோம்? நம் சம்பிரதாயம் தான் நம்மை வளர்த்திருக்கின்றது. அதுவே நம் ரத் தத்தில் ஊறி, நம் பண்பிற்கு ஆதாரமாயிருக்கிறது. சில விஷயங்களில் காலத்திற்கேற்பச் சில மாறுதல்கள் தேவை யாயிருக்கலாம். அதற்காக அதை முற்றும் மாற்றி அமைப்பதென்ருல், நாம் தாய் தந்தையரில்லாத அனு

தைக் குழந்தைகள் போலாகிவிடுவோம். நம் நாட்டுப் பண்பின் அடிப்படை, ஒன்றோடொன்றைப் பிணைக்கும் தன்மையது. இது அஹிம்சை முறையின் பயனாக எழுந்துள்ளது.''

''அது சரிதான், பாபுஜி, புரட்சி வேண்டாம்; ஆனால் உடையவர்கள், தாங்களாகவே, தங்கள் உடைமைகளை, இல்லாதவர்களுக்குப் பங்கு பிரித்துக் கொடுத்துவிடுவார்களா?'' என்று கேட்டார் வர்கீஸ்.

''மனிதன் பிறந்தது முதல், சாகும்வரையில் பிறருக்குக் கடமைப்பட்டுக் கொண்டே இருக்கிறான். குழந்தைப் பிராயத்திலிருந்தே சமூகத்திலிருந்து உதவி பெறுபவனாகிறான். ஆனால், தனக்காகத்தான் சமூகம் இருக்கிறதென்று எண்ணிவிடக் கூடாதல்லவா? ஆனாலும், சில சமயங்களில் சமூகம் தனிப்பட்டவரைப் பராமரித்து வளர்க்கத் தியாகங்கள் புரிகிறது. சாதாரணமாக, ஒரு குடும்பமே, ஒரு குழந்தையை வளர வைக்கவும், படிக்க வைக்கவும் பாடுபடுகிறது. தனி மனிதன் தன் சிறு வருமானத்தைக் கொண்டு தன்னை, அண்டியுள்ள பலரைக் காக்கிறான். மனித வர்க்கம் முன்னேறும்பொழுது, பலவீனர்களுக்கு உதவி, அவர்களைக் கைதூக்கிவிட்டுப் பலப்படுத்த வேண்டும் என்ற அவர் அதிகரிக்கிறது. கப்பல் மூழ்கும்பொழுது, ஆண்கள், குழந்தைகளையும் பெண்களையும்தான் முதலில் தப்புவிக்கிறார்கள். அதுவே, வலிமையின் சக்தி. பலவீனரைப் பாதுகாத்துப் பராமரிக்க விரும்புவோன், தன் சுகபோகங்களைத் துறப்பதை இன்றியமையாததாய், நினைக்கிறேன். பிரபுத்துவம் பொருளைப் பறைசாற்றி இன்பம் நுகர்வதில் அல்ல; பிறரைக் காக்கவும் துறவு பூணவுமுற்ற சக்தியில்தான் இருக்கிறது. அந்த அளவுக்கு அவர்கள் மனம் பூரணமாகப் பக்குவம் அடையத்தான் செய்யும்.''

"பாபுஜி, பொருளாதார சமத்துவம் என்பதுபற்றிப் பலவிதமாகப் பேசப்படுகிறது. உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்றார் ராம்.

"பொருளாதார சமத்துவம் என்றால், ஒவ்வொருவரிடமும், ஒரே அளவு பணம், அல்லது சொத்து இருக்க வேண்டும் என்பதில்லை. எல்லோருக்கும் அவரவருக்குத் தேவையான அளவு இருக்க வேண்டும் என்பதே கருத்து. உதாரணமாக, எனக்கு மாரிக்காலத்தில் இரு போர்வைகள் தேவை. என் பேரப்பிள்ளை கனு காந்திக்குப் போர்வையே தேவைப்படுவதில்லை. எனக்கு ஆட்டுப் பாலும், ஆரஞ்சுகளும் பிற பழங்களும் தேவையாயிருக்க, கனுவுக்குச் சாதாரண உணவே போதும். எனக்கு இதையெல்லாம் பார்க்கையில், கனுவிடம் பொறாமையாய்த்தான் இருக்கிறது. ஆனால், பயன் என்ன? நானோ கிழவன். எனக்கு மாதத்தில் உணவுக்காக, கனுவைவிட அதிகம் செலவாயினும். எங்கள் இருவரிடமும் பொருளாதார வேறுபாடு இருப்பதாகச் சொல்லலாகாது. எறும்பின் உணவைப்போல், எத்தனையோ ஆயிரம் மடங்கு அதிக உணவு யானைக்குத் தேவையாயிருக்கிறது. ஆனால், இந்த வித்யாசத்தை அவற்றின் ஏற்றத் தாழ்வின் அடையாளமாக்கிக் கொள்ளலாகாது. ஆகவே, பொருளாதார சமத்துவம் என்பதன் பொருள், அவரவருடைய தேவைக்கேற்ற ஊதியமே. மார்க்ஸ் கூறிய விளக்கமும் இதுவேயாகும். ஒரு தனி மனிதன், மனைவியோடும் நான்கு குழந்தைகளோடும் உள்ள குடும்பங்களுக்குள்ள ஊதியமே, தனக்கும் வேண்டும் என்று கேட்பானாயின், அதுவே பொருளாதார சமத்துவத்தை மீறுவதாகும்" என்றார் காந்திஜி.

வர்கீஸ், "பாபுஜி, நாங்கள் சொல்வதைத்தான் நீங்களும் சொல்கிறீர்கள். ஆனால் சொல்லும் முறைதான் வித்தியாசம்" என்றார்.

ராம், "பாருங்கள், பாபுஜி; விடிய விடிய ராமாயணம் கேட்டுவிட்டு, சீதைக்கு ராமன் சித்தப்பா என்று சொல்வதைப் போலல்லவா இருக்கிறது, வர்கீஸ் சொல்வது" என்றார்.

"அவரவருக்கு அவரவரின் அபிப்பிராய உரிமை உண்டல்லவா?" என்றார் காந்திஜி.

"ஆம்" என்றார் ராம்.

எல்லோரும் விடைபெற்றுச் சென்றனர்.

# 15

என் பம்பாய் வாழ்வு முடிவடைந்தது. மகாத்மாஜி கைது செய்யப்பட்டு எர்வடா சிறைக்கு அனுப்பப்பட்டார். பிற தலைவர்களும் சிறைக்கு மூட்டைகட்ட ஆரம்பித்துவிட்டனர். நானும் என் மூட்டையைக் கட்டிக் கொண்டு சென்னை வந்து சேர்ந்தேன். உதயவனத்திற்கு வந்து ஆஜர் செய்துகொண்டேன். அப்பொழுது அந்நியத் துணிக் கடை மறியல் தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. போலீஸ் தடியடிப் பிரயோகமும், மும்முரமாய் நடந்து கொண்டிருந்தது. சர்க்காரின் சிறைகள் நிரம்பி விட்டன. மறியல் செய்பவர்களை எல்லாம் சிறைக்கு அனுப்புவதற்குச் சிறைகள் இல்லை. கைதிகளைப் பராமரிக்கும் செலவு வேறு. அதற்குக் குண்டாந்தடியால் செம்மையாக வாங்கி அனுப்பிவிடுவதுதான் அரசியலையும், பொருளாதாரத்தையும் ஒருங்கே திருப்தி செய்யும் காரியமாய் இருந்தது. உதயவனத்தில் காங்கிரஸ் ஆஸ்பத்திரியின் கட்டில்கள் நிரம்பி வழிந்து கொண்டிருந்தன. எல்லாம் அடிதடிக் கேஸ்கள்தான். அடிபட்ட சத்யாக்கிரகிகள் நினைவிழந்தும், வலியுடனும், அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தனர். இரண்டு நாளைக்கு முன்புதான் அப்பா ராவ் என்ற ஒரு பிரபல பத்திரிகையாசிரியர் அடிபட்டு இங்கு வந்து சேர்ந்தார். அதற்கு ஒரு வாரத்திற்கு முன்புதான் கிருஷ்ணமணியின் முறை. அவருக்குப் படுகாயம். பிடரியில் அடிபட்டு, முதுகெலும்பில் காயம். கழுத்தை அங்குமிங்கும் திரும்பாதபடி கட்டுப் போடப்

பட்டு இருந்தது. ஆனால், மனிதனின் வேகம் குறைய வில்லை.

"என்ன கிருஷ்ணமணி, எப்படியிருக்கிறீர்கள்? ராஜாவின் சம்மானம் அமோகமாய்க் கிடைத்திருக்கிறது போலிருக்கிறதே" என்றேன்.

"அட, தென்னாட்டுக் குட்டி வேதாந்தியா? (மகாத்மா அழைப்பதுபோல் கேலியுடன்) எப்பொழுது வந்தீர்கள்? பெரிய தலைவராகிவிட்டீர்கள் நீங்கள்" என்றார்.

"அப்படி ஒன்றும் இல்லை, கிருஷ்ணமணி. நான், தொண்டருக்கும் தொண்டருக்கும் தொண்டன்" என்றேன்.

"நாயைப் போட்டு அடிக்கிறாப் போலத்தான் அடிக்கிறான் இந்த வெள்ளைக்காரன்."

"நாயைக்கூட யார் இப்படி அடிக்கமுடியும்? அப்படி அடிப்பவன் பைத்தியக்காரனாயிருக்க வேண்டும். குரூர பாவம் கொண்டவனாயிருக்க வேண்டும். பார்க்கப்போனால் அவனால்கூட அது முடியாது. எஸ். பி. சி. ஏ. காரர்கள் வந்து கைது செய்துகொண்டு போய்விடுவார்கள்."

"அது கிடக்கட்டும், நடராஜ். அவர்கள் கொடுக்கும் ஒவ்வோர் அடியும் அவர்களின் அரசாட்சிக்குச் சாவுமணி என்பதை உணரவில்லையே. அவர்கள் கொடுக்கும் ஒவ்வோர் அடியும் உலகத்தின் மனசாட்சிக்குக் கொடுக்கப்படும் அடி என்பதையும் உணரவில்லையே."

"உண்மைதான். இது பகுத்தறிவுடன் செய்கிற காரியமா? ஏதோ வெறியில் செய்யப்படும் காரியமல்லவா? அடுத்தபடி யார் யார் மறியல் செய்யப் போகிறீர்கள்?"

"அதுவா, லட்சம் பேர். இந்தியன் சிந்தும் ஒவ்வொரு துளி ரத்தத்திலிருந்தும், ஆயிரக் கணக்கான பேர் வருவார்கள், வருகிறார்கள்."

"அது மிகவும் ஆச்சரியமா யிருக்கிறதல்லவா ?"

"ஆம், நடராஜ். அதுதான் மகாத்மா காந்தி செய்த அற்புதம். அவன் கம்பால் உடலை நொறுக்குகிறான்; வருத்துகிறான். ஆனால், உள்ளம் உறுதி பெறுகிறது; இதயம் வலிமை பெறுகிறது; உள்ளொளி பெருகுகிறது. இது எப்படி சாத்தியமாகிறது? மகாத்மா காந்தி என்கிற ஒரு பெரிய டைனமோ யந்திரம் ஆத்ம சக்தி என்கிற மின்சாரத்தை ஏராளமாக உற்பத்தி செய்து எல்லோருக்கும் அள்ளிக் கொடுத்துப் பரவச் செய்கிறது. மனிதனுக்கு மனிதன், வியாதிகள்தான் தொத்திக் கொள்ளும் என்பதில்லை. ஆத்மசக்தியும் அதுபோலவேதான் தொத்திக் கொள்கிறது. இப்பொழுது காந்தி என்னுமொரு சக்தி நம்மைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. அது நம்மிடையே இருக்கும் வரையில், 'நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்."

"சரியாகச் சொன்னீர்கள் கிருஷ்ணமணி. அன்று மகாத்மாஜீ சொல்லவில்லையா? 'மனிதனின் தைரியமும் சக்தியும், அவனது உடல் வலிமையிலிருந்து பிறப்பதல்ல. அது ஆத்ம பலத்திலிருந்து பிறப்பது. வன்முறையைவிட அஹிம்சை மேலானது, தண்டிப்பதைவிட மன்னிப்பது சிறந்தது, 'க்ஷமா வீரஸ்ய லக்ஷணம்' — 'மன்னிப்பதே வீரனுடைய சிறந்த அணிகலனாகும்' என்றெல்லாம் நமக்கு உபதேசிக்கவில்லையா? அவருடைய கொள்கையில் ஒரு சிறிதளவையாவது நாம் கடைப்பிடிப்பது என்பது ஏற்பட்டு விட்டால், எதையும் எதிர்த்து நிற்கும் ஓர் அமானுஷ்ய சக்தி வந்துவிடும் என்பதில் ஐயமே இல்லை" என்றேன்.

"உண்மைதான், நான் உங்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை. ஆனாலும் தொப்பிக்காரர்கள் தடியை எடுக்கும்பொழுது, நாம் தைரியத்தை இழந்து விடக்கூடாது என்பதற்குத்தான் சொல்ல வந்தேன்."

"அதென்ன கிருஷ்ணமணி, அப்படிச் சொல்கிறீர்கள்? மனிதனுக்கு ஏற்படும் பல தரப்பட்ட வேதனைகளில் உடல் வலிதானே சுலபமாகப் பொறுத்துக் கொள்ளக் கூடியது; இல்லையா?"

"பேஷ், அப்பொழுது புறப்படுங்கள் போருக்கு. போரில் திரும்பிப் பார்க்கக் கூடாது. பக்கத்தில் பார்க்கக் கூடாது. ஏனென்று கேட்கக் கூடாது. Theirs is but to do and die என்று கவி சொன்னானே, அதுபோல நம்மை அர்ப்பணித்துக் கொள்ளவேண்டியதுதான்."

"நாம் பெருமைப்படும் விஷயங்கள், தடியடிபடுவதும், சிறையில் இருப்பதும்தானே?"

ஒரு வாரம் கழித்து என் முறை வந்தது. நானும் கௌதா பாஸ்கர ராவ் என்ற ஆந்திர தேசபக்தரும் மறியல் செய்வது என்று தீர்மானிக்கப்பட்டது. பூக்கடைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு முன்பு உள்ள ஒரு பெரிய அந்நிய நாட்டு ஐவுளிக்கடை முன்புதான் மறியல். நானும், பாஸ்கர ராவும், கடைவாசலின் இரண்டு பக்கத்திலும் நின்று கொண்டோம். யாராவது வந்தால், "ஐயா, அந்நியத் துணி வாங்காதீர்கள்!" என்று கை எடுத்துக் கும்பிடுவோம். பொதுவாக மறியல் என்றால், அந்தப் பக்கம் ஒருவரும் வாங்க வரமாட்டார்கள். அப்படியே, ஒருவர், இருவர் வந்தாலும், நாங்கள் சொல்வதைக் கேட்டுத் திரும்பிவிடுவார்கள். சில சட்டைக்காரர்களும், சில சட்டைக்காரப் பெண்மணிகளும்தான் (ஆங்கிலோ இண்டியன்) மறியலை லட்சியம் செய்யாமல் உள்ளே போய்த் துணி வாங்குவார்கள்.

நாங்கள் பகல் மூன்று மணிக்குப் போய் நின்று கொண்டோம். நாலரை மணி வரையிலும் ஒன்றும் நிகழவில்லை. சிறிது நேரத்தில் எதிரிலிருந்த பச்சையப்பன் கல்லூரி மாணவர்கள், வந்து கூடிக்கொண்டார்கள்.

அதைப் பார்த்து இதர கூட்டமும் சேர்ந்து கொண்டது. 'மகாத்மா காந்திக்கு ஜே — வந்தே மாதரம்' என்ற கோஷம் கிளம்பியது.

'போலீஸ், போலீஸ்' என்ற கூச்சல் கிளம்பியது. எம். யு. ஸி. பக்கத்திலிருந்து வெள்ளைக்கார சார்ஜன்ட்கள் நாலைந்து பேர் குதிரைகளிலிருந்தபடியே தங்கள் தடிகளைச் சுழற்றிக் கொண்டு வந்தார்கள். பூக்கடைப் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து சுமார் இருபது மலபார் ரிசர்வ் போலீஸ் படையினர் தங்கள் குண்டாந்தடியுடன் வந்தனர். குதிரை வீரர்கள் நாங்கள் இருக்கும் பக்கம் வந்தனர். எங்களைப் பார்த்து "கெட் அவுட்", "போங்கள் வெளியே" என்று ஆணையிட்டனர். நாங்கள் இருவரும் 'மகாத்மா காந்திக்கு ஜே — வந்தேமாதரம்' என்று கோஷித்தோம். ஜனத்திரளும் அதற்கு எதிரொலி கொடுத்தது. குதிரைகள் எங்களை நோக்கி விரைந்து வந்தன. குதிரைகளைக் கண்டு கூட்டம் விலகி வழி விட்டது. ஜனங்கள் தள்ளி நின்றுகொண்டனர். மலபார் போலீசும் எங்களைச் சூழ்ந்து கொண்டது. குதிரை என்னை மிதித்து விடுமோ என்று நினைத்துக் கொண்டிருக்கும்பொழுதே, என் மண்டையில் இரும்பு உலக்கையால் அடித்ததுபோல் ஓர் அடி விழுந்தது. என் பொறி கலங்கி அப்படியே கீழே விழுந்தேன். அடுத்து, மலபார் போலீசின் அடி சரமாரியாக விழுவது லேசாகப் பிரக்ஞையில் விழுந்தது. அவ்வளவுதான். அதற்கப்புறம் என்ன நடந்தது என்பது எனக்குத் தெரியாது.

எனக்கு மறுபடியும், சுய உணர்வு வந்து கண்ணை விழித்துப் பார்த்தபொழுது உதயவனம் சத்யாக்கிரஹ ஆஸ்பத்திரியில் இருப்பதை அறிந்தேன். முழு நினைவு வரவில்லை. நினைவிற்கும், தூக்கத்திற்கும் இடையில் உள்ள நிலையில், கண்ணைத் திறக்க முயன்றேன்; முடியவில்லை. உடம்பின் வலியோ, தாங்க முடியவில்லை.

தலைக்கும் உடலுக்கும் போட்டிருந்த கட்டுக்கள் கண்ணைச் சிறிது மறைத்தன. இருந்தாலும், லேசாகக் கண்ணைத் திறந்துகொண்டு, மனத்தையும் கண்ணையும் ஒருசேர வைத்துப் பார்த்தேன். அப்பொழுதும் ஒருவித மயக்க நிலையில்தான் இருந்தேன். அது 'மயக்கமா? கனவா? நனவா?' என்று பிரமை கொண்டேன். அந்த நிலையில் தான் ஒரு முகம் தென்பட்டது. அது ஒரு முகமா? அல்லது தாமரையா? — அந்தத் தாமரையின் இதழ்கள் விரிந்தன.

"ஒன்றும் கவலைப்பட வேண்டாம். உங்களுக்கு ஆபத்து ஒன்றுமில்லை" என்றது அந்தத் தாமரை முகம். அது நன்றாய் என் காதில் விழுந்தது. அந்தக் குரலில்தான் என்ன இனிமை? அந்த இனிமை என் உள் உணர்வில் தைத்தது.

'இதோ பார், எனக்கு ஆபத்து இல்லை என்று கவலைப்படாமல் இருக்கச் சொல்கிறாளே! நான், எனக்கு என்ன ஆபத்து வந்துவிட்டதோ என்று கதிகலங்கித் தவித்துக் கொண்டிருக்கிறேனா? ஐயோ, இவனுக்கு ஆபத்து ஒன்றும் இல்லாமலிருக்க வேண்டுமே என்று யாராவது கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்களா? அல்லது, இந்தப் பெண்தான் எனக்காகக் கவலைப்படு கிறாளா?' என்று யோசனை செய்துகொண்டே கண்ணை மூடிக்கொண்டேன். மறுபடியும் தூங்கிவிட்டேனோ, மயங்கிக் கிடந்தேனோ? மறுபடியும் கண் விழிக்கையில் அதே சிரித்த முகம் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தது.

"ஏதாவது வேண்டுமா?" என்றாள் அந்தப் பெண் மணி.

"கொஞ்சம் தாகமாயிருக்கிறது" என்றேன். குளூகோஸ் ஜலத்தை எடுத்து என் வாயில் ஊற்றினாள்.

"கொஞ்சம்கூட அசைய முடியவில்லை, வலி அபாரம்."

" சிறிது பொறுத்துக் கொள்ளுங்கள். இன்னும் சிறிது நேரத்தில் டாக்டர் வந்து பார்ப்பார்" என்றாள்.

சிறிது நேரம் கழிந்ததும் டாக்டர் வந்தார். பரிசோதித்துப் பார்த்தார். " நண்பரே. கவலைப்பட வேண்டாம். காலையிலே எக்ஸ்-ரே எடுத்துப் பார்த்துவிட்டேன். வலது கையில் தோளருகேதான் எலும்பு சிறிது விரிந்திருக்கிறது. பிளாஸ்டர் போட்டுக் கட்டியிருக்கிறேன் மண்டைக் காயம், அபாயம் ஒன்றுமில்லை. காயங்கள், நாலைந்து நாட்களில் குணமாகிவிடும். கைக்கட்டு மாத்திரம், ஆறு வாரம் போட்டுக் கொண்டிருக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

" சிறிது தலையணையை நகர்த்தி வைக்கட்டுமா ?" என்று கேட்டாள் அந்தப் பெண்மணி. அந்தக் குரலில் தான் எவ்வளவு பரிவு !

" உன் பெயர் என்னவோ ?"

" என் பெயர் சரோஜா."

" இங்கு எவ்வளவு நாட்களாக இருக்கிறாய் ?"

" இந்தக் காங்கிரஸ் ஆஸ்பத்திரி ஆரம்பத்திலிருந்தே."

" அதற்கு முன்பு ?"

" நான் ஒரு பி. ஏ., எல். டி.; பள்ளிக்கூட வாத்தியார். நர்ஸ் வேலையும் தெரியும். அதிலும் பரீட்சை கொடுத்திருக்கிறேன்."

" சம்பளம் உண்டா ?"

" இல்லை. இதை ஒரு தொழிலாகச் செய்யவில்லை. இதை ஒரு சேவையாகத்தான் செய்கிறேன்."

" எல்லோருமே அப்படித்தானா ?"

"ஆம், டாக்டர்கள், நர்ஸ்கள், வேலைக்காரர்கள் உள் பட எல்லோருமே இதை ஒரு தூய தொண்டாகவே கருதி இதில் ஈடுபடுகிறோம்."

"இதில் எப்படி உன் மனம் ஈடுபட்டது?"

"நீங்கள் எப்படி இதில் ஈடுபாடு கொண்டீர்கள்? அதுபோலத்தான். தேசத்திற்காக ஒவ்வொருவர் ஒவ் வொரு விதத்தில் சேவை செய்கிறார்கள். நீங்கள் வலியை ஏற்று சந்தோஷப்படப் பார்க்கிறீர்கள். நாங்கள் உங்கள் வலியைப் போக்கி சந்தோஷப்படப் பார்க்கிறோம்."

"பிறர் துன்பத்தைத் தீர்க்க முயலும் உங்கள் தொண்டுதான் எல்லாவற்றிலும் சிறந்தது" என்றேன். அவள் சிரித்துக் கொண்டே அடுத்த கட்டில் பக்கம் போனாள்.

நான் எண்ணினேன்: பி. ஏ., எல். டி. படித்த பெண் ணாகவே தோன்றவில்லையே. எவ்வளவு அடக்கம், மரி யாதை! கறுப்பு பார்டர் போட்ட அந்த மஞ்சள் கதர் புடவை, அவளிடம் எவ்வளவு பொலிவோடு விளங்கியது மஞ்சள் மங்கலகரமான பொருள். அவள் திருமகளைப் போலவே ஒளி வீசி நின்றாள். பெயரும் தாமரை. தாம ரையைப் போன்று எப்பொழுதும் மலர்ந்து நிற்கும் முகம். அவள் முகத்தைப் பார்க்கும் பொழுதே என் வலி குறைந்துவிடும். அவள் புன்சிரிப்பு, எனக்கு பலத்தைக் கொடுக்கும்.

என்னை நன்றாய்க் கட்டிப் போட்டிருந்த படியால், எதற்கும் சரோஜாவின் உதவியையே நாடவேண்டியிருந் தது. எப்படி ஒரு சிறு குழந்தை தாயை நோக்கியிருக் குமோ அதைப்போல, சரோஜாவின் கைபார்த்துத்தான் என் காரியங்கள் நடக்க வேண்டும். அவளோ, ஒரு தாயைப்போல் என் சிறு விருப்பத்தையும் எதிர்பார்த்துச் செய்யத் துடித்துக் கொண்டிருந்தாள்.

சரோஜா, அடுத்த அறைக்குச் சென்றிருந்தாள். வாயில் இருந்த ஸ்பூனை எடுத்துப் பக்கத்தில் உள்ள அலமாரியில் வைக்கப்போனேன்; எட்டவில்லை; ஸ்பூன் கீழே விழுந்துவிட்டது. நான் திரும்பியதில் தலையணை சரிந்து தலையும் சிறிது சரிந்தது. வலிபொறுக்க மாட்டாமல் முனகினேன். பலத்த சப்தம்கூட இல்லை. அந்த முனகலைக் கேட்டு, சரோஜா ஓடிவந்தாள். தலையை இரு கைகளாலும் மெதுவாகத் தூக்கித் தலையணையில் வைத்தாள். அதில் என்ன பரிவு, என்ன உதவி! என் வலியெல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்து போயிற்று. அன்பு ஒரு பெரிய மந்திரவாதியாயிற்றே! அன்புக்கரம் என்ற மந்திரக் கோல் பட்டவுடன் துன்பம் எல்லாம் காற்றாக மறைந்து விடுகிறது.

"நான்தான் வருகிறேனே; அதற்குள் எதற்கு இப்படிக் கஷ்டப்படுத்திக் கொள்கிறீர்கள்?"

'நீ வேறு எங்கும் போக வேண்டாம். எனக்கு முன்னால் உட்கார்ந்து கொண்டிரு. உன்னை பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் போலிருக்கிறது; நீ சொல்வதைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும் போலிருக்கிறது; நீ மருந்து கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும் போலிருக்கிறது; உன் கையினால் என் கட்டுகளைப் பிரித்து மறுபடியும் போட்டுக் கொண்டே இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது' என்றெல்லாம் சொல்ல நினைத்தேன். ஆனால், சொல்லவில்லை. என் கண்கள் அவ்வளவையும் சொல்லிவிட்டன போலும்; அதை அவள் புரிந்துகொண்டாள் போலும். என் உடலை மெதுவாக வருடினாள். அவள் பார்வை, இதுவரையில் நான் கண்டிராத ஓர் அனுபவத்தைக் கொடுத்தது.

நான் யோசனையில் ஆழ்ந்தேன். குண்டாந்தடிப் பிரயோகத்தை மேலே வாங்கிக்கொண்ட தைரியம் என்னவாயிற்று? இவள் பார்வையிலே என் வலிமையை

யெல்லாம் இழந்து நிற்கிறேனே என்று என்னையே கடிந்து கொண்டேன். யுத்தத்தில் முனைந்து கொண்டிருக்கும் எனக்குப் பெண்மையை நினைத்துப் பார்க்கும் சந்தர்ப்பம் இது அல்லவே என்று நினைத்துக் கொண்டேன். ஆனால் இந்த விவேகமெல்லாம் சரோஜா கண்முன் தோன்றாத சமயத்தில்தான். அவள் எதிரே வந்து விட்டால், என் விரதம், வைராக்கியம் எல்லாம் தவிடு பொடி.

மூன்று நாளாகிவிட்டது. டாக்டர் வந்தார். "என்ன, எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

"வலி குறைந்திருக்கிறது. வீக்கம் வடிந்திருக்கிறது" என்றேன்.

"சரி, வியாழக்கிழமை, நீங்கள் கட்டிலைக் காலி செய்ய வேண்டும். கைக்கட்டு மாத்திரம் இன்னும் ஐந்து வாரம் அப்படியே இருக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

"என்ன சரோஜா, டாக்டர் இந்த இடத்தை விட்டுப் போகச் சொல்லுகிறாரே?" என்றேன்.

"அப்பொழுது, போக வேண்டாமா? படுத்த படுக்கையாகவே கிடக்கவேண்டும் என்கிறீர்களா?"

"உன்னைப் பார்ப்பதற்கு அதுதானே சந்தர்ப்பம். அதற்காக எவ்வளவு கிடக்கச் சொன்னாலும் தயார்."

அவள் சிரித்துக் கொண்டே, "நீங்கள் தயார். ஆனால், ஆஸ்பத்திரி தயார் இல்லையே. தினம் கேஸ்கள் வந்து கொண்டேயிருக்கின்றன. இருக்கிற கட்டில்களோ, மிகவும் சொற்பம். ஆகவே, அவசியமாக இங்கு வைத்துக் கொண்டு, மருத்துவம் பார்க்க வேண்டிய நோயாளிகளைத் தவிர, பாக்கிப் பேர்களை அனுப்புவதைத் தவிர வேறுவழி இல்லையே" என்றாள்.

"அப்போ நீயே என்னை விரட்டி விடுவாய் போலிருக்கிறதே."

"ஆஸ்பத்திரியில் இருந்துதானே போகப் போகிறீர்கள்?"

"ஆஸ்பத்திரியில் இருந்துவிட்டுப் போவதில் எனக்கு என்ன வருத்தம்? உன்னை விட்டுப் போகவேண்டும் என்பதில்தான்..."

"நீங்கள் அதற்குக் கவலைப்பட வேண்டாம். அதற்கும் ஒரு யுக்தி செய்திருக்கிறேன்."

"என்ன யுக்தியோ?"

"ஒன்றுமில்லை. எங்கள் வீட்டு மெத்தையில் இரண்டு அறைகள் இருக்கின்றன. அதில் ஓர் அறையில் குடக்கூலிக்கு இருப்பவர் இன்னும் இரண்டு நாளில் காலி செய்யப்போகிறார். அதை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்."

எனக்கு மிகவும் உற்சாகமாகப் போய்விட்டது. "ரொம்ப சரி, அந்த இடத்தை விட்டுவிடாதே. அதில் நானே வந்துவிடுகிறேன்" என்றேன்.

ஆனால் மறு நிமிஷம், 'நான் எப்படி வாடகை கொடுக்கிறது? எதை நம்பி என் பிழைப்பை அந்த அறையில் நடத்த ஆரம்பிக்கிறது?' என்ற கவலையும் பயமும் சூழ்ந்து கொண்டன.

ஆனாலும் சரோஜாவை அடிக்கடி பார்க்கலாம் என்ற ஆசையில் ஏதாவது ஒரு வழி தெரியும் என்ற ஒரு நப்பாசையும் என்னை ஆட்கொண்டது.

'எந்த வழி, எங்கே போகிறது?' என்று என்னையே கேட்டுக் கொண்டேன்

# 16

அன்று புதன்கிழமை; மறுநாள் ஆஸ்பத்திரியைக் காலி செய்யவேண்டும். சரோஜாவின் மேல்வீட்டு அறையை அமர்த்திக் கொள்வதாக, சுலபமாகச் சொல்லி விட்டேன். ஆனால், வாடகைக்குப் பணம் கொடுக்கப் போவது யார்? பிழைப்பை எப்படி நடத்துவது? 'சத்திரத்துச் சாப்பாடு, மடத்தில் படுக்கை' என்பதுபோல், மாமனார் வீடாகிய சிறையிலும், காங்கிரஸ் ஆஸ்பத்திரியிலும், காந்தியை உபசரித்த பிரபுவின் ஆதரவிலும் காலத்தைக் கடத்தியாகிவிட்டது. கைக்கட்டைப் பிரிக்க இன்னும் ஒரு மாத காலம் ஆகும். அதுவரையில் எனக்குப் பணிவிடை செய்ய யார் காத்திருக்கிறார்கள்? இவ்வளவு குறைகளையும் சொல்லிக் கொண்டு யாரிடம் போய் உதவி எதிர்பார்ப்பது; யார் உதவ முன் வருவார்கள்? அப்படியே உதவ வந்தாலும், எவ்வளவு உதவுவார்கள்? தவிர, யாராவது அப்படி உதவ வந்தாலும், பிறர் உதவியை நாடிப்பிழைப்பது ஒரு கௌரவமான காரியமா? 'உத்யோகம் கொடுங்கள்' என்று கேட்பதாயிருந்தால், என்ன வேலை கொடுப்பார்கள்? எல்லா வேலைக்கும் சிறிது பயிற்சி வேண்டும். தவிர, இப்பொழுது ஒரு கையில்லாத நொண்டி. தொழில் செய்யலாம் என்றால், மூலதனத்திற்கு எங்கே போவது? வாழ்க்கையின் பிரச்னை முதல் முதலாக விசுவரூபம் எடுத்து என்னை பயமுறுத்திற்று. 'அன்ன விசாரம், அதுவே விசாரம்' என்று முற்றும் துறந்த முனிவர் சொல்லவில்லையா? இதற்கு விமோசனம்

எங்கே தேடுவது? எப்படித் தேடுவது? கலங்கி நின்றேன். யாரோ என் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவது காதில் விழுந்தது. திரும்பிப் பார்த்தேன். தி. ஜ. வந்து கொண்டிருந்தார். "வாருங்கள், தி. ஜ." என்று, "இரு கைகளையும் கூப்பி உங்களை வணங்க முடியவில்லை. எனது இடது கையைக் கொடுக்கிறேன். இந்தாருங்கள், நம் வைஸ்ராய்க்கும் (இர்வின் துரைக்கும்) வலது கை கிடையாது. அவர் தம் கையைக் கொடுக்கும்பொழுது சொன்னாராம்: 'மற்றவர்கள் எல்லோரும் இதயத்திற்கு வெகு தூரத்தில் உள்ள கையைக் கொடுக்கிறார்கள். நான் இதயத்துக்குப் பக்கத்திலேயே இருக்கிற கையைக் கொடுக்கிறேன்' என்றாராம். அதுபோல என் இதயக் கையைக் கொடுக்கிறேன்" என்றேன்.

"பேஷ் வரவேற்பு! உங்கள் உடம்பு எப்படி இருக்கிறது?"

"வலி இல்லை. காயங்கள் ஆறிவிட்டன. ஆனால், வலது கையை மாத்திரம் இன்னும் ஒரு மாதம் கட்டுப் பிரிக்காமல் பாதுகாக்க வேண்டும். நீங்கள் எப்பொழுது விடுதலை அடைந்தீர்கள்? எப்பொழுது இங்கு வந்தீர்கள்?"

"நான் விடுதலை பெற்று மூன்று மாதமாகி விட்டது. சென்னை வந்து நாலைந்து நாள் ஆகிறது. அடுத்து என்ன செய்யப் போகிறீர்கள்?"

"அதுதான் தி. ஜ. எனக்கு இப்பொழுதுள்ள பிரச்னை. நாளை ஆஸ்பத்திரியைக் காலி செய்யவேண்டும். என்ன செய்யப்போகிறேன் என்பதை நினைக்கவே, பயமாயிருக்கிறது. இதைப்பற்றிப் பேசவும் கூச்சமாயிருக்கிறது."

"பரவாயில்லை. நீங்கள் கவலைப்பட வேண்டாம். உங்களுக்கு உத்யோகம் வாங்கி வைத்துவிட்டேன். நான் இங்கு வந்ததற்குக் காரணமே, அதை உங்களுக்குச்

சொல்வதற்குத்தான். பம்பாயில் தயாநிதி என்ற பிரபல பத்திரிகாசிரியர் இருக்கிறாரே, தெரியுமா? அவரும், ஒரு குஜராத்திக்காரரும் சேர்ந்து கொண்டு ஓர் ஆங்கில தின சரியும், ஒரு தமிழ் தினசரியும் ஆரம்பிக்கிறார்கள். தயாநிதி அதன் ஆசிரியர். நான் உதவி. ஆனால் தயாநிதி பெய ரளவில் ஆசிரியர்; பொறுப்புப் பூராவும் என்னு டையது. எனக்குத் துணையாக நான் விரும்புகிறவர் களையே தேர்ந்தெடுக்கச் சொல்லிவிட்டார். நான் உங்களை யும், கிருஷ்ணமணியையும், ராமநாதனையும் சொல்லியிருக் கிறேன். ராமநாதனை அவருக்கே தெரியும். உங்களைப் பற்றி, ராம் அவருக்குச் சிபார்சு செய்திருக்கிறாராம். ஆகவே அவருக்கு மிகவும் திருப்தி. உடனே எல்லோரை யும் வரவழைத்துச் சேர்க்கச் சொல்லிவிட்டார். பத்திரிகை அடுத்த மாதம் பதினைந்தாம் தேதி ஆரம்ப மாகிறது. இன்னும் ஒரு மாதத்திற்குமேல் இருக்கிறது. அதற்குள் கை சரியாகிவிடும். உங்களுக்குச் சம்பளம் எழுபது ரூபாய். அட்வான்ஸாக நூறு ரூபாய் கொண்டு வந்திருக்கிறேன். பத்திரிகையாளர் கஷ்டங்கள் தயா நிதிக்கு நன்றாகத் தெரியும். பெயருக்கேற்றாற்போல், தயை நிறைந்த உள்ளம் படைத்தவர். சென்னைக்கு வருவ தற்குப் பணம் இருக்காது என்பதற்காக, அவரே எல்லோருக்கும் அட்வான்ஸ் கொடுக்கச் சொல்லியிருக் கிறார். என்ன, என்னுடன் சேர்ந்து ஒத்துழைக்கச் சம்ம தந்தானா?''

''இது என்ன தி. ஜ.? நீங்கள் கேட்பது, 'நீ உயிருடன் வாழ விரும்புகிறாயா? மானத்துடன் இருக்க விரும்பு கிறாயா?' என்று கேட்பதுபோல இருக்கிறது. நீங்கள் இன்று என்னுடைய கலிதீர்க்க வந்த கடவுளாக வந்திருக் கிறீர்கள். என் வாழ்வை உய்விக்க வந்தவர் நீங்கள்தான். உங்களுடன் வேலை செய்வதற்கு நான் மிகவும் கொடுத்து வைத்திருக்கிறேன்.''

"சரி, ரூபாயை வாங்கிக் கொள்ளுங்கள்" என்று நீட்டினர். வாங்கிக் கொண்டேன். நான் சொந்தமாகச் சம்பாதிக்கப் போகும் ஊதியத்தின் முன் பணம்.

"தி. ஜ., நான் நாளையிலிருந்து, சிந்தாதிரிப் பேட்டையில், சாமிசெட்டி தெருவில், 15-ம் நம்பர் வீட்டு மெத்தையில் ஓர் அறையில் இருப்பேன். நீங்கள் எங்கு இருக்கப் போகிறீர்கள்?"

"நான் தற்காலம் திருவல்லிக்கேணி, பைகிராப்ட்ஸ் ரோடில் 'சுதந்திரச் சங்கு' காரியாலயத்தில் தங்கியிருக்கிறேன். வேறு ஜாகை பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் அங்கே காரியாலயத்திலேயே இப்பொழுது என்னைச் சந்திக்கலாம்."

"அதெல்லாம் சரிதான், தி. ஜ., நீங்கள் முன் பணம் கொடுத்தீர்கள்; நானும் வாங்கிக் கொண்டேன். பத்திரிகைத் தொழிலில் சிறிதேனும் அனுபவம் இல்லையே."

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. உங்கள் அளவுக்கு விஷயம் தெரிந்தவர்கள் பத்திரிகை உலகில் வெகு சிலரே. மீன்குஞ்சுக்கு நீச்சல் சொல்லித் தர வேண்டுமா? தைரியமாக இருங்கள். வருங்காலத்தில் உங்களுக்குப் பேரும் புகழும் காத்திருக்கின்றன" என்று தைரியம் சொல்லி விட்டு, சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு, விடை பெற்றுச் சென்றார்.

அதிருஷ்டத்தில் நம்புகிறவன் என்று சொன்னேன் அல்லவா? மறுபடியும் அந்த அதிருஷ்டத்தின் ஆதிக்கத்தை நான் உணர முடிந்தது. ஒன்றுமறியாமல் தவித்து நின்ற எனக்குக் கடவுள் காட்டிய கருணையை நினைந்து நெக்குருகினேன். கடைசி நேரத்தில் கடவுள் என்னைக் கை தூக்கிவிடுகிறார். நான் வெகு நாட்களாக எந்தத் தொழிலில் ஈடுபடவேண்டும் என்று கனவு கண்டுகொண்டிருந்தேனே, அந்தப் பத்திரிகைத் தொழிலில் ஈடுபடும்

வாய்ப்பு என்னைத் தேடி வருகிறது — அதுவும் என்னிடம் அன்பு கொண்ட தி. ஐ. வுடன் வேலை செய்யவும், கற்றுக் கொள்ளவும்! எப்படிப்பட்ட வாய்ப்பு? நினைந்து நினைந்து பெருமூச் செறிந்தேன்.

சம்பளமும் போதுமானது; ஓர் ஆசாமிக்கு வெள்ளம். ஒரு தட்டு போண்டாவும், அரை கப் காப்பியும் ஒன்றே காலணா. மூன்றே அணுவிற்கு வயிறு நிறையச் சாப்பாடு. ஒரு ரூபாய் செலவழித்து விட்டால், மலைப்பாம்பைப் போல் தின்றுவிட்டுக் கிடக்கலாம். வீட்டு வாடகை ஐந்தே ரூபாய்தான் — அந்த மெத்தை அறைக்கு. என்னுடைய புது வாழ்வு, இவ்வளவு சுலபமாக, சுகமாக ஓடும் என்று கற்பனையில்கூட நான் எண்ணியதில்லை. இப்படிப் பட்ட நல்ல செய்தியைக் கேட்டதனால், இரவு பூராவும் தூக்கம் வரவே இல்லை. புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தேன்.

மறுநாள் காலை, நான் ஆஸ்பத்திரியை விட்டு என் புது இருப்பிடத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். சரோஜா, என் அறைக்கு வந்தாள். "உங்களை ஆஸ்பத்திரியிலிருந்து விட்டு விட்டார்கள். ஆனால், என்னிடமிருந்து நீங்கள் இன்னும் விடுபடவில்லை. இங்கும் நீங்கள் பேஷன்ட் தான்; நான் நர்ஸ்தான்" என்றாள்.

"சரி, சரோஜா, ஒரு சிறு திருத்தம். வியாதிக்கு மாத்திரம்தான் நர்ஸ் அல்ல; வாழ்க்கைக்கும் நர்ஸ்" என்றேன்.

சரோஜா அதைக் காதில் வாங்கிக் கொண்டாளோ, என்னவோ, "ஆஸ்பத்திரியிலிருந்து வந்ததும், உங்களுக்கு வேண்டியதைச் செய்து கொடுக்கிறேன். நான் இல்லாத சமயங்களில் ஏதாவது வேண்டுமானால், என் தாயார் இருக்கிறார்கள்; வேலைக்கார அம்மா இருக்கிறாள்; கூச்சப்படாமல், கேளுங்கள். அவர்கள் செய்வார்கள்."

எனக்கு ஹோட்டலிலிருந்து எடுப்புச் சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்து இருக்கிறேன். அடுக்குப் பாத்திரத்தில் சாப்பாடு வந்திருந்தது. இடது கையினாலேயே எல்லா வற்றையும் எடுத்துப் போட்டுக் கொண்டேன். சோற்றைப் பிசைந்து கொள்ளவேண்டும். அதற்குப் பதிலாக ஒரு ஸ்பூனால் சாதத்தை நசுக்கிக் கொண்டிருந்தேன். இடது கையால்தான் பிசைந்து கொள்ள வேண்டும். ஆஸ்பத்திரிக்குக் கிளம்பிக் கொண்டிருந்த சரோஜா, எட்டிப் பார்த்தாள். "என்ன, சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டுக்கொண்டே வந்தாள். நான் சாதம் பிசைவதற்குப் படும் அவஸ்தையைப் பார்த்து, "ஏன் இந்த அவஸ்தை? நான் பிசைந்து கொடுக்கட்டுமா?" என்றாள்.

நான் சொன்னேன்: "நர்சம்மா, எனக்கு எங்கம்மா பிசைந்து போட்டது, மறந்தே போய்விட்டதே; கனவு போன்ற நினைவுகூட இல்லை. அம்மாவின் முகம்கூட இப்பொழுது மங்கிக் கொண்டு வருகிறது. ஆகையால் நீ பிசைந்து போடுவதில், சிறிதும் ஆட்சேபம் இல்லை. ஆனால் நீ பிசைந்து கொடுக்கும் சாதத்தில், ஒரு கவளம், உன் வாயில் போட்டுக் கொள்ளவேண்டும்" என்றேன்.

சரோஜா, கலகலவென்று சிரித்தாள். "அடேயப்பா. ஆளுக்குள்ளே ஆளு பெரிய ஆளு! வாயில்லாப் பூச்சி மாதிரி பாசாங்கு செய்துகொண்டு என்ன பேச்சுப் பேசுகிறீர்கள்?" என்று ஆச்சரியப்பட்டாள். என் பேச்சில், உண்மை எவ்வளவு, பரிகாசம் எவ்வளவு, அன்பு எவ்வளவு என்று எனக்கே புரிபடவில்லை. ஆனால் என்னுடைய பேச்சில்தானா கவர்ச்சியைக் கண்டாள்; பிறருக்குக் கவர்ச்சி கொடுக்க முடியாத விஷயம் என் பேச்சுத்தான் என்று எண்ணியிருந்தேனே! உலகமே பேச்சுத் திறத்தாலேதான் பரிபாலிக்கப்படுகிறது. இச்சகம்பேசிக் காரியத்தைச் சாதிக்கிறவர்கள் எவ்வளவு பேர்? உள்ளொன்று

வைத்துப் புறமொன்று பேசிக் காரியம் கூடிவரச் செய்கிற வர்கள் எத்தனை பேர்? இன்சொல்லால் உலகத்தைக் கவர்கிறவர்கள் எத்தனை பேர்? இப்படியெல்லாம் செயல் படக்கூடிய பேச்சின் வலிமை இல்லையே. இவளுக்கு மட்டும் என் பேச்சு கவர்ச்சியாக இருக்கிறதா? நான் பேசும் பேச்சிற்கே, உயிரையும், உணர்ச்சியையும் ஊட்டக்கூடிய என் இதயத்தில் ஒரு கவர்ச்சியையும் காணவில்லையே? உடலுக்கு வேதனை உண்டு என்பதை அறிந்தவள், என் உள்ளத்திற்கும் வேதனை உண்டு என் பதை அறிந்துகொள்ளவில்லையா?

அப்படியே படுத்துக் கொண்டு தூங்கிவிட்டேன். வெகு நேரம் தூங்கி இருக்கவேண்டும். எழுந்திருக்கையில் மாலை நேரம் ஆகிவிட்டது. வெயில் கடுமையாக இருந்த படியால், புழுக்கமாயிருந்தது. குளிக்கலாம் போல் இருந் தது. வாளியை எடுத்துக்கொண்டு கீழே குளியலறைக் குச் சென்றேன். வலது கையில் தண்ணீர் படாமல், உடலையும் தலையையும் தண்ணீரால் நனைத்துக் கொண்டு, வெளியே வந்தேன். நான் படியிலேறுவதற்கும் சரோஜா திரும்பி வருவதற்கும் சரியாயிருந்தது.

"என்ன, குளித்தீர்களோ? வலது கையில் தண்ணீர் படாமல் பார்த்துக் கொண்டீர்களா?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள்.

நான் ஒற்றைக் கையினாலேயே தலையையும், உடம் பையும் தடவித் துடைத்துக் கொண்டிருந்தேன். ஈரம் போகவில்லை. சரோஜா பார்த்தாள். "இங்கே கொண் டாருங்கள். ஈரமே போகவில்லை. குளித்ததே தப்பு. ஈரம் வேறு போகவில்லையென்றால்..." என்று துணியைப் பிடுங்கிக் கொண்டாள்.

"வேண்டாம். திரும்பத் திரும்ப ஏன் சிரமம் கொடுக்க வேண்டும்?"

"சிரமமாவது, நான் உங்கள் நர்ஸ். நீங்கள் குண மடைய உதவுவதும், மேலும் உங்களுக்கு உடம்பிற்கு ஒன்றும் வராமலிருக்கும்படி பார்த்துக் கொள்ளுவதும், என் பொறுப்பு" என்று துவட்டிவிட்டாள்.

'நான் யார்? இவள் யார்? என் நலத்தில் இவளுக்கு என்ன அவ்வளவு அக்கறை? கேட்பாரற்றுக் கிடக்க வேண்டிய எனக்குப் பெரிய ஊன்று கோலாகத் தோன்றி யிருக்கிறளே, இவளுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? கைம்மாறு கருதாது, பிறர் துன்பம் துடைக்கும் பணியை ஏற்றுக் கொண்டு தொண்டு செய் யும், இந்தப் பெண்மணியின் பரந்த உள்ளத்தை என்ன வென்று சொல்வது' என்று யோசித்துக் கொண்டிருந் தேன்.

"இதோ பாருங்கள். முரட்டுத்தனமான காரியங்கள் செய்து, கோளாறு ஏற்பட்டால், மறுபடியும் வெகு நாட் கள் ஆகும், குணமடைவதற்கு. அதனுல் ஜாக்கிரதை!"

"என்ன செய்ய வேண்டுமென்கிருய்?"

"இருந்த இடத்தை விட்டு நகரக்கூடாது. எது வேண்டுமாளுலும் என்னைக் கேளுங்கள்; கொண்டு வருகிறேன்."

"நான் என்ன? மரமா, கல்லா, அசையாமல் இருக்க?"

"அநாவசியமாக உடலுக்குத் தொந்தரவு கொடுத் துக்கொண்டு, வியாதியை இழுத்து விட்டுக்கொள்ளக் கூடாது என்றுதான் சொல்ல வந்தேன்."

"சரி, உன் உத்தரவு."

சரோஜா, சிரித்துக் கொண்டே போனுள். அந்தச் சிரிப்பிலேதான் என்ன கருணை! என்ன இரக்கம்! பெண் இனமே, தாய்மைக்குப் பிறந்த இனம்தானே?

# 17

பத்திரிகை ஆரம்பித்தாகிவிட்டது. ஆரம்பித்த தினத்தில் கைக்கட்டுப் பிரிக்கவில்லை. இரண்டு நாட்கள் கழித்துத்தான் கட்டைப் பிரித்தார்கள். அன்றே பத்திரிகை ஆபீசிற்குப் போய்விட்டேன். தி. ஜ. விடம் போனேன். மகிழ்ச்சியுடன் என்னை வரவேற்றார் தி. ஜ.

"என்ன, நடராஜ், கை சரியாகிவிட்டதா?" என்றார் தி. ஜ.

"இன்றுதான் கட்டைப் பிரித்தார்கள். உடனே வந்துவிட்டேன்" என்றேன்.

"எழுத முடியுமா?" என்றார்.

"பரவாயில்லை. வலிக்கும்பொழுது நிறுத்திவிடுகிறேன். எப்படியோ சமாளித்துக் கொள்கிறேன். எனக்கும் வீட்டிலேயே இருந்து அலுத்துப் போய்விட்டது."

தி. ஜ. என்னை ஆசிரியர் குழு இருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்றார். ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டேன். கிருஷ்ணமணியும், ராமநாதனும் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். இரண்டு பேரும் என்னைப் பார்த்துப் புன்முறுவல் செய்துவிட்டு, அவர்கள் வேலையில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார்கள். காரணம், தினசரிப் பத்திரிகை ஆபீசில், காலை முதல் கடைசி பாரம் ப்ரூப் பார்த்துப் போகும் வரையில், தலையைச் சிறிது கூடச் சாய்க்க முடியாது. காலி (நீளமாக அச்சுக்கோக்கப்

பட்டதன் பிரதி) காலியாக, பிழை திருத்துவதற்கு வந்து கொண்டிருக்கும். அதைத் திருத்தி அனுப்பவேண்டும். இதற்குள் சமாசாரத் துண்டுகள் நீண்டுவிடும். அவற்றை மொழி பெயர்த்தாக வேண்டும். மூச்சுவிட நேரமிருக் காது. இவ்வளவு வேகமாகச் சுழன்று கொண்டிருக்கும் யந்திரத்தில் நானும் ஒரு சுழலும் சக்கரமாகச் சேர்ந்து கொண்டேன்.

ஆங்கிலத்தில் நல்ல புலமை பெற்றிருந்தேன். வட மொழியிலும் நல்ல பரிசயம். ஆனால், ஆங்கிலச் செய்தி களைத் தமிழில் ஆக்கும்பொழுது, வார்த்தைகள் அகப் படாமல் திணறினேன். மகாத்மாஜியின் கட்டுரை யையோ, பேச்சையோ மொழி பெயர்க்கும்பொழுது தவிப்பேன். ஆங்கில மொழியில் எவ்வளவு குழைவு இருக்கிறது! எவ்வளவு தெளிவு இருக்கிறது! எவ்வளவு மென்மை இருக்கிறது! ஒரு கருத்தை எவ்வளவு பாகு படுத்திச் சொல்ல முடிகிறது? வார்த்தைகளில் என்ன வர்ணபேதங்கள்? நான் வேண்டுமா, நான் வேண்டுமா என்று பல வார்த்தைகள் உபயோகத்துக்குத் தயாராய் இருந்தன. ஆனால், தமிழிலோ, இந்த அளவிற்கு வார்த் தைகள் சேவித்து நிற்கவில்லை. அப்பொழுது தி. ஜ. சொன்னார்: "நடராஜ், உங்களிடம் கருத்துப் பஞ்சம் இல்லை. ஆனால் வார்த்தைகளுக்குத்தான் பஞ்சம். உங்கள் படிப்பு ஆங்கில இலக்கியத்தில் ஈடுபட்டு நின்றிருக் கிறது. நீங்கள் நம் தமிழ் இலக்கியங்களையும் படியுங்கள். இரண்டாயிரம் வருஷங்களாக, தங்கள் உணர்ச்சிகளையும், கருத்துக்களையும் கொள்கைகளையும், தத்துவங்களையும் நம் மூதாதையர்கள் சொல்லியிருக்கவில்லையா? எதைச் சொல்லத் திணறியிருக்கிறார்கள்? மொழியின் வளர்ச்சி, அது பயன்படுத்தப்படுவதைப் பொறுத்தேயிருக்கிறது. ஆனால் இதற்காக ரயில்வே ஸ்டேஷன், ஏரோப்ளேன் இவற்றுக்கெல்லாம் வார்த்தைகளைச் சங்க இலக்கியத்தில் தேடித் திண்டாட வேண்டாம். சங்க காலத்தில் ரயிலும்

கிடையாது; ஏரோப்ளேனும் கிடையாது. தவிரவும் பழகிப்போன வார்த்தைகளுக்குப் பதிலாகப் புரியாத வார்த்தைகளைக் கொண்டுவந்து போட்டு, படிப்பவர்களைக் குழம்பச் செய்யக்கூடாது" என்று சொல்லிக் கொடுத்தார். அதிலிருந்து தமிழ் இலக்கியங்களைப் படிக்க ஆரம்பித்தேன்.

பத்திரிகைக் காரியாலயத்தில் தி. ஜ. செயல்படும் முறையைப் பார்க்கும் பொழுது, எனக்கு அவரிடமிருந்த மதிப்பு, பலமடங்கு அதிகப்படியாக உயர்ந்தது. திடுக்கிடும் சம்பவங்களையோ, திடுக்கிடும்படியான முறையில் செய்திகளையோ வெளியிட அனுமதிக்கமாட்டார். 'சர்ச்சில் கொலை' என்று பத்திரிகை போஸ்டரில் விளம்பரம் இருக்கும். என்ன, சர்ச்சில் கொலை செய்யப்பட்டு விட்டாரா என்று பத்திரிகையைப் புரட்டிப் பார்ப்பார்கள். ஏதோ ஒரு 'சர்ச்'சில் (தேவாலயத்தில்) யாரோ ஒருவர் கொலை செய்யப் பட்டதைப்பற்றிச் செய்தி இருக்கும். ஒரு சமயம், கல்கி காலமானார் என்ற விளம்பரத்தைப் பார்த்துவிட்டு மனம் அதிர்ந்து பத்திரிகையை வாங்கிச் செய்தியைப் படித்தவர்கள், யாரோ கல்கி செட்டியார் என்பவர் இறந்துபோனதைப் பற்றிய செய்தியைக் கண்டார்கள். (அமரர் கல்கியின் அன்பர்கள் பெருமூச்சுவிட்டு மகிழ்ந்தார்கள்.) இப்படிச் செய்வது கீழ்த்தரம், பத்திரிகை தர்மத்திற்கு விரோதம் என்றெல்லாம் அறிவுறுத்துவார். இந்த மோஸ்தரில் யாராவது தலைப்புக் கொடுத்துவிட்டால், அதைக் கண்டித்துக் குப்பைத் தொட்டியில் போட்டுவிடுவார். செய்தியைக் கொடுக்கும் முறையில், பத்திரிகையின் கௌரவத்திற்கு விரோதமாகவோ, மனிதப் பண்பாட்டிற்கு விரோதமாகவோ ஒன்றையும் தரக்கூடாது என்பதை வற்புறுத்துவார்.

அதுபோலவே அவர் செய்திகளுக்குத் தலைப்புக் கொடுக்கும் திறனையும், தலையங்கத்திற்கு விஷயத்தைப்

பொறுக்கும் திறனையும் பார்த்து வியக்காமல் இருக்க முடியாது. செய்திகள் சிறு சிறு துணுக்குகளாய் நுணுக்கமாய் வருகின்றன. அதில் எது முதல்தரம், எது இரண்டாந்தரம், எது சாதாரணம் என்று பாகுபடுத்துவது தானே ஆசிரியர் வேலை. எது முன்னும் பின்னும் தொடர்பு கொண்ட நிகழ்ச்சி, எது அரசியல் முக்கியத்துவம் பெற்ற நிகழ்ச்சி என்று சீர்தூக்கிப் பார்க்க வேண்டாமா? நாங்கள் 'இது அவ்வளவு முக்கியமானதல்ல' என்று ஒதுக்கி இருப்போம். தி. ஜ.வின் பருந்துப் பார்வையிலிருந்து அது தப்பி விடாது.

"என்ன, நடராஜ். இவர் கட்சியிலிருந்து விலகியிருக்கிறாரே. அதை முக்கியமல்ல என்று உதறிவிட்டீர்களே" என்பார்.

"ஆம், தி. ஜ. யாரோ ஒருவர் கட்சியிலிருந்து விலகிவிட்டார் என்றால் அது அவ்வளவு முக்கியமா?" என்பேன் நான்.

"அது மிகவும் முக்கியம். அவர் இன்ன காரணத்தால் விலகினார்; அவருடன் பத்துப் பேர் விலகுவார்கள். மந்திரிசபைக்கு ஆதரவு இராது" என்று அதன் முக்கியத்துவத்தை எடுத்துரைப்பார். அதுபோலவே, நாங்கள் ஒதுக்கிவிட்டிருந்த ஒரு விஷயத்தை எடுத்துக் கொண்டு தலையங்கம் எழுதுவார். பிரபல பத்திரிகைகளில் தலையங்கம் அதைப்பற்றியேதான் இருக்கும்.

தி. ஜ. வின் தலையங்கங்களில் கருத்தின் ஆழம் இருக்கும்; கண்யம் இருக்கும். வேகம் இருக்கும்; சொற்சிலம்பம் இருக்காது; வசைமொழி இருக்காது. வசைமொழியில் தயாநிதியை மிஞ்ச முடியாது. மதராஸுக்கு வந்திருக்கும் நேரங்களில் தயாநிதி எழுதுவார். சொற்போர் நடத்தும் சொல்லின் செல்வன் தயாநிதியின் சொல்லில் சுடர் தெறிக்கும்; வார்த்தையில் விஷம் இருக்கும்;

கருத்தில் கனல் கக்கும். அது அவருக்கே உரித்தான சொந்த பாணி. நாங்கள் அதைப் பின்பற்றுவதுமில்லை; பின்பற்ற முயலுவதுமில்லை.

எங்களுக்கு மாடல் வாத்தியார் தி. ஜ. தான். பத்திரிகைக் காரியாலயத்தில் கற்கவேண்டிய ஒவ்வொரு விஷயத்தையும் தி.ஜ.விடம் பயின்றேன். செய்திகளைத் 'தர்ஜமா' செய்வது, எடிட் செய்வது, தலைப்புக் கொடுப்பது, கல்லின்மேல் (பத்திரிகை ஆபீசில் முக்கிய வேலை) எல்லாப் பத்திகளையும் சேர்த்துப் பக்கம் பண்ணிக் கொடுப்பது - இவை எல்லாவற்றிலும் அவர் கையாண்ட முறையையே பின்பற்றினேன்; எழுதும் முறையிலும் அவரையே பின் தொடர்ந்தேன்.

இவற்றைத் தவிர, தி. ஜ. சிறு கதைகள் எழுதுவார். கதைகளிலே எளிமை இருக்கும்; தெளிவு இருக்கும்; கருவிலும், உருவிலும் மென்மை இருக்கும். சிறுகதைகள் எழுதுவதைப் பற்றியே கட்டுரைகள் எழுதுவார். கதையின் விஷயத்தை எப்படிப் பொறுக்க வேண்டும், எப்படிக் கையாள வேண்டும், எப்படி உருவாக்க மேண்டும் என்பதைப்பற்றி எல்லாம் கட்டுரை எழுதுவார். அதைப் படிக்கும் பொழுதுதான் எனக்குச் சிறுகதைகள் எழுத வேண்டும் என்ற வேகம் மனத்தில் எழுந்தது.

அது சிறுகதையின் பொற்காலம். புதிது புதிதாகக் கதைகள், பத்திரிகைகளில் வெளிவரத் தொடங்கின. புதிது புதிதாக எழுத்தாளர்கள் தோன்றினார்கள். தேசீய எழுச்சி, இலக்கியத்திலும் ஒரு புத்துணர்ச்சியையும் உத்வேகத்தையும் உண்டு பண்ணியது. பார்க்கப் போனால், தேசீய எழுச்சியின் மறுபக்கமே இலக்கிய மலர்ச்சியாகப் பரிணமித்தது. பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டவர்களே சிறந்த இலக்கிய கர்த்தாக்களாக விளங்கினார்கள். பத்திரிகைகள் மூலம் தேசீய எழுச்சியையும், இலக்கியத்தில் மலர்ச்சியையும் தூண்டிக்கொண்டிருந்தனர்.

இந்த இலக்கிய வெறி என்னைப் பிடித்துக்கொண்டது. 'நானும் ஏன் கதை எழுதக்கூடாது' என்ற ஓர் ஆசை பிறந்தது. ஒரு கதை எழுதி விட்டேன். கடுதாசும் பேனவும் எழுதுவதற்கு முக்கியமாக வேண்டும். கதை எழுதியாகி விட்டது. பட்டை போட்ட மணிகள் போன்ற தி. ஜ. முதலிய கதாசிரியர்களின் கதையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, என் கதையில் ஒன்றுமே இல்லை. ஆனால், ஆசை யாரை விட்டது. பயம் ஒரு பக்கம். என்ன இவ்வளவு மோசமாயிருக்கிறதே என்று நண்பர்கள் நினைத்து விடுவார்களோ என்ற பயம். எப்படியோ தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, தி. ஜ தனிமையில் இருக்கும்பொழுது அவரிடம் சொன்னேன். "ஏதோ எழுதலாம் போல் தோன்றியது. ஒரு கதை எழுதியிருக்கிறேன்; படித்து நன்றாயிருந்தால் சொல்லுங்கள். நன்றாயில்லாவிட்டால், இரண்டாம் பேருக்குத் தெரியாமல் கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டு விடுங்கள்" என்று அதை அவரிடம் கொடுத்துவிட்டு, அவர் முகத்தைக்கூட பார்க்காமல் வேகமாகத் திரும்பி விட்டேன்.

ஒவ்வொரு நாள் மாலையிலும், திருவல்லிக்கேணி கடற்கரையில் நாங்கள் எல்லோரும் சந்திப்பது வழக்கம். பிற பத்திரிகைகளில் உள்ள நண்பர்கள் பலரும் வருவார்கள். நல்ல ஜமா கூடும். அவ்வப்பொழுது நிகழும் அரசியல், கலை, இலக்கிய நிகழ்ச்சிகளைப் பற்றி, காரசாரமாக விவாதங்கள் நடக்கும். அவை சுவையுள்ள விருந்தாகவும் நடக்கும். மறுநாள் வழக்கம்போல் கடற்கரை நண்பர்கள் கூட்டத்திற்குச் சென்றேன். தி. ஜ. நான் வருவதைப் பார்த்துக் கவனிக்காதது போலவே இருந்தார். போன உடனேயே, "வாருங்கள் நடராஜ். இப்படி உட்காருங்கள்" என்று பக்கத்தைச் சுட்டிக்காட்டுபவர், பேசாமலிருக்கவே, எனக்கு என்னவோ ஏதோ என்று மனம் சங்கடப்பட்டது.

அவர்கள் அன்று பிரபல பத்திரிகையில் வெளியாகியிருந்த ஒரு பிரபல ஆசிரியரின் கதையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"ஒன்றுக்கொன்று பொருந்தாத சம்பவங்கள். எதிர் பாராத சம்பவங்கள். ஆனால், மொத்தத்தில் படிக்கும் பொழுது ஒரு கவர்ச்சி" என்றார் ஒருவர்.

"ஓ. ஹென்றியின் பாணி. ஆனால் ஓ. ஹென்றியின் குணச்சித்திரம் இல்லாவிட்டாலும், அதிசய முடிவைக் கையாள நன்றாகப் பழகியிருக்கிறார்" என்றார் மற்றொருவர்.

"அவருடைய கதைகளில் கதை அம்சம் நிரம்பியிருக்கும். கலை அம்சம் பூஜ்யம்" என்றார் மூன்றாவது நண்பர்.

"அற்புதக் கலையம்சம் பொருந்திய கதைகள் எழுதும் ஒரு புது எழுத்தாளர் தோன்றியிருக்கிறார், தெரியுமா?" என்று எல்லோரையும் கேட்டார் தி. ஜ.

எல்லோரும் தி. ஜ. யாரைக் குறிப்பிடுகிறார் என்று புரியாமல், யோசனையில் ஆழ்ந்தார்கள்.

"இதோ இருக்கிறாரே, நடராஜ். இவர்தான். இவருடைய முதல் கதையை என்னிடம் கொடுத்திருக்கிறார். அத்தகைய கதை இதுவரையில் தமிழில் வந்ததில்லை" என்றார்.

எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. இவ்வளவு தூரம் உயர்த்துவதற்கு என்னிடம் யோக்கியதாம்சம் உண்டா? தி. ஜ. என்னை ஊக்குவிப்பதற்குத்தான் அப்படி சிலாகித்துப் பேசினார் என்பது எனக்குத் தெரியாமல் இல்லை. ஆனால், தி. ஜ. வின் மனமோ மிகவும் தாராளமானது. பாராட்டுவதை, எண்ணியோ அளந்தோ கொடுப்பதில்லை. அளவுக்கு மீறி, தாராளமாகவே பாராட்டுவார். 'நல்லது என்பதை ரொம்ப நல்லது என்று விட்டதால் எனக்கு

என்ன குடிமுழுகிப் போய்விடப் போகிறது ? பாராட்டுக்குச் சிக்கனம் என்ன ?' என்று நினைப்பவர் அவர். நீ பெரியவன் என்பவன், அந்தப் பெரியவனுக்கும் மேலான பெருமை கொண்டுதானிருக்க வேண்டும். சின்ன மனிதர்கள், மனிதர்களின் குறைகளைக் கண்டுபிடித்துச் சிறுமைப்படுத்தப் பார்ப்பார்கள். பெரிய மனிதர்கள், மனிதர்களின் பெருமைகளைக் கண்டுபிடித்துப் பெரிதுபடுத்தி, பெரியவர்களாக்கி விடுகிறார்கள். தி. ஜ. வாமனர்களைத் திரிவிக்ரமர்களாக்கும் மந்திர வலிமை கொண்டவர். அதனாலேதான் பிறரைக் கண்டு அவர்களை வாயார, மனமார வாழ்த்தும் பண்பு இருந்தது. மேலே இருக்கிறவன் தான் கீழே இருப்பவனைக் கையைக் கொடுத்துத் தூக்கி விட முடியும். தி. ஜ. வின் பெருந்தன்மை மேலோங்கியிருந்தபடியால், பல எழுத்தாளர்களைக் கீழே இருந்து மேலே தூக்கிவிட முடிந்தது. மறுநாள் ஞாயிற்றுக் கிழமை வார மலரில் என் கதை வெளியாயிற்று. கதையின் பெயர் என்னவோ, 'வாழ்க்கை முடிவு ?' ஆனால் என் இலக்கிய வாழ்க்கை அப்பொழுதுதான் ஆரம்பமாயிற்று; வட்டவடிவமான வாழ்க்கைச் சுழலில் எது ஆரம்பம், எது முடிவு என்பதை எப்படிச் சொல்வது ? இந்த மையக்கருத்தை வைத்துத்தான் என் கதையை எழுதி இருந்தேன். அதிலிருந்து என் இலக்கியச் சக்கரம் மேட்டில் ஏறியும், பள்ளத்தில் விழுந்து கொண்டும், ஓடாமல் படுத்துக் கொண்டும் சுழல ஆரம்பித்தது. ஆனால் அதை உருளச் செய்து ஓட்டி விட்டவர் தி. ஜ. தான். அவருடைய அன்பும் ஆதரவும்தான் என் இலக்கியத்திற்கு அஸ்திவாரங்கள்.

பத்திரிகையில் புதுப்புது அம்சங்களைப் புகுத்திக் கொண்டிருந்த தி. ஜ., தலையங்கம் எழுதுவதுடன், தலையங்கம் வரும் பக்கத்திலேயே, கடைசிப் பத்தியில் 'ஊசி வெடி' என்ற ஒரு புதுப்பகுதியை ஆரம்பித்தார். சில்லறை

அபிப்பிராயங்களை நகைச்சுவையுடன் அந்தப் பகுதியில் வெளியிடுவது வழக்கம். பெரிய அரசியல் கொள்கையைப்பற்றியோ, தத்துவத்தைப்பற்றியோ அதில் விவாதிப்பது இல்லை. விவாதத்திற்கு உரிய பெரும் பிரச்னைகளை அதிகம் சுமத்துவதில்லை. விஷயம் பெரியதாயிருக்கலாம், சிறியதாயிருக்கலாம். கிழவியை மாடு முட்டிவிட்டது என்பதிலிருந்து, பிரஞ்சு மந்திரிசபை மாற்றம் என்பது வரை எல்லா விஷயங்களையும் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் எழுத்தில் பளு இருக்கக்கூடாது. ஹாஸ்யம் மிளிர வேண்டும். படிப்பதற்குச் சுவையுடன் இருக்க வேண்டும். பிரச்னைகளுக்குள்ளே புகுந்து நீச்சலடிக்காமல், போகிற போக்கில் பார்த்தமாதிரி இருக்கவேண்டும். ஆனால் ஒருவர் பேரிலும் வராது. முதலில் சில கட்டுரைகள் தி.ஜ. எழுதிக் காட்டினர். பிறகு, மற்றவர்கள் அதே பாணியைப் பின்பற்றி எழுதலாயினர். அந்தப் பகுதி, வாசகர்களுக்கு விருப்பமான பகுதியாகிவிட்டது.

ஒருநாள் இந்தப் பகுதிக்கு தி. ஜ. எழுதவில்லை. மற்றவர்களும் பல காரணங்களால் எழுதவில்லை. தி. ஜ. விடம் "ஊசிவெடிப் பத்திக்கு ஒருவரும் விஷயம் கொடுக்கவில்லையே" என்றேன்.

"என்னால் முடியாது. வேறு பத்திரிகைகளிலிருந்து ஏதாவது எடுத்துப் போட்டு விடலாம்" என்றார்.

"ஆட்சேபம் இல்லை என்றால், நான் ஏதாவது எழுதுகிறேன்" என்றேன்.

"தாராளமாக எழுதுங்கள். அது எல்லோருக்கும் உரித்தான பத்திதானே" என்றார்.

நான் எழுதி அனுப்பிவிட்டேன். அன்று மாலை வழக்கம்போல் கடற்கரைக் கூட்டத்திற்குச் சென்றேன். தி.ஜ. வழக்கம்போல் அருகில் வரச்சொன்னார்.

மற்ெருரு பத்திரிகையில் வேலை செய்யும் வராகன், "என்ன, தி. ஜ. இன்று ஊசிவெடியில் வந்த குறிப்புக்கள் மிகவும் நன்ருயிருந்தன. ரொம்ப ஹை கிளாஸ்" என்ருர்.

"ஆம், தி. ஜ. இன்று ஊசிவெடியின் தரம் ஒசத்தி. ஏ. ஜி. ஜி., ஏ. ஏ. மிலன், பெலாக் போன்றவர்களின் எழுத்துக்குச் சமானமாயிருந்தது. இதேபோல் தொடர்ந்து வருமாளுல், உங்கள் பத்திரிகைக்குச் சமானம் ஒன்றும் வராது" என்ருர் இன்னெருவர்.

தி. ஜ. சிரித்துக்கொண்டார்.

"என்ன சிரிக்கிறீர்கள், தி. ஜ.? நாங்கள் சொல்வது வெறும் புகழ்ச்சி அல்ல. உண்மையிலே அந்தப் பத்தியின் தரம் மிகவும் உயர்ந்திருக்கிறது" என்ருர்கள் இருவரும்.

தி. ஜ. சொன்ஞர்: "அதற்கில்லை. நீங்கள் எல்லோரும் நண்பர்கள்தான், பத்திரிகை தருமத்திற்கு விரோதமாக ஒரு ரகசியத்தையும் வெளியிடப்போவதில்லை. ஆளுல் உங்களுக்கு மாத்திரம் அந்தரங்கமாகச் சொல்லுகிறேன். நீங்கள் பாராட்டும் கட்டுரையை நான் எழுதவில்லை" என்ருர்.

"நீங்கள் எழுதவில்லையா! பின் யார் அந்தப் புது நக்ஷத்திரம்? எங்களுக்குத் தெரியாமல் யார் இவ்வளவு அழகாக எழுதக்கூடியவர்?" என்ருர்கள் அவர்கள்.

"உங்களுக்குத் தெரியாமல் இருக்க முடியுமா? உங்களுக்கு நன்கு பரிசயமானவர்தான்; இதோ உட்கார்ந்து கொண்டிருக்கிருரே; இவரேதான்" என்ருர் தி. ஜ.

"அடே, நடராஜ்! இவர் என்னையா, ஒவ்வொரு நாள் ஒவ்வொன்றிலே பீட் அடிச்சுண்டு கிளம்பிடுருர்! இவர் எங்கே போய் நிற்பார் என்று தெரியவில்லையே? என்ன தி. ஜ., குருவுக்கு மிஞ்சிய சிஷ்யராகி விட்டாரே! உங்கள் சிஷ்யர் உங்களையே மிஞ்சிவிட்டார்" என்ருர் வராகன்.

"ஆம், வராகன், நம்மைவிட மற்றவன் மிஞ்சி விட்டான் என்றால், பொறுமைப்படுவதுதான் சகஜம். மாற்றான் மிஞ்சுவதைக் கண்டு சந்தோஷப்பட வேண்டுமென்றால், அவன் பிள்ளையாக இருக்கவேண்டும் அல்லது சிஷ்யனாக இருக்க வேண்டும். நண்பர் நடராஜனை என் சிஷ்யர் என்றோ, அல்லது என்னை மிஞ்சிவிட்டார் என்றோ ஒப்புக்கொள்வதிலே எனக்கு மிகவும் சந்தோஷம்தான். ஆனால், அவர் என்னைக் குரு என்று சொல்லிக் கொள்வதில் வெட்கப்படாமல் இருப்பாரா என்பதுதான் கேள்வி" என்றார். அவருடைய பண்பும், தன்னடக்கமும் என் நெஞ்சை இளக்கின.

அவருடைய காலைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டேன். என் கண்கள் கலங்க ஆரம்பித்தன. அதை மறைக்க வேறு பக்கம் திரும்பிக் கொண்டேன்.

# 18

திருவல்லிக்கேணிக் கடற்கரைக் கூட்டம், தினசரி வாழ்க்கையில் இன்றியமையாத அம்சமாகப் போய் விட்டது. ஒரு நாள் போகாவிட்டால் ஒரு வருஷம் போகாதது போன்ற ஏமாற்றத்தை அடையும்படியாக இருக்கும். அது ஏன் என்றால், ஒவ்வொரு கூட்டத்திலும் புது அனுபவம் ஏற்படும்; ஒரு புதுமுகம் பரிசயமாகும். ஏதாவது துறையில் பெயர்போன ஓர் அறிஞர் வருவார். ஒரு நாள் பழுத்த தேசபக்தர் வருவார். மற்றொரு நாள், ஒரு நண்பர் ஒரு தலைசிறந்த கலைஞரைக் கூட்டி வருவார். திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஒலிபெருக்கிக்குத் தெற்கே கதர் கட்டிய கும்பல் கூடியிருக்கும். தினசரி கடற்கரைக்கு வரும் பொது ஜனங்களுக்குப் பரிசயமான கும்பல். அது இந்த இலக்கிய நண்பர்களின் கூட்டம்தான். எல்லோரும் மகாத்மாஜியைப் பின்பற்றித் தேசத்திற்காக வறுமையையும் இன்னல்களையும் மனமுவந்து ஏற்பவர்கள். இவர்கள் லக்ஷியம், சத்தியம், அஹிம்சை, சுதந்திரம்தான். இவர்கள் வாழ்வு, இதை அடிப்படையாகக் கொண்ட உலகத்தைப் படைக்க அடிகோலும் இலக்கியத்தைத் தோற்றுவித்தல்.

ஒரு நாள், தி. ஜ., பெரியவர் ஒருவரைக் கூட்டி வந்தார். புது மனிதரின் தலை நரைத்து வெண்மையாக இருந்தது. நெருக்கமாக வெட்டப்பட்ட கிராப்; நீளக் கதர் ஜிப்பா, கதர் வேஷ்டி. முகத்திலும் கண்களிலும்

ஒளி வீசிக் கொண்டிருந்தது. தி. ஜ. ஒவ்வொருவராக எங்களை அறிமுகப்படுத்தி விட்டார். அவரையும் எங்களுக்கு அறிமுகப்படுத்தினர்: "இவர்தான், வீ. ர. (வீ. ரங்கஸ்வாமி அய்யங்கார்). இலங்கையில் சில வருஷங்கள் பத்திரிகை ஆசிரியராயிருந்தார். இப்பொழுது இங்கேயே வந்து விட்டார். இனி இங்கேதான்". "ஆ. இவர் தான் வீ. ர.வா." என்றோம். அவர் எழுத்துக்களைப் படித்திருக்கிறோம். அவரைப் பற்றியும் கேள்விப் பட்டிருக்கிறோம். அவர் முகத்தைப் பார்த்திராவிட்டாலும் அவருடைய அகத்தை நன்றாக அறிந்திருந்தோம்.

வீ. ர. சொன்னர். "நீங்கள் இவ்வளவு பேர் இலக்கியத்தில் ஈடுபட்டு அற்புதமாக எழுதி வருகிறீர்கள் என்பதை அறிய மிகவும் சந்தோஷப்படுகிறேன். எல்லோரும் நிரம்ப எழுத வேண்டும். அளவு ஜாஸ்தியாக ஆகத் தரமும் தானே உயரும். உங்கள் இலக்கியப் படைப்புக்கள், மேனாட்டு இலக்கியப் படைப்புக்களைத் தூக்கியடிக்க வேண்டும். ஆங்கிலேயரை 'பீட்' அடிக்க வேண்டும். பாரதி நமக்குச் சொல்ல வில்லையா :

இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை இல்லை
திறமான புலமையெனில் வெளிநாட்டார்
அதை வணக்கம் செய்தல் வேண்டும்

ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூ சக்கரையென்று இருக்கக் கூடாது. அது அசல் சக்கரையாகவே இருக்க வேண்டும். உலகத்தவர்க்கு இனிக்க வேண்டும்" என்றார்.

அதை ஆமோதித்தார் தி. ஜ. என்னை பிரத்யேகமாக மறுபடியும் அறிமுகப்படுத்தினர்.

"நம், நடராஜ் சிறந்த எழுத்தாளர். இப்பொழுது தான் எழுத ஆரப்பித்திருக்கிறார். இவர் முன்னேறும் வேகத்தைப் பார்த்தால், வெகு சீக்கிரத்தில் இவர் எல்லோரையும் வெகு தூரம் தாண்டிப் போய் விடுவார் போலிருக்கிறது. ஆங்கிலம் நன்கு கற்றவர், அடக்கமானவர்" என்றார்.

"நானும் கூடக் கேள்விப்பட்டேன். நிறைய எழுதும் ஓய்! தி. ஜ. அடக்கமானவர் என்று பட்டம் கொடுக்கிறார் ஓய்! அடக்கம் வேண்டாம் ஓய்! துணிவுதான் வேண்டும். வெள்ளைக்காரனைத் துரத்தத் தைரியம்தான் வேண்டும். சாகசம் வேண்டும். 'அஞ்சாமல் தனி வழியே போக வேண்டாம்' என்ற அசட்டுப் பாடத்தை மாற்றி அமைக்க வேண்டும். நாம் ஒவ்வொருவரும் தனித் தனி வழியிலேதான் போக வேண்டும். அஞ்சாமல் போக வேண்டும்" என்று சொல்லி விட்டுக் கடகடவென்று சிரித்தார். எல்லோரும் சிரித்தோம். அவர் பேச்சிலும், சிரிப்பிலும், கருத்திலும், ஒரு புதுமை இருந்தது. ஒரு ஜீவசக்தி இருந்தது. வீ. ர. மறுபடியும் என்னைப் பார்த்துக் கேட்க ஆரம்பித்தார்:

"ஓய்! நீர், பூணூல் போட்டுக்கொண்டிருக்கிறீரா?" என்று கேட்டார். எனக்கு அந்தக் கேள்வி புதிராக இருந்தது.

"ஆம். போட்டுக் கொண்டிருக்கிறேன்" என்றேன் ஆச்சரியத்துடன்.

"முதலில் அதைக் கழற்றி எறிந்து விடும்" — என்றார்.

"ஏன் ?" என்றேன்.

"அது எதற்கு ?"

"அதன் உண்மை நோக்கம் கிடக்கட்டும், முதுகு சொரிந்து கொள்வதற்காவது உபயோகப்படுகிறதே!"

"முதுகு சொரிவதற்கு அதுதான் வேண்டுமோ? பூணூல் போடாதவர்களுக்கு முதுகு அரிக்காதோ. இந்த நொண்டிச் சாக்கெல்லாம் உதவாது. நீர் எதற்காகப் போட்டுக்கொள்ள வேண்டும்? மூன்று காலமும் சந்த்யா வந்தனம் செய்கிறீரா?"

"இல்லை."

"ஏன் செய்யவில்லை?"

"அதில் சிரத்தை இல்லை."

"ஏன் சிரத்தை இல்லை? உண்மையை ஒப்புக் கொள்ள பயப்படுகிறீர்; ஓய், சம்பிரதாயங்களிலும், சடங்குகளிலும் நம்பிக்கையில்லை ஓய் உமக்கு. அப்படி யிருக்க இந்த பூணூல் எதற்கு?"

"ஏதோ பெரியவர்கள் போட்டு வைத்தது. ஒரு சம்பிரதாயத்தின் சின்னம்."

"இல்லை ஓய். ஆஷாடபூதித்தனத்தின் சின்னம், கோழைத்தனத்தின் சின்னம். போலித்தனத்தின் சின்னம். நம்பிக்கையில்லாத விஷயத்தை உதறி எறி வதற்குத் தைரியம் இல்லை ஓய், தைரியம் இல்லை. சமூகத் தினிடம் பயம். இப்படி பயந்து சாகும் வரையில் நம் தேசம் உருப்படவே உருப்படாது ஓய், உருப்படாது" என்றார்.

இலக்கியம், கலை, அரசியல் இவை பற்றிப் பேசு வார் என்று நினைத்ததற்குப் பதிலாக இவர் பூணூல் பிரச் னையை எடுத்துக் கொண்டதில், எனக்குச் சிறிது கோபம் தான். விவாதங்களில் கலந்து கொள்ளாத மனப் பான்மை கொண்டவனாயினும், அவருக்கு எதிர்க் கட்சியைக் கங்கணம் கட்டிக்கொண்டு பேசவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. சுபாவப்படி சனாதனியும் அல்ல; புரட்சிக்காரனுமல்ல. வம்புக்கு இழுக்கும் பொழுது எப்படி நழுவுவது?

"இந்தப் பூணூல் என்ன குற்றம் செய்தது?"

"என்ன குற்றமா? அது சனாதனத்தின் சின்னம், ஓய். பிற்போக்காளர்களின் சின்னம்.

எல்லோரும் ஓர்குலம், எல்லோரும் ஓர் இனம்
எல்லோரும் இந்நாட்டு மன்னர்.

—என்ற பாரதியின் வரிகளைப் படித்துவிட்டு, 'ஆகா! என்ன அருமையான கவிதை! என்ன அருமையான கருத்து' என்று வாயாரச் சொல்லிவிட்டுப் போகிறீர்கள். அதில் என்ன பிரயோசனம்? மனிதனுக்கு மனிதன் வேற்றுமையில்லாமலிருக்கச் செயல்பட வேண்டாமா? மனிதனையும் மனிதனையும் பிரிக்கும் வேற்றுமைகளை ஒழிக்க வேண்டாமா?"

"சரி. தொழிலை வைத்துத்தானே ஜாதிகள் பிரிக்கப் பட்டு இருக்கின்றன. அது தொழில் வளமைக்கு உகந்த தாகவே இருந்திருக்கிறது என்று பல அறிஞர் பாராட்டி யிருக்கிறார்கள். நானே பார்த்திருக்கிறேன். ஒரு சங் கீதக் குடும்பத்தில், மூன்று வயதுக் குழந்தை ஜண்டை வரிசை வரையில் அனுபாசமாகப் பாடும். அதுபோலவே, பொம்மை செய்யும் குடும்பத்தில் பிறந்த குழந்தை சுலப மாகப் பொம்மை செய்யக் கற்றுக் கொண்டு விடும். பரம் பரை ரத்தம் அதில் ஓடிக்கொண்டிருக்கிறது. தவிரவும் அன்றாடக் குடும்ப நிகழ்ச்சிகளில்கூட, தொழில் சம்பந்த மான பேச்சுக்கள், காரியங்கள் நடந்துகொண்டேயிருக்கு மல்லவா? குடும்பத்தில் இருந்து கொண்டிருப்பதுவே, தொழிற்பயிற்சியாக இருந்து வந்திருக்கிறது? அதுவும் போகட்டும். ஒரு சிறந்த வழக்கறிஞர் இருக்கிறார். அவரிடம் ஏராளமான சட்ட நூல்கள் இருக்கின்றன. கட்சிக்காரரின் கட்டுக்கள் ஏராளமாக இருக்கின்றன. அந்த வழக்கறிஞரின் மகன் சட்டம் படித்தால், அந்தப் புத்தகங்களை உபயோகிக்கலாம். கட்சிக்காரர்களும்

கிடைப்பார்கள். அவர்களுக்குக் காத்திருக்க வேண்டாம். அதுபோலவே, ஒரு டாக்டரிடம், பல வைத்திய வசதிக் கருவிகள் இருக்கலாம். அவர் பையன் டாக்டரானால், அவற்றை உபயோகப்படுத்தலாம். டாக்டர் பிள்ளை வக்கீலாகவும், வக்கீல் பிள்ளை டாக்டராகவும் தொழில் புரிய விரும்பினால், தகப்பனார் தேடிவைத்த சொத்துக் களை அடையலாம்; ஆனால், அவர்கள் சிரமப்பட்டு உரு வாக்கிய பரம்பரை சம்பிரதாயமும், உழைப்பும் வீணாகி விடும். உழைப்பின் பாரம்பர்யம், பின் வாரிசுகளின் ரத்தத்தில் ஊற வேண்டுமென்பதுதான் வருண வியவஸ்தையின் குறிக்கோள்; அதில் என்ன தப்பு?" என்றேன்.

"இப்படியெல்லாம் பேசித் தப்பித்துக் கொள்ள முடியாது, ஓய். உம் பாட்டனார் வேதாத்யயனம் செய் தார். அதுதான் நீர் சொல்லும் பரம்பரை தருமம். நீர் அத்யயனம் செய்யறதை விட்டுவிட்டு எதற்காக இங்கி லீஷ் படிக்க ஆரம்பித்தீர்? குடுமியுடன் பாடசாலையில் அல்லவா நீர் படித்துக் கொண்டிருக்க வேண்டும்?"

"இது யுக தர்மம்."

"சாதி ஒழிப்பதுவும் யுக தர்மம்தான். எத்தனை நாளைக்கு வருணாசிரம தர்மத்தைக் காப்பாற்றிக்கொண் டிருக்க முடியும் என்று நினைக்கிறீர்?"

"அது அவ்வளவு சுலபமாகச் சொல்லிவிட முடி யாது. அதைப் போன்ற பிரச்னையில், நம் சம்பிரதாயத் தையும் சனாதன தர்மத்தையும் பேசக்கூடிய பெரியவர் சொன்ன விஷயத்தை மாத்திரம் சொல்லுகிறேன். சிருங்கேரி மடாதிபதி சந்திரசேகர பாரதி அவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் அல்லவா— மகான், மிகப்பெரியவர், சிறந்த மேதை. அவரிடம் ஒரு மேலைநாட்டு அறிஞர் சென்றிருக்கிறார். அவர் வெள்ளையரானாலும்,

கிறிஸ்தவராஞலும், நம் நாட்டுத் தத்துவங்களிலும், சித்தாந்தங்களிலும் நல்ல புலமை பெற்றவர். இந்து சமயத்தைப் பற்றியும் அதன் கோட்பாடுகளைப் பற்றியும், அதன் சம்பிரதாயங்களைப்பற்றியும், வெகுநேரம் ஸ்வாமி களுடன் பேசிக் கொண்டிருந்திருக்கிருர். சில சந்தேகங் களையும் கேட்டிருக்கிருர். அதற்கு அழகாக ஸ்வாமிகளும் பதில் சொல்லியிருக்கிருர். ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டனர் :

"மேல் நாட்டு அறிஞர் சொன்ஞர் : 'என் மனத் தில் ஒரு விருப்பம் இருக்கிறது. என் பிரார்த்தனையை வெளியிடுகிறேன். அதற்கு அனுக்ரஹம் உண்டா என்று அறிய விரும்புகிறேன்.'

"'தங்களுடைய விருப்பம் என்னவோ?'

"'தங்களுடைய மதத்திலும் சம்பிரதாயத்திலும்என் மனத்தைப் பறிகொடுத்திருக்கிறேன்.'

"'ஆம், அது நன்ருகத் தெரிகிறதே'

"'ஆகவே, பெயரளவில் நான் கிறிஸ்தவஞகவும், ஆனுல், உண்மையில் இந்து மதத்தைப் பின்பற்றுபவஞக வும் இருக்கிறேன். இந்தப் பொய்யான தன்மை மாறுவ தற்கு நான் ஓர் இந்துவாகவே இருக்க விரும்புகிறேன்' என்று சொன்ஞர்.

"ஸ்வாமிகள் சஞதன தருமத்தைக் காப்பாற்றும் ஸ்தாபனத்தின் தலைவர். மேஞட்டு அறிஞர் எவ்வளவு தான் ஞானியாக இருந்தாலும், உள்ளத்திலே இந்துவாக இருந்தாலும், மதமாற்றம் செய்வது என்பது சஞதன தர்மத்திற்கு ஒவ்வாத விஷயம். 'முடியாது' என்று சொல்லிவிட்டாலும், இவ்வளவு பண்புள்ள இவரை ஒதுக்குவதும் நியாயமற்ற செயலாகவும் ஆகிவிடுகிறது. ஸ்வாமிகள் கேட்டாராம்: 'நீங்கள் கடவுள் உண்டு என்பதை நம்புகிறீர்களா?'

"'ஆம் அதில் என்ன சந்தேகம்? இவ்வளவு நேரம் பேசியதிலேயே தெரிய வில்லையா?'

"'ரொம்ப சரி. கடவுள் சர்வக்ஞன், சர்வ வல்லமை யுள்ளவன் என்பதை நம்புகிறீர்களா?'

"'அதிலும் என்னசந்தேகம்? தோஷமும் குறைவும் எல்லாம் மனிதனுடையவைதான். கடவுள் பூரண மானவன், குற்றமற்றவன் அல்லவா?'

"'அப்படியிருக்க, காரிய காரணங்களை நியமிக்கும் கடவுள், தங்களைக் காரணமில்லாமலா மேல்நாட்டில் பிறக்கச் செய்திருக்கிறார். உங்களை இந்துவாகப் பிறப்பிக் கும சங்கல்பம் இருந்திருந்தால், இந்துவாகப் பிறக்கச் செய்திருக்க மாட்டாரா? பகவான் சங்கல்பம்தான் நமக்கு ஆணை. அதுவே நம் விதி. அதற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டியதே தர்மம்' என்றாராம்.

"மேல்நாட்டு அறிஞர் அசந்துபோய் கேட்டுக்கொண் டிருந்தாராம். 'ஆம். இப்பொழுது எனக்கு விளங்கு கிறது' என்று மெதுவாகச் சொன்னாராம்.

"ஸ்வாமிகள் மீண்டும் சொன்னாராம்: 'இதனால் ஒன்றும் குறைபாடில்லை. எல்லா ஆறுகளும் சமுத்திரத் தையே சேருவதுபோல், எந்த சமயத்தைப் பின்பற்றின லும், அது என்னையே சேருகிறது என்று பகவான் சொல்லியிருக்கிறார். ஆகவே, நீங்கள் உண்மைக் கிறிஸ்த வராய் இருப்பீர்களானால், நீங்கள் உண்மை இந்துவாகவும் இருப்பீர்கள், பகவான், கிறிஸ்துவரோ, முஸ்லிமோ, இந்துவோ அல்ல — அதற்குப் புறம்பானவர்; இவை எல்லாமானவர். ஆகவே, நீங்கள் இதைக் குறைபாடாக நினைக்க வேண்டாம்' என்று சொன்னாராம்.

"மெய்மறந்து நின்ற அறிஞர் சொன்னாராம்: 'உங்களை லோக குரு என்று சொல்லுகிறார்கள். உண் மையிலேயே நீங்கள் லோக குருவேதான். வேறு

ஒருவராலும் இவ்வளவு சிறந்த உண்மையை இவ்வளவு அழகாக எடுத்துச் சொல்லி என் மனத்தைத் தெளிய வைத்திருக்க முடியாது' என்று வெகுவாகப் புகழ்ந்து விட்டு, வணக்கம் தெரிவித்துச் சென்றாராம்."

"சரிதான், ஓய். மனிதன் செய்யும் அநீதிகளுக்கு உடந்தையாகக் கடவுளையும் கர்மாவையும் இழுப்பது நம் புராதன சம்பிரதாயம். இது ஒன்றும் புதிதல்ல. ஒருவன் ஏழையா? அது பகவான் சித்தம்; அல்லது அவன் தலைவிதி. இதுவே ஒரு சமாதானம்."

"அது சரிதானே!"

"இல்லவே இல்லை: கடவுள் சித்தமாயிருந்தாலும் அவன் தலை எழுத்தாயிருந்தாலும், அதை மாற்றியமைக்க முயல வேண்டும். எதற்கெடுத்தாலும் ஆண்டவனைக் கூப்பிடுவது மிகுந்த அறியாமை. 'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது' என்று சொல்லிவிட்டு உட்கார்ந்து விட்டால் கதை முடிந்து விடாது. வியாதியா? மருந்து வேண்டாம்; கடவுள் காப்பாற்றுவார்; விபத்தா? எல்லாம் அவன் செயல்; குப்பை மேடா? துர்நாற்றம் வருகிறதா? ஆண்டவன் வந்து குப்பையை எடுத்துச் சுத்தம் செய்யும் வரையிலும் மூச்சைப் பிடித்துக் கொண்டு, ஜபம் செய்ய வேண்டியதுதான் — என்ன அழகான தத்துவம்!" வீ. ர. வேகத்துடன் பேசிக் கொண்டே போனார். அவர் பேச்சில் உள்ள வேகத்திற்கும் விறுவிறுப்புக்கும் ஈடு கொடுக்க முடியாமல் தயங்கித் தவித்தேன்.

"பூணூலைக் கழற்றிப் போட்டு விடுவதனால் பெரிய புரட்சி ஏற்பட்டுவிடப் போகிறதா? 1900 வருஷங்களாக ஏற்படாத மாறுதல்கள் முப்பது வருஷங்களில் ஏற்பட்டிருக்கின்றன. சாரதா சட்டம் வரும்பொழுது பெண்களுக்கு 14 வயதுக்குள் கல்யாணம் செய்யாவிட்டால்

உலகமே அழிந்துவிடும் என்று சொன்னவர்களின் வீட்டிலேயே இன்று 25 வயதுக்குமேற்பட்ட—கல்யாணமாகாத பெண்கள் இருக்கிறார்கள். பிரசாரம், சட்டம், இற்றால் மாற்றப்படும் விஷயங்களைவிட, பொருளாதாரப் பிரச்னைகளால் சுலபமாக மாற்றப் பட்டு விடுகின்றன.''

''ஆகையினால் ... நாம் 'எல்லாம் என்னையாளும் ஈசன் செயல்' என்று கையைக் கட்டிக்கொண்டு வாயைப் பொத்திக்கொண்டு இருக்க வேண்டும்.''

''பூணூலைக் கழற்றி விடுவதால் மாத்திரம் என்ன அதிசயம் நிகழப்போகிறது?''

''ஆங்கிலத்தில் சொல்வார்கள் தெரியுமா:

எண்ணத்தை விதை — செயல் பிறக்கும்
செயலை விதை — பழக்கம் பிறக்கும்
பழக்கத்தை விதை — குணம் (Character)
பிறக்கும்
குணத்தை விதை — ஊழ்வினை பிறக்கும்

நம் ஊழ்வினையை நமக்கு ஏற்றவாறு மாற்றி அமைக்க வேண்டும். அதற்காகத்தான்.''

''அது சரிதான். நீங்கள் பூணூலைக் கழற்றித் தூக்கி விட்டெறிந்து, பதினைந்து இருபது வருஷங்கள் ஆகின்றன. இந்து சமூகத்தில் பெரிய பூகம்பம் ஏற்பட்டு விட்டதாகத் தெரியவில்லையே?''

''ஓய், மாறாமலா போகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஒருவர் சிலுவையில் மாண்டார். அன்று ஒரே கிறிஸ்தவன்தான் இருந்தான்; இன்று உலகம் பூராவும் கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள். ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன்பு ஒரு முகம்மது நபி தோன்றி, சில உண்மைகளைச் சொன்னார்; இன்று உலகம் பூராவும் நபிகள் நாயகத்தைப் பின்பற்றியிருக்கும் இஸ்லாமியர் இருக்கிறார்கள். உளுத்துப்போன, ஊசிப்போன சம்பிர

தாயங்களை மாற்றும்படி ஒருவன் சொல்லுவான். ஆரம்பத்தில் சொல்பவன் ஒருவன்தான். நாளாக ஆக, ஏராளமான பேர்கள் அவனைப் பின்பற்றி, அந்த செத்துப்போன சம்பிரதாயங்களைக் குழிதோண்டிப் புதைக்க வருவார்கள். அதுதான் சரித்திரம்.''

நேரமாகி விட்டது. ஒலிபெருக்கியைக்கூடக் கழற்றியாகி விட்டது. பிச்சுக் கூட்டம் குறைந்து விட்டது. இலக்கிய நண்பர்களுக்கும் இந்த விவாதம் அவ்வளவாகச் சுவைக்கவில்லை. இலக்கியத்தில் இறங்காமல், சீர்திருத்தத்தில் இறங்கியது நண்பர்களுக்கு அவ்வளவாக பிடிக்காத விஷயம். "ரொம்ப நேரமாகிவிட்டது போலிருக்கிறதே! போகலாமா?'' என்று முற்றுப்புள்ளி வைத்தார் தி. ஜ. "சரி'' என்று உடனே கிளம்பினோம். ஆனால், வீ. ர. வின் உருவமும், பேச்சும், வெடிச் சிரிப்பும், கருத்தில் உள்ள வேகமும், என் நெஞ்சிலே, ஆழமாகப் பதிந்து விட்டன.

# 19

அரசியலில் விறுவிறுப்பு ஏற்பட்டது. காங்கிரஸ் தாற்காலிகமாகப் போராட்டத்தை நிறுத்தி, சட்டசபைகளைப் பிடிக்க முன்வந்தது. மக்கள் தங்கள் பூரண ஆதரவையும் அளித்தனர். மத்ய சட்டசபைக்குக் காங்கிரஸ் அபேட்சகர்களையே மக்கள் பெருவாரியான வாக்குகளால் தேர்ந்து எடுத்தனர். அதன் பிறகு, இந்திய அரசாங்கச் சட்டத்தின் கீழ் மாகாணங்களிலும் தேர்தல் நடந்தது. அதிலும் மக்கள் காங்கிரஸ் அபேட்சகர்களையே தேர்ந்தெடுத்தார்கள். பதினொரு மாகாணங்களுள் ஏழு மாகாணங்களில் காங்கிரஸ்கட்சி அரசாளும் பொறுப்பை ஏற்றது. சில மாதங்களில் எட்டாவது மாகாணத்திலும் காங்கிரஸ் கட்சி அரசு ஏற்றது.

சென்னையில், 'காந்திஜியின் மனச்சாட்சியைக் காப்பவர்' என்று சொல்லப்பட்ட ராஜாஜி, முதன் மந்திரியானார். காந்திஜியின் கொள்கைகளைத் தீவிரமாகப் போற்றி வந்த அவர், 'மதுவிலக்கை' உடனடியாக அமலாக்க வந்தார். காந்தீய நெறியில் மதுவிலக்கு எவ்வளவு முக்யமானது என்பதை அவர் அறிந்தவர். திருச்செங்கோடு ஆசிரமத்தில், மதுவிலக்கையே முக்ய காரியமாகப் பிரசாரம் செய்து வந்தவர். மதுவின் கலால் வரி மாகாணத்துக்குக் கணிசமான வரும்படியாக இருந்தாலும், சிறிது சிறிதாக மாகாணம் பூராவும் மதுவிலக்கை

கொண்டு வரும் எண்ணத்துடன், அவருடைய சொந்த ஜில்லாவான சேலத்தில் மதுவிலக்கை ஆரம்பிப்பது என்று மதுவிலக்குச் சட்டத்தைக்கொண்டு வந்து விட்டார்.

இது சம்பந்தமாக ஒரு சொந்த அனுபவம் ஞாபகம் வருகிறது. நானும் ஒரு நண்பரும் சேலத்திற்கு அருகில் உள்ள ஏற்காடு மலைக்குப் போக, சேலம் சென்றிருந்தோம். ஊரைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வரும் வேளையில், செவ்வாய்ப்பேட்டை என்ற இடத்திற்கு வரும் பொழுது, பெரிய கூட்டம் ஒன்று கூடி இருந்தது. ஏதாவது திருவிழாவா? அல்லது, மாபெரும் கூட்டம் ஒன்று கூடப்போகிறதா? என்ற எண்ணத்துடன் எதிரே நின்ற ஒருவரிடம், "இவ்வளவு பெரிய கூட்டம் கூடியிருக்கிறதே, இங்கு என்ன விசேஷம்?" என்று கேட்டேன். "ஒன்றுமில்லிங்க, அதோ கள்ளுக்கடை தெரியுதே. அதுக்குப் போற கூட்டமுங்க" என்றார் அவர். எங்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இது கள்ளுக்கடை போகிற கூட்டமா! சமுத்திரம் போல அவ்வூர் மக்கள் பூராவும் திரண்டு வந்தது போன்ற கூட்டம் கள்ளுக்கடைக்கா போகிறது, என்ன அநியாயம்! இது என்ன வெறி! புதிதாக நெய்யப்பட்ட துணிகளைக் கைகளிலும் தோள்களிலும் போட்டுக்கொண்டு, அநேக நெசவாளிகள் விலைகூறிக்கொண்டிருந்தனர். நேரம் நெருங்கநெருங்க வெறி ஏற ஏற, குடி ஆசையால், அவர்கள் பல நாட்கள் கஷ்டப்பட்டு உழைத்து நெய்த துணிமணிகளை வந்த விலைக்கு விற்று விட்டு, கிடைத்த பணத்தை எடுத்துக் கொண்டு, கள்ளுக்கடைக்குள் புகுந்து விடுவார்களாம். பகுத்தறிவுள்ள மனிதர்கள் செய்யும் காரியமா இது? மிக்க பரிதாபகரமான விஷயம் அல்லவா? இங்கு மதுவிலக்கு அமலுக்கு வருகிறது என்பதை எண்ணி மிக்க மகிழ்ச்சி கொண்டேன்.

கள் உண்ணல் என்பது ஐந்து மகாபாதகங்களில் ஒன்ருகச் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. மனிதனுடைய அறிவை மழுங்கச் செய்து, மனிதன் என்ற பிரக்ஞையில்லாமல் விலங்குக்கும் கீழே தள்ளக் கூடியதல்லவா இந்தக் குடியின் தன்மை? இந்தக் கொடிய பழக்கத்திற்கு உட்பட்டவர்கள் எவ்வளவு இழிவை அடைந்திருக்கிருர்கள் என்பதை அவரவர்கள் தம்தம் அனுபவத்திலேயே கண்டு கொண்டிருப்பார்கள்.

எனக்குப் பரிசயமான இரு நபர்கள் இந்தக் குடியினுல், புகழுடன் வாழ வேண்டியதற்குப் பதிலாக, எத்தகைய இழி நிலைக்கு இறங்கி விட்டார்கள் என்பதை நினைக்கும் பொழுதே, நெஞ்சம் துணுக்குறுகிறது. ஒருவன் ஜமீன்தார் வீட்டுப்பிள்ளை. என்னுடன் கல்லூரியில் வாசித்தவன்; நல்ல பையன், புத்திசாலியுங்கூட. நாணயம், நேர்மை, பெருந்தன்மை முதலிய பண்புகள் கொண்டவன். பிற்காலத்தில் எப்படியோ குடிப் பழக்கத்தைச் சில நண்பர்கள் கற்றுக்கொடுத்து விட்டார்கள் போலும். அந்தக் காலத்தில் 'பெரிய மனிதன்' என்பதற்கு இதுவும் ஓர் இலக்கணம். எப்படியோ தீவிரக் குடியன் ஆகிவிட்டான். ஒரு நாள் இரவு "கிளப்பில்' குடித்து விட்டு நண்பர்களுடன் சீட்டாடிக் கொண்டிருந்திருக்கிருன். ஆட்டம் சரியாக ஆடவில்லை. அதிலிருந்து நண்பர்கள் இவன் ஆடுவதைக் குறைகூறியிருக்கிருர்கள். இவன் தான் ஆடியதுதான் சரியென்று கத்தியிருக்கிருன். பேச்சு மும்முரமாகி வார்த்தைகள் தடித்து விட்டன. இவன் கோபித்துக் கொண்டு, ஆட்டத்தை முடித்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்பி விட்டான். திரும்புகையில் மறுபடியும் கொஞ்சம் 'சூடாக'ப் போட்டுக் கொண்டு விட்டான். கிளம்பும்பொழுதே நிதானம் இல்லை. இந்த லக்ஷணத்தில் காரையும் தானே ஓட்டி

வந்திருக்கிறான். வரும் வழியில் உலகத்தில் உள்ளவர்கள் எல்லோரையும் சபித்துக்கொண்டே வந்திருக்கிறான்.

வீட்டை நெருங்கும்போது ஹார்ன் கொடுத்துக் கொண்டே வந்திருக்கிறான். தோட்டக்காரன் வண்டி வாசலுக்கு வந்ததும், கதவைத் திறக்க வேண்டும். அதற்காகத்தான் அப்படி ஓசை கொடுத்துக் கொண்டே வந்தது. வாசல்வந்ததும் கதவுதிறக்கப்படவில்லை. அந்தக் கோபம் வேறு சீறிக்கொண்டு வந்துவிட்டது. மறுபடியும் மறுபடியும் ஹார்னை அழுத்திச் சப்தமிட்டுக்கொண்டேயிருந்தான். சிறிது நேரம் கழித்து, குடிசையில் தூங்கிக் கொண்டிருந்த தோட்டக்காரன் பதறியடித்துக் கொண்டு வந்து, கதவைத் திறந்தான். ஜமீன்தாருக்குச் சொல்ல முடியாத கோபம். "ராஸ்கல், நான் வெளியிலே காத்திண்டு நிற்கிறேன். நீ தூங்கிறையா!" என்று பெல்டைக் கழற்றி நாலு போடு போட்டான். இரும்புப் பூண் போட்ட பெல்ட்; தோட்டக்காரனோ நோஞ்சல். உயிரைக்கொக்கியில் பிடித்துக்கொண்டுகிடந்தவன், இந்த அடி, படாதஎந்த இடத்தில் பட்டதோ என்னவோ; அந்த இடத்திலேயே சுருண்டு விழுந்து உயிரைவிட்டான். பிறகு என்ன, போலீஸ் கேஸ், செஷன்ஸ் கோர்ட்டு இப்படி எல்லாம் தொல்லை. ஜமீன்தார் பையன் மொத்தத்தில்நல்லவன் என்பதனாலும், அந்தக் கிழவன் குடும்பத்திற்குக் கணிசமான அபராதத் தொகை செலுத்தி விட்டபடியாலும், கொலை செய்ய வேண்டுமென்ற எண்ணத்தில் அவனைத் தாக்காதபடியாலும், Culpable Homicide not amounting to Murder (மரணம், ஆனாலும்கொலை இல்லை) என்றசட்டப் பிரிவுப்படி மூன்று வருஷ கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. இதனால் அவன் குடும்ப கௌரவம், பெருமை, வருங்காலத்தில் அவன் அடையக் கூடிய சௌகரியங்கள் எல்லாவற்றையும் இழக்க நேரிட்டது. மற்றொரு நண்பரும் நல்ல மனிதர்தான். எனக்கு நாலைந்து

வயது மூத்தவர். நாங்கள் இருந்த வீட்டிற்கு அடுத்த வீட்டில் குடியிருந்தார். அவ்வீட்டில் இரு குடித்தனங்கள், இவரும் இவர் மனைவியும் ஒரு பக்கம். மற்றொருவரும் அவர் மனைவியும் அடுத்த பக்கம். அந்த நண்பர் அரசாங்கத்தில் வேலை பார்ப்பவர். சிரித்த முகம், வேடிக்கையாகப் பேசும் ஆற்றல் பெற்றவர்; பழகத் தெரிந்தவர், உத்தியோகத்திலும் திறமைசாலி. ஆனாலும் எப்படியோ குடிப் பழக்கத்தைக் கொண்டு விட்டார். பலருக்குத் தெரியாமலேயே இருந்தது. தந்திரமாகத்தான் அவர் இதை வெளிக்குக் காட்டாமல் பழகி வந்திருக்கிறார். அவர் மனைவி நல்ல உத்தமி. கணவனைக் காட்டிக் கொடுக்க மனம் இல்லை. இதிலிருந்து அவரை மீட்க வேண்டுமேயென்ற கவலை. தவித்துக் கொண்டிருந்தாள்.

ஒரு நாள் பக்கத்து இடத்திலிருப்பவர் வெளியூர் போயிருந்தார்; மனைவி மாத்திரம் இருந்தாள். ஒரு மச்சு உள் போன்ற மாடி இருந்தது. அந்த அம்மாள் இரவில் சாப்பிட்டு விட்டு, மெத்தை உள்ளே போய்ப் படுத்துக்கொண்டு விட்டாள். குடிகார நண்பர் அன்று காரசாரமாகப் போட்டு வந்து விட்டார் போலும். இரவு வெகுநேரம் கழித்துத்தான் வந்தார். அவருடைய மனைவி தூங்கி வழிந்து கொண்டு கதவைத் திறந்து விட்டு, பேசாமல் படுத்துக்கொண்டு விட்டாள். இந்த சமயங்களில் அவருடன்பேசி, சச்சரவு, அடிதடி இவற்றை வரவழைப்பதில்லை. மனைவி படுத்து உறங்கினவுடன், கணவர் நேராகப் பக்கத்து இடத்து மச்சுக்குச் சென்றார். அந்தக் கதவு, லேசான கதவு, லேசான தாழ்ப்பாள். இவர் பலமாகத் தள்ளியவுடன் அது திறந்து கொண்டது. அந்த அம்மாள் சப்தம் கேட்டு எழுந்திருந்தவுடன், இந்த மனிதன் இருக்கும் தோற்றத்தைக் கண்டு புரிந்து கொண்டாள். அந்த அம்மாள் தைரியசாலி. அந்த மச்சுக்கு அந்தப் பக்கத்தில் ஒரு மொட்டை மாடி

இருந்தது. அந்த மொட்டை மாடிக்கு ஒரு சிறு கைப் பிடிச் சுவர்தான். அந்தக் கைப்பிடிச் சுவர் மேல் ஏறினுள். எங்கள் வீட்டு முற்றத்தின் ஓட்டு வாரத் தின் வழியாக இறங்கி, எங்கள் வீட்டு முற்றத்தில் குதித்து விட்டாள். பிறகு கேட்பானேன். ஊர் சிரித்து விட்டது. அந்த மனிதர் வேறு இடத்திற்கு வேலையை மாற்றிக்கொண்டு போய் விட்டார். போனுல் என்ன பிர யோசனம்? வியாதி வரவர முற்றுவது போலக் குடிப் பழக்கம் மேன்மேலும் வளர்ந்து விட்டது. மறுபடியும் ஒரு தகாத காரியத்தைச் செய்ய முயலவே, அவருடைய மனைவி அவமானம் பொறுக்க முடியாமல், தூக்குப் போட்டுக் கொண்டு இறந்து போனுளாம். இந்த மனிதர் உத்தியோகத்தையும் இழந்து, நல்ல மனைவியையும் இழந்து, பிழைப்புக்கும் வழியில்லாமல், மிகவும் கேவல நிலையில் வருந்துவதாகக் கேள்விப் பட்டேன். உத்தி யோகத்தில். முன்னேறி உயர்தர அதிகாரியாக வரக் கூடிய மனிதர், இப்படிச் சீரழிந்து போனதற்குக் காரணம் இந்தக் குடிப்பழக்கம் தானே என்பதை நினைக் கும்பொழுது இவர்களைப் பற்றி வருந்தாமலிருக்க முடியாது.

மதுவிலக்கு ஆரம்ப தினத்தன்று, வழக்கம்போல், திருவல்லிக்கேணிக் கடற்கரைக் கூட்டம் கூடிற்று. அன்று வழக்கமான நண்பர்களுடன் வாசுதேவ் என்ற நண்பரும் வந்திருந்தார். அவர் ஆங்கிலப் பத்திரிகையின் ஆசிரியர் குழுவில் இருப்பவர். அப்பத்திரிகை ஆங்கில அரசாங் கத்தை ஆதரிக்கும் பத்திரிகை. காங்கிரஸின் கொள்கை களை எதிர்க்கும் பத்திரிகை. அது மதுவிலக்கிற்கு எதிர்ப் பிரசாரம் செய்து கொண்டிருந்தது. ஆகவே, நண்பர் வாசுதேவ் எடுத்தஎடுப்பில் அதைப்பற்றிப்பேச ஆரம்பித் ததில் ஆச்சரியமில்லை. நான் எங்கள் பத்திரிகையில் மது விலக்கை ஆதரித்துச் சில கட்டுரைகள் எழுதி வந்தேன்.

ஆகவே, வாசுதேவ் என்னைப் பார்த்துக் கேட்டார்: "என்ன மிஸ்டர் நடராஜ், உங்கள் மந்திரி மதுவை மனி தன் வயிற்றுக்குப் போகாமல் தடுக்கிறார். ஆனால் பணத்தைச் சாக்கடையில் போடுவார் போலிருக்கிறதே" என்றார். மதுவிலக்கினால் கலால் வரும்படி போவது ஒன்று, மதுவிலக்கை அமலுக்குக் கொண்டு வருவதில் போலீஸ் பாதுகாப்புக்குச் செலவு. இது அநாவசிய நஷ்டம். இப்படி நஷ்டப்படுத்திக் கொண்டு இதை அமலுக்குக் கொண்டு வருவானேன் என்பதுதான் எதிர்க் கட்சியின் வாதம்.

"அதில் என்ன தப்பு. இவ்வளவு காலம் காந்திஜியும் காங்கிரஸும் பிரசாரம் செய்து வந்த கொள்கை தானே? காங்கிரஸ் அரசாங்கம் மேற்கொள்ள வேண்டிய முதற் காரியம்தானே?"

"துரதிர்ஷ்டவசமாக, காந்திக்கும் அவர் சிஷ்யர் களுக்கும், அரசியல் சமூகப் பிரச்னைகளுக்கும் தார்மிகக் கொள்கைகளுக்கும் வேற்றுமை தெரிவதில்லை. இரண்டையும் அரசியலோடு குழப்பி, இரண்டையும் கெடுத்து விடுகிறார்கள்" என்றார் வாசுதேவ்.

"சரி, மிஸ்டர் வாசுதேவ். ஒருவன், மற்றொருவனைக் கொல்கிறான்: அது அரசியல் பிரச்னையா? சமூகப் பிரச்னையா? தார்மிகப் பிரச்னையா?"

"ஒருவன் மற்றொருவனோடு சம்பந்தப்படுகிறான் என்றால் அது சமூகப் பிரச்னையாகி விடுகிறது. ஆனால் நீங்கள் சொல்லுகிறது க்ரிமினல் சட்டத்தின் கீழ அல்லவா வந்து விடுகிறது."

"இதுவும் அது போன்றது தானே, மிஸ்டர் வாசு தேவ்? ஒருவன் தனக்குத் தீங்கிழைத்துக் கொள்கிறான், தன் குடும்பத்திற்கும் தீங்கிழைத்துக் கொள்கிறான், சமூகத்திற்கும் தீங்கிழைக்கிறான். தற்கொலை முயற்சி

குற்றமாகப் படுகிறது, ஏன்? அதைவிடக் கொடிய காரியமல்லவா இது. இது அரசியல், சமூகம், பொருளாதாரம், சட்டம், தருமம் எல்லாவற்றையும் ஊடுருவிக் கொண்டு நிற்கிறது" என்றேன்.

"காந்தி சிஷ்யர். நீங்கள் இப்படித்தான் சொல்வீர்கள். தனி மனிதன், தன் விருப்பம் போல வாழும் உரிமையை இது குலைக்கிறது. அரசாங்கம் மக்களின் நலனைக் கருத வேண்டுமே தவிரத் தனிப்பட்டவர்களைச் சீர் திருத்துவதில் ஈடுபடுவது உசிதமல்ல."

"தனிப்பட்ட உரிமை எது? உங்கள் காரை உங்கள் இஷ்டம்போல், இடது பக்கத்திற்குப் பதிலாக வலது பக்கமாக ஓட்டிக்கொண்டு செல்ல உரிமை உண்டா? உரிமை என்பது மனம் போனபடி போவதல்ல. எல்லோரும் அவரவர் மனம் போனபடி போனால், என்ன ஆகும். ஆகவே அரசு பொது நலனிற்காக சில கட்டுப்பாடுகளைக் கொண்டு வரவேண்டித்தான் இருக்கிறது."

"இதற்கு எவ்வளவு செலவு? எவ்வளவு நஷ்டம்? கடைசியில் இதற்கு என்ன பலன்?"

"மக்களின் நல்வாழ்வு தான். வேறு என்ன வேண்டும்? இதற்கு எவ்வளவு செலவு ஆனால்தான் என்ன?"

"ஆனால், இது வெற்றி பெறுமா? அமெரிக்காவில் பரீட்சை செய்து தோற்றுவிடவில்லையா?"

"வெள்ளையர் வாழ்வு முறைக்கும் நமக்கும் எவ்வளவோ வித்யாசம். இரண்டும் ஒன்றாகி விடுமா? அவர்கள் தண்ணீரே குடிப்பதில்லை. எல்லா வேளைகளிலும் மது அருந்தும் பழக்கம் கொண்டவர்கள். தவிரவும் அவர்களுடைய குளிர்ப் பிரதேசத்திற்கு அது சிறிது அவசியமாகவும் இருக்கிறது. நம் நாட்டின் நிலை அதுவேதானா? குடிப்பது கேவலம் என்பது எல்லோராலும் கருதப்பட்டு வருகிறது. குடிப்பவர்கள் பகிரங்கமாகக் குடிக்க விரும்

புவதில்லை, பகிரங்கமாகச் சொல்லிக் கொள்வதுமில்லை. ஆகவே அமெரிக்காவுக்கும் நம் தேசத்திற்கும், ஒருவிதப் பொருத்தமுமில்லை. இங்கு மதுவிலக்கு வெற்றிகர மாகவே இருக்கும் என்பதில் ஐயமேயில்லை'' என்றேன்.

"உங்களுக்குத் தெரியாது, நடராஜ். ஒரு நாள் பூரா வும், உடலை வருத்தி வேலை செய்பவன், மாலை குடித்து விட்டு இரவு மெய்மறந்து தூங்கினால், மறு நாள் வேலை செய்ய முடிகிறது."

"மெய்மறந்து தூங்கலாம்; மெய்மறந்து பல குற்றங்களையும் புரிந்து விடலாம். அதுவும் நடக்கிற தல்லவா?"

"ஒரு முக்யமான விஷயத்தை மறந்தே பேசுகிறீர்கள். கள் இருக்கிறதே — அது போதை வஸ்து மாத்திரமல்ல, அது ஒரு சிறந்த உணவுப் பொருள். மற்ற உணவுகளில் இருப்பதைக்காட்டிலும் அதில் சத்துக்கள் நிரம்ப உண்டு. உங்கள் அரசாங்கம் ஏழையின் உணவைப் பறிக்கிறது."

"அதை உணவென்று சொல்கிறீர்கள்? உடலுக்குப் போதையா உணவா என்பது இருக்கட்டும். உணர் விற்கும் ஆன்மாவிற்கும் அது விஷமேயாகும்'' என்றேன்.

'சோடா, கலர்' என்று ஒரு பையன் விற்றுக் கொண்டு போனான்.

பாவம்'. நடராஜ். தொண்டை கிழிய மதுவிலக்கைப் பற்றிப் பேசியிருக்கிறார், அவர் Hot Drink (மதுபானம்) சாப்பிட மாட்டார். இந்த Soft Drink (மிருது பானம்) கொடுத்தாவது தாகத்தைத் தணிக்கச் சொல்லலாம்'' என்று எல்லோருக்கும், சோடா கலர் சப்ளை செய்தார்.

"நண்பர் வாசுதேவிற்குத்தான், வெறும்சோடாவைக் குடித்துத் தொலைக்க வேண்டியிருக்கிறதே என்று இருக் கிறது'' என்றேன்.

"ஆம். உண்மையிலேயே அப்படித்தான்'' என்றார் அவர்.

# 20

ஒரு நாள் அலுவலகத்தின் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தேன். காலையிலிருந்து உடம்பு ஒரு மாதிரி இருந்தது. உட்கார்ந்து வேலை செய்ய முடியவில்லை. கொட்டாவியாக விட்டுக் கொண்டிருந்தேன். இருப்புக் கொள்ளவில்லை. சோம்பல் முறித்துக்கொண்டே இருந் தேன். கிருஷ்ணமணி நான் சிரமப்படுவதைப் பார்த்து "என்ன நடராஜ், என்னவோ போல் இருக்கிறீர்களே?" என்றார். "உடம்பு சௌகரியமில்லை. ஜுரம் வரும் போலிருக்கிறது" என்றேன். "சரி. வீட்டிற்குப் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்" என்றார்.

"காந்தியின் 'ஹரிஜன்' கட்டுரை இருக்கிறது, சட்ட சபை விவகாரங்கள் இருக்கின்றன; இரண்டு காலி பார்த்துவிட்டுப்போகிறேன்" என்றேன். "பரவாயில்லை. கவலையில்லாமல் போங்கள். நான் தி. ஜ. விடம் சொல்லி விடுகிறேன். பத்திரிகை நின்று விடாது. நாங்கள் பார்த் துக் கொள்கிறோம்" என்றார் கிருஷ்ணமணி. "அதற் கில்லை கிருஷ்ணமணி..." என்று ஆரம்பித்தேன். "நீங்கள் வீட்டிற்குக் கிளம்புங்கள் ..." என்று விளையாட்டு அதட்டல் போட்டார்.

ஒரு ரிக்ஷாவில் ஏறிக்கொண்டு, வீடு வந்து சேர்ந் தேன். ஜுரம் 'கிறு கிறு' என்று ஏற ஆரம்பித்து விட்டது. தலைவலி — பொட்டு இரண்டும் பிளந்துவிடும்

போலத் தெறிக்க ஆரம்பித்து விட்டது. அங்கும் இங்கும் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தேன். கண் எரிய ஆரம்பித்தது. தேகம் நன்ருகக் கொதித்துக் கொண்டிருந்தது.

வெளியே போயிருந்த ஸரோஜா வந்திருக்கிருள். வந்தவுடன் ஸரோஜாவின் தாய் நான் சீக்கிரம் வந்து விட்டதையும், கதவைச் சாத்திக்கொண்டு படுத்திருக்கிறதையும் சொல்லியிருக்கிருள். ஸரோஜா மேலே வந்தாள். கதவைத் திறந்து லைட் ஸ்விட்சைப் போட்டுப் பார்த்தாள். நான் கீழே படுத்துக்கொண்டு புரண்டு கொண்டிருந்தேன்.

" என்ன திடீரென்று? "

" ஒன்றுமில்லை. சிறிது காய்ச்சல்." தலையைத் தொட்டுப் பார்த்தாள். " அடேயப்பா, கொதிக்கிறதே," என்று கீழிறங்கி, உஷ்ணமானியை எடுத்து வந்தாள்.

" சரிதான் ... கடும் ஜுரம். 103 க்கு மேலே இருக்கும். நான் டாக்டரை அழைத்து வருகிறேன் " என்று இறங்கப் போனுள்.

" வேண்டாம். இன்று நாளையும் பட்டினி போட்டு விட்டால் சரியாகிவிடும். "

" அதெல்லாம் எனக்குத் தெரியும். பேசாமல் இருங்கள் " என்று டாக்டரிடம் சென்று, கையோடு அழைத்து வந்துவிட்டாள்.

டாக்டர், உஷ்ணமானியை வைத்துப் பார்த்தார். குழாயை மார்பில் வைத்துப் பார்த்தார். நாடியைப் பார்த்தார். கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்.

" தலைவலி இருக்கிறதா ?"

" மண்டையைப் பிளக்கவில்லை, அவ்வளவுதான். "

" உடம்பு வலி இருக்கிறதா ?"

"உடம்பு பூராவும் இருக்கு; அபாரமாயிருக்கு"

"இந்த ஜுரம் நிரம்ப எங்கும் பரவலாக வந்து கொண்டிருக்கிறது. 'டிங்கு' ஜுரம் என்று பெயர். இது ஆசியா பூராவும் பரவி வந்து கொண்டிருக்கிறது. நான் மாத்திரையும், மருந்துகளும் தருகிறேன். வேளை ஒன்றுக்கு ஒரு மாத்திரையும், ஒரு 'டோஸ்' மருந்துமாக நாலு வேளை சாப்பிடுங்கள். நாலு நாளில் குணமாகி விடும். கவலைப்பட வேண்டாம்."

"ஆகாரம்?" என்றாள் ஸரோஜா.

"புழுங்கலரிசிக் கஞ்சி, அல்லது பார்லிக் கஞ்சி" என்றார் டாக்டர். ஸரோஜா அவருடனேயே திரும்பவும் சென்று மருந்தை வாங்கி வந்தாள். மருந்தை எடுத்துக் கொடுத்துச் சாப்பிடச் செய்தாள். மறுபடியும் கீழே சென்று புழுங்கலரிசிக் கஞ்சி கொண்டு வந்தாள். "சிறிது எழுந்திருங்கள். இந்தக் கஞ்சியைக் கொஞ்சம் சாப்பிடுங்கள்" என்று சொல்லிக் கொண்டே, மேல் தாங்கலாகத் தூக்கி உட்கார வைத்தாள். சாய்ந்து கொண்டேன். கஞ்சியைச் சிறிது சிறிதாகப் பருக ஆரம்பித்தேன்.

நாலைந்து நாட்களாக வலியும் வேதனையும் பொறுக்க முடியாதபடி இருந்தன. உடல் மிகவும் மெலிந்து விட்டது. உட்காருவதுகூட சிரமமாயிருந்தது. சரோஜா தான் மிக்க பொறுமையுடன் சுச்ருஷை செய்து வந்தாள். பணிவிடை செய்வதில்தான் அவளுக்கு என்ன மகிழ்ச்சி! தொண்டு செய்வதில் என்ன மலர்ச்சி! குலத்திற்கே பெருமை தரும் பெண்ணாக விளங்கினாள் ஸரோஜா. அவளுடைய அடக்கம், அவள் அன்பு, அவள் தொண்டு, அவள் தேசபக்தி எல்லாம் என் மனத்தை ஆட்கொண்டன. அவளையே நினைத்துக் கொண்டிருந்தேன். வேறு ஓர் எண்ணமும் என்னுள் புகவிடாமல் ஸரோஜா என் இதயத்தில் வியாபித்திருந்தாள்.

மாலை வழக்கம் போல் வந்ததும், நான் எழுந்திருக்க முயன்றேன். பலவீனத்தினால் முடியவில்லை. தள்ளாடிக் கொண்டு விழப் போனேன். ஸரோஜா தாங்கிக் கொண்டாள்.

"ஏன் அலட்டிக் கொள்கிறீர்கள்! என்ன வேண்டும்?"

"இல்லை. படுத்துக் கொண்டேயிருப்பது சிரமமாக இருக்கிறது. சாய்வு நாற்காலியில் சிறிது சாய்ந்து கொண்டு உட்காரலாமா என்று நினைத்தேன். அதற்குத் தான் எழுந்தேன்; முடியவில்லை, தள்ளி விட்டது."

"அதற்கென்ன?" என்று, என் கையைப் பிடித்துத் தூக்கித் தாங்கலாகச் சாய்வு நாற்காலியில் உட்கார வைத்தாள். ஸரோஜாவின் கை என் கைக்குள்ளே இருந்தது. அதை நான் விடவில்லை.

"ஸரோஜா," என்றேன். முகத்தைத் திருப்பி என முகத்தைப் பார்த்தாள். "ஸரோஜா ... நீ ஒவ்வொரு நாளும் எனக்குக் கை கொடுத்த தெய்வமாகவே இருக்கிறாய். இந்தக் கை எனக்கு எவ்வளவோ புனிதமான காரியங்கள் செய்து கொடுத்திருக்கிறது. இனிமேல, இது என்னுடையதாக இருக்க வேண்டும்' என்றேன். ஸரோஜா ஒன்றும் பேசவில்லை. கண்ணை மூடிக்கொண்டிருந்தாள். திடீரென்று கண்ணைத் திறந்துகொண்டு, என் காலைத் தொட்டுக் கண்ணில் வைத்துக் கொண்டாள். "முதல்லே உங்களுக்கு உடம்பு குணமாகட்டும்" என்று சொல்லிவிட்டுக் கீழே இறங்கிச் சென்றாள்.

அவள் இறங்கிச் சென்றாலும், அவள் அங்கேயே இருப்பதாக எனக்குத் தோன்றியது. என்னளவில் ஒரு புதிய தெம்பு ஏற்பட்டது. சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்திருந்து நின்றேன். எதிரே இருந்த காலண்டரில் உள்ள அம்பிகை உருவத்தைப்பார்த்து, 'துருசுகா க்ருபா' என்ற சாவேரி கீர்த்தனத்தை முனக ஆரம்பித்தேன்.

தலைக்குத் தண்ணீர் விட்டாய் விட்டது. அலுவலகத்திற்கும்போய் விட்டு வந்தேன். உடம்பும் நன்கு குணமாகிவிட்டது. மாலையில் பத்திரிகை ஆபீஸிலிருந்து திரும்பி வந்தேன். ஸரோஜாவின் தாய் ஆண்டாளம்மாள் கடுகு நேம்பிக்கொண்டிருந்தாள். குளித்துவிட்டுத் தலை சீவிக்கொண்டு கீழே வந்தேன்.

"என்ன அம்மா, ஸரோஜா இன்னும் வரவில்லையா?" என்று மெதுவாக பேச்சுக்கு இழுக்க ஆரம்பித்தேன்.

"இன்னிக்கு சிறிது நேரம் ஆகும்னு சொல்லிவிட்டுப் போச்சு" என்றாள் அந்த அம்மாள்.

"பெரிய அம்மா. நான் உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். அதற்கு நீங்கள் உத்தரவு கொடுக்கணும்."

"என்ன தம்பி, பெரிய பீடிகையாகப் போடறே?"

"இல்லை, அம்மா. விஷயம் பெரிய விஷயம்தான். அதற்காகத்தான் உங்களை வேண்டி வந்திருக்கிறேன்."

"என்ன தம்பி, சொல்லேன்?"

"நான் ஸரோஜாவைக் கட்டிக்கொள்ள விரும்புகிறேன். அதற்கு உங்களுடைய ஒப்புதலும் ஆசீர்வாதமும் வேண்டும்" என்றேன். ஆண்டாளம்மாள் சிறிது யோசித்தாள்.

"தம்பி, அது வயது வந்தபெண். படித்த பொண்ணு. அதற்கு என்ன இஷ்டமோ, அதன்படி செய்ய எனக்குச் சம்மதந்தான். எனக்கு இருப்பது அது ஒரு பொண்ணுதான். அதன் விருப்பத்திற்கு விரோதமாக கல்யாணம் செய்து வைத்து, அதன் வாழ்வைப் பாழாக்க விரும்பவில்லை. ஆனாலும் ஜாதி விட்டு ஜாதியாகக் கல்யாணம் செய்துக்கிட்டால் ஊருக்கு இளப்பம்; எல்லோரும் அவமதிப்பாங்க; கேவலமாகப் பேசுவாங்க. அவ அப்பா இருந்தா இப்படி விட்டிருக்க மாட்டாரு. பாவம், அவ

அம்மா நிமிர்ந்து நிக்காததாலே இப்படி ஆயிடுத்துன்னு பின்னாலே ஒருவரும் குறைஞ்சுக்கப் படாதேன்னு பயப் படறேன்."

"என்னைப் பற்றிக் கவலை இல்லை, அம்மா. என் தாயார் காலமாகி விட்டார். என் தகப்பனார் என்னை உதறி எறிந்துவிட்டார். நெருங்கிய உறவினர்களும் இல்லை. ஆகவே, நான் அவமானப்படும்படியா எனக்குச் சுற்றம் இல்லை."

"அது சரி, தம்பி. உறவினர் மாத்திரம் இல்லை, சினே தர்கள்கூட சிறிது அலட்சியமாகத்தான் நடந்து கொள் வார்கள். சமூகத்திற்கு எதிராக எவன் எந்தக் காரியத் தைச் செய்தாலும், செய்பவனுக்குக் கஷ்டந்தான்."

"அதையெல்லாம் பொருட்படுத்துவானேன், அம்மா? நம்மை அவமதிப்பவர்களை நாமும் மதிக்க வேண்டாம்."

"சரிதான், தம்பி. நீங்கள் கணவனும் மனைவி யும் சகித்துக்கொண்டு போய்விடலாம். ஆனால், இத் தகைய மணங்களிலிருந்து பிறக்கும் குழந்தைகளுக்கு எவ் வளவு கஷ்டம்? உங்களுடைய தப்பிற்கு அவர்கள் வாழ் நாள் முழுதும் கஷ்டப்பட வேண்டிவரும். இரு ஜாதிப் பிரிவுகளும் அவர்களை மறுக்கும். அதனாலேயே அவர்கள் வாழ்வு கசப்பாக ஆகிவிடும். அவர்களுக்கு சமூகத்தில் மதிப்பு ஏற்படுவது சிரமம். உங்கள் விருப்பத்திற்காகப் பின் வாரிசுகளுக்குக் கஷ்டத்தைக் கொடுப்பது நியாயமா என்பதை யோசித்துப் பாருங்கள்."

நானும் யோசித்துத்தான் இருந்தேன். அந்த அம் மாள் சொன்னது பெரும்பான்மையும் சரிதான். அதில் அநேக சிரமங்கள் இராமல் இல்லை. ஆனால், அதற்காகப் பயந்து விடுவதும் சரியில்லை என்று எனக்குப் பட்டது.

"நீங்கள் சொல்வது சரிதானம்மா. ஆனால் இதையும் கவனிக்க வேண்டும். பல நூற்றாண்டுகளில் நினைக்க

முடியாத மாறுதல்கள் கடந்த நூறு வருஷங்களில் நடந்திருக்கின்றன. இந்த நூறு வருஷத்திற்குள்ளேயே கடந்த இருபது ஆண்டுகளுக்குள் பிரமாதமான முன்னேற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அதுபோலவே, வருங்காலத்திலே, எவ்வளவோ புரட்சிகள், சீர்திருத்தங்கள், மாறுதல்கள், முன்னேற்றங்கள், ஏராளமாக ஏற்படப்போகின்றன. வருங்காலத்துக் குழந்தைகளுக்கு நீங்கள் நினைக்குமாப்போல் ஒன்றும் கஷ்டம் ஏற்படாது.''

''என்னமோ, நீங்கள் இரண்டு பேரும் நன்றாக யோசித்துச் செய்யுங்கள். நீங்கள் எந்த முடிவுக்கு வந்தாலும், எனக்குத் திருப்திதான்'' என்று சொன்னாள் அந்த அம்மாள்.

இரண்டு வாரங் கழித்து எனக்கும் சரோஜாவுக்கும் திருநீர்மலையில் திருமணம் நடந்தது. திருமணத்திற்குப் பிறகு ரிஜிஸ்டர் ஆபீசிலும் பதிவு செய்து கொண்டோம். தி. ஜ., வீ. ர., பத்திரிகை நண்பர்கள், காங்கிரஸ் தலைவர்கள், தேசத் தொண்டர்கள், எல்லோரும் வந்திருந்து ஆசி கூறினர். வீ. ர., விற்கு மட்டற்ற மகிழ்ச்சி. ''என்ன ஓய். இனிமேலாவது பூணூலை எடுக்கப் போகிறீரா இல்லையா?'' என்றார்.

''எடுக்கவே போவதில்லை. பிராமணனுக்கு நாலு வர்ணத்திலும் விவாகம் செய்துகொள்ள உரிமை உண்டென்று மநுதர்ம சாஸ்திரம் சொல்லுகிறது'' என்றேன். அதற்குள் ஒரு பெரியவர் ''என்ன வீ. ர. ரொம்ப உத்சாகமாயிருக்கிறாய் போலிருக்கிறதே!'' என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

''ஆமாம். ஏன் உத்சாகம் இருக்காது? நடராஜ் போன்ற உயர்குலத்திற் பிறந்த, அறிவுள்ள, திறமையுள்ள குணவான்களான யுவர்கள் இப்படித் துணிச்சலான காரியங்களைச் செய்ய வேண்டுமென்பதே என் கனவு. அப்

பொழுதுதான் நாடு முன்னேறும். இனி முன்னேற்றத்தைப் பற்றிக் கவலையில்லை" என்றார்.

"இல்லை வீ. ர. நான் ஸரோஜாவை மணந்துகொண்டது, சீர்திருத்தவாதிகளுக்குப் 'பாடமாக' இருப்பதற்காகவோ, கலப்பு மணம் செய்ய வேண்டுமென்ற கொள்கைக்காகவோ அல்ல. எங்கள் இருவர் மனமும் ஒத்திருந்தது. ஆனால், சமூகக் கட்டுப்பாட்டிற்கு விரோதமானது. அப்பொழுது 'என் மனச்சாட்சியை எதிர்ப்பதா? சமூகக் கட்டுப்பாட்டை எதிர்ப்பதா?' என்பது பிரச்னை. நீங்கள் கொள்கைக்காக வாழ விரும்புகிறீர்கள். நான் மனச்சாட்சிக்கு விரோதம் இல்லாமல் வாழ விரும்புகிறேன்" என்றேன்.

"இரண்டுமே நல்ல லட்சியம் தானே? ஆகவே அதில் வித்யாசப்படுத்த ஒன்றுமில்லை" என்றார் வீ. ர.

பொதுவாக, நண்பர்கள் உளம்களித்து ஆசிகளை அளித்தனர். ஸரோஜாவுக்கும் நல்ல மதிப்பு இருந்தது. பொதுசேவையிலும் சரி, வீட்டிலும் சரி, அன்புடன் பணியாற்றுவாள். சிரித்த முகத்துடன் தொண்டு செய்து வருவாள். அப்படிப்பட்டவளுக்கு பத்திரிகையில் ஈடுபட்டிருக்கும் நான் கிடைத்ததில் எல்லோருக்கும் மனத்திருப்திதான்.

ஆண்டாள் அம்மாள் பொங்கி மகிழ்ந்து நின்றாள். எல்லோரும் ஆசீர்வதித்துவிட்டுச் சென்றார்கள்.

"ஸரோஜா" என்றேன்; திரும்பினாள். முகத்தைப் பார்த்தேன். ஆனால், மனிதனுக்கு இரண்டு கண்கள் தானே இருக்கின்றன; இந்திரனுக்கு மாத்திரம் ஆயிரம் கண்களாம்!

# 21

பத்திரிகையின் பல நுணுக்கங்களையும் தி. ஜ. வுடன் பழகி நன்ருகக் கற்றுக்கொண்டேன். பத்திரிகையின் பல துறைகளிலும் நல்ல பயிற்சி அடைந்து விட்டேன். தி. ஜ.விடம் நான் போய், 'இப்படி எழுதியிருக்கிறேன். இது சரிதாஞ' என்று கேட்கப் போவேன். 'நடராஜ், நீங்கள் என்னைக் கேட்கவே வேண்டாம். கேட்க வேண்டிய கட்டத்தையெல்லாம் வெகு நாட்களுக்கு முன்பே கடந்து விட்டீர்கள். உசிதம்போல் எழுதி அனுப்புங்கள். அபிப்பிராயம் என்று வரும்பொழுது நீங்கள் நினைப்பது போல் நான் நினைக்க வேண்டுமென்பதில்லை. ஆசிரியர் குழுவில் இருக்கும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான அபிப்பிராயத்தைக் கொண்டிருக்கலாம். தேசியத்திற்கும் தேசத்திற்கும் இடையூருக வராதபடி எழுத வேண்டும். அப்படி நீங்கள் தூக்கத்திலும் எழுதிவிடப் போவதில்லை'' என்பார்.

அந்த சமயத்தில் சிலர் மற்ருெரு தேசியப்பத்திரிகை ஆரம்பிக்க விரும்பினர். 'காங்கிரஸ் அதிகாரத்தை ஏற்கக் கூடாது. அது ஏற்ருல், அதன் சக்தி குறைந்து விடும்; ஒளி மங்கிவிடும்' என்பதே அக்காலத்து — மாற்றம் வேண்டாம் என்பவர்களின் வாதம். அவர்கள் கொள்கை போலவே, காங்கிரஸ் அதிகாரத்தை ஏற்றதும் சிற்சில குறைபாடுகள் தோன்ருமல் இல்லை. ஓர் அறிஞர் சொன்ஞர்; "All Powers Corrupt — Absolute Power Corrupts absolutely. அதிகாரம் தன்மையைக் கெடுக்கிறது. அதிக

மான அதிகாரம் அதிகமாகக் கெடுக்கிறது" என்றார். எப்படிக் கொடுங்கோல் மன்னர்கள், சர்வாதிகாரிகள், அளவுக்கு மீறிய தங்கள் அதிகாரங்களால், அறிவிழந்து மக்களுக்கு விரோதிகளாகின்றனர் என்பதை யெல்லாம் இதிலிருந்து விளக்கிக் காட்டினார். 'பெரிய அதிகாரம் என்பதில்லை. சிறு அதிகாரம், சிறு கௌரவம், சிறு பதவி எல்லாம்கூட மனிதத் தன்மையை மாற்றும் சக்தி வாய்ந்தது' என்பது சிறிது சிறிதாக நிரூபணம் ஆயிற்று. சிறை வாசத்தை ஓர் உன்னத பதவியாகவும், அடி வாங்குவதை உயர்ந்த கௌரவமாகவும் எண்ணி வந்தவர்களிடையே கூடச் சிறிது சிறிதாக இந்த மாறுதல் தோன்ற ஆரம்பித்தது. மந்திரி சபையில் தம் பெயர் வரும் என்று எதிர்பார்த்தவர்களுக்கு அதில் இடமில்லை யென்றதும் பெரிதும் ஏமாற்றம். சட்ட சபையில் தமக்கு இடம் கிட்டும் என்று எதிர்பார்த்தவர்களுக்கு அதில் இடம் கிடைக்கவில்லை என்றதும், அவர்களுக்கு மனவருத்தம். அதேபோல ஜில்லா போர்டு, முனிசிபல் சபை, இவற்றில் இடம் கிடைக்க வில்லையேயென்று வருத்தம். தியாகத்தையும் கஷ்டத்தையும் மேற்கொண்டு செய்த தேசத் தொண்டு, இப்பொழுது லாபத்தையோ, அல்லது கௌரவத்தையோ கொடுக்கும் ஓர் உத்தியோகப் பணியாக மாறி வந்து கொண்டிருந்தது.

தேசீயப் பத்திரிகை ஆரம்பிக்க விரும்பியவர்கள், பத்திரிகையின் பலத்தை நன்கு அறிந்தவர்கள். ஜனங்களுக்கு ஏதாவது ஒரு விஷயத்தை எடுத்துச் சொல்ல வேண்டுமென்றால், அது பத்திரிகை வாயிலாகத்தானே முடிகிறது. ஏதாவது ஒரு கொள்கைக்கு ஜனங்களைத் திருப்ப வேண்டுமென்றாலும் அதற்குப் பத்திரிகைதான் வேண்டியிருக்கிறது. தேர்தல் சமயங்களிலோ அதன் உபயோகத்தைச் சொல்லி முடியாது. அரசாங்கத்தில் ஓர் இலாகாவில் காரியம் சரியாக இயங்கவில்லை என்றபோது 'ஆசிரியருக்குத் தபால்' என்ற பகுதியில் ஒரு கடிதம் வந்து

விட்டால், உடனே அது கவனிக்கப்படுகிறது. எத்தனையோ விண்ணப்பங்களும், நமூறுக்களும் செய்யாத காரியத்தை ஒரு கடிதம் செய்கிறது. ஏன்? ஒரு பத்திரிகைக்கு லக்ஷக்கணக்கான வாசகர்கள். ஒரு கடிதம் என்றால், அதை லக்ஷம் கடிதங்கள் என்றுதான் சொல்ல வேண்டும். அதனாலேயே தான் இங்கிலாந்திலே, பத்திரிகைக்கு நாலாவது தூண் (Fourth Estate) என்ற கௌரவம் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது.

ஒரு காங்கிரஸ் தலைவரும், ஒரு வடக்கத்தி சேட்டும். பத்திரிகை ஆரம்பிக்க வந்தனர். பத்திரிகையின் பெயரையும் 'சங்கத்வனி' என்று பதிவு செய்து கொண்டனர். காங்கிரஸ் தலைவர், ஒருசமயம் தமிழ்நாடு கமிட்டித் தலைவராகக்கூட இருந்தவர். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் அங்கத்தினராக இருப்பவர். மந்திரி சபையில் தமக்கு ஓர் இடம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தார். கிடைக்காதது அவருக்குப்பெரிய ஏமாற்றம். காங்கிரஸின் மேலிடம் தமக்குச் சரியான ஆதரவு காட்டவில்லை என்பது குறை. ஜனங்களிடமும் தம் செல்வாக்கை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டும். மேலிடத்திற்கும், தம் கௌரவத்தை தெரியப்படுத்த வேண்டும். இதற்கெல்லாம் ஒரு பத்திரிகை கையில் வேண்டும். ஆகவே; தம் நண்பர்களிடமிருந்து பணம் திரட்டி, ஒரு கம்பெனி நிறுவனத்தைப் பதிவு செய்திருந்தார். அதில் வடக்கத்தியாருக்குச் சரி பங்கு. அவர் வியாபாரி. ஆகவே, அவர் பணம் போடுவதில் தயங்க வில்லை — பல வியாபாரங்கள் நடத்துபவர்; செல்வாக்குள்ள மனிதர்.

இவர்கள் இரண்டு பேரும், தி. ஜ. வைத் தங்கள் பத்திரிகைக்கு, இழுத்துக் கொள்ள வேண்டுமென்று எவ்வளவோ முயன்றனர். தி. ஜ. அதற்கு இணங்கவில்லை. சம்பளம் அதிகம் கொடுப்பதாக ஆசை காட்டியிருக்கிறார்கள். அவர் பெயரையே ஆசிரியர் என்று போடுவதாகச்

சொல்லியிருக்கிறார்கள். 'நீங்கள் எப்படி நடத்தினாலும் நாங்கள் அதில்குறுக்கிடவில்லை' என்று சொல்லியிருக்கிறார்கள். 'எனக்கு இப்பொழுது கிடைத்துக் கொண்டிருக்கும் சம்பளம் போதுமானது. என் பெயரைப்பத்திரிகையில் ஆசிரியர் என்று போட்டு விடுவதனால் என் திறமையோ, அந்தஸ்தோ, பிரமாதமாக உசந்துவிடாது. என் வேலையை எனக்குத் தெரிந்த வரையில் ஒழுங்காகச் செய்து கொண்டுதான் போகிறேன். பிறர் குறுக்கிடுவதாயிருந்தாலும், அது என்னைப் பொறுத்த வரையில் பாதிக்காது' என்று பிடிவாதமாக மறுத்து விட்டார்.

'வேறு யாரையாவது சிபார்சு செய்யுங்கள்' என்று கேட்டிருக்கிறார்கள். 'சரி, ஒரு வாரம் அவகாசம் கொடுங்கள். நான் யோசனை செய்து சொல்கிறேன்' என்று சொல்லியிருக்கிறார் தி. ஜ. இந்தப் பேச்சுக்கள் நடந்து கொண்டிருக்கும்பொழுது, ஒரு நாள் மாலை நாங்கள் இரண்டு பேர்தான் இருந்தோம். மற்றவர் எவரும் வரவில்லை.

"என்ன நடராஜ், நீங்கள் ஒரு தமிழ்த் தினசரிக்கு ஆசிரியராகப் போகிறீர்களா?" என்று கேட்டார்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. "என்ன, தி. ஜ. ஒரு புதிர் போடுகிறீர்கள். இல்லை, என்னைப் பரீட்சை பார்க்கிறீர்களா?" என்றேன்.

"இல்லை, நடராஜ். இதில் விளையாட்டு ஒன்றுமில்லை. சில நண்பர்கள் ஒரு பத்திரிகை ஆரம்பிக்கிறார்கள். அதற்கு என்னை அழைத்தார்கள். நான் மறுத்து விட்டேன். நான் வராவிட்டால் வேறு ஒரு சரியான ஆசிரியராகச் சிபார்சு செய்யச் சொன்னார்கள். அதற்குத்தான் நீங்கள் போகிறீர்களா என்று கேட்டேன்."

"அது சரிதான் தி. ஜ. உங்கள் அனுபவம் என்ன என் அனுபவம் என்ன? நீங்கள் பத்திரிகையுலகில்

ஜாம்பவான். நான் கத்துக்குட்டி. ஆசிரியர் பொறுப்பு என்ருல், என்ன கிள்ளுக்கீரையா?''

"பொறுப்பு உள்ள வேலை என்பதற்காகத்தான் பொறுப்பான மனிதரைத் தேடுகிறேன். நீங்கள் கத்துக் குட்டி என்று சொன்னல் நான் ஒப்புக்கொள்ள வேண்டாமா? ஆறேழு வருஷம் அனுபவமிருக்கிறது. பத்திரிகையில் உள்ள பலதரப்பட்ட வேலைகளையும் செய்து அனுபவம் அடைந்திருக்கிறீர்கள். செய்திகளின் தராதரத்தை எடைபோடத் தெரியாதா? அரசியல் சலசலப்புக்குள்ளே ஊடுருவிப் பாய்ந்து, அதன் உண்மையைக் கண்டு பிடித்து, விளக்கம் செய்யத் தெரியாதா? தலையங்கம் எழுதுவதில்லையா? இதில் எது செய்யவில்லை, ஏன் தயங்க வேண்டும்?''

"அதெல்லாம், சரிதான். உங்களிடம் ஒரு வார்த்தை சொல்லி விட்டோ, கேட்டுக் கொண்டோ, செயல் புரிந்திருக்கிறேன். அப்படியே தவறு நேர்ந்து விட்டாலும், அதைத் திருத்த நீங்கள் இருக்கிறீர்கள்.''

"அப்படி ஏதாவது, எப்பொழுதாவது திருத்தியிருக்கிறேனு?''

"இல்லை, ஆனல் இனிமேல் வராது என்பது எப்படி?

"வராது. எப்பொழுதுமே ஒருவருக்கு ஒருவர் உறு துணையாக இருந்துகொண்டே இருக்க முடியாது. நம் பழமொழிஇருக்கிறது: 'மேயப்போற மாட்டிற்கு கொம்பிலே புல்லைக் கட்டுவார்களா?' சுதந்திரமாக இயங்கப்போகும் ஒவ்வொருவருக்கும் இத்தகைய பயம் வரத்தான் வரும்! ஆனல், அதை சமாளித்து நிற்க வேண்டும். பயந்து கொண்டே இருந்தால், புதிதாக மோட்டார் வண்டி ஒருவரும் ஓட்ட முடியாது. புதிதாக ஒரு டாக்டர் முதல் அறுவை சிகிச்சை செய்ய முடியாது, புதிதாக சங்கீத வித்வான் மேடையிலேறிக் கச்சேரி செய்ய முடியாது.

குளிர் பயமெல்லாம் தண்ணீருக்குள் இறங்கும் வரையில் தான். ஒருதரம் முழுகிய பிறகு, அந்தக் குளுமையே சுக மாயிருக்கும். ஆகவே, ஒன்றும் யோசிக்க வேண்டாம். நல்ல சந்தர்ப்பங்கள், வாழ்க்கையில் தினம் நமக்காகக் காத்துக்கொண்டிருப்பதில்லை. வரும்சந்தர்ப்பத்தை விட்டு விட்டு, பிறகு ஏமாற்றம் அடையக்கூடாது. எதையுமே, 'நான் தோல்வியடைய மாட்டேன்' என்ற வீறுப்புடன் செய்ய வேண்டும்."

"என்னவோ தி. ஜ. நான் எனக்காகக்கூடப் பயப்பட வில்லை. நீங்கள் சிபாரிசு செய்து நான் ஏற்றுக்கொண்டு, சரியாக நடத்தாமல் போய்விட்டால் உங்களுக்குத் தானே கெட்ட பெயர். அதுதான் என்னைத் தயங்க வைக்கிறது."

"நான் அதற்குத் தயாராயிருக்கிறேன். அப்படி அவமானம் வந்தாலும், நான் பொருட்படுத்த வில்லை. உங்கள் மேல் அதற்காக வருத்தப்படவும் இல்லை. இப்பொழுது சரிதானா?"

மறுபடியும் தயங்கி நின்றேன்.

"என்ன, மறுபடியும் தயக்கம்?"

"இல்லை; நான் ஒருவன் மாத்திரம் பத்திரிகை நடத்தி விட முடியுமா? இல்லை என்மாதிரி புது 'ரெக்ரூட்' களே இருந்துகொண்டு பத்திரிகை நடத்திவிட முடியுமா?"

"அதற்கு கவலைப்பட வேண்டாம், நடராஜ். அதற்கு அவர்களே இரண்டு மூன்று அனுபவம் உள்ள உதவி ஆசி ரியர்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்."

"அவர்கள் யாரோ, என்னுடன் ஒத்துழைப்பார் களோ. என்னவோ!"

"சிறிதும் தயங்க வேண்டாம். எல்லோரும் உங்க ளுக்குத் தெரிந்தவர்கள் தாம். உங்களுடன் மனமுவந்து ஒத்துழைக்கக் கூடியவர்கள்தாம்."

"அவர்கள் யார் என்று தெரிந்து கொள்ளலாமா?"

"'உதய பாரதி'யிலிருந்து சுந்தரம், 'தேச பக்த'னிலிருந்து ரங்கசாமி. மற்ருெருவர் யார் என்று தெரியவில்லை."

"அவர்கள் எனக்கு நன்கு பரிசயமானவர்கள்தாம். இருந்தாலும் நான் ஆசிரியன் என்பதை மதித்து நடத்துவார்களா?"

"அதெல்லாம் நாம் நடந்து கொள்வதில் இருக்கிறது. நம் செயல்தான் நமக்குப் பெருமை தர வேண்டுமே தவிர, நம் சம்பளமோ, அந்தஸ்தோ அல்ல. நீங்கள் வேலை செய்வதில் திறமையைக் கண்டார்களானுல், அதற்கு அவர்களாகவே மதிப்புக் கொடுத்து விடுவார்கள். அவர்களையும் நீங்கள் மதித்து நடத்த வேண்டும். ஏதாவது சிறு தவறு ஏற்பட்டு விட்டால், அதைப் பெரிது படுத்தாமல், நாசூக்காக நடந்து கொள்ள வேண்டும். அதெல்லாம், தானே உங்களுக்கு அத்துபடியாகிவிடும். இதெல்லாம் சொல்லித் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை."

"உங்கள் கட்டளை அதுவானுல், உங்கள் இஷ்டப்படி நான் செய்யக் காத்திருக்கிறேன். ஆசீர்வதியுங்கள், அனுக்ரகம் செய்யுங்கள்."

அதன்படியே, தி. ஜ. சிபார்சு செய்தார். முதலாளிகளும் அவர் சொன்னதை அப்படியே ஏற்றுக்கொண்டு என்னை நியமனம்செய்தனர். அவர்கள் என்னுடன் பேசியதிலிருந்து, அவர்கள் என்னைக் கண்டு மிகவும் ஏமாற்றம் அடையவில்லை என்ற அளவுக்கு அறிந்து கொண்டேன்.

ஜனவரி, 26உ சுதந்திர தினத்தன்று, முதல் இதழ் பிரசுரமாக இருந்தது. அதை சுதந்திர மலராக அனேக விசேஷக் கட்டுரைகளுடன் வெளியிட்டேன். அன்று இரவே ஸரோஜாவிற்கு ஆண் குழந்தை பிறந்தது. மறுநாள், நண்பர்களுக்கு வீட்டில் ஒரு விருந்து வைத்தேன்.

"பலே ஆள், ஐயா! ஒரே நாளிலே இரட்டைக் குழந்தையைப் பெற்றுக் கொண்டார். தனக்கு ஒரு குழந்தை; ஊருக்கு ஒரு குழந்தை!" என்றார் வீ. ர.

"இரண்டு குழந்தைகளும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர ஆசீர்வதியுங்கள்" என்றார் தி. ஜ.

"பையன் சுதந்திர தினத்திலே பிறந்திருக்கிறான். பத்திரிகையும் சுதந்திர தினத்திலே பிறந்திருக்கிறது, சுதந்திரம் வந்து விடும் என்பதற்கு இது ஓர் அறிகுறி" என்றார் கிருஷ்ணமணி.

"ஓய், என்ன பெயர் வைக்கப் போகிறீர்ஐயா, உம், பையனுக்கு?" என்றார் வீ. ர.

"எல்லோரும் பையனுக்குத் தாத்தா பெயர்தான் வைப்பார்கள். ஆனால், இந்தப் பையனின் தாத்தா அதை விரும்ப மாட்டார். இல்லை, கடவுள் பெயர் வைக்க வேண்டும். நானும் கடவுள் பெயரைத் தான் வைக்கப் போகிறேன். நம் எல்லோருக்கும் கண்கண்ட கடவுள். நமக்கு எல்லாம் புத்துயிர் கொடுத்த கடவுள் — மோகன தாஸ் காந்தி. அந்த மகாத்மாவின் பெயரைத்தான் வைக்கப் போகிறேன். அவன் பெயர் மோகன்."

"எல்லாத்திலேயும், புதிதாக ஒன்றைச் செய்து விடுகிறார் ஐயா, இவர்" என்றார் வீ. ர.

"என்னை பழமைவாதி என்று சொல்லியிருக்கிறீர்களே, நீங்கள் வீ. ர.?"

"அதுவும் சரிதான். இன்னமும் பூணூலைக் கழற்றுகிறீரா" என்றார் வீ. ரா.

அன்றுமாலை நண்பர்கள் மகிழ்ச்சியுடன் என்னுடன் இருந்துவிட்டுச் சென்றார்கள்.

# 22

'சங்கத்வனி' நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வந்தது. பொதுவாக இதர பத்திரிகைகளிடையேயும், பத்திரிகைத் தொழிலில் இருப்பவர்களிடையேயும் நல்ல பெயர் இருந்து வந்தது. பொதுமக்களும் மேலும் வாங்கிப் படித்தனர். தலையங்கங்கள், கட்டுரைகள், துணுக்குகள், கார்ட்டூன்கள், செய்தித் தலைப்புகள், எல்லாம் வாசகர்கள் விடாமல் விரும்பிப் படிக்கும் அளவுக்கு, சுவையுள்ளவையாக இருந்தன. தி. ஜ. வின் பாணியையே பின்பற்றினேன். தயாநிதியைப் போல் வசைமொழியில் இறங்குவதில்லை. ஆனால், உணர்ச்சியைக் காட்ட வேண்டிய சமயங்களில், காரசாரமான வார்த்தைகளை உபயோகிக்கத் தயங்குவதில்லை. உணர்ச்சியின் வேகமும், கருத்தின் ஆழமும் இருந்தால் வார்த்தைகளின் கடுமையை அமுக்கிவிடும். சுந்தரமும், ரங்கசாமியும் மிகவும் நன்றாக ஒத்துழைத்தனர். சுந்தரம் தலைப்புக் கொடுப்பதிலே ஓர் அழகு இருக்கும். பச்சையாகவோ, பயங்கரமானதாகவோ, படாடோபமாகவோ இருக்காது. விஷயத்திற்கேற்ற முக்யத்துவம் வார்த்தைகளிலே தொனிக்கும். சின்ன விஷயத்தைப் பெரிது படுத்தமாட்டார். ரங்கசாமி செய்திகளை அருமையாக எடிட் செய்வார்; ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்ட செய்திகளைப் பக்கத்திலே போடுவார், வேறு பக்கத்திலே வந்தால் 'இன்னபக்கம் பார்க்க' என்று போடத் தவறமாட்டார்.

மொத்தத்தில் அவரவர் பணியைத் திறம்படச் செய்தனர். பத்திரிகைக்கு தனித்தன்மை உண்டாகி விட்டது. தி. ஜ. என்னையும் என் சகாக்களையும் பல விதத்தில் உற்சாகப் படுத்தி வந்தார்.

தினசரிப் பத்திரிகை ஆசிரியர் என்ற முறையில், என் சமூக அந்தஸ்து உயர்ந்தது. பல விழாக்களுக்கும், விருந்துகளுக்கும், கூட்டங்களுக்கும் அழைப்புக்கள் வந்து கொண்டே யிருக்கும். முக்கியமானவற்றுக்குப் போவேன். இதனால், பல துறைகளில் உள்ள பிரமுகர் களின் பரிசயம் ஏற்பட்டது. பல நண்பர்கள், என் னிடம் பரிவுடன் நடந்துகொண்டார்கள். இம்மாதிரி விருந்து ஒன்றில்தான் வேங்கடேஷ் அவர்களைச் சந்திக்க நேர்ந்தது.

வேங்கடேஷ், என் தந்தையின் ஒன்றுவிட்ட சகோ தரியின் மகன். பள்ளியிலும், கல்லூரியிலும், புத்திசாலி என்று பெயர் வாங்கினவர். பி. ஏ. பரீட்சையில் ராஜ தானியில் முதல்வராக மார்க்கு வாங்கியவர். இவர்தான் என் தகப்பனாரின் லக்ஷிய மாணவர். இவரைப் போல, இவரைப் பின்பற்றி வரவேண்டும் என்பதுதான் அப்பா வின் அவா. 'பார்த்தியா, ராஜதானியில் முதல்வனாகத் தேறிவிட்டான். நீ முதல் கிளாஸ் வாங்குவதற்குத் திணறு கிறாய். நீ எப்படி ஐ.ஸி.எஸ். பாஸ் செய்யப் போகிறாய்?' என்று ஆதங்கப் பட்டதற்கெல்லாம், வேங்கடேஷ் அவருடைய ஆதர்ச மாணவனாக நடந்து காட்டிய மாதிரியே காரணம். தன் பிள்ளை, வேங்கடேஷுக்கு மேல் படிக்க வேண்டும், மார்க்கு வாங்க வேண்டும் என்பது அவருடைய பிரார்த்தனைகளில் முக்கியமானது.

வேங்கடேஷ் என்று பெயரைத் திருத்திக்கொண்ட திலேயே அவருடைய மோஸ்தர் தெரிகிறதல்லவா. வேங் கடேசன் என்றால் ரொம்ப சாதாரணப் பெயர். அவர் சாதாரணமானவர் அல்லவே. ஆகவே, வடக்கத்தியரைப்

போல ஒரு சப்தத்தைக் கொடுத்தார். அவருடைய தகப்பனார் வேங்கடேசனைச் சீமைக்கு மேற்படிப்புக்கு அனுப்பினார். ஆக்ஸ்போர்டில், எம். ஏ. படித்துவிட்டு, ஐ. ஸி. எஸ். பரீட்சை எழுத வேண்டியது என்பது திட்டம். எம். ஏ. யிலும் நல்ல மார்க்குகளுடன் தேறி விட்டார் வேங்கடேஷ்.

அந்த சமயத்தில், பெர்ரி கம்பெனி என்ற பெரிய கம்பெனி நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டரான, பார்டன் என்ற ஆங்கிலேயர், ரஜாவில் இங்கிலாந்து சென்றிருக்கிறார். வேங்கடேஷின் தகப்பனாருக்கு பார்டன் துரை நெருங்கிய நண்பர். இங்கிலாந்திலிருக்கும் துரையைப் பார்க்கும்படி, தகப்பனார் எழுதியிருந்தபடி, துரையைச் சந்தித்தார். தாம் எம். ஏ. யில் சிறந்தபடி தேறியிருப்பதையும், மேலும் ஐ.ஸி.எஸ். ஸிற்குப் படிக்க விரும்புவதையும் துரையிடம் சொல்லியிருக்கிறார் வேங்கடேஷ். வேங்கடேஷின் கவர்ச்சிகரமான தோற்றம், அவர் நடந்து கொள்ளும் முறையில் உள்ள இங்கிதம், அவர் ஆங்கிலம் பேசும் தோரணை, எல்லாம் துரைக்கு மிகவும் பிடித்திருந்தன. துரை சொன்னாராம்: "நீ, ஏன் ஐ. ஸி. எஸ். ஸுக்குப் போகவேண்டும்? எங்கள் கம்பெனியில், ஓர் இலாகாவின் மானேஜராக நியமனம் செய்து விடுகிறேன். உற்சாகத்தோடும், திறமையோடும் வேலை செய்தாயானால், நல்ல நிலைமைக்கு வரக்கூடும். இந்த முடிவுக்கு வந்ததை நினைத்து நீ பின்னால் வருந்தமாட்டாய்" என்றாராம். இவரும் "சரி" என்று ஒப்புக் கொண்டு சென்னைக்கு வந்து, வேலையையும் ஒப்புக் கொண்டார். ஆரம்பத்திலேயே சம்பளம் அறுநூறு ரூபாய். இப்பொழுது, அதே இலாகாவுக்கு டைரக்டர். சம்பளம் இரண்டாயிரத்து நூறு ரூபாய். கார் கம்பெனி செலவில்; வீட்டு வாடகை கம்பெனியினுடையது; விருந்து கொடுப்பதற்குத் தனி அலவன்ஸ்.

நான் தினசரிப் பத்திரிகையின் ஆசிரியரானவுடன், வேங்கடேஷ் எனக்கு மதிப்புக் கொடுக்க ஆரம்பித்தார். தாம் பழகுவதற்கு சம அந்தஸ்துள்ளவன் என்று தீர்மானித்து விட்டார். நட்புரிமை கொண்டு பழகவும் ஆரம்பித்தார். ஆனால், பழக்க வழக்கங்களிலும் சரி, குண வேறு விசேஷங்களிலும் சரி, கொள்கைகளிலும் சரி அவருக்கும் எனக்கும் உள்ள ஒற்றுமை எலிக்கும் பூனைக்கும் உள்ள ஒற்றுமைதான். சதா ஒரு நீளமான சுருட்டை வாயில் கடித்துக்கொண்டு புகைத்துக் கொண்டே இருப்பார். மதுபானம் புஷ்டியாகச் செய்வார். விருந்துகளிலோ, கிளப்பிலோ, சைவ உணவைத் திரும்பியே பார்க்க மாட்டார். புலால் உணவில் வஞ்சனையின்றி வேற்றுமையின்றி எல்லாவற்றையும் ருசித்துச் சாப்பிடுவார். ஆங்கிலேயரிடமிருந்து அவர் கற்றுப் படியாத ஆசாரங்கள் ஒன்றுமில்லை.

ஆனால், சமயப் பிரசாரம் நடக்கும் இடங்களுக்கோ, கோவிலுக்கோ, மதச் சடங்குகளுக்கோ செல்லும பொழுது நெற்றி நிறைய விபூதி தரித்துக்கொள்வார். தேவைப்படும் பொழுது பஞ்ச கச்சமும் அழகாகக் கட்டிக் கொள்வார். பார்த்தவர்கள் பிரமிப்பார்கள். "இங்கிலாந்திலே படித்தவர். ஆங்கிலக் கம்பெனியில் டைரக்டர். அவருக்கு என்ன வைதிக சிரத்தை! என்ன பக்தி! சம்பிரதாயத்தில் எவ்வளவு ஈடுபாடு!' என்று ஆச்சரியப்படுவார்கள்.

நான் சுருட்டுக் குடிப்பதில்லை; புலால் சாப்பிடுவதில்லை; மதுவிலக்கைப் பற்றித் தீவிரமாகப் பிரசாரம் செய்பவன். பொதுவாக அறநெறி வாழ்க்கையிலே பிறழாது வாழ முயல்பவன். ஆனால் நான் 'ஜாதிப்ரஷ்டன்! ஜாதியிலிருந்து ஒதுக்கப்பட்டவன். ஆனால், வேங்கடேஷ், வைதிக சிரத்தை கொண்ட பெரிய மனிதர். சமூகம் வெளி வேஷத்தைத் தான் போற்றி வருகிறது.

சமூகம் ஒதுக்கும் எந்தக் காரியத்தையும் யாரும் செய்ய லாம்; ஆனால், அதை எல்லோருக்கும் தெரியும்படியாகச் செய்யக்கூடாது. அவனை சமூகம் ஏற்றுக்கொள்கிறது. ஆனால், ஒருவன் கட்டுப்பாட்டை மீறிவிட்டதைப் பகிரங்கப்படுத்தினால், மற்ற விதங்களில் எவ்வளவு மேம் பட்டிருந்தாலும், அவனை ஏற்க மறுக்கிறது; மனிதர்கள் ஆஷாடபூதியாயிருக்கும் பொழுது, சமூகமும் ஆஷாடபூதி யாக வேஷம் போடுவதில் ஆச்சரியமில்லையல்லவா?

வேங்கடேஷ் அவருடைய பையனுக்குப் பூணூல் போட விரும்பினார். பையனுக்குச் சிறு வயதாக இருக் கும் பொழுதே, சாஸ்த்திரோக்தமாக, வைதிக சிரத்தை யுடன், விமரிசையாக, எல்லா பந்துக்களையும் வர வழைத்துச் செய்து வைக்க விரும்பினார்.

முகூர்த்தத்திற்கு நாலைந்து நாட்களுக்கு முன்பு, என்னை டெலிபோனில் கூப்பிட்டு, அவர் வீட்டுக்கு வந்து போகும்படி சொன்னார். நானும் அன்று மாலை, வேலை முடிந்தவுடன் எட்வர்ட் எல்லியட்ஸ் ரோடிலுள்ள அவர் பங்களாவுக்குச் சென்றேன்; சுருட்டைப் புகைத்துக் கொண்டு சம்பிரமமாக உட்கார்ந்து கொண்டிருந்தார். எனக்கு நாலு வயது மூத்தவர். இருந்தாலும் நான் அவரை மரியாதையாகத்தான் அழைப்பேன். ஆனால், அவர் என்னை உரிமையுடன் 'வா போ' என்றுதான் அழைப்பார்.

"என்ன அத்தான், பூணூல் கல்யாணம் பிரம்மாண்ட மாக நடக்க ஏற்பாடு ஆகிறது போல் இருக்கிறது. உங்களுடைய வைதிக சிரத்தையை எல்லோருமே பாராட்டுகிறார்கள்."

"ஏ நடராஜ், நீ பெரிய எடிட்டர் ஆகி என்ன பிரயோ சனம்? உலக அறிவு பூஜ்யம். உலகத்திற்கு எதிர் நீச்சல் போட முடியாது. 'நிர்வாண தேசத்திலே கோவணம்

கட்டியவன் பைத்தியக்காரன்' என்பதைக் கேட்ட தில்லையா? உலகம் போகிற போக்கிலே போகவேண்டும். இல்லாதபோனால், பாவனை செய்ய வேண்டும். உலகத் திலே எல்லாமே பாதி நிஜம், பாதி போலி. இந்தக் கலப்படம் இல்லாமல் உலகம் நடக்காது. சிமிண்டை மணல் இல்லாமல் பூச உபயோகப்படுத்தலாமா? தங்கத் திலே சிறிது செம்பு சேர்க்காமல் ஊதுகிறார்களா? வெறும் பாலையோ வெறும் காபியையோ குடிக்கிறோமா? சுத்தமாயிருந்தால் அதற்கு ஒருவரும் மதிப்புக் கொடுக்க மாட்டார்கள்."

"பலே அத்தான், உங்கள் தத்வம் அழகாயிருக்கிறது! (Hypocrisy is a virtue) போலித் தன்மை புனிதமானது என்ற புது சிந்தாந்தத்தை உருவாக்குவீர்கள் போலிருக் கிறதே. அத்வைதம், த்வைதம் போன்ற, இந்த சிந்தாந் தத்தை போதிக்கும் பரமாச்சார்யன் ஆகி விடுவீர்கள் போலிருக்கிறதே."

"என்னைப் போன்றவர்களுக்குத்தான் சிஷ்ய வர்க்கம் நிரம்பக் கிடைக்கும். அதுகிடக்கட்டும், நடராஜ். பூணூல் கல்யாணத்திற்கு மாமாவை) என் தகப்பனாரை) அவசியம் வந்து குழந்தையை ஆசீர்வதிக்கணுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறேன். அவரும் பெரிய மனது செய்து, வருகிறேன் என்றுஎழுதியிருக்கிறார். ஓய்வுபெற்ற திலிருந்து அவருக்கு மனசே சரியில்லையாம். வீட்டிலே மனைவி இல்லை; பிள்ளையும் அவரிடம் இல்லை. அவர் படும் கஷ்டத்தைப் பார்க்க மிகவும் பரிதாபமாய் இருக்கிறது என்று ராமலிங்கையர் எழுதி இருக்கிறார். இந்தத் தள்ளாத வயதில் அவர் தனியாகத் திண்டாட வேண்டியிருக்கிறது. அந்தக் கஷ்டத்தைத் தீர்க்க வழியும் புரியவில்லை."

"உண்மைதான், அத்தான். விதியின் பயனாய் நான் வெகுதூரம் அவரிடமிருந்து வந்துவிட்டேன்; கடைசிக்

காலத்தில் அவர் ஆதரவற்றுத் தனியாகத் திண்டாடுகிருர் என்பதைக் கேட்க, எனக்குத் தாங்க முடியாமல் துக்கம் வருகிறது. இதற்காக ஒருவரை ஒருவர் மாற்றிக் கொள்வது என்பது நடவாத காரியம். அவரால் மாற்றிக் கொள்வது என்பது முடியாது. என்ணுலும் முடியாது. செய்யவும் மாட்டேன்."

"அதெல்லாம் சரிதாண்டா? ஆனுல் எந்தப் பிரச்னைக்கும் ஒரு முடிவு கிடைக்காமலா போய்விடும்? தீர்க்க முடியாது என்ற பிரச்னை உலகில் உண்டா? அதுவும் இது மனேபாவத்தைப் பொறுத்த விஷயம். பரஸ்பரம் பிடிவாதத்தை விட்டுவிட்டு, ஒருவருக்கொருவர் சிறிது விட்டுக்கொடுத்து விட்டால் எல்லாம் சரியாகிவிடும்."

"ஆனுல், எங்கள் விஷயம் மிகவும் முற்றிப்போன விஷயமாகி விட்டதே. இதில் யார் — எவ்வளவு தூரம் விட்டுக்கொடுக்க முடியும்?"

"நான் ஒரு பரீட்சை செய்து பார்க்கிறேன். இங்கு அவர் வருகிறபொழுது உன்னையும் அவரையும் சந்திக்க வைக்கிறேன். அவர் எப்படி நடந்து கொள்கிருரோ, அதிலிருந்து ஒரு வழி கண்டு பிடிக்க முடிகிறதா பார்க்கலாம்."

"இது, என்னவோ முயலுக்குக் கொம்பு எங்கு இருக்கிறது என்பதைக் கண்டு பிடிக்க முயலுவது போலத் தான்."

"ஏன். இதில் என்ன நஷ்டம்? Trial costs nothing. செய்து பார்க்கலாமே. செய்ய வேண்டியது முயற்சி. அதுவும் விடாமுயற்சி. 'கர்மம் செய்வதற்குத்தான் உனக்கு அதிகாரம். அதன் பலனில் உனக்கு ஒருவித அதிகாரமும் கிடையாது' என்று கீதையில் எவ்வளவுதரம் படித்திருக்கிருய். அது போலச் செய்து பார்க்கிறேன்."

"பலே அத்தான். உங்கள் கொள்கைக்குக் கீதை கூட உதவுகிறதா?"

முகூர்த்தத்தன்று எதிர்பார்த்தபடி அப்பா வந்திருந்தார். நான் அவர் கண்ணில் படவேண்டாமென்று வேறு பக்கத்தில் சில நண்பர்களுக்கிடையே மறைந்து கொண்டேன். அங்கிருந்தபடியே, அப்பாவை அடிக்கடி பார்த்துக்கொண்டே இருந்தேன். உடம்பு மிகவும் தளர்ந்து விட்டது. கன்னத்தில் இருந்த சதையெல்லாம் கரைந்து சூம்பிப் போய்விட்டது. உடல் துவண்டு கிடந்தது. சிறிது கூன் விழுந்திருந்தது; புருவம் பூராவும் நரைத்துவிட்டது. முகத்தில் பொலிவோடு நின்ற பிரகாசம் எங்கோ மறைந்து விட்டது. அவரைப் பார்க்கப் பார்க்க துக்கம் அலைபொங்கி வந்தது. கடைசிக் காலத்தில் அவருக்கு அன்பும் ஆதரவும் காட்டிப் பணிவிடை செய்யும் கடமையை உதறி எறிந்து விட்டேன். தாய்க்கும் நான் ஒன்றும் செய்யவில்லை. தகப்பனுருக்கும் ஒன்றும் செய்ய முடியவில்லையே என்று நொந்து கொண்டேன்.

ஆனால் இதற்கு யார் என்ன செய்வது? தர்ம சங்கடங்கள் நம்மை எத்தனை விதங்களில் திண்டாட வைக்கின்றன. அர்ஜுனனுக்கு, திடீர் என்று யுத்தத்தில், உறவினர்களைக் கொல்வதா அல்லது பேசாமல் இருந்து விடுவோமா என்ற பிரச்னை எழுந்தது போல், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவித சங்கடங்கள் தோன்றிக் குழப்பத்தை உண்டாக்குகின்றன. ஒவ்வொருவரும் அவரவர்களின் சந்தர்ப்பம், பண்பாடு, கொள்கைகள் இவற்றிற்குத் தகுந்தாற்போல் தீர்த்துக் கொள்கிறார்கள். தர்மம் பெரிதா, கடமை பெரிதா, என்பதைச் சீர் தூக்கிப் பார்த்துக் கும்பகர்ணன் கடமையைப் பெரிதாக எண்ணினான்; விபீஷணன் தர்மத்தைப் பெரிதாக எண்ணினான். ஒன்றைப் பிடித்துக் கொள்ளும்பொழுது, மற்றொன்றை விடத்தான் வேண்டியிருக்கிறது. விடுவதில்தான் சங்கடங்களும், சிரமங்களும் ஏற்படுகின்றன. அதேபோல் நான் மனச்சாட்சிப்படி போனேன்; கடமையை நழுவ விட்டேன்.

இதற்கு எப்படிப் பரிகாரம் செய்து கொள்வது என்பது தான் தெரியவில்லை. கல்யாண விமரிசைகளிலோ, ஆர்ப் பாட்டங்களிலோ மனம் ஈடுபடவில்லை. அப்பாவைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந் தேன். ஆனல், அப்பாவோ, நான் வந்திருக்கிறேனு,எப்படி இருக்கிறேன் என்று அறிந்து கொள்ளக்கூட விரும்பிய வராய் தெரியவில்லை. வேங்கடேஷின்மாமனுருடன் ஏதோ பேசிக்கொண்டே யிருந்தார். தலையை அந்தப் பக்கமோ, இந்தப் பக்கமோ திருப்பவேயில்லை. முகூர்த்தம் முடிந்தது. சாப்பிட்டுவிட்டு நான் கிளம்பிவிட்டேன். சொல்லிக்கொள் ளும்பொழுது வேங்கடேஷ், "கல்யாணக் கூட்டம் கலை யட்டும். இரண்டு மூன்று நாட்கழித்து, நான் கூப்பிடு கிறேன். அப்பொழுது வா" என்ருர்.

அதன்படியே, மூன்று நாட்கழித்து, என் காரியா லயத்திற்கு வேங்கடேஷ் போன் செய்தார். "நடராஜ், நான் சொன்ன விஷயம், இன்று வைத்துக் கொண்டிருக்கிறேன். நான் லைப்ரெரியில் மாமாவுடன் பேசிக் கொண்டிருக்கிறேன். நீ நேராக அங்கேயே வந்து விடு. சுமார் ஆறு மணிக்கு, வா. வரும்பொழுது உன் குழந்தையையும் தூக்கிக் கொண்டு வா" என்று சொல் லிக் கொடுத்தார். 'சரி, என்னதான் நடக்கிறது பார்க்க லாமே' என்று, அவர் சொன்னபடியே குழந்தையைத் தூக்கிச் சென்றேன்.

நான் அறைக்குள் நுழையும்போது, அப்பாவின் முதுகு தெரிந்தது. அதனுல் அவர் நான் வருவதைப் பார்த்திருக்க முடியாது. வேங்கடேஷ் கதவை எதிர் நோக்கி இருந்தபடியால் நான் வருவதை கவனித்து, எதிர் நோக்கி, 'வா' என்று சொல்லிவிட்டுக் குழந்தையைக் கையில் தூக்கிக்கொண்டார். "மாமா, உங்க பேரனைப் பார்த்தியளா? அசல், உங்க மாதிரியே இருக்கிருன்" என்று சொல்லிக் கொண்டே அப்பாவின் அருகில்

சென்றார். எதிர்பாராமல்நடந்ததால்அப்பா திடுக்கிட்டார். உடனேயே எழுந்தார். உடம்பு சிறிது தள்ளாடியது. எதைக் கண்டோ ஓடுவது போல, கதவின் பக்கம் போகத் திரும்பினார்.

"இதுவும் உங்கள் வயிற்றுக் குழந்தைதானே, மாமா.." என்று சமாதானத்துடன் அருகில் வந்தார் வேங்கடேஷ்.

"சரித்தாண்டா... படித்த முட்டாள்! பெற்றதெல்லாம் பிள்ளையா? வயிற்றிலே ஜனிப்பதெல்லாம்பிள்ளையா? நாக்குப் பூச்சிகூடத்தான் நம் வயிற்றில் பிறக்கிறது" என்று திரும்பிப் பார்க்காமல் பெரிய ஹால் பக்கம் போய் விட்டார்.

வேங்கடேஷ், 'பார்த்தியா கிழவரின் பிடிவாதத்தை' என்று சொல்லும் தோரணையில் உதட்டைப் பிதுக்கிக் கொண்டு குழந்தையை என் கையில் கொடுத்தார்.

'புரிந்தது' என்ற தோரணையில் குழந்தையை வாங்கிக்கொண்டு, வாசற் பக்கம் திரும்பினேன்.

# 23

உள்நாட்டுப் பிரச்னைகளுக்கு ஓய்வு கொடுக்க, வெளிநாட்டு நிலவரங்கள் தீவிரமாகச் சூடு பிடித்து விட்டன. ஜெர்மன் நாஸி ஹிட்லர் நாளுக்கு நாள் வலிமை அடைந்து கொண்டே போனான். ஆஸ்ட்ரியாவை விழுங்கி விட்டான். போலண்டை கபளீகரம் செய்யப் போகிறான். இதுவரையில் முதுகெலும்பில்லாமல் பேசாமல் இருந்த பிரிட்டன், அபாயத்தை உணர்ந்து, 1939-ம் வருஷம் செப்டம்பர் மாதம் ஜெர்மனியின் பேரில் யுத்தம் செய்யப்போவதாக அறிக்கை விட்டது. அன்றே, மாட்சிமை தங்கிய இந்திய வைஸிராய் பிரபுவும் இந்தியாவையும் யுத்தத்தில் சேர்த்துவிட்டார். அன்று மாலை வழக்கத்திற்கு அதிகமாகவே நண்பர்கள் கூடியிருந்தோம்.

“இனி, எத்தனை நாள் இந்த மணல் மேல் உட்கார்ந்து கொண்டு பேசப் போகிறோமோ” என்றார் தி. ஜ.

“ஏன்? பீச்சிலே, உட்காருவதற்குத் தடை உத்தரவு போடப் போகிறார்களா?” என்றார் முத்து என்ற புது நண்பர்— சிறிது துடிப்பாகப் பேசுபவர்.

“ஏன்? யுத்தகாலக் கட்டுப்பாடுகளே வேறு தினுசு ஐயா. முதல்லே, வெளிச்சம் இருக்காது. எங்கு பார்த்தாலும் இருட்டடிப்பு; சிப்பாய்கள் நடமாடிக்கொண்டிருப்பார்கள். இங்கு எல்லாம் நாம் வருவதற்கு தடை உத்தரவு போட்டு விடுவார்கள். நாம் பீச்சுக் காற்று வாங்க வந்தால் சுட்டு விடுவான் சிப்பாய்” என்றார் தி. ஜ.

"நமக்கும் ஹிட்லருக்கும் என்ன வந்தது? யாரைக் கேட்டுக்கொண்டு இந்த வைஸிராய் இந்தியாவைச் சண்டையில் சேர்த்தான்?" என்றார் கிருஷ்ணமணி.

"அட, என்ன கிருஷ்ணமணி, இந்தியாவில் ஜனநாயக ஆட்சி நடப்பது போலப் பேசுகிறீரே. நம் இந்தியாவில் நடப்பது ஆங்கில அரசாட்சி. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஆட்சி" என்றார் சுந்தரம்.

"அது சரி. அது இல்லை என்று யார் சொல்லுகிறார்கள். ஆனால், எட்டு மாகாணங்களில், ஜனநாயகத்தின் பெயரால், காங்கிரஸ் ஆட்சி நடக்கிறது. அவர்கள் ஏன் இன்னும் அட்டை மாதிரி ஒட்டிக்கொள்ள வேண்டும்?" என்றார் கிருஷ்ணமணி.

"அவசரப்பட வேண்டாம். இன்னும் சில நாட்கள் தான். அவர்கள் தானே வந்து விடுவார்கள்."

"இந்திய அரசாங்கத்திற்கும் யுத்தத்திற்கும் தொடர்பு ஏற்படுத்தியிருக்கிறார் வைஸிராய். ஆனால் மக்களுக்கும் இந்த யுத்தத்திற்கும் என்ன தொடர்பு?" என்றார் முத்து.

"நமக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? நாம்தான் அஹிம்ஸா வாதிகளாச்சே. யுத்தத்தில் எதற்குப் பங்கு கொள்ள வேண்டும்? மகாத்மாஜி சமீபத்தில் என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா? 'நான் மிகவும் மனம் வெதும்பியிருக்கிறேன். இப்படிப்பட்ட காரியங்கள் (யுத்தம்) நடைபெற ஏன் கடவுள் அனுமதிக்கிறார் என்று கடவுள் பேரிலேயே சண்டை போட்டுக் கொண்டிருக்கிறேன். என் அஹிம்சை சக்தியற்றுப் போய் விட்டது போல் தோன்றுகிறது. ஆனால் எனக்கு இதற்குப் பதிலும் கிடைக்கிறது. கடவுளோ, அஹிம்சையோ சக்தியற்றுப் போகவில்லை. மனிதர்கள் தான் சக்தி இழந்து இருக்கிறார்கள். இந்த முயற்சியில் நான் அழிந்து

போனுல்கூட, நம்பிக்கை இழக்காமல், முயற்சியை விடாமல் இருக்க வேண்டும்' என்று சொல்லியிருக்கிருர்'' என்றேன் நான்.

''மற்ற தலைவர்கள் என்ன நினைக்கிருர்கள்? எக்காரணத்தை முன்னிட்டும் யுத்தத்தில் சேர மாட்டோம் என்பார்களோ! யுத்தத்திற்குப் பிறகு சுதந்திரம் தருவதாயிருந்தால் சேரச் சம்மதிப்பார்களா?'' என்ருர் முத்து.

''நேரு எதேச்சாதிகாரத்தை எதிர்ப்பவர். ஜனநாயகத்திற்குப் போராடும் எதையும் ஆதரிப்பவர். ஒரு பக்கத்தில் எதேச்சதிகாரத்தை எதிர்க்கவேண்டும் என்பதில் ஐயமில்லை. ஆனுல், இங்கிலாந்து, ஜனநாயகத்திற்காகப் போராடுவதாகச் சொல்லிக் கொண்டாலும், ஆங்கிலேயர்களுடைய சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றிக் கொள்ளத்தான் யுத்தம் செய்கிறதே தவிர, எல்லோருடைய உரிமைகளையும் காப்பாற்றுவதற்காக அல்ல. அதை உத்தேசித்துத்தான் நேரு சொல்லியிருக்கிருர், 'சுதந்திர இந்தியாதான் பிரிட்டனுடன் ஒத்துழைக்குமே தவிர, அடிமை இந்தியா அல்ல' என்றிருக்கிருர். மேலும் சொல்லியிருக்கிருர்: ''யதேச்சாதிகாரத்தை அழிக்க வேண்டியது அவசியந்தான். ஆனுல், நம்முடைய சுதந்திரத்தைப் பறிகொடுத்துவிட்டு, யதேச்சாதிகாரத்தின் மேல் வெற்றி பெற முயல்வது என்பது நடவாத காரியம்' என்றும் சொல்லியிருக்கிருரே'' என்ருர் தி. ஜ.

'' 'நீங்கள் ஒத்துழையுங்கள். யுத்தம் முடிந்தபின்னர் உங்களுக்குச் சுதந்திரத்தைக் கொடுத்துத் தொலைக்கிருேம்' என்ருவது சொல்லித் தொலைக்கலாமல்லவா'' என்ருர் முத்து.

''பிரிட்டிஷ்காரன் ஏன் அப்படிச் சொல்லுவான். அவன்தான், சந்திரன் சூரியன் இருக்கும் வரையில், நம் கழுத்திலே உட்கார்ந்து கொள்ள வேண்டுமென்று விரும்புகிறவனுச்சே'' என்ருர் கிருஷ்ணமணி.

"உண்மைதான். அவன் எளிதில் கொடுத்து விடுவாளு? மாட்டவே மாட்டான்" என்றார் சுந்தரம்.

"அப்பொழுது இந்த பிரிட்டிஷ்காரன் நாசமாகப் போகட்டும். நன்றாகத் தோல்வியே அடையட்டும். ஹிட்லரே தான் நமக்கும் எஜமானனுக வந்து விட்டுப் போகட்டுமே. எந்த துரையாயிருந்தாலென்ன. 'காட் ஸேவ் தி கிங்' என்பதற்குப் பதிலாக, 'ஹெயில் ஹிட்லர்' என்று கையைத் தூக்கி விட்டுப் போனால் போகிறது" என்றார் முத்து.

"ஆங்கிலேயனுக்கு ஜர்மானியன் எவ்வளவோ மேல். ஜர்மானியர்கள், இந்தியப்பண்பாட்டில் பற்றுள்ளவர்கள். அநேக சிறந்த இந்திய நூல்கள், ஜர்மன் நூலகத்தில் இருக்கின்றனவாம். ஸம்ஸ்கிருதத்தில் பற்றுள்ளவர்கள். ஆகவே அவனே வரட்டும். அவன் ஜயிக்க வேண்டுமென்று அர்ச்சனை கூடப் பண்ணுவோமா. என்ன ராஜ், நாளையிலிருந்து ஜர்மன் பாஷை கற்றுக்கொண்டு விடலாமா?" என்றார் கிருஷ்ணமணி.

"என்ன அவசரம் பாருங்க கிருஷ்ணமணிக்கு. ஹிட்லர் இங்கு வருவதற்குள் ஜர்மன் பாஷையைக் கற்றுக்கொண்டு, மாலையைத் தூக்கிக்கொண்டு அவரை வரவேற்கத் தயாராயிருப்பார் போலிருக்கிறதே!" என்றார் சுந்தரம்.

"ஆம், கிருஷ்ணமணிதான் மதராஸின் முதல் மேயர், ஜர்மன் இந்தியாவில்" என்றேன் நான்.

"அது கிடக்கட்டும் தி. ஜ. இந்த ஹிட்லரும், முஸோலினியும், ஹிரண்யன் ஹிரண்யாக்ஷன் போலே பூமியைப் பாயாகச் சுருட்டி வைத்துக்கொண்டு போய் விடுவார்கள் போலிருக்கிறதே!" என்றார் கிருஷ்ணமணி.

"இந்த ராக்ஷஸர்களிடம் போய் அஹிம்ஸா முறையில் எப்படி எதிர்ப்பது?" என்றார் முத்து.

"அதற்கும் வழி காட்டியிருக்கிறார் மகாத்மாஜி. ஈவு இரக்கமற்ற கொடியோன் முன் எப்படி சத்யாக்கிரஹம் செய்வது என்பதற்கு உதாரணமாக, ஷெல்லியின் The Mask of Anarchy (அராஜகத்தின் முகமூடி) என்ற கவிதையிலிருந்து எடுத்துக்காட்டுவார். அதன்படி நடந்து கொண்டால் போதும். சொல்லுகிறேன் கேளுங்கள் :

அமைதியுடனும் உறுதியுடனும் நில்லுங்கள்,
நெருங்கிய மரங்களிருக்கும் மௌனமான
காட்டைப்போல.
ஜெயிக்கப் படாமல் இருப்பதைக் காட்டும்
கண்களுடனும் கூப்பிய கரங்களுடனும் நில்லுங்கள்,
கொடியவர்கள், உங்கள் மேல் பாயட்டும்,
வீசட்டும், குத்தட்டும், அறுக்கட்டும், கொத்தி
எறியட்டும், எதுவேண்டுமானாலும் செய்யட்டும்.
கூப்பிய கைகளோடு நிமிர்ந்த நோக்குடன்,
பயமின்றி, பதற்றமின்றி, அவர்கள் கோபம்
தணியும்
வரை, அவர்கள் கொலைத் தொழிலைப்
பார்த்திருங்கள்.
வந்ததுபோல் அவர்கள் போவார்கள்.
இந்திய ரத்தம் அவர்கள் உள்ளத்தில் நின்று,
அவர்கள் அடைந்த வெட்கத்தை வெளிப்படுத்தும்.
தூங்கி எழுந்த சிங்கம்போல் எழுந்திருங்கள்.
தோற்கடிக்க முடியாதபடி ஏராளமாக வாருங்கள்.
தூங்கும் உடல்மேல் விழுந்த பனித்துளியைப் போல்
உங்கள் தலைகளை உதறுங்கள்.
நீங்களோ பலர் — அவர்கள் சிலரே,

— என்று பாடியிருக்கிறார்" என்றேன்.

"என்ன உணர்ச்சிமயமான கவிதை. சத்யாக்கிரஹ விரதத்திற்கு இலக்கணமாகவல்லவா அமைந்திருக்கிறது.

பனியைப் போலத் தலையை உதறும் மனப்பான்மை பலருக்கு வந்து விட்டால், ஹிட்லர், என்ன முஸோலினி என்ன எல்லோருக்கும் பாடம் கற்பித்துவிடலாம்'' என்றார் கிருஷ்ணமணி.

''கிருஷ்ணமணி உணர்ச்சி வசப்பட்டவர். காந்திஜியின் பரம சிஷ்யர். அதனால் கவிதையைக் கேட்டவுடன் அவருக்கு ஆவேசம் வந்து விட்டது. ஆனால் இத்தகைய போராட்டம் நடத்துவதானால், ஹிட்லர், முஸோலினி போன்றவர்கள் மனம் நெகிழ்ந்துவிடுவார்களா? அவர்கள் மனத்தில் இது தைக்குமா? என்ன ராஜ், நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்றார் முத்து.

''தைக்காது என்று சொல்லிவிட முடியாது. ராஜஸ வெறியுடன் விசுவாமித்திரன் எதிர்க்கையில் வஸிஷ்டரின் அஹிம்ஸா ஸத்யாக்ரஹம்தான், விசுவாமித்திரனுக்கு ஆத்ம பலம்தான் பெரிது என்று உணர்த்தியது. கதையில் மாத்திரம் இது நடக்கவில்லை. இந்த ஹிட்லரைப் போலவே, பூமியைப் பாயாகச் சுருட்டிய போர்வீரன் நெப்போலியன் என்ன சொன்னான் தெரியுமா? 'இந்த உலகத்திலே இரண்டு சக்திகள் தான் இருக்கின்றன. ஒன்று ஆயுத பலம். மற்றொன்று ஆத்ம பலம். ஆனால், நாளாவட்டத்தில் ஆத்ம பலம்தான் ஆயுத பலத்தை வெல்லும்' என்று சொன்னான்'' என்றேன்.

''இவ்வளவு தூரம் ஆத்ம பலத்தின் சக்தியைத் தெரிந்து கொண்டவன், ஏன் யுத்தத்தில் இறங்கி நாச காரியங்களைச் செய்ய வேண்டும்'' என்றார் முத்து.

''காரணம், நமக்கு அவ்வளவு எளிதாகக் கண்டு பிடிக்க முடியாது. கொள்கையைச் செயலாக்க, சந்தர்ப்பம், சூழ்நிலை இடம் கொடுக்காமலிருந்திருக்கலாம். பக்கத்திலிருப்பவர்கள் அதைச் செயலாற்ற முடியாமல் இடையூறுகள் விளைவித்திருக்கலாம்'' என்றேன்.

"சொல் அளவில், சிந்தனை அளவில், இந்த தத்வம் ஒப்புக்கொள்ளப்பட வேண்டியதுதான். ஆனால், ஒரு போர்வீரனோ, சர்வாதிகாரியோ, இதை ஏற்றுச் செயல் படுவது என்பது நடக்கக்கூடிய காரியம் என்று தோன்ற வில்லை. சரித்திரத்தில் அப்படி நிகழ்ந்தால், அது ஒரு பெரிய அதிசயமாகவே இருக்கும்" என்றார் முத்து.

"சரித்திரத்தையே மறந்துவிட்டீர்கள் நீங்கள்."

"என்ன சொல்கிறீர்கள்?"

"அந்த அதிசயம் நிகழவில்லை என்று நினைக்கிறீர் களே, அதுதான். ஏன் நிகழவில்லை? அசோகன் என்ற பெயரைக் கேட்டதில்லையா நீங்கள். அவருடைய கல் வெட்டு சொல்கிறது— புனித சக்கரவர்த்தியின் ஆணை:

"'எல்லா ஜீவராசிகளுக்கும் தற்காப்பும், மன அமைதியும் சந்தோஷமும் இருக்கவேண்டும். என் பிள்ளை பேரன் எல்லோரும் இந்தக் கொலைத்தொழிலில் ஈடுபடக் கூடாது என்பதற்கே, இந்தக் கல்வெட்டை எழுப்பி இருக்கிறேன். அப்படி அவர்கள் ஏதாவது வெற்றியை விரும்பினால், அவர்கள், பொறுமையையும் அமைதியையும் காட்டி, முன்னிற்க வேண்டும் அன்பி னாலும், அறத்தாலும் அடையும் வெற்றியே, உண்மை யான வெற்றி என்பதை அவர்கள் அறிய வேண்டும். இதுவே நாம் இகத்திலும் பரத்திலும் அடைய வேண் டியது' என்று எழுதி வைத்திருக்கிறாரே. இதைவிட அஹிம்சைக்கு நற்சான்று வேறு யார் கொடுக்கமுடியும்?' என்றேன்.

"உண்மைதான். அன்பையும் அஹிம்சையையும் மக்கள் உள்ளத்திலே நிலை நிறுத்தத்தான் அசோகன், இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பே, தூண்களையும் கல்வெட்டுகளையும் நிறுவினான். ஆயிரக்கணக்கான வரு ஷங்களாகியும், மக்கள் உள்ளத்தில் அருள் சுரக்கவில்லை; பூமியிலும் அமைதி நிலவவில்லையே."

"காரணம், பூமியில் நல்லவர்களும் இருக்கிறார்கள், கெட்டவர்களும் இருக்கிறார்கள். அசோகன் போன்ற ஒருவன் வந்து மனிதத் தன்மையை உயர்த்துகிறான். ஹிட்லர் போன்ற வேறு ஒருவன் வருகிறான், மனிதத் தன்மையை அதளபாதாளத்தில் தள்ளுகிறான். இதுதான் சரித்திரம். மனித நாகரிகத்திற்குக் காக்காய் வலிப்பு வருவது போல் துஷ்டர்களின் ஆட்சி ஓங்கும். அப்பொழுது ஒரு மகாத்மா தோன்றுவார். மனிதனின் நற்பண்புகளை உயர்த்துவார். சிறிது காலம் தர்மம் தலைதூக்கி நிற்கும். சிறிது காலம் அதர்மம் தலைதூக்கி நிற்கும். கீதையில் கண்ணன் சொல்லுகிறான் :

'யதாயதாஹி தர்மஸ்ய க்லானிர்பவதி பாரத
அப்யுத்தானம் அதர்மஸ்ய ததாத்மானம்ஸ்ருஜாம்யஹம்
பரித்ராணாய ஸாதூனும் விநாசாயச துஷ்க்ருதாம்
தர்ம ஸம்ஸ்தாபநார்தாய ஸம்பவாமி யுகேயுகே.'

"'எப்பொழுதெல்லாம் அதர்மம் தலைதூக்கி நிற்கிறதோ அப்பொழுது அதை அழிப்பதற்கு நான் என்னை சிருஷ்டித்துக் கொள்கிறேன். நல்லோர்களைக் காப்பதற்கும், தீயோர்களை அழித்து, தர்மத்தைக் காப்பதற்கும், ஒவ்வொரு யுகத்திலும் தோன்றிக் கொண்டேயிருக்கிறேன்' என்று சொல்லவில்லையா?" என்றார் தி. ஜ.

"அது சரிதான் தி. ஜ. அதர்மத்தைப் பெருகச் செய்வானேன். அதை அழிக்க அவதாரம் செய்வானேன். அதர்மமே இல்லாமல் உலகை படைத்திருக்கக் கூடாதா? அப்பொழுது அவதாரத்துக்கு அவசியமே இல்லையே" என்றார் முத்து.

"பெரிய கேள்வியைக் கேட்டு விட்டாரே, முத்து. இதற்கு நானா பதில் சொல்ல முடியும். இதற்குப் பதிலைத் தேடி தத்துவஞானியிடம் தான் போகவேண்டும். இருந்தாலும், உலகம் என்பது, பிறப்பு இறப்பு, நன்மை தீமை,

ஒளி இருட்டு, காரணம் காரியம் என்ற த்வந்தபாவங்க ளாலேயே இயங்கப்பட்டு வருவது தெரியும். கற்பனை உலகில்தான், அலங்காரமாக,

வண்மையில்லை வறுமை இன்மையால்
திண்மை இல்லை ஒரு செருநர் இன்மையால்
உண்மை இல்லையோர் பொய் உரை இலாமையால்
ஒண்மை இல்லை பல கேள்வி ஓங்கலால்

என்பதைப் போன்ற உலகத்தை வர்ணிக்கலாம். ஆனால் உலகத்தின்கண் இந்த இரண்டு தன்மைகளும் இருந்து கொண்டே இருக்கும்.

" தவிர, கடவுள் களங்கமற்றவர். பகவான் என்றுமே ஆறுகுணங்கள் (நற்குணங்கள் — நற்பண்புகள் எல்லாம் இந்த ஆறு குணங்களுக்குள் அடக்கம்) படைத்தவர் என்று சொல்வர். மனிதனோ ஆறு ஆத்ம சத்ருக்க ளோடு இருப்பவன். இந்த ஆத்ம சத்ருக்கள் அவ னோடும் போராடுகின்றன; மற்றவர்களோடும் போராடச் செய்கின்றன. அசுர பலங்கொண்ட மனிதர்களிடம் இந்த சத்ருக்கள் தலைதூக்கி நிற்கின்றன. அப்பொழுது உலகத்திற்கே அனர்த்தமாகி விடுகிறது. உலகத்திற்கு நாசம் ஏற்படுகிறது. தர்மம் அழிகிறது. அதனால்தான் நம் பெரியோர்கள் சொன்னார்கள். நம் மகாத்மாவும் சொன்னார். 'உலகத்தை ஜயிக்குமுன் நீ 'உன்னையே ஜயித்துக் கொள்' என்றார்கள். ஆத்ம ஜயம் என்பது தான் உலக முன்னேற்றத்தின் முதற்படி" என்றார் தி ஜ.

"என்னவோ, தி. ஜ. நீங்கள் பொருத்தமாகத் தான் சொன்னீர்கள். ஆனால் கடவுள் ஏன் பாவத்தைப் படைத்தார் என்பது இன்னும் எனக்கு விளங்கவில்லை" என்றார் முத்து.

"முத்து, நான் சொல்லுகிறேன். ஒரு கவிஞன் சொன்னான்; 'கடவுளே, நான் பாவங்களைச் செய்து

விட்டேன் ; அதற்கு என்னை மன்னித்து விடு; ஆனால், பாவத்தை உலகத்தில் உண்டாக்கினதற்கு நான் உன்னை மன்னிக்கிறேன்.'

'மாந்தரெலாம் கீழான களிமண்ணால் வகுத்தனை நீ
காந்தத் துறக்கத்தும் சர்ப்பத்தை வகுத்தனை நீ
ஜீவர்முகம் காரடையச் செய்யும்பவம் நினதே – நின்
பாவம் மன்னித்தோம், எம்பாவமதும் மன்னிப்பாய்'

— என்றான் உமர்கயாம்" என்றேன்.

"நீங்கள் சொன்னது சரி இதுதான் எனக்கு நன்றாக விளங்குகிறது" என்றார் முத்து.

# 24

பத்திரிகை நன்ருகவே வளர்ந்து கொண்டு வந்தது. ஏஜன்டுகளிடமிருந்து மேலும் பிரதிகள் அதிகமாக அனுப்புமாறு 'ஆர்டர்கள்' வந்து கொண்டு இருந்தன. ஆனல் யுத்தம் வந்ததனலே தினசரிக்கு வேண்டிய 'நியூஸ் பிரின்ட்' காகிதம் இறக்குமதி குறைய ஆரம்பித்தது. அரசாங்கத்தின் கட்டுப்பாடு வந்துவிட்டது. பத்திரிகையின் விலையும் பக்க-விலை என்ற அரசாங்க நிர்ணயத்திற்கு உட்பட்டது. பக்கம் குறைக்கப்பட்டமையால் விளம்பரங்களின் தேவைக்கு ஏற்பப் பத்திரிகையில் இடம் இல்லை. அதற்காக விளம்பர விகிதம் உயர்த்தப்பட்டது. அதுவும் ஒரு விதத்தில் நல்லதாக ஆயிற்று. காகிதச் செலவு குறைந்தது. விளம்பர வரும்படி உயர்ந்தது. யுத்தகாலத்தில் லாபம் இல்லாத தொழிலே கிடையாது. இத்துடன் யுத்தகால 'நாணயம்' ஒன்றும் வியாபாரத்தில் புகுந்து கொண்டது, அதற்குப் பெயர் கறுப்புப் பணம். மனிதர்களின் உள்ளங்களிலே கள்ளம் புகுந்தது; அவர்களின் 'நாணயம்' கறுப்பானது.

எங்கள் முதலாளிகளில் ஒருவரான நாயக்கர் சிறந்த தேசபக்தராயிருந்தவர்தான். காந்திஜியின் கொள்கைகளிலே மனத்தைப் பறிகொடுத்தவர்தான். 'சத்தியத்தின் நித்தியத்தைப் போற்றும் யாரும் வாருமின்' என்பதைத் தலையங்கத்திற்கு மேலாகப் பத்திரிகையின் குறிக்கோளாகவும், கொள்கையாகவும் போடச் சொன்னவர்

அவரேதான். இந்த வரிகளும் இவற்றிற்கு மேலாக, காந்திஜீ தடியுடன் டாண்டி யாத்திரைக்குப் புறப்படும் கோலத்தில் நின்ற காட்சியும் இந்த பத்திரிகையின்லக்ஷியமாக தினந்தோறும் பிரசுரிக்கப்பட்டுவந்தன.

ஆனால், நாயக்கரின் மனோபாவம் நாளுக்கு நாள்பல மாறுதல்களுக்கு உள்ளாகிக் கொண்டே வந்தது. லக்ஷியத்தில் மாற்றம், கொள்கையில் மாற்றம், நடத்தையில் மாற்றம் எல்லாமாக அநேக மாறுதல்கள், சிறிது சிறிதாகத் தோன்ற ஆரம்பித்தன. தூய எண்ணங்களைப் பற்றியோ, சிறந்த லக்ஷியங்களைப் பற்றியோ அவர் பேசுவது குறைய ஆரம்பித்தது. தியாகமும் தொண்டும் புகழுக்கு உரிய விஷயமாக அவர் பேசுவதில்லை. இப்பொழுதெல்லாம் வாழ்க்கையிலே வெற்றி கண்டவர்களைப் பற்றிப் புகழ்பாட ஆரம்பித்து விட்டார். 'அந்த மந்திரி, இந்த கண்டிராக்ட்லே ஐந்து லட்சம்...' என்று வார்த்தையை முடிக்காமல், அந்த லட்சத்தைச் சுவைப்பார். 'இன்னொரு மந்திரி, இந்த ஊருக்கு நடுவில் உள்ள இடத்தை சர்க்காரிடமிருந்து தம் மருமகன் பெயருக்கு "அஸைன்மென்ட்" செய்து கொண்டு விட்டார் என்று பெருமூச்சு விடுவார். அதில் குறை சொல்லும் தோரணை இருக்காது. தமக்கும் அப்படிப்பட்ட வாய்ப்பு இல்லையே என்ற ஏக்கம், அந்தப் பெருமூச்சிலே நன்கு வெளியாகும். காந்தி பக்தர், காஞ்சனை பக்தர் ஆகிவிட்டார் என்பது மட்டுமல்ல; அந்தப் பணத்தை எவ்வளவு சீக்கிரத்தில் எந்த வழியில் அடையலாம் என்பதே அவருடைய தாற்காலிகச் சிந்தனையாக இருந்து வந்தது.

பத்திரிகையின் விற்பனை நாளுக்குநாள் ஏறிக் கொண்டு வந்தது. காகிதம் போதுமளவுக்கு அரசாங்கம் இறக்குமதிக் கோட்டாவாகவும் கொடுத்திருந்தது. திடீரென்று ஒருநாள் நாயக்கர் வந்தார். "நடராஜ்,

நாளையிலிருந்து நாற்பதாயிரம் பிரதிகள் போட்டால் போதும்" என்றார்.

"ஏன், இப்பொழுது போகும் அறுபதாயிரம் பிரதிகளே போதவில்லை. இப்பொழுது இருக்கும் ஆர்டரைப் பார்த்தால் எண்பதாயிரத்தில் போய் நிற்கும். நீங்கள் சரிபாதியாகக் குறைக்கச் சொல்லுகிறீர்களே !" என்றேன்.

"இல்லை, மிஸ்டர் நடராஜ். காகிதக் கட்டுப்பாடு பலமாயிருக்கிறது; இன்னும் தீவிரமாகலாம். எதற்கும் நாம் தற்காப்போடு இருப்பது நல்லது. தவிரவும், தேவைக்குக் குறைச்சலாகவே, நாம் வெளியிட்டால்தான் பத்திரிகைக்கு மவுசும் கிராக்கியும் இருக்கும். கிடைக்கவில்லை என்கிறபோதுதான் ஒரு பொருளின் மதிப்பு உயர்கிறது. சாதாரணமாகக் கிடைக்கிறதென்றால் அதன் மதிப்பு மிகவும் சாதாரணந்தான்" என்று வியாபார தத்துவத்தை வெளியிட்டார்.

"இப்பொழுது, நாம் கொடுக்கும் செய்திகள், கருத்துக்கள், இதர விஷயங்கள் அதற்கு ஒரு மதிப்பை ஏற்படுத்த மாட்டாவா?"

"இல்லை என்று நான் சொல்லவில்லை, ஐயா. நீர் ஆசிரியர், நான் வியாபாரி. 'சரக்கு முறுக்கோ, செட்டியார் முறுக்கோ' என்று கேட்டதில்லையா? சரக்கு நன்றாயிருந்து வியாபாரம் சரியில்லையென்றால், சரக்கு வீணாகும். மோசமான சரக்கைக்கூட வியாபார தந்திரத்தால், விலையாக்கி விடலாம். அதிலே இருக்கு வியாபார தந்திரம்."

"நல்ல ஆதரவு ஓங்கும் காலத்தில் பிரதிகளைக் குறைப்பானேன்?"

"இதெல்லாம் நிர்வாக விஷயங்கள். எனக்கில்லையா, பத்திரிகையில் அக்கறை. காரணத்தோடுதான் சொல்லுகிறேன்" என்று போய்விட்டார்.

நாலுநாள் கழித்து, ஸ்டோர் ரூமிலிருந்து காகித உருளைகள் (காகிதங்கள் உருளையாகத்தான் மேல் நாடுகளிலிருந்து வரும்) லாரி லாரியாகப் போய்க்கொண்டிருந்தன.

"என்ன சுந்தரம், காகிதம் கிடைப்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது. இவர்கள் காகிதத்தை எங்கே அனுப்புகிறார்கள்?"

"உங்களுக்கு என்ன சார் தெரியும்? காந்தி காந்தி என்று வெளுத்ததெல்லாம் பால் என்று நினைக்கிறீர்கள். இவையெல்லாம் கறுப்பு மார்க்கெட்டுக்கு ஓடிக்கொண்டிருக்கின்றன. இன்றைய வியாபாரத்தில் மாத்திரம் நாயக்கருக்கும், சேட்ஜிக்கும் லாபம் — முப்பதாயிரம் ரூபாயாம்! வருமான வரி இல்லாத ரூபாய். கம்பெனி மெம்பர்களுக்குத் தெரியாத ரூபாய். வெள்ளைக் காகிதத்தைக் கறுப்பாக அடித்து வியாபாரத்தைச் செய்ய வேண்டாம். கோட்டா வாங்குவதற்கு மாத்திரம் ஏதோ ஒரு மாதிரியாகப் பத்திரிகை நடத்தினால் போதும். நம் தொழிலைப் பற்றி நாம் பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டியதில்லை. நாயக்கரின் வியாபாரத்திற்கு நாம் இனித் தேவையே இல்லை" என்றார் சுந்தரம்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை? ஓஹோ, அப்படியா? தேசசேவை எங்கே? கள்ளமார்க்கெட் எங்கே? மகாத்மா எங்கே? மோசடி வியாபாரம் எங்கே? ஆனால், எல்லாம் தேசபக்தியின் போர்வையிலும், கதர்க்குல்லாய்க்கு அடியிலும், சத்தியத்தின் நித்தியத்தை ஊரறிய உபதேசிக்கும் பத்திரிகையின் அடிப்புறத்திலும், ஊடுருவி வந்துவிட்டதே என்று நினைத்து வருந்தினேன்.

ஆனால் இதைவிட பிரமிக்கத்தக்கக் காரியங்களையும், க்ரிமினல் சட்டத்தின் கீழ் வரக்கூடிய பெரிய காரியங்களையும் வெகு சுலபமாக, லாகவமாகச் செய்யக் கூடியவர்கள் நிர்வாகிகள் என்பதையும் போகப்போகத் தெரிந்து கொண்டேன். இவர்களுக்கு சத்தியம், அநித்தியமான வஸ்து என்பதையும் அசத்தியத்தின் வலிமையிலே இவர்கள் ஓங்கி வளர்ந்து வருகிறார்கள் என்பதையும் அறிந்ததும், என் நெஞ்சம் துணுக்குற்றது.

ஒருநாள் இரவு பன்னிரண்டு மணி இருக்கும். நன்றாக அசந்து தூங்கிக்கொண்டிருந்தேன். அலுவலகத்திலிருந்து போன் வந்தது. "சார்... சார்... நம் காகிதக் கிடங்கில் நெருப்புப் பிடித்துக்கொண்டது" என்று பதற்றத்துடன் சொன்னார் ஆப்பரேட்டர். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'இது என்னடா கிரகசாரம்' என்று நொந்து கொண்டு, "நாயக்கருக்குத் தெரியுமா? சேட்ஜிக்குத் தெரியுமா?" என்றேன்.

"அவர்கள் எல்லோரும் இங்கேதான் இருக்கிறார்கள். மானேஜர் சாரும் இங்கேதான் இருக்கிறார். நெருப்பு அணைக்கும் யந்திரம் வந்து கொண்டிருக்கிறது. இரவு ஷிப்ட் ஆட்கள், தண்ணீரை இறைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒருமாதிரி நெருப்பை அணைத்தாகி விட்டது. தீ அணைப்பவர் வருவதற்குள்ளேயே அநேகமாகச் சரியாகி விடும்" என்றார்.

"வேனை அனுப்பச் சொல்லும். நான் உடனே வருகிறேன்" என்றேன்.

"வேண்டாம், சார். முதலாளிகூட 'எடிட்டரைத் தொந்தரவு செய்ய வேண்டாம். நாங்கள்தான் இவ்வளவு பேர் இருக்கிறோமே அவர் வந்து என்ன செய்யப் போகிறார்' என்று சொல்லி விட்டார்கள். நான்தான் உங்களுக்குத் தகவல் தெரிய வேண்டுமே என்று

கூப்பிட்டேன்" என்றார். அன்றிரவு அதற்குப் பிறகு என்னால் தூங்க முடியவில்லை.

காலையில் எழுந்திருந்தவுடன் பல்லைத் தேய்த்துவிட்டு, குளித்துவிட்டு, காரியாலயத்திற்குக் கிளம்பிவிட்டேன். காகிதக் கிடங்கு கரியாகிக் கிடந்தது. ஜலம் ஓடி வந்து பல இடங்கள் திட்டுத்திட்டாகக் கிடந்தன. வேலையாட்களின் கட்டைவிரல் அடையாளம் எடுப்பதுபோல், கால்களின் அடையாளங்கள் அங்கங்கே கறுப்பாகப் பதிந்திருந்தன. பொசுக்கப்பட்ட பொருள்களின் சாம்பல் அங்கங்கே கறுப்பாகக் கிடந்தது. நான் வருவதற்குள்ளாகவே, நாயக்கரும், சேட்ஜியும், மானேஜரும் எல்லா இடத்தையும் பார்வையிட்டுவிட்டு, அவர்களுடைய அறைக்குப் போய் உட்கார்ந்து கொண்டார்கள். நான் இந்த விபரீதத்தில் கம்பெனிக்கு என்ன நஷ்டம் ஏற்படுமோ என்ற கவலையுடன் பயந்து கொண்டே அவர்களின் அறைக்குச் சென்றேன். மூவரும் நாயக்கரின் அறையிலேதான் இருந்தார்கள்.

"என்ன நாயக்கர் ஸார், இது என்ன விபரீதம்? இது எப்படி நிகழ்ந்திருக்கும்? மின்சாரக் கம்பி 'ஷார்ட் சர்க்யூட்' ஆகியிருக்குமோ? இந்த வேலையாட்கள் அஜாக்கிரதையாக பீடியை எறிந்திருப்பார்களோ? என்ன நஷ்டம் ஏற்பட்டிருக்குமோ?" என்றேன்.

"பரவாயில்லை, நடராஜ். கவலைப்படாதீர்கள். நல்ல வேளையாக அவ்வளவையும் இன்ஷூரன்ஸ் செய்து வைத்திருந்தோம். இன்ஷூரன்ஸ் கம்பெனிக்குத்தான் நஷ்டம். நமக்கு ஒன்றும் இல்லை" என்று சொன்னார் நாயக்கர்.

நான் சிறிது ஆறுதலுடன் என் இடத்திற்கு வந்து என் காரியத்தில் ஈடுபட்டேன். சுந்தரம் ஏதோ காரியமாக என்னிடம் வந்தார். "திடீரென்று எப்படிக்கிடங்கு பற்றிக் கொண்டது? திரும்பவும் இதுமாதிரி நடக்காமல்

இருக்க வேண்டுமே? இதைப்பற்றி முதலாளிகள் கவலைப் படுவதாகத் தெரியவில்லையே?" என்றேன்.

சுந்தரம் சிரித்துக்கொண்டு, நாக்கை ஆட்டிவிட்டு, 'இதெல்லாம் உள்ளாக்கட்டிக்கு' என்று ஜாடை காட்டினர். நான் புரியாமல் விழித்தேன்.

"நாயக்கரும், சேட்ஜியும் சிரித்துக்கொண்டு நிம்மதியாக இருப்பாங்களா? கிடங்கிலே காகிதமே இல்லை. எல்லாம்தான் முன்னேயே கறுப்பு மார்கட்டுக்குப் போயிடுத்தே. இது குப்பைக் காகிதங்களைக் கொளுத்திப்போட்டு ஒரு நாடகம். இதற்கு இன்ஷூரன்ஸ் ஆட்கள் உட்கை. புரிந்ததா?"

"நாளைக் காகிதத்திற்கு என்ன செய்வது?"

"அதை விட்டுத்தள்ளுங்கள். அது ஒரு பெரிய காரியமா? மானேஜரே போன்மூலம் நாலுநாளைக்கு வேண்டியதை இரவல் வாங்கிக்கொள்வார். நமக்கு சரக்குக் கப்பல்வந்து இறங்கியாகி விட்டது. இன்னும் இரண்டு நாளில் கிடங்குக்கு வந்துவிடும். அப்பொழுது திருப்பிக் கொடுத்து விடலாம். ஒன்றும் சிரமமில்லை"

"என்ன, சுந்தரம். நீங்கள் இவ்வளவு விஷயங்கள் தெரிந்து வைத்திருக்கிறீர்களே?"

"நீங்கள், உங்கள் ஜோலியுண்டு, நீங்கள் உண்டு என்று இருந்துவிட்டுப் போகிறீர்கள். நான் எல்லா இலாக்காக்களோடும் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறேன். இனிமேல் அவங்களுக்குப் பத்திரிகையில் அக்கறை இருக்காது."

"அட... பாவிகளா... இதுதான் நாயக்கர் காந்தி வழியைப் பின்பற்றியதில் கற்றுக்கொண்ட பாடமா? இது எங்கே போய் நிற்குமோ?"

"எங்கு வேண்டுமானாலும் போகட்டும். அங்கு நீங்களும் நானும் இருக்கப்போவதில்லை."

இதுபோல பலபல சம்பவங்கள். ஒரு பக்கம் காந்தி, மக்களின் தூய்மையையும், நேர்மையையும் உயர்த்த முயல்கிறார். இன்னொரு பக்கத்தில், அவரால் உயர்த்தப்பட்ட மனிதர்கள் வழுக்கிக்கொண்டு, நழுவிக் கீழே விழுகிறார்கள். மகாத்மாஜியோ, பரீட்சைகளையும், சோதனைகளையும் அதிகப்படுத்திக் கொண்டே போனார். அப்பொழுது ஒரு புதுச்சட்டத்தை அமலுக்குக் கொண்டு வந்தார். கதர் போடுகிறவர்கள், தாங்கள் நூற்ற நூலைக் கொடுத்து, அந்த அளவுக்குக் கதர்த்துணிகள் வாங்க வேண்டும் என்பதுதான் அவர் போட்ட உத்தரவு. கதர் என்பது, வெறும் பொருளாதாரப் பிரச்னையல்ல. அது, வேலையில்லாத நேரத்தைப் பூர்த்தி செய்யும் பிரச்னை அல்ல. கதர் என்பது ஒரு வாழ்க்கை முறை; கதர் என்பது ஒரு தத்துவம். அதற்காகத்தான் எல்லோரும் நூற்க வேண்டும்— நூற்பவர்கள்தான் கட்டிக்கொள்ள வேண்டும் என்ற விதியைப் புகுத்தினார்.

நான் பம்பாயிலிருந்தபொழுதே நூற்கக் கற்றுக் கொண்டேன். தொடர்ந்தும் நூற்று வந்தேன். பத்திரிகாசிரியர் ஆனதில் அதற்கு ஓய்வு கிடைக்கவில்லை. ஆனால் இந்த விதி அமலுக்கு வந்தவுடன் ஒரு நாளைக்கு முக்கால் மணி நேரம் நூற்பது என்று நூற்று வந்தேன், நான் சுயமாக நூற்ற நூல் சிட்டங்களைக் கொடுத்துவிட்டு, வேஷ்டி வாங்குவதற்குக் காதி வஸ்திராலயத்திற்குச் சென்றேன். சுந்தரத்தின் தம்பி ரகுபதிதான் அதற்கு மானேஜர்.

"வாங்க ஸார்" என்று முகமன் கூறி அவர் வரவேற்றார். சிட்டத்தைக் கொடுத்துவிட்டு, "என்ன ரகுபதி. இந்தக் குட்டி விதி எப்படி அமலில் இருந்து கொண்டிருக்கிறது?" என்று கேட்டேன்.

"அதை ஏன் ஸார், கேக்கிறீங்க? மிகவும் தொந்தர வாயிருக்கிறது. போலி பக்தர்கள் கொடுக்கும் உபத்திர வம்தான் சொல்ல முடியாதபடி இருக்கு. அவர்களுக்கு நூற்பதில் நம்பிக்கையும் கிடையாது; சிரத்தையும் கிடையாது. ஆனால், வேஷத்திற்கு மாத்திரம் கதர் வேண்டியிருக்கிறது."

"அவர்கள் நூலுக்கு என்ன செய்கிறார்கள்?"

"வேறு யாரிடமாவது நூலை விலைக்கு வாங்கிக் கொண்டு வருகிறார்கள்; அதனாலே இப்பொழுது கதர் நூலிலே கள்ளமார்க்கெட்."

"கதர் நூல்தானே?"

"அதுதான் தொல்லை. கதர் நூல் என்று எண்ணிக் கொண்டு, எதையாவது வாங்கிவந்து, தாங்கள் நூற்ப தாகப் பெருமையாகக் கொண்டுவந்து கொடுக்கிறார்கள். அவர்களின் உடையையும், வேஷத்தையும், அந்தஸ்தை யும் பார்த்து, நாசூக்காக அவர்களிடம் நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

"பெரிய மனிதர்களும் இதைச் செய்கிறார்களோ?"

"பெரிய மனிதர்கள் என்று சொல்லப்படுபவர்களும், நினைக்கப்படுபவர்களும் இதைக் கூசாமல் செய்கிறார்கள். வேறு யாரைச் சொல்ல வேண்டும், உங்கள் முதலாளி நாயக்கரே போனவாரம் வந்தார். அவரும் நூல் கொண்டு வந்திருந்தார். அதைப் பார்த்தவுடன் எனக்குப் பகீரென் றது."

"என்ன அப்படி?"

"மில் நூலைக் கதர் நூல் என்று யாரோ அவரிடம் கொடுத்து ஏமாற்றி இருக்கிறார்கள். அவருக்கு மில் நூலுக்கும், கதர் நூலுக்கும்கூட வித்தியாசம் தெரிய வில்லை. எப்படி?"

"அவர் என்ன சொன்னார்?"

"'பாருங்க ஐயா, கதர் நூலிலேகூடப் பித்தலாட்டம் பண்ணுங்க பாவிப் பசங்க. நம்ம ஜனங்களுக்குக் கொஞ்சங்கூட நாணயம் இல்லே. சத்யத்தை நிலைநாட்ட வந்த காந்தி நூலிலே, கதர் நூலிலே அயோக்யப் பசங்க ஏமாத்துறுங்களே. அவங்க உருப்படுவாங்களா?' என்ருர்.

"'நீங்க சொல்வது உண்மைதான். நீங்கள் பிறரிடம் நூல் வாங்கியிருக்கக்கூடாதே. அதுவே காந்தி நெறிக்கு விரோதமாச்சே. நீங்கள் நூற்று அல்லவா கொண்டு வந்திருக்க வேண்டும்?'

"'மெய்தான், ஐயா. ஆனல், அதற்கு நேரம் வேண்டாமா? நமக்கு மூச்சுவிட நேரமில்லையே?'

"'மகாத்மாவிற்கே நேரம் கிடைக்கிறதே?'

"'நம்ம என்ன மகாத்மாவா? நம்மால் மௌனவிரதம் இருக்க முடியுமா? நம்மால் 21 நாள் பட்டினி கிடக்க முடியுமா? தவிர, அவருக்குச் சோற்றுப்பாட்டுக்குக் கவலை உண்டா? நாம்கவலைப் படாமல் இருக்க முடியுமா?'

"'அது போகட்டும். இனிமேல் கதர் வேண்டுமாஞல் தயவு செய்து கதர் நூல் கொண்டு வாருங்கள்.'

"'சரி, பார்க்கலாம்' என்று போய்விட்டார்."

"கதரிலேகூடக் கள்ள மார்க்கெட்டா?" என்றேன்.

"கள்ள மார்க்கெட்காரர்கள்தான் இப்பொழுது கதரிடமும், காந்தியிடமும் அபார பக்தியைக் காட்டுபவர்கள்" என்ருர்.

'மக்களே போல்வர் கயவர்' என்ருர் திருவள்ளுவர். இவர்கள் அதற்கு மேலும் சென்றுவிட்டார்கள். மகாத்மாவின் சீடர்கள் போலவும், தேசபக்தர்கள் போலவும், தியாகிகள் போலவும், நல்லவர்கள் போலவும் நடிக்கும் வேஷதாரிகளைப்பற்றி வேறு என்ன சொல்வது.

# 25

கடற்கரை, ஜனங்கள் வரக்கூடாத இடமாகிவிட்டது. ஆகவே எங்கள் மாலைக்கூட்டத்தைப் புத்தொளிப் பதிப்பகத்தின் மொட்டை மாடியில் வைத்துக் கொண்டோம். யுத்தம் முடியும்வரையில், எங்கள் மாலைக்கூட்டத்தை அங்கேயே நடத்திக்கொள்வது என்று வைத்துக் கொண்டோம். பீச்சுக்கு அருகேயுள்ள வேங்கடரங்கன் பிள்ளை தெருவில் இருந்தது அந்தப் பதிப்பகம். மொட்டை மாடி பீச்சை நோக்கி இருந்ததால், பீச்சுக் காற்றுக்குக் கவலை இல்லை. அன்றிருந்து பதிப்பாளரின் தயவால், சில சமயங்களில் காபியோ, சோடாவோ கிடைக்கும்; சில விசேஷ நாட்களில் ஏதாவது பலகாரங்களும் கிடைக்கும். ஆகவே, எங்களுக்கு அங்கே எங்கள் முகாமை மாற்றிக்கொண்டதில் நஷ்டமில்லை. லாபம் தான்.

தி.ஜ., நான், முத்து, சுந்தரம் எல்லோரும் உட்கார்ந்து கொண்டிருந்தோம் கிருஷ்ணமணி வரும் பொழுது மிகுந்த உற்சாகத்தோடு வந்து கொண்டிருந்தார்.

"என்ன கிருஷ்ணமணி ரொம்ப உற்சாகத்தோடு வருகிறீர் போலிருக்கிறதே" என்றேன்.

"ஏன் உற்சாகம் இருக்காது. ஹிட்லர் என்ன போடுபோடுகிறான். ஆங்கிலத்துக்கே ஒரு வார்த்தையைக் கொடுத்து விட்டானே — பிளிட்ஸ் க்ரீக்."

"லண்டனிலே பிளிட்ஸ் நடந்து கொண்டிருக்கிறதே, அதற்குத்தான் இவருக்கு இவ்வளவு சந்தோஷம். அது தானே" என்றார் முத்து.

"ஆம், தி. ஜ. இந்த பிரிட்டிஷ்காரரின் திமிரை ஒடுக்குவதற்கு ஒருத்தன் வந்தானேயா! சரியான ஆள்—ஹிட்லர்! இந்த ஹிட்லர் வாழ்க; அவன் நாமம் வாழ்க. அவன் யோக்யன், அயோக்கியன், அவன் ஜூ மதத்தினரைக் கொன்றான், ஜனநாயகத்திற்கு விரோதி என்பதெல்லாம் கிடக்கட்டும். ஒரு குண்டுகூடப் போடாமல், ஐரோப்பாவின்பெரும் பகுதியையும்கைப்பற்றிவிட்டான்! இந்த இங்கிலாந்து எம்மாத்திரம்? 'அரை நிர்வாணப் பக்கிரி' என்று சொன்னானே, இந்த புல்டாக் சர்ச்சில், இவன் ஊதற சுருட்டு மாதிரி லண்டனையே அவன் புகைச்சிண்டிருக்கானே! இவனுக்கு அவன்தான் சரி" என்றார் மணி.

"கிருஷ்ணமணி மதராஸ் மேயராக வருவதற்கு ஒரு நாஜீ ஆகிவிட்டாரே!" என்றார் சுந்தரம்.

"ஆங்கிலேயனின் மண்டையைப் பிளந்துக்கிட்டிருக்கான் ஹிட்லர். அவனுடைய படைகளையே தூளாக்கிக் கொண்டிருக்கான். அப்பவும், வாயைத் திறந்து, 'உங்களுக்குச் சுதந்திரம் கொடுக்கிறோம்,' என்று எவனாவது சொல்றானா? தான் செத்தாலும் பரவாயில்லை. இந்தியாவிற்கு மாத்திரம் சுதந்திரம் கிடையாது என்று இருக்கையில், நமக்கு அவன்மேல் என்ன அனுதாபம்? தொலையட்டுமே, லண்டன், இங்கிலாந்து எல்லாம்" என்று தம் ஆத்திரத்தைக் கொட்டினார் கிருஷ்ணமணி.

"இங்கிலாந்திற்குச் சாபம் கொடுக்கிறார் கிருஷ்ணமணி" என்றார் சுந்தரம்.

"பயப்படாதேயுங்கள், கிருஷ்ணமணி. உம் சாபப்படி இங்கிலாந்து அழிந்து போய்விடாது" என்றார் தி. ஜ.

"என்ன தி. ஜ., பிளிட்ஸ் தாக்குதலை நிறுத்தி விடு வான் ஹிட்லர் என்று எதிர்பார்க்கிறீர்களா? அல்லது ஜெர்மன் விமானங்கள் வராமல் சர்ச்சில் தடுத்து விடு வான் என்று எதிர்பார்க்கிறீர்களா?" என்ருர் கிருஷ்ண மணி.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. விமானப் போருக் குத் தயாராயில்லாமல் பிரிட்டன் பின்தங்கிவிட்டது, இப்பொழுது வேகமாகத் தயார் செய்து கொண்டிருக் கிறது. சீக்கிரமே தயாராகி விடும். ஆனாலும், உடனடி யாக ஜெர்மன் விமானத் தாக்குதலை ஒன்றும் செய்ய முடியாது. ஒவ்வொரு தாக்குதலின்போதும், பலத்த நஷ் டங்களும், சேதங்களும் இருக்கத்தான் செய்யும். ஆனல் பிரிட்டிஷ்காரனின் வெற்றி, அவனுடைய விமானப்படை யிலோ, கப்பற்படையிலோ, டாங்குகளிலோ இல்லை. பிரிட்டிஷ்காரனின் பலம், பிரிட்டிஷ் மக்களின் நெஞ்சழுத் தத்திலும், மனேதைரியத்திலும், சகிப்புத் தன்மையிலும், ஆத்ம பலத்திலும்தான் இருக்கிறது" என்ருர் தி. ஜ.

"உண்மைதான் தி. ஜ., தினம் குண்டு விழுந்து கொண்டிருக்கிறது. தினம் பல இடங்கள் சேதமாகின் றன. பலர் மடிகின்றனர். இதையெல்லாம் பார்த்துக் கொண்டே, எதுவுமே நடக்காததுபோல், தங்கள் காரியங் களில் ஈடுபட்டுக்கொண்டு, 'யுத்தத்தில் ஜயிக்க வேண் டும், ஜயித்து விடுவோம்' என்ற நம்பிக்கையுடன் உழைக் கிருர்களே, அவர்களுடைய சகிப்புத் தன்மையிலும், நெஞ்சின் உறுதியிலும்தான் அவர்களின் வெற்றி இருக் கிறது" என்றேன் நான்.

"சரிதான், நீங்களும் தி. ஜ. வுடன் ஒத்துப்பாட ஆரம்பித்து விட்டீர்கள். இதில் ஆத்ம பலம் என்பது என்ன இருக்கிறது என்பதுதான் தெரியவில்லை. மகாத்மா சொல்லிக் கொடுத்த வார்த்தைகளைப்

பொருத்தம் இல்லாமல், உபயோகப்படுத்தக் கூடாது" என்றார் கிருஷ்ணமணி.

"நம் மகாத்மா என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா? அஹிம்சை, ஆத்ம பலம் இதைப்பற்றி அவர் சொன்னார்; 'நமக்கு யுத்த களத்தில் வீரத்தைக் காட்டுவதென்பது முடியாத காரியம். ஆனால், அஞ்சாமை நமக்கு அவசியம் தேவை. தேகஉபத்திரவங்கள் ஏற்படுமே, வியாதி உண்டாகுமே, மரணம் வருமே, சொத்துக்கள் எல்லாம் போய்விடுமே, குடும்பத்தை இழந்துவிடுவோமே, கீர்த்தி போய் விடுமே என்பன போன்ற பயங்களே இருக்கக் கூடாது. இவ்வுலகத்தில், நம்முடையது என்று எதுவுமில்லை' என்று சொல்லியிருக்கிறார். பிரிட்டிஷ் மக்கள் இவ்வளவையும் துறக்க வேண்டியிருந்தும் அவர்கள் தைரியத்தை இழக்கவில்லை. இதை ஏன் ஆத்ம பலமென்று சொல்லக்கூடாது?" என்றேன்.

"க்வன்டின் ரெயினால்ட்ஸ் என்ற அமெரிக்கர், தாம் நேரில் கண்ட ஓர் அனுபவத்தை தம் செய்தியில் சொல்லியிருக்கிறார். அதைப் படித்தாலே நமக்கு நன்கு விளங்கும்" என்றார் தி. ஜ.

"அது என்ன சம்பவம்? அவர் எழுதியிருப்பது என்ன?" என்றார் முத்து.

க்வன்டின் ரெயினால்ட்ஸ் ஒரு பிரபல பத்திரிகையின் யுத்த நிருபராக அமெரிக்காவிலிருந்து லண்டன் வந்திருக்கிறார். எல்லாம் நேரில் பார்த்து எழுதுபவர். அவர் சொல்லியுள்ள நிகழ்ச்சியை, தி. ஜ. கூறினார் :

"கப்பல் பகுதிப்பக்கம், பெண்கள் உதவிப்படைத் தலைவியைக் காண க்வன்டின் ரெயினால்ட்ஸ் சென்றிருக்கிறார். தலைவியும் சில பெண்களும் டீ சாப்பிட, கான்டீனுக்குபோயிருக்கிறார்கள். இவரும் அங்கேபோயிருக்கிறார். அப்பொழுது ஜெர்மன் விமானப்படைகள் தாக்க ஆரம்

பித்தன. பாதுகாப்புக்காகப் போடப்பட்டிருந்த மண் மூட்டைகள் எதிரிகளின் குண்டு வெடிகளால் கலைந்து, தூசி கிளம்பி, எல்லோருடைய தேநீரையும் வீணாக்கி விட்டது. மறுபடியும் மாதர் படைத் தலைவியும், அவருடைய சகாக்களும் தேநீரை நிரப்பிக் கொண்டிருக்கும் பொழுது, ராணுவ உடையில் வந்த ஒரு பெண், தலைவியிடம் சொன்னாள்: 'இன்றும் நான் வேலை செய்கிறேன்' என்றாள்.

"'எதல், இன்று உனக்கு ஓய்வுநாள் அல்லவா? போய், இன்றிரவு ஓய்வு எடுத்துக்கொண்டு நாளை வா' என்றாள் தலைவி.

"'எனக்கு ஓய்வு வேண்டாம். நான் இன்றும் வேலை செய்கிறேன்' என்றிருக்கிறாள் அந்தப் பெண்.

"தலைவிக்கு ஆச்சரியமாயிருந்தது. அந்தப் பெண்ணைக் கவனித்துப் பார்த்தாள். அவள் முகத்தில் சொல்ல முடியாத சோகம் ததும்பிக் கொண்டிருந்தது. 'என்னம்மா எதல், என்ன நடந்தது? ஏன் ஓய்வு எடுத்துக் கொண்டு வீடுபோக விரும்பவில்லை? முகம் மிகவும் துக்கமாயிருக்கிறதே' என்று கேட்டாள்.

"'அம்மா, நான் ஓய்வு எடுத்துக்கொண்டுபோவதற்கு இன்று எனக்கு வீடு இல்லை. நேற்று இரவு நடந்த குண்டு வீச்சில் என் குடும்பம் பூராவும் அழிந்துவிட்டது. என் வீடும் எரிந்துபோய் விட்டது. இனி, போவதற்கு இடம் இல்லை. அதனால்தான் இன்றும் வேலை செய்ய விரும்புகிறேன்' என்றாள்.

"தலைவி சிறிது கருணையுடனும், அனுதாபத்தோடும் அந்தப் பெண்ணைப் பார்த்துவிட்டு, 'சரி எதல், தயார் செய்து கொள்' என்றாள்.

"உடனே டெலிபோன் கத்தியது. 'கிழக்குச் சாலையும் விந்தால் தெருவும் சேருமிடத்தில் தீ. நீ அங்கே செல்' என்றாள் தலைவி.

"அந்தப் பெண் புறப்பட்டாள். க்வன்டின் ரெயினுல்ட்ஸ்ஸும் அந்தப் பெண்ணுடன் சென்றிருக்கிறார். இருட்டடிப்பு இருந்தாலும், குறிப்பிட்ட இடத்திற்கு தானே காரை ஓட்டிச் சென்றுளாம் அந்தப் பெண் எதல். இரண்டு வீடுகள் தீக்கிரையாகி இருந்தன. ஒன்று காலி வீடாம். மற்றொன்றில் ஒரு குடும்பம் இருந்ததாம். தீயணைப்புச் சிப்பந்திகள் நெருப்பைப் பொருட்படுத்தாமல் உள்ளே இறங்கினார்கள்.

"'ஒருவருக்கும் உயிர் இல்லை' என்று கத்தினார் ஒருவர்.

"'பரவாயில்லை, ஆளைத் தூக்கிச் செல்லும் கட்டிலில் உடலை வெளியே கொண்டு வாருங்கள்' என்றார் வெளியே இருந்தவர்.

"அப்படியே செய்யப்பட்டது. ஒரு கட்டிலில் நடுத்தர வயதுள்ள பெண்மணி ஒருத்தி கிடந்தாள். அசைவின்றி இருந்தாள். உயிர் இருக்கிறதா, இல்லையா என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இதற்கிடையில் ஒரு டாக்டரும் வந்து சேர்ந்தார். பையிலிருந்து மருந்தை எடுத்து. ஊசியேற்றினார். சிறிது நேரம் கழித்து, நாதுவைத் தொட்டுப் பார்த்து, 'உயிரில்லை. புகையினால் மூச்சுத் திணறி மரணம்' என்றார்.

"இதற்கிடையில், மற்றொருகட்டிலை எடுத்து வந்தார்கள் சிப்பந்திகள். டாக்டர் அந்த மாதைப் பார்க்கவேயில்லை. தேவையுமில்லை. கருகிப் பொசுங்கிப் போயிருந்தது அந்த உடல். மற்றொரு சிப்பந்தி, ஒரு சிறு குழந்தையைத் தூக்கி வந்தார். டாக்டர், குழந்தைக்கு சுவாசத்தை உண்டு பண்ணுவதற்கு முயன்று கொண்டிருந்தார். இந்தக் குடும்பத்தைப் பற்றி அண்டை வீட்டுக்காரர்கள் விவரம் சொன்னார்கள். வயது வந்தவள் பாட்டி. நடுத்தர வயது பெண் மாது குழந்தை பேத்தி. நடுத்தர வயது மாதின் கணவன் டன்கர்க்கில் மறைந்தான்.

குண்டை வீசிய விமானங்கள் திரும்பிவிட்டன. டாக்டர் சொன்னார்; 'அவர்கள் வேலை முடிந்தது' என்று பொதுவாகச் சொன்னார்.

"'குழந்தையை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச்செல்லட்டுமா?' என்று கேட்டாள் எதல்.

"'வேண்டாம். மற்ற உடல்களுடன் சவக்கிடங்குக்கு எடுத்துச் செல்லுங்கள்' என்றார் டாக்டர்.

"மூன்று சவங்களையும் எடுத்துக் கொண்டு திரும்பி வந்தார்கள். சில நிமிஷங்களில் ஒரு குடும்பம் மறைந்தது. வழியில் ஒருவரும் பேசவில்லை. அந்தப் பெண் எதல், இந்த அநியாயச் சாவுகளையும், முந்திய இரவில் தனக்கு ஏற்பட்ட துக்கத்தையும் நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள் போலும். அமெரிக்க நிருபர் ரெயினால்ட்ஸ், இந்தக் குழந்தை உயிருடன் இருந்திருந்தால், அநாதையாக எவ்வளவு இன்னல்களை அனுபவிக்க வேண்டியிருக்கும் என்பதை எண்ணி, இந்தக் 'குழந்தை இறந்ததே மேலானது என்று எனக்குத் தோன்றுகிறது' என்றாராம்.

"இதைக் கேட்டு அவள் முகத்தில் தோன்றிய அருவருப்பு நிருபருக்கு நன்கு தெரிந்தது. 'வாழ்வைவிட மரணம் மேல் என்பதை நான் ஒப்புக்கொள்ள வில்லை' என்று பளிச்சென்று எதல் சொன்னாளாம்.

"'இந்த வார்த்தைகள் என்னை மிகச் சிறிய மனிதனாக்கி விட்டன' என்று செய்தியை முடித்திருக்கிறார் க்வன்டின் ரெயினால்ட்ஸ்.

"இந்த திட சித்தமும், மனோ தைரியமும், சகிப்புத் தன்மையும், கடும் உழைப்பும், நிச்சயமாக இங்கிலாந்திற்கு வெற்றியை வாங்கித் தரும் என்பதில் சந்தேகமே இல்லை" என்றார் தி. ஜ.

"இந்த திடசித்தம், மனோதைரியம், சகிப்புத்தன்மை எல்லாம் வெள்ளைக்காரனுக்கு மட்டுந்தானா? நம்மிடையே இல்லையா?" என்றார் கிருஷ்ணமணி.

"ஏன் இல்லை? சத்யாக்கிரக இயக்கத்தில், நம் பலம் என்ன என்பதை வெளிக் காட்டியிருக்கிறோமே" என்றார் தி. ஜ.

"வேதாரண்யம் உப்பு சத்யாக்கிரகத்தின்போது, நம்முடன் உப்பு எடுத்தானே கந்தப்பன். அவனை ஞாபகமிருக்கிறதா?" என்றார் கிருஷ்ணமணி.

"ஏன் ஞாபகமில்லை? அது மறக்கக்கூடிய காரியமா?" என்றார் தி. ஜ.

"அது என்ன கிருஷ்ணமணி? எனக்கு சொல்லுங்களேன்" என்றார் முத்து.

"மகாத்மாஜி தண்டியில் உப்பு எடுத்தபொழுது, ராஜாஜி வேதாரண்யத்தில் உப்பு சத்தியாக்கிரஹம் செய்தார். நானும் தி. ஜ. வும் தொண்டர்கள். எங்களைப் போலவே, கந்தப்பனும், ஒரு தொண்டன். தார்ன் என்ற துரை அப்பொழுது தஞ்சாவூர் கலெக்டர். உப்பு எடுக்கவேண்டிய இடத்திற்குச் சிறிது தள்ளி ராஜாஜி முகாம் போட்டிருந்தார். கலெக்டரும், ஏகப்பட்ட போலீஸ்காரர்களையும், சார்ஜன்ட்களையும் வரவழைத்து வைத்திருந்தார். ஒருவரையும் உப்பு எடுக்க விடக்கூடாது என்பது அரசாங்கத்தின் தீவிரமான நோக்கம். ராஜாஜி, விடியற்காலையில் எழுந்திருந்து, ஒரு பானையில் கடல் நீரை எடுத்துக் காய்ச்சி, உப்பு எடுத்துவிட்டார். போலீஸ் இதை எதிர்பார்க்கவேயில்லை. இதற்குப் பிறகு தொண்டர்களாகிய, நாங்களும் உப்பு எடுக்கத் தொடங்கினோம். போலீஸ்காரர் ரோஷத்துடன் சத்தியாக்கிரகிகளை நோக்கி ஓடிவந்தனர். சத்யாக்கிரகிகள், இந்தப் போலீசைப் பொருட்படுத்தாமல் உப்பை அள்ளினர்.

ஒவ்வொருவர் கையிலும் உப்பு இருந்தது. அதை எப்படி யாவது பிடுங்கிவிட வேண்டும் என்று, கையில் அடித்தார் கள்; பிடுங்கிஞர்கள். தள்ளிஞர்கள். கந்தப்பன் கையிலும் உப்பு இருந்தது. போலீஸ் என்ன செய்தும், பிடியை விடவில்லை. கந்தப்பனைக் குப்புறத்தள்ளிவிட்டுஅடித்தான் ஒரு போலீஸ்காரன். அப்பொழுதும் கந்தப்பன் கை தளரவில்லை. அருகில் நின்று கொண்டிருந்த வெள் ளைக்கார சார்ஜென்ட்டுக்கு இந்த அடம் பிடிக்கவில்லை. வேகத்துடனும், ஆக்ரோஷத்துடனும் கந்தப்பனிடம் வந்தான். கந்தப்பன், உப்பு இருக்கும் கையை நீட்டிய படி குப்புறப் படுத்திருந்தான். வெள்ளை சார்ஜன்ட் வெறிபிடித்தவன் போலத் தன் முழு பலத்தையும் கொடுத்துத் தன் பூட்ஸ்காலால் அந்த மூடியிருந்த முஷ்டியை ஓர் அமுக்கு அமுக்கி மிதித்தான். கந்தப்ப னின் கட்டை விரல் அப்படியே தெறித்துத் துள்ளி விழுந்து துடித்துக் கொண்டிருந்தது. பீறிட்ட ரத்தம் வேதாரண்யத்து மண்ணோடு கலந்தது ; பாரத புண்ணிய பூமியோடு கலந்தது; இந்தியனின் மானத்தைக் காக்கும் உப்போடு கலந்தது. கந்தப்பன் மூர்ச்சையாஞன்; நினைவை இழந்தான். கந்தப்பன், பிடித்த உப்பை அப்போதும் விடவில்லை" என்று முடித்தார் கிருஷ்ணமணி.

சிறிது நேரம் யாரும் பேசவில்லை ; அந்தப் பழைய நினைவிலே லயித்து நின்ருர்கள்.

"இப்படிப்பட்ட தியாகிகள் எத்தனையோ பேர், எத் தனையோ தியாகங்களைச் செய்திருக்கிருர்கள். அப்பூதி அடிகளைப்போல, தி. ஜ. நடந்து கொள்ளவில்லையா? இங் கிருக்கும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் தியாகி களே" என்றேன்.

"வெள்ளைக்காரர்களின் சகிப்புத்தன்மை, தியாகம், தைரியம் எல்லாம் அவர்களுக்கு என்ருவது வெற்றியைத்

தரும் என்று சொன்னீர்களே? ஆனால், நம்முடைய சகிப்புத்தன்மை, தியாகம், ஆத்ம பலம் எல்லாம் பயன் அளிப்பதாகத் தெரியவில்லையே?" என்றார் முத்து.

"பலே முத்து, சரியாகக் கேட்டீர்கள்!' என்றார் கிருஷ்ணமணி.

"ஒன்றை நாம் மறந்துவிடக்கூடாது. அங்கு நடப்பது ஆயுதம் தாங்கிய யுத்தம். நாம் நடத்துவது அஹிம்சைப் போராட்டம். அந்த யுத்தத்தின் விளைவு நாசம். அது உடனடியாக ஏற்படக்கூடியது. நம் யுத்தத்தின் விளைவு மனமாற்றம். அது உடனடியாக ஏற்படக்கூடியதில்லை; மெதுவாகத்தான் நடக்கும். நம் நிலைமை, பண்பாட்டிற்குத் தகுந்தபடி, மகாத்மாஜி நம் யுத்தத்தைத் தயார் செய்திருக்கிறார். அவர்களின் நிலைமை, பண்பாட்டிற்குத் தக்கவாறு சர்ச்சில் போராடுகிறார்" என்றார் தி. ஜ.

"தங்கள் சுதந்திரத்திற்குப் பாடுபடும் சர்ச்சிலுக்கு நமக்குச் சுதந்திரம் தேவை என்பது ஏன் தெரியவில்லை?" என்றார் முத்து.

"சர்ச்சில் பிரிட்டிஷ் மக்களின் ஒரு சாதாரணப் பிரதிநிதி. அவர்கள் தங்கள் சுதந்திரத்திற்காக எதையும் தியாகம் செய்யத் தயார். ஆனால் தங்கள் உரிமைகளையோ உடைமைகளையோ விட்டுக்கொடுக்க விரும்பவில்லை. இந்தியா, அவர்களுடைய உடைமை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் என்றும் நிலைத்து, ஆங்கிலேயர் சுபிட்சமாக வாழ வேண்டும் என்பதுதான் அவர்களின் விருப்பம். அதனால் தான் இந்தியாவிற்குச் சுதந்திரம் கொடுக்க வேண்டும் என்று பலருக்குப் புரியவில்லை. ஆங்கிலேயரின் சுயநலம் தான் குறுக்கே நிற்கிறது" என்றார் தி. ஜ.

"அப்பொழுது நம் கதி?" என்றார் கிருஷ்ணமணி.

"காந்திதான் கதி. 'எறும்பூரக் கல்லும்தேயும்' என்பார்களே, மகாத்மா காட்டிய வழியிலேயே போய்க் கொண்டிருந்தால், சுதந்திரம் வராமலா இருக்கப் போகிறது" என்றார் தி. ஜ.

"நம் காலத்தில் இல்லை" என்றார் கிருஷ்ணமணி.

# 26

"என்ன தி. ஜ., நிலைமை வர வர மோசமாகிக் கொண்டு வருகிறதே" என்றேன் நான்.

"ஆம், மகாத்மாஜியே 'வெள்ளையனே வெளியேறு' என்று சொல்லி இருக்கிறாரே" என்றார் தி. ஜ.

"அவ்வளவிற்கு எல்லாம் மோசமாகி இருக்கிற தல்லவா?" என்றார் சுந்தரம்.

"ஆம்; ஜப்பானியர் சிங்கப்பூர், மலேயா, எல்லாம் முடித்துக்கொண்டு, பர்மாவிற்குள்ளேயும் வந்து, பிரிட்டிஷ் படைகளை துரத்தி விட்டார்கள். இப்பொழுது ஜப்பானியர், இந்தியாமேல் படையெடுத்து வந்தால், நம்மை பாதுகாக்கவேண்டிய அளவுக்கு இங்கே படைகள் இல்லை. வெள்ளையர் நம்மை விட்டுப் போய்விட்டால், நம்மைக் காத்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு நம்முடையதாகி விடுகிறது. அதுதான் மகாத்மா, 'எங்களைக் காப்பாற்ற சக்தியில்லாத நீங்கள் இங்கு ஏன் இருக்கிறீர்கள்? வெளியேறுங்கள்' என்று சொல்லுகிறார்" என்றார் தி. ஜ.

"அது சரி. வெள்ளையன் போய்விடுகிறான். ஜப்பான் வந்தால் நாம் அஹிம்சை முறையில் நம்மை ஜப்பானியரிடமிருந்து காப்பாற்றிக்கொள்ள முடியுமா?" என்றார் முத்து.

"மகாத்மாவே, அதைப்பற்றியும் சொல்லியிருக்கிறாரே. 'அவர்களுக்கு இடமோ, சாப்பாட்டு வசதியோ செய்து

கொடுக்கக்கூடாது. அவர்களுடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ளக் கூடாது. அவர்கள் நமக்கு வேண்டாதவர்கள் என்பதை, அவர்கள் உணரச் செய்ய வேண்டும். அப்படி அவர்களின் படையெடுப்பைத் தாங்க முடியவில்லை என்ருலும், சாவிற்குப் பயந்தாலும், அந்த இடத்தை விட்டு வெளியேறிவிட வேண்டும். அவர்களின் சைனியத்தில் சேராமல் விலகிவிட வேண்டும்' என்று சொல்லியிருக்கிருர்" என்ருர் தி. ஜ.

"ஆனுல், காந்தி சொன்னதை வெள்ளையன் கேட்டாளு?" என்ருர் கிருஷ்ணமணி.

"அவன் ஏன் கேட்பான்? தீர்மானம் வாசித்த அன்றிரவே, தலைவர்களை யெல்லாம் ஜெயிலுக்குள்ளே போட்டுவிட்டான்" என்றேன் நான்.

"அதன் விளைவு, எங்கே பார்த்தாலும் வன்முறைச் செயல்கள் கடுமையாகப் பல நிகழ்ந்தன. மகாத்மா வெளியே இருந்தால் அவர் கட்டுப்படுத்தியிருப்பார். ஜனங்களுக்கு பிரிட்டிஷ் ஆட்சியில் அளவற்ற கசப்பு ஏற்பட்டுவிட்டது. அரசாங்கமோ தீவிர அடக்கு முறையைக் கையாண்டு வருகிறது. இது ஒரு தட்டாமாலை" என்ருர் தி. ஜ.

"இப்படி அடக்கு முறையைக் கடைப்பிடிப்பதாலே மக்களின் ஆர்வத்தையும், மனோதிடத்தையும், லட்சியத்தையும் அழித்துவிட முடியுமா? மக்களின் சுதந்திர வேட்கையைத்தான் அகற்றிவிட முடியுமா?" என்ருர் முத்து.

"அடக்கு முறையினுல் ஒன்றையும் அடக்கிவிட முடியாது. பழங்காலத்தில் கதை சொல்லுவார்களே. ராட்சதர்கள் சிந்தும் ஒவ்வொரு துளி ரத்தத்திலிருந்தும், மற்ருெரு ராட்சதன் தோன்றுவான் என்று. அது போலத்தான். அதுபோலவே நம் வன்முறைச் செயல்களாலும் ஒன்றையும் சாதித்துவிட முடியாது.

வன்முறைச் செயல்கள் அடக்கு முறைகள் பலம்அடைவ தற்குத்தான் உபயோகப்படும். வேறு ஒன்றும் பலன் இல்லை" என்றார் தி. ஜ.

"ஆம், இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பு நேரிலே நீங்கள் சொல்வதன் உண்மையைக் கண்டேன்" என்றார் சுந்தரம்.

"ஆமாப்பா. மதுரை, ராமநாதபுரம், கோயமுத்தூர் போன்ற இடங்களில் எல்லாம் ஏக ரகளையாயிற்றே. மதுரையில் ஊர் அடங்கு சட்டம் ஒரு மாதத்துக்குப் போட்டிருக்கிறார்களே" என்றார் கிருஷ்ணமணி.

"ஆமாம், அங்கு மாத்திரம் என்ன? இந்தியாவின் வேறு பல பாகங்களிலுந்தான் பலாத்காரம் தலைதூக்கி நிற்கிறது; அடக்கு முறையும் ஓங்கி நிற்கிறது" என்றார் முத்து.

"வன்முறையை அடக்கக்கூடியவர் மகாத்மா ஒருவர் தான்; அவர்தான் சிறையில் இருக்கிறாரே. தலையில்லாப் படைபோல, இந்த இயக்கம் நடந்து கொண்டிருக்கிறது. கேள்வி கேட்பாரில்லை" என்றார் தி. ஜ.

"சுந்தரம் ஏதோ சொல்ல வருகிறார் போலிருக் கிறதே?" என்றார் முத்து.

"ஆம், சுந்தரம். என்ன நடந்தது?" என்றேன் நான்.

"தேவகோட்டைக்குத்தானே நான் ஒரு கல்யாணத் திற்குப் போயிருந்தேன். அங்கு தானே தீவிரமாக வன் முறைச் செயல்கள் நடந்திருக்கின்றன" என்றார் சுந்தரம்.

"ஆமாம். அந்த வட்டாரம் முழுவதும் தேசியப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபடும் மக்கள்" என்றார் தி. ஜ.

"மகாத்மா காந்தியும், தலைவர்களும் கைது செய்யப் பட்ட செய்தி தெரிந்தவுடன், வழக்கம்போல் ஹர்த்தால்

நடந்தது, வழக்கம்போல் 'வெள்ளையனே வெளியே போ. மகாத்மா காந்திக்கு ஜே! பாரத மாதாவுக்கு ஜே! புரட்சி ஓங்குக!' என்று ஜனங்கள் கோஷித்துக் கொண்டு போயிருக்கிறார்கள். கூட்டம், போலீஸ் ஸ்டேஷன் பக்கமாகப் போயிருக்கிறது. கூட்டத்தில் இருந்த யாரோ ஒருவன் போலீஸ் ஸ்டேஷன் சுவரில் சாணியை எறிந்திருக்கிறான். இதைச் சாக்காக வைத்துக்கொண்டு, போலீஸ்காரர்கள் தடியுடன் வந்து கூட்டத்தைக் கலையச் சொல்லியிருக்கிறார்கள். கூட்டம் கலையவேயில்லை. அப்பொழுது சிறிது தீவிரமாகத் தடியடி நடத்த ஆரம்பித்திருக்கிறார்கள். ஒரு பையனுக்கு நல்ல காயம். ஆகவே ஜனங்களுக்கு ஆத்திரம். பக்கத்திலே ரோடு போடுவதற்குப் போடப்பட்டிருந்த சரளைக் கல்லை எடுத்து வீசி இருக்கிறார்கள். ஜன்னல் கண்ணாடி எல்லாம் நொறுங்கிப் போயின. அதைப் பார்த்த மாஜிஸ்ட்ரேட் சுட அனுமதி அளித்திருக்கிறார். போலீஸார் சுட்டனர். அதில் இரண்டு பேர் மரணம்; மூன்று பேருக்கு நல்ல காயம். கூட்டம் உடனே கலைந்து விட்டது. ஆனால், அன்றிரவு மண்ணெண்ணெயை ஊற்றி, போலீஸ் ஸ்டேஷனுக்கும், பக்கத்தில் இருந்த கோர்ட்டுக்கும் நெருப்பு வைத்து விட்டனர்" என்றார் சுந்தரம்.

"பலே!" என்றார் முத்து.

"இதில் சந்தோஷப்படுவதற்கு ஒன்றுமில்லை, ஐயா. வன்முறையில் நாம் ஒன்று செய்தால், அரசாங்கம் பத்துச் செய்யும். கடைசியில் பார்த்தால், நம் மக்களுக்குத்தான் நஷ்டமும், கஷ்டமும்" என்றார் தி. ஜ.

"சரி, பிறகு என்ன நடந்தது?" என்றார் கிருஷ்ணமணி.

"தி. ஜ, சொன்னதைப் போலத்தான். அரசாங்கம் ராணுவத்தை வரவழைத்தது. ஊர் முழுவதும் ராணுவம் தான். போலீஸ்காரர்கள் யார் மேல் சந்தேகப்பட்டார்

களோ, யார் அவர்களுக்கு வேண்டாதவர்களோ, யார் இதுவரையில் அவர்களிடம் சிக்காதவர்களோ, அவர்களை யெல்லாம் பிடித்தனர். வீடுகளைச் சூறையாடினர். பெண்களைக்கூட அவமரியாதை செய்யத் தயங்கவில்லை, அயோக்கியர்கள். கொடுங்கோல் ஆட்சிக்கு இதற்கு மேல் உதாரணம் இருக்க முடியாது" என்றார் சுந்தரம்.

"ஜனங்கள் என்ன செய்தார்கள்?" என்று கேட்டார் முத்து.

"என்ன செய்ய முடியும்? வன்முறையால், மக்களின் இடுப்பை ஒடிக்கும்பொழுது, மக்கள் எதிர்ப்பின் பலம் குறையத்தான் செய்யும். வன்முறையால் நாம் ஒன்றும் சாதிக்க முடியாது என்று சொன்னதற்குக் காரணம் அது தான். ஒரு மடங்கிற்கு, பல மடங்கு அரசாங்கம் அடக்கு முறையில் இறங்கும். அதற்கு ஒரு நியாயமும் இருக்கிறது. ஆனால் அஹிம்சைப் போராட்டத்தில் அரசாங்கம் அடக்கு முறையை ஆளும் பொழுது உலக மக்களின் ஏளனத்திற்கு அது ஆளாக வேண்டியிருக்கிறது. நியாயம் அதன்பக்கம் இல்லாமல் போய்விடுகிறது" என்றார் தி. ஜ.

"சரி, சுந்தரம். வேறு என்ன நடந்தது?" என்றார் முத்து.

"தி. ஜ., உங்களுக்குப் பிச்சப்பா சாமினாதனைத் தெரியுமல்லவா?" என்றார் சுந்தரம்.

"எனக்கு மாத்திரம் என்ன? இங்கு இருக்கும் எல்லோருக்கும் தெரியும். பெரிய தீவிரவாதியாயிற்றே. அவர் செய்யாத தியாகங்கள் இல்லை; படாத கஷ்டங்கள் இல்லை. அவருக்கு என்ன நேர்ந்தது?" என்றார் தி. ஜ.

"பிச்சப்பாமேல் போலீசுக்குக் காட்டம். இவருக்கும் சரியாகப் பாடம் கற்பிக்க வேண்டும் என்பது அவர்கள் விருப்பம். போலீஸ் ஸ்டேஷனையும் கோர்ட்டையும் எரித்தல் முதலிய வன்முறைச் செயல்கள், ஒரு

சதியாகவும் சூழ்ச்சியாகவும், திட்டமிட்டுச் செய்யப்பட்டிருக்கின்றன, என்றுகேஸ் தயாரித்தனர். பிச்சப்பாவும் அந்தக் கும்பலில் ஒருவர் என்று குற்றம் சாட்டி வழக்கும் நடந்தது. தண்டனையும் வாங்கிக் கொடுத்துவிட்டனர். பிச்சப்பாவிற்கு ஆறு வருஷம் கடுங்காவல்; மற்றும் பன்னிரண்டு பேருக்குக் கடும் தண்டனை" என்றார் சுந்தரம்.

"ஆம். நான் கூட அதைக் கொட்டை எழுத்தில் தலைப்புக் கொடுத்துப் பத்திரிகையில் போட்டேன்" என்றார் கிருஷ்ணமணி.

"எல்லாம் பொய்க் கேசுதானே?" என்றார் முத்து.

"ஆமாம். ஜோடனைக் கேசுதான்" என்றார் சுந்தரம்.

"இதில் நியாயம், அநியாயம் என்பதில் அரசாங்கத்திற்கு அக்கறையில்லை. மக்களுக்கு அரசிடம் பயம் உண்டாக வேண்டும். நாம் செய்யும் குற்றத்திற்குப் பல மடங்குக்குமேல் நாம் தண்டனை அடைய வேண்டிவரும் என்ற அச்சம் உண்டாக வேண்டும். அதனால்தான், நம் அரசுக்குப் 'போலீஸ் அரசு' என்றுகூடப் பெயர் இருக்கிறது" என்றார் தி. ஐ.

"ஆனால், தி. ஐ., நான் சொல்ல வந்தது, பிச்சப்பாவைப் பற்றி அல்ல. அவர் தேசத்திற்காகக் கஷ்டம் அனுபவிப்பது என்பது இது முதல் தடவையோ, கடைசித் தடவையோ அல்ல. நான் முக்கியமாகச் சொல்ல வந்தது, அவருடைய தகப்பனாரைப் பற்றி" என்றார் சுந்தரம்.

"தகப்பனார் சிதம்பரம் செட்டியார். அவர் பிச்சப்பாவிற்கு நேர் விரோதமான சுபாவம் உடையவராயிற்றே. சிறந்த சிவபக்தர். தமிழ் நன்றாகப் படித்தவர். உடல் முழுவதும் திருநீறும், கழுத்தில் உருட்திராட்சமும், காதில் பூசை செய்த பூவுமாய்ச், சிவப்பழமாகத் தோற்ற

மளிப்பார். பார்த்தாலே, நமக்கு அவரிடம் ஒரு மரியாதை தோன்றும். ஆனால் பிச்சப்பாவின் கொள்கையும், அரசியலும் அவருக்கு அறவே பிடிப்பதில்லை. அவர், ஆளும் வர்க்கத்தின் கட்சி. கலெக்டர் எந்த பண்டுக்குப் பணம் கேட்டாலும் தாராளமாகக் கொடுப்பார். அரசாங்கம் அவருக்கு ராவ்பகதூர் பட்டம் கொடுக்கப் போகிறது என்று வதந்தி. அதற்கும், பிச்சப்பா கேசுக்கும் என்ன சம்பந்தம்?'' என்றேன் நான்.

''பிச்சப்பாவின் சதியால்தான் தீ வைக்கப்பட்டதற்கு ஆதாரம் தேடும் வகையில் வீட்டைச் சோதனை போட்டார்கள். சோதனையாவது? அவர்கள் எழுதிக் கொண்டு வருவதுதானே! 'சோதனை' என்கிற சாக்கில் வீட்டையும் சொத்தையும் நாசம் செய்ய வேண்டும் என்பதுதான் அவர்களின் நோக்கம். வீட்டில் நுழைந்து மலேயாவிலிருந்து வந்த பீங்கான் முதலிய அரிய சாமான்களை உடைத்தார்கள். ரேடியோ பெட்டியைப் பிளந்தார்கள். கிராமபோன் இசைத்தட்டுகளை நொறுக்கினார்கள். புடைவை, துணிமணிகளை எல்லாம் கிழித்தார்கள். இதெல்லாம் சதிக்கு ஆதாரம் தேடும் பாவனையில்! ஒரு கொள்ளைக்காரக் கூட்டங்கூட இப்படி நாசப் படுத்தாது. அவ்வளவு அநாகரிகமாக நடந்து கொண்டார்கள்.

''சிதம்பரம் செட்டியார் இதையெல்லாம் வாயைத் திறவாமல் பார்த்துக்கொண்டேயிருந்தார். அவருக்குப் பிள்ளையின்மேல் கோபம். இந்த நிலைக்கு வரும்படியாக அவன் நடந்து கொண்டிருக்கிறானே என்பது தான் அவரது வருத்தம். அரசாங்கம், அதன் காரியத்தைச் செய்கிறது. அதில் நாம் தலையிடுவதற்கு என்ன இருக்கிறது என்று பேசாமலே இருந்துவிட்டார். அவர் பல உயர்ந்த தமிழ் நூல்களைச் சேர்த்து வைத்திருந்தார். பரிசோதிக்க வந்த ஆட்கள், நூல்களையும் தேட

ஆரம்பித்தனர். ஒருவன் புத்தகங்களைக் கீழே தள்ளினான். புரட்டிப் பார்த்துவிட்டுக் கீழே தூக்கி எறிந்தான். மற்றொருவன் அதைக் காலால் உதைத்துப் பக்கத்திலே கால்வாயில் தள்ளினான். செட்டியார் அப்பொழுதும் வாய் திறக்கவில்லை. ஆனால், அவர் கண்ணிலே ரத்தம் தெறித்துக் கொண்டிருந்தது.

நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடும் கெடும்

— என்ற, கொடுங்கோல் மன்னவன் பற்றிய குறளை வாய் முணுமுணுத்துக் கொண்டிருந்தது. மேலும் பல புத்தகங்கள் காலால் உதைக்கப்பட்டு கால்வாயில் போய் விழுந்தன. அப்பொழுதும் செட்டியார் வாயைத் திறக்கவில்லை.

"அலமாரியில் உள்ள மற்றொரு புத்தகத்தை எடுத்தான் கான்ஸ்டேபிள். அதைப் பார்த்தவுடன் செட்டியாரின் நெஞ்சம் பதறிற்று. உடல் வெடவெடத்தது. மேனி பூராவும் வியர்த்துக் கொட்டியது. மாமூலாகப் பிரித்துவிட்டுக் கீழே போட்டான் பரிசோதகன். மற்றவன் அதை காலால் உதைக்கப் போனான். செட்டியார் பாய்ந்து, அந்தப் புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டு கண்ணில் ஒத்திக் கொண்டார்.

சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத்
தொழும்பையு மீசற்கென்று
விரிப்பிப்ப னென்னை விடுதிகண்
டாய்விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் றோலுடைப் பிச்சன்நஞ்
சூண்பிச்ச நூர்ச்சுடுகாட்
டெரிப்பிச்ச னென்னையுமாளுடைப்
பிச்சனென்றே சுவனே !

— என்று மெதுவாகப் பாடிக்கொண்டே 'ஈசனே, பிச்சன் உலகம் பிச்சாக இருப்பதில் என்ன ஆச்சரியம்' என்று

சொல்லிக்கொண்டே, உதைக்கும் கான்ஸ்டேபிளிடம் வந்து சொன்னார்:

"'ஐயா, இது மணிவாசகரின் திருவாசகம். இவர் கடவுளுக்கே அடி வாங்கிக் கொடுத்தவர். இவரை உதைக்க வேண்டாம். அதற்குப் பதிலாக என்னை வேண்டுமானால் உதையுங்கள். உங்கள் கால் பெரிய பெரிய மகான்களையெல்லாம் உதைத்து மிகுந்த மகத்துவம் அடைந்திருக்கிறது. எனக்கும் அந்தப் பெருமையைக் கொடுங்கள்' என்று சொன்னாராம். கான்ஸ்டேபிள்கள் அப்படியே அசந்துபோய் நின்றார்களாம். சிறிது நேரத்திற்குள் அவர்கள் சோதனையை முடித்துக் கொண்டு போய்விட்டனர்" என்றார் சுந்தரம்.

"பார்த்தாயா, அஹிம்சையின் வெற்றியை!" என்றார் தி. ஜ.

"கதை இத்துடன் முடிந்துவிடவில்லை தி. ஜ." என்றார் சுந்தரம்.

"இன்னும் என்ன?" என்றேன்.

"எவ்வளவுக்கெவ்வளவு சிதம்பரம் செட்டியார், பிள்ளையான பிச்சப்பாவையும் அவருடைய கொள்கைகளையும் வெறுத்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு அவரே மாறிவிட்டார். மறுநாள் முதற்கொண்டு, கதர் வேஷ்டியும், கதர்த் துண்டும் போட ஆரம்பித்தார். எவ்வளவுக்கெவ்வளவு அரசாங்கத்திற்கு மதிப்புக் கொடுத்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு இப்பொழுது அரசின்மேல் வெறுப்பு" என்று முடித்தார் சுந்தரம்.

"அப்பொழுது, போலீஸ்காரன் ராஜபக்தரைத் தேச பக்தராக மாற்றிவிட்டான்" என்றார் கிருஷ்ணமணி உற்சாகத்துடன்.

"அதைத்தான் நானும் சொல்ல வந்தேன். அடக்கு முறை பலமாகப்போக, அதுவே ஜனங்கள் அரசின்மேல்

பகை கொள்ளச் செய்கிறது. அப்படிப் பார்க்கையில், அதுவும் ஒரு விதத்தில் நம் போராட்டத்திற்கு அனுகூல மாகவே இருக்கிறது" என்றார் சுந்தரம்.

"நல்லது கெட்டது என்பது ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப் போல். முழுமையும் நல்லது என்று ஒன்றும் இல்லை; முழுமையும் கெடுதல் என்பதும் ஒன்றும் இல்லை" என்றேன் நான்.

"உண்மைதான்" என்றார் தி. ஜ.

# 27

யுத்தம் என்னவோ தீவிரமாகிக்கொண்டுதான் வந்தது. ஜப்பானியர் இந்தியாவை நெருங்கியாகிவிட்டது. தவிர, சுபாஷ் சந்திரபோஸ், வெள்ளையர்கள் நிர்க்கதியாக விட்டுவிட்டுப்போன இந்தியப் படையினரை ஒன்று சேர்த்து, இந்திய தேசியப்படை என்பதை உருவாக்கி, 'டெல்லிக்குப் போங்கள்' என்ற மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு, இந்தியாவை நோக்கி அனுப்பினார். அந்தப் படையும் தீவிர ஆர்வத்துடன் அஸ்ஸாம் எல்லையை நோக்கி வந்து கொண்டிருக்கிறது.

சென்னை நகரம் பொலிவிழந்து நிற்கிறது. எங்கும் இருட்டடிப்பு. வீட்டில் உள்ள விளக்குகளுக்குக்கூட முக்காடு போடவேண்டி வந்துவிட்டது. அஜாக்கிரதையினால் ஜன்னல்மூலம் சிறிது வெளிச்சம் வெளியே தெரிந்துவிட்டால் போதும். "ஸார், ஜன்னலை மூடுங்கள். ஏன் விளக்குக்கு மூடி போடவில்லை?" என்று ஏ. ஆர். பி.க்காரர் உஷார்ப்படுத்துகிறார். அரசாங்கம் மணியை ஒரு மணி முன்னேக்கச் செய்துவிட்டது. பகல் வெளிச்சத்தை மிச்சப்படுத்துகிறார்களாம்! ஆனால் சூரியனா அரசாங்கத்திற்குப் பணிகிறவன்? படுக்கையை விட்டு எழுந்திருக்கும்பொழுது, ஆறு என்பதற்குப்பதிலாக மணி ஏழாகிவிடுகிறது. அவசர அவசரமாகக் குளித்துவிட்டு, 'அவுரி அவுரி' என்று இரண்டு பருக்கையை வாயில் போட்டுக்கொண்டு பஸ் இருக்குமிடத்திற்குப் போனால்,

அங்கு ஒரு பெரிய 'கியூ'. ஏதோ முண்டி அடித்துக் கொண்டு பஸ்ஸில் ஏறிவிட்டால், ஹாய்யாக உட்கார முடியுமா? வௌவாலைப்போல் தோல் வளையத்தைப் பிடித்துக்கொண்டு தொங்கவேண்டும். ஒரு கை தோல் வளையத்தைப் பிடிக்கும்; மற்ெறாரு கை டிபன் பாக்சை யோ பைல்கட்டையோ பையையோ பிடித்துக்கொண் டிருக்கும். கண்டக்டருக்கு காசு எடுத்துக் கொடுக்க, கை யாரிடம் இரவல் வாங்குகிறது? பஸ்ஸோ கரி வண்டி. அடிக்கடி கரியைத் தணலாக்குவதற்குக் 'கிர்கிர்' என்று சுற்றியாக வேண்டும். அது தணலையும் கரியையும் கக்கும்.

காப்பி ஓட்டலுக்குப்போய்ச் சாப்பிடலாம் என்று ஓட்டலுக்குள் சென்றால், அங்கும் ஒரே கூட்டம். ஒரே நெரிசல். யார் காப்பி சாப்பிடும் கட்டத்தில் இருக்கிறார் என்று பார்த்து, அவருடைய நாற்காலியில் கையை வைத்துக்கொண்டு, நம் மூச்சு அவர் தலையில்பட, அவர் காப்பி சாப்பிடுவதைப் பார்த்துக் கொண்டே, வேறு ஒருவர் வந்துவிடாமல் ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். இதெல்லாம் யுத்த காலத்தில் தோன்றிய நாகரிக வளர்ச்சி. இரவு 9 மணிக்கு (அதாவது யுத்த கால மணி 8) நகரம் 'கப்சிப்' பாகப் பொலி விழந்து கிடந்தது. 'எவாகுவேஷன்' (ஊரைக் காலி செய்தல்) காலத்தில், நகரத்திலிருந்து வெளியேறிய ஜனங் கள், தங்கள் சுற்றம் நண்பர்களுடன் வந்துவிட்டார்கள் போலும். காலியாயிருந்த வீடுகள் நிரம்பிவிட்டன. ஆனால் யுத்த பீதி, இப்பொழுது சென்னை நகரை மிகவும் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது.

சுந்தரம் கேட்டார்; "என்ன கிருஷ்ணமணி. ஜப் பான் மொழி கற்றுக்கொள்ள ஆரம்பித்தாகிவிட்டதா?"

"ஜப்பான் மொழி எதற்கு? நம் சுபாஷ் சந்திர போஸ்தானே, இந்திய தேசீயப்படையுடன் வந்து தேசத்

தைப் பிடித்துக்கொள்ளப் போகிறார்" என்றார் கிருஷ்ண மணி.

"ஜப்பானியனின் நீர்மூழ்கிக் கப்பல் இங்கெல்லாம் ரோந்து சுற்றுகிறதாமே?"

"அதிலென்ன சந்தேகம்? அந்தமான் தீவு, ஜப்பானியனின் கையில் இருக்கிறது. அந்தமானுக்கும் சென்னைக்கும் வெகுதூரமோ?"

"சுபாஷ் சந்திரபோஸ் வந்தாலும் சரி, இல்லை, ஜப்பான்காரனே வந்தாலும் சரி. வெள்ளையனுக்கு ஜப்பான்காரன் எவ்வளவோ மேல்."

"என்ன அப்படி ஜப்பான்காரன்மேல் உங்களுக்கு அவ்வளவு அபிமானம்?"

"முதல்லே சாமான்கள் எல்லாம் மலிவாகக் கிடைக்கும். ஐந்து ரூபாய்க்குக் காமரா, பதினைந்து ரூபாய்க்கு சைக்கிள், இருபது ரூபாய்க்கு ரேடியோ. நானும் ஒரு ரேடியோ செட் வாங்கணும்னு எவ்வளவோ முயல்கிறேன், நடக்கல்லே. ஜப்பான்காரன் வந்தால் சல்லிசாகக் கிடைக்கும்."

"சரி, அவன் வந்து உட்கார்ந்துவிட்டால், அவனை விரட்டுவது எப்படி?"

"அவனுக்கும் இதே பாடம்தான். காந்திஜிதான் என்ன செய்ய வேண்டும் என்பதை முன்பே விளக்கிச் சொல்லியிருக்கிறாரே."

"அவன் அதற்கு மசியாவிட்டால்?"

"வெள்ளையன் மாத்திரம் லேசில் விடுகிறானா? சமீபத்தில் சர்ச்சில் என்ன சொல்லியிருக்கிறான்? 'சாம்ராஜ்யத்தை மூடுவதற்காக, சக்ரவர்த்தியின் முதல்வராக நான் ஆகவில்லை' என்று சவால் விடுகிறானே. அமெரிக்கா 'இந்தியாவிற்குச் சுதந்திரம் அவசியம் கொடுத்தாக

வேண்டும்' என்று வற்புறுத்தியும், வெள்ளையன் காதி லேயே போட்டுக்கொள்ள மாட்டேன் என்கிறானே."

"கொஞ்சம் பொறுங்கள். சிங்கப்பூர் போச்சு, மலேயா போச்சு, பர்மா போச்சு, இந்தியாவும் போகப் போகிறது."

"போகும்பொழுது, மலேயாவில் செய்ததுபோல், முக்கியமான சொத்தையெல்லாம் அழித்துவிட்டுப் போனால் ?"

"இவன் யார் அழிப்பதற்கு ? யார் சொத்தை யார் அழிக்கிறது ?"

"அவன் நாடாயில்லாததால்தான், சிங்கப்பூர், மலேயா — பர்மாவில் அழிக்கும் கொள்கையை அமலாக்கி விட்டு ஓடிப்போனான். தனக்கு உபயோகமில்லாதது, ஜப்பானுக்கும் கிடைத்துவிடக்கூடாது; அதுதான் முக் கியம். அதுபோல், லண்டனை அழித்துவிட்டுப் போகிறது தானே. அது அவன் ஊராச்சே. இது எல்லாம் அவ னுக்குச் சும்மா கிடைத்த ஊர். அவ்வளவுதான் வித்தி யாசம்."

"சரி, என்ன தி. ஜ., திரும்பத்திரும்ப யுத்தத்தை யும், ஜப்பானையும் சர்ச்சிலையும் பற்றியே பேசுவானேன் ? ஏதாவது சினிமாவுக்குப் போகலாமா ? மிஸஸ் முனிவர் என்ற படம் ஒன்று ஓடுகிறதே ; அது நன்றாயிருக்கிற தாம். போகலாமா ?"

"படங்கள் மாத்திரம் என்ன ? எல்லாம் யுத்தப் படங்கள். காக்கி ஷர்ட் சோல்ஜர்கள், டாங்குகள், ஆகாயக்குண்டு பாய்ச்சல் — இதுதான் எல்லாப் படங் களிலும்."

"இல்லை தி. ஜ. இதுவும் யுத்தப் படமாயிருந்தாலும் இது நன்றாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. யுத்தத்திற்கு

சம்பந்தமில்லாத ஜனங்களை யுத்தம் எப்படி பாதிக்கிறது என்ற கருத்து கையாளப்பட்டிருக்கிறது. யுத்தத்தில் சண்டை போடுகிறவர்கள்தான் சாவது சகஜம். ஆனால், இதில் ஒரு கிழவர், ஒரு குழந்தை இப்படிச் சண்டையில் சேராதவர்கள் இறக்கிறார்கள். குடும்பம் எப்படி யுத்தத்தினால் பாதிக்கப்படுகிறது என்பதைக் காட்டும் படம். ரொம்ப நன்றாயிருக்கிறதாம்."

"சரி, போகலாமே."

உடனே, நான், தி. ஜ., கிருஷ்ணமணி, சுந்தரம், புத்தொளிப் பதிப்பகத்தின் உரிமையாளர், எல்லோரும் சினிமாக் கொட்டகைக்குப் புறப்பட்டோம்.

வரும் வழியில் சிப்பாய்கள் குறுக்கும் நெடுக்குமாகத் தங்கள் வாடகைப் பத்தினிகளுடன் போய்க் கொண்டிருந்தனர். சிப்பாய்கள் எத்தனை ரகம்? இந்திய சிப்பாய்கள், ஆங்கிலேய சிப்பாய்கள், அமெரிக்க சிப்பாய்கள், நீக்ரோ சிப்பாய்கள்! ஆங்கிலேய சிப்பாய்க்குத் திமிர் இருக்கும், மற்றவர்களிடம் திமிர் இருக்காது. நன்றாகப் பழகுவார்கள். ஒதுங்கிக்கொண்டு போகாமல் எல்லாவற்றிலும் கலந்து கொள்வார்கள். நம் ஓட்டலுக்குள் வந்து, 'போண்டா சாம்பார்' சாப்பிடுவார்கள். ரிக்ஷாவில் ஏறிக்கொண்டு அதன் சுகத்தை அனுபவிப்பார்கள். இன்னும் சிலர் அதற்கு மேலும் போவார்கள். ரிக்ஷாக்காரனை வண்டியில் உட்கார வைத்து இழுத்துவிட்டு, அந்த அனுபவத்தைக் கொடுத்த ரிக்ஷாக்காரனுக்குக் கூலியும் கொடுத்துவிட்டுப் போவார்கள். அமெரிக்கரின் சிநேக மனப்பான்மை, மக்களின் மனத்தைக் கவர்ந்தது. ஆங்கிலேயரின் 'புல்டாக்' திமிருக்கும், இவர்களின் இயற்கை மனப்பான்மைக்கும் உள்ள தாரதம்மியத்தை ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியாது.

சினிமா கொட்டகையில், முக்கால்வாசி இந்த சிப்பாய்கள் கூட்டம்தான். டிக்கெட் வாங்கிக்கொண்டு

உள்ளே நுழைந்து, படத்தைப் பார்த்தோம். படம் முடிந்தது. முடிந்தவுடன் 'கடவுள் அரசனைக் காப்பாற்றட்டும்' (God save the king) என்ற ஆங்கிலேயரின் தேசியகீதத்தை வைப்பது வழக்கம். அப்பொழுது திரையில் யூனியன் ஜாக் கொடி பறக்கும். இந்தப் பாட்டுக்கு சிப்பாய்கள் விறைத்து நின்றுகொண்டு தங்கள் அஞ்சலியைச் செலுத்துவார்கள். நம்மவர்களுக்கு அப்படி நின்று அஞ்சலி செய்வது வெறுப்பாயிருக்கும். ஓரத்தில் உள்ளவர்கள் இதை அவமதித்துக்கொண்டே போவார்கள். ஆனால் நடுவில் சிப்பாய்கள் நின்றுகொண்டு இருந்தால், நமக்கு அவர்களைத் தாண்டிப்போவதற்கு இடமிராது. இந்த சிப்பாயை வைது கொண்டே நிற்க வேண்டியதைத் தவிர, வேறு வழியில்லை. இதனால்தான் இந்தப் பாட்டிற்கு, நண்பர் ஒருவர் 'வழி மறைச்சான்' என்று பெயர் வைத்தார். அன்றும் நாங்கள் வருவதை மறைத்துக் கொண்டு மூன்று ஆங்கிலேய சிப்பாய்கள் விறைத்துக்கொண்டு, இந்த 'வழிமறைச்சான்' பாட்டிற்கு அஞ்சலி செலுத்திக்கொண்டு நின்றனர். நாங்கள் வேறு வழியில்லாமல் மனத்திற்குள் சபித்துக்கொண்டே நின்றோம். எங்களுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த ஓர் அமெரிக்க சிப்பாய், வாடகை மனைவியுடன் எங்களைத் தாண்டி விட்டான். அவனுக்கு அவசரம். இந்த ஆங்கிலேய சிப்பாய்களையும் கடக்க முயன்றான். அவர்கள் படத்தில் காட்டப்படும் 'யூனியன் ஜாக்' கொடியைக்காட்டி ஜாடையாக இவனையும் மரியாதை காட்டச்சொன்னார்கள். அவசரமாகப் போகும் அமெரிக்க சிப்பாய் காதலியின் கையை ஒரு கையில் மாட்டிக்கொண்டு, "Not God Johnny — But American money, men and gun" (உங்கள் அரசனைக் காப்பாற்றுவது கடவுள் இல்லை ஜானி. அமெரிக்கரின் பணம், படை, பீரங்கி) என்று சொல்லிக் கொண்டே அவர்களைத் தள்ளிவிட்டு நடந்து சென்றான்

நாங்கள் எங்களையும் மறந்து கை தட்டினோம். ஆங்கிலேய சிப்பாய்கள் எங்களை வெறித்துப் பார்த்தனர். நாங்களும் அலட்சியமாக அவர்களை வெறித்துப் பார்த்தோம். சுதந்திரம் கிடைத்து விட்டதுபோல நாங்கள் சந்தோஷப் பட்டோம். எங்களுக்குள்ளே பொங்கிக் கொண்டிருந்த கசப்பை அந்த அமெரிக்க சிப்பாய் வெளியே காட்டியதில், நாங்களே அந்த வார்த்தைகளை சொல்லிவிட்டு அந்த சிப்பாய்களை அவமதித்தது போல் அகமகிழ்ந்தோம். படம் அற்புதமாயிருந்தது. ஆனால், படத்தைப் பார்த்த அனுபவம் எங்கோ மறைந்து விட்டது. எதையோ சாதிக்க முடியாத காரியத்தைச் செய்துவிட்டது போல் பெருமிதத்துடன் வீடு திரும்பினோம்.

அன்றிரவு நல்ல மழை. ஆகாயமே பொத்துக்கொண்டதுபோல் கொட்டிக்கொண்டிருந்தது. தெருவில் எல்லாம் முழங்கால் மட்டும் ஜலம் ஓட ஆரம்பித்தது. சமுத்திரத்தில் புயலின் சின்னம் நன்றாக வலுவடைந்தது. மேலும் இரண்டு மூன்று நாளைக்கு மழை நிற்காமல் பெய்யும் என்பதற்கு அறிகுறிகள் இருந்தன. சிறிது நேரம் படித்துவிட்டுப் படுத்துக்கொண்டேன். நன்றாகக்கண் அயர்ந்துவிட்டேன். டெலிபோன் மணி அடித்தது. "என்ன?" என்று கேட்டேன். இரவுச் செய்தி ஆசிரியர் கோவிந்தசாமி, "சார் ஹார்பர்மேல் ஜப்பான் குண்டு விழுந்திருக்கிறது. ஒன்றும் சேதமில்லை" என்று சொன்னார். நான் திடுக்கிட்டேன். "சரி, ரிப்போர்ட்டர் கணபதியை நாளை மேற்கொண்டு விவரங்களைச் சேகரிக்கச் சொல்லுங்கள்" என்று சொல்லிவிட்டுப் படுத்துக்கொண்டேன். ஆனால், தூக்கம் வரவில்லை. சென்னை நகரில் பல வருஷங்களுக்கு முன்பு எம்டன் என்ற ஜெர்மன் கப்பல் குண்டுபோட்டது என்று எழுதி வைத்திருக்கிறது. 'எம்டன்டா' என்றால் அசகாய சூரன் என்று மக்கள் மனத்திலே எழுதி வைத்திருக்கிறது. இப்பொழுது ஜப்பான் குண்டு. எங்கோ

பெல்ஜியத்திலும், பிரான்சிலும், அல்ஜீரியாவிலும், ருஷ்யாவிலும், மலேயாவிலும், பர்மாவிலும் நடந்துகொண்டிருந்த யுத்தம், நம் நகரின் வாசல் கதவைத் தட்ட ஆரம்பித்து விட்டது. 'சென்னை நகர் யுத்த களமாகி விடப் போகிறதா? லண்டனைப்போல் சென்னையும் பல குண்டு வீச்சுக்கு இலக்காகி, நாசமாகப் போகிறதா? என்ன அநியாயம்? எவனோ ஒரு திமிர்பிடித்த பைத்தியக்காரன் எங்கேயோ ஒரு யுத்தத்தை ஆரம்பித்துவிட்டான். அன்போடும், அமைதியோடும் வாழும் நம் மக்கள் அதற்குப் பலியாவதா? குற்றமற்ற நம் மக்கள் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் அனுபவிப்பதா? அன்புவழி காட்டிய அண்ணல் காந்தியின் நெறியைக் கடைப்பிடிக்கும் நம் மக்களுக்கு இன்னலா?' என்று கவலைப்பட்டுக் கொண்டே இருந்தேன். அங்கும், இங்கும் உலாத்திக் கொண்டிருந்தேன். சப்தம் கேட்டுவிட்டு எழுந்த சரோஜா, "என்ன, தூக்கம் வரவில்லையா? ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"சரோஜா, இதுவரையில் யுத்தம் எங்கோ நடந்து கொண்டிருந்தது; இப்பொழுது நம்மைத் தேடிக் கொண்டு நம் ஊருக்கே வந்துவிட்டது" என்றேன்.

"என்ன நடந்தது?" என்றாள் சரோஜா.

"ஜப்பான் குண்டு ஹார்பரில் விழுந்திருக்கிறது."

"அட, அநியாயமே! நாளை மேலும் எங்கெல்லாம் விழப்போகிறதோ?"

"உன்னை மதுரை, திருச்சி, எங்காவது கொண்டு போய்ச் சேர்த்துவிடச் சொல்லட்டுமா?"

"ரொம்ப அழகாயிருக்கிறது, நீங்கள் பேசுவது! நீங்கள் இல்லாமல் நான் மாத்திரம் போகவேண்டுமா? உங்களோடேயே இங்கேதான் இருப்பேன். உங்களுக்கு ஏற்படுவது எனக்கு."

“நீ காந்தி பக்தையாச்சே. தியாகம், தொண்டு, தன்னலமின்மை இவைதான் பெரிசு உனக்கு.”

“நீங்களும் நானும் மாத்திரம் காந்திஜியைப் பின்பற்றினால் போதுமா? உலகத்தில் மற்றவர்களும் பின்பற்ற வேண்டாமா? அப்படி எல்லோரும் பின்பற்றுவது என்று வந்து விட்டால், பிறகு யுத்தம் ஏன் நடக்கிறது? கலகம் ஏன் நடக்கிறது? கொலை களவு ஏன் நடக்கிறது?”

“கவலைப்படாதே. இந்த மாதிரி ராமராஜ்யம் ஒரு நாள் வந்துதான் தீரும்.”

“அப்படி வரும் என்பதை நம்புகிறீர்களா?”

“ஆம், பூரணமாக நம்புகிறேன். அன்புதான் பகைமையை வெல்லும்; அஹிம்சைதான் யுத்தத்தை வெல்லும்.”

“அப்படி நடக்குமா?”

“நடந்தே தீரும். சில நாட்களுக்கு முன்பு ஒரு யுத்த தளபதி என்ன சொன்னார் தெரியுமா? ‘நாம் அணுவின் மகத்துவத்தைப் புரிந்து கொண்டு விட்டோம். ஏசு சொன்ன போதனையை மறந்து விட்டோம். உலகு, ஞானமில்லாத அறிவைப் பெருக்கிக் கொண்டிருக்கிறது. மனச்சாட்சி இல்லாமல் மிருக பலத்தைப் பெருக்கிக் கொண்டிருக்கிறது. உலகம், அணு அரக்கர்களையும், தருமத்தில் குள்ளர்களையும் கொண்டு நிற்கிறது. நமக்கு யுத்தத்தைப் பற்றிதான் தெரியும்; சமாதானத்தைப்பற்றி அறியோம். கொல்லத்தான்தெரியும்; வாழ அறியோம்’ என்றிருக்கிறார்.”

“ஆகா, ரொம்ப அழகாயிருக்கிறதே! இதை ஒரு தளபதியா சொல்லியிருக்கிறார்.”

“ஆம், அவரேதான். யுத்தத்தையும், சமாதானத்தையும் பற்றிப் பேச வேறு யாரால் முடியும்?”

"சண்டை அதர்மம், அநியாயம், அநாகரிகம் என்பது எல்லோருக்கும் தெரிகிறது. ஆனால், அது நடக்காமல் தடுக்க ஒருவராலும் முடியவில்லையே."

"பொறுத்துக்கொள். மண்ணிலே வானத்தை நிறுவவிருக்கும் ராமராஜ்யத்தை நம் மகாத்மா நிலை நிறுத்தட்டும். அப்பொழுது யுத்தம் ஒழிந்துவிடும்."

"சரி, தூங்குங்கள். நேரமாகிறது. நாளைக்கு ஆபீஸ் இல்லையா?"

"நன்றாக உண்டு. ஏன், குண்டுமாரி பெய்யும் என்று நினைக்கிறாயோ?"

"யார் கண்டார்கள்?"

"கவலைப்படாதே நன்றாகத் தூங்கு" என்று, நானும் தூங்க ஆரம்பித்தேன்.

# 28

இந்தியா சுதந்திரம் பெற்றது; அயல்நாட்டு ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு விட்டது. அடிமைத்தனம் நீங்கி, வீறு கொண்டிருந்தது. 1947-ஆம் வருஷம் ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி, இந்திய சரித்திரத்தில் ஒரு புது சகாப்தத்தை உண்டாக்கிய பொன்னுன நாள்.

அன்றுமாலை கடற்கரை மணலிலே நண்பர்கள் கூடினேம். "அப்பாடா, என்ன சுகமான காற்று. இப்படி ஒருநாள்கூட இந்த சுகத்தை அனுபவித்ததில்லை" என்ருர் சுந்தரம்.

"ஆமாம். இது சுதந்திரக் காற்று. வெள்ளைக்காரனின் மூச்சு இல்லை. அதுதான், எப்பொழுதும் இருப்பதைவிட, இன்று மிகவும் சுகமாகயிருக்கிறது" என்ருர் கிருஷ்ணமணி.

"என்ன தி. ஜ., ஒரு வழியாக சுதந்திரம் பெற்றுவிட்டோம். நீங்கள் உங்கள் வாழ்நாளில் சுதந்திரத்தை எதிர்பார்த்தீர்களா?" என்றேன் நான்.

"நிச்சயமாக எதிர்பார்க்கவே இல்லை. சர்ச்சில் சொன்னதை ஆதாரமாக வைத்துக் கொண்டிருந்தால், இன்னும் இரண்டு மூன்று தலைமுறைக்குக்கூடக் கிடைத்திருக்காது" என்ருர் தி. ஜ.

"அப்படியிருக்கையில் திடீரென்று சுதந்திரம் எப்படி வந்தது? நம் தியாகத்தின் பலமா? பிரிட்டனின்

பலவீனமா? பிரிட்டிஷ் அரசியல் கட்சி மாற்றத்தினுலா? உலக அபிப்பிராயத்தின் பலமா? காலத்தின் லீலை யாட்டா?'' என்று கேட்டார் சுந்தரம்.

''எல்லாம்தான். உலகத்தில் ஜனநாயகத்தை ஸ்தாபிப்பதற்காகப் போர் செய்வதாக பிரிட்டன் பறைசாற்றிக்கொண்டு, இந்தியாவின் சுதந்திரத்தை மறுப்பது அமெரிக்கா போன்ற முக்கிய நாடுகளுக்குப் பிடிக்கவில்லை. மேலைநாட்டு அனுதாபம் பிரிட்டனை வற்புறுத்தி வந்திருக்கிறது. அது ஒரு காரணம்'' என்றேன்.

''அதுதான் முக்கிய காரணமா?''

''இந்திய மக்களின் எழுச்சி. நாட்டு மக்கள் பூராவும் விழிப்பு அடைந்து, விடுதலையைக் கோரிப் பொங்கிஎழுந்து நின்றனர். இந்த சுதந்திர வேட்கை, ராணுவத்திலும் புகுந்துகொண்டது. இதனால், பிரிட்டிஷ் அரசாங்கம் இனி இந்தியாவை ஆளமுடியாது என்பதை நன்கு அறிந்து கொண்டது. அது ஒரு முக்கிய காரணம்'' என்றேன் நான்.

''வேறு காரணங்களும் இருக்கின்றனவா?'' என்ருர் சுந்தரம்.

''ஆம், யுத்தத்திற்குப் பிறகு, இங்கிலாந்து முன் போல் வல்லரசாக இருக்க முடியாது என்பதை உணர்ந்தது. ஆகவே, வல்லரசு அல்லாத தனக்கு இந்தியா ஒரு வேண்டாத சுமையாகத்தான் இருக்கும் என்பதையும் புரிந்து கொண்டது. அடிமை இந்தியாவைவிட சுதந்திர இந்தியாவினுல் தனக்கு லாபம் இருக்கும் என்பதையும் கணக்கிட்டு விட்டது. இதுவும் ஒரு முக்கிய காரணம்'' என்றேன்.

''காரணம் எதுவாயிருந்தால் என்ன, சுந்தரம்? நாம் இப்பொழுது அடிமைகள் அல்ல. நம் பாரதத் தாய்

விடுதலை பெற்ருள். நாம் ஒவ்வொருவரும் இன்று இந் நாட்டு மன்னர் " என்ருர் கிருஷ்ணமணி.

"அதற்கு என்ன விலை கொடுத்திருக்கிருேம்?" என்று கேட்டார் தி. ஜ.

"எத்தனையோ நஷ்டங்கள்! எத்தனையோ தியாகங்கள்! எத்தனையோ கஷ்டங்கள்!" என்ருர் கிருஷ்ணமணி.

"தி. ஜ. அதைச் சொல்லவில்லை, கிருஷ்ணமணி தேசத்தை துண்டு போட்டதைச் சொல்கிருர்" என்றேன்.

"ஆம், அது நம்முடைய துர்பாக்கியம்தான். ஆனல் அதைத் தவிர்த்திருக்க முடியும் என்று நினைக்கிறீர்களா?" என்ருர் கிருஷ்ணமணி.

"ஸாலமன் கதை உங்களுக்குத் தெரிந்ததுதானே? இரண்டு தாய்கள் ஒரு குழந்தையை உரிமை கொண்டாடினர். புத்திசாலியான ஸாலமன் 'குழந்தையைத் துண்டு போட்டு இரண்டு பேருக்கும் கொடுத்து விடுகிறேன்' என்ருர். ஒருத்தி அதற்குச் சம்மதித்தாள். மற்ருெருத்தி 'ஐயோ வேண்டாம்; குழந்தையை அவளிடமே கொடுத்துவிடுங்கள். அது எங்காவது உயிருடனிருந்தால் போதும்' என்று வேண்டினள். ஸாலமன் உண்மையை அறிந்துகொண்டு, குழந்தையை அவளிடமே கொடுத்தார். ஆனல், இன்றைய ஸாலமனுக்கு துண்டு போடச் சொன்னவள் ஆசைநாயகி. இந்த ஸாலமன், குழந்தை யாருடையது என்று தீர விசாரித்து நியாயம் வழங்கும் நிலையிலும் இல்லை. குழந்தை தன் கையை விட்டுப் போனல் சரி; அது குழந்தையாயிருந்தாலும் சரி, அல்லது அதன் சவமானலும் சரி என்ற நிலையில் இருந்தார். இரண்டு பேர் துண்டுபோடத் தீர்மானித்திருக்கையில் மற்றவள் என்ன செய்ய முடியும்?" என்ருர் தி. ஜ.

"உண்மைத் தாய் சொன்னதுபோல், 'குழந்தையைத் துண்டு போடாதே; அவளிடமே கொடுத்துவிடு' என்று சொல்ல ஒருத்திக்கு மனம் வரவில்லையா ?"

"காந்திஜிதான் சொன்னார்: 'துண்டுபோட வேண்டாம். குழந்தை உன்னிடமே இருக்கட்டும். நாங்கள் இரண்டு பேரும் சமாதானமடைந்து, ஒற்றுமை அடைந்த பின், நாங்கள் இருவருமேசேர்ந்து வாங்கிக்கொள்கிறோம்' என்று சொன்னார். அவருக்கு நாட்டின் விடுதலைகூட அவ்வளவு முக்கியமாகத் தோன்றவில்லை. அன்பும், சமாதானமும், சகோதரத்துவமும் வெற்றிபெற வேண்டும் என்பதைத்தான் அதைவிட முக்கியமாகக் கருதினார்" என்றார் தி. ஜ.

"உண்மைதான். சமீப காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அவரை மிகவும் வேதனைப்படச் செய்திருக்கின்றன. இத்தனை காலமும் நமக்கு அவர் கொடுத்திருந்த பயிற்சி எல்லாம் பறந்தோடிப்போயிற்று. சமீபத்தில் நடந்த கலவரங்களைப்பற்றி அவர் சொன்னார்: 'நான் அடக்க முடியாத நம்பிக்கை கொண்டவன். வங்காளம், பீகார், பஞ்சாப் முதலிய இடங்களில் நிகழ்ந்த ரத்த வெள்ளத்தைப் பார்க்கும்பொழுது, இம்மாதிரி காட்டுமிராண்டிகள் ஆவதற்குத்தானா, இத்தனை வருஷ காலம் கஷ்டப்பட்டோம் என்று நினைத்தேன். அந்நிய ஆதிக்கத்தை உதறி எறியும்பொழுது ஏற்படும் தும்பு தூசிகள் இவை என்று நான் சமாதானப்படுத்திக் கொண்டேன். கங்கை வெள்ளப் பெருக்கெடுக்கையில் தண்ணீர் கலங்கலாயிருக்கிறது; வற்றியகாலத்தில் பரிசுத்தமாயிருக்கிறது. அந்தக் காலத்தை எதிர்பார்த்தே நான் வாழ விரும்புகிறேன். இந்திய சமூகம் காட்டுமிராண்டிகள் ஆவதை நான் விரும்பவில்லை' என்று சொன்னாரே" என்றேன் நான்.

"உண்மையில் மக்கள், அந்த நிலைக்குத்தான் வந்திருக்கிறார்கள். மக்கள், பொறுமை இழந்துவிட்டார்கள். சுதந்திரம் வரவிருக்கும் இந்தச் சமயத்தை விட்டால் வேறு சமயம் வாய்க்குமோ, வாய்க்காதோ என்று பயம் வந்துவிட்டது. நிதான புத்தியில்லை. பரஸ்பர துவேஷம் கொந்தளித்து நிற்கிறது. மகாத்மா போதித்து வந்த அன்பையும், அஹிம்சையையும் புறக்கணித்து நிற்கிறார்கள்" என்றார் தி. ஜ.

"மக்கள் மனத்தில் அன்பு இல்லை. துவேஷமும் கசப்பும்தான் நிரம்பியிருக்கின்றன என்பதற்கு, சமீபத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சி போதுமே. எத்தனையோ வருஷங்கள் மகாத்மாஜி பிரார்த்தனைக் கூட்டங்களில் மற்ற கீதங்களைப் போல, கொரானை ஓதுவதும் வழக்கமாக இருந்து வருகிறது. ஆனால், சிலர் அதை ஆட்சேபித்தனர். காரணம் வகுப்புத் துவேஷம். காந்திஜி, 'கடவுளை அரபு மொழியில் பிரார்த்திப்பது தவறான காரியமா? என் இலட்சியமே ஹிந்து — முஸ்லீம் ஒற்றுமைதான். ஹிந்துஸ்தான் ஹிந்துக்களுடையதாகவும், பாகிஸ்தான் முஸ்லீம்களுடையதாகவும் இருக்குமேயானால், இரு தேசங்களிலிருந்தும் விஷம்தான் பெருகி ஓடிக்கொண்டிருக்கும்' என்று சொல்லியிருக்கிறாரே" என்றேன் நான்.

"ஆனால், நம் தலைவர்கள் பொறுப்பற்றவர்களா? அவர்கள் விரும்பியோ விரும்பாமலோ துண்டுபோடுவதை ஒப்புக்கொண்டதற்குக் காரணத்தையும் காங்கிரஸ் அக்கிராசனர் ஆசாரிய கிருபலானி நன்றாக விளக்கியிருக்கிறாரே" என்றார் முத்து.

"கிருபலானி ஆணித்தரமாக தான் சொல்லியிருக்கிறார். அவர் சொன்னார்: 'ஹிந்துக்களும் முஸ்லீம்களும் கொடூர ஹிம்சை புரிவதில் ஒருவருக்கொருவர் போட்டியிடுகின்றனர். தங்கள் மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக,

குழந்தைகளும் பெண்களுமாய் 107 பேர்கள் ஒரு கிணற்றில் விழுந்திருப்பதைக் கண்டேன். ஒரு தேவாலயத்தில் இதே காரணத்திற்காக 50 பெண்கள், ஆண்களால் கொல்லப்படுவதைக் கண்டேன். இந்தப் பயங்கர சம்பவங்கள், என் தீர்மானத்தை மிகவும் பாதித்திருக்கின்றன என்பதில் ஐயமில்லை. சிலர் நாங்கள் பயத்தினால் இந்த முடிவுக்கு வந்துவிட்டோம் என்று நினைக்கிறார்கள். அதில் சிறிதளவு உண்மையும் இருக்கிறது. ஆனால் அவர்கள் நினைப்பதுபோல் அல்ல. இறந்து போனவர்களையோ, விதவையானவர்களையோ, அநாதையானவர்களையோ, நாசமாக்கப்பட்ட வீடுகளையோ குறித்து ஏற்பட்ட பயமல்ல. எங்கள் பயத்திற்குக் காரணம், இப்படியே போய்க்கொண்டிருந்தால், நாம் எல்லோரும் நரமாமிசபட்சிணிகளுக்கும் கீழே மோசமாகப் போய்விடுவோமே என்ற பயம்தான். நான் 32 வருஷம் காந்திஜியுடன் இருந்திருக்கிறேன். சம்பாரணில் அவருடன் சேர்ந்தேன். அவரிடம் எனக்குள்ள பக்தி சிறிதேனும் குறையவில்லை. நான் அவருடன் மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டிருந்தபோதுகூட, அவருடைய அரசியல் உணர்வு சரியாகவே இருப்பதைக் கண்டிருக்கிறேன். அவருடைய நேர்மையான போக்கு, முற்றும் சரி என்பதை உணர்கிறேன். பின் ஏன் அவரைப் பின்பற்றவில்லை? ஏனென்றால், இந்தப் பிரச்னையைப் பொதுஜனங்கள் அளவில் தீர்ப்பதற்கு அவர் வழிகாணவில்லை என்பதனால் தான்' என்று, தாங்கள் காந்திஜியிடமிருந்து மாறுபட்டதற்குக் காரணம் காட்டியிருக்கிறார்'' என்றார் தி. ஜ.

"ஆனால், இந்தக் காரணம் நம் திருப்திக்குத்தான். மகாத்மாவிற்கு அல்ல. மகாத்மாவிற்கு எப்பொழுதும் லட்சியத்தைவிட, அதை அடையும் மார்க்கமே முக்கியமானது. ஆகவே, இரத்தக் கிளறியில் நாம் அடைந்து இருக்கும் சுதந்திரத்தைப் பற்றி அவர் பெருமையோ

மகிழ்ச்சியோ அடையவில்லை. அதற்கு மாருக, 'மக்கள் அஹிம்சையில் கட்டுப்பட்டிருக்கிருர்கள் என்று நினைத்து என்னையே ஏமாற்றிக் கொண்டிருக்கிறேன் போலும்' என்று வெதும்புகிருர்" என்றேன் நான்.

"சுதந்திரம் அடைவதற்குத்தானே அவர் இந்த அஹிம்சை ஆயுதத்தைத் தயார் செய்து கொடுத்தார். சுதந்திரம் வந்துவிட்டது. அது எந்த முறையில் என்ருல் என்ன? சுபாஷ்சந்திர போஸ் தேசீயபடையைக் கொண்டு சுதந்திரத்தை ஜெயித்துக் கொடுத்திருந்தால் நாம் வேண்டாமென்று உதறித் தள்ளி யிருப்போமா?" என்ருர் முத்து.

"அப்பொழுதும் சுதந்திரத்தை மகிழ்ச்சியுடன் வரவேற்றிருப்போம். ஆனல், நீங்கள் சொன்னதுபோல், காந்திஜி, அஹிம்சையை சுதந்திரம் பெற ஓர் ஆயுதமாக மாத்திரம் உருவாக்கவில்லை. அது ஒரு வாழ்க்கை வழி; அது போராட்டத்திலும் பங்கு பெறும்; சமாதானத்திலும் பங்கு கொள்ளும். வெளியிலும் ஆட்சி செலுத்தும்; வீட்டிலும் ஆட்சி செலுத்தும். நாம் தினசரி கடைப்பிடிக்க வேண்டிய அனுஷ்டான விதியைத்தான் நமக்கு மகாத்மா காந்தி சொல்லிக்கொடுத்தார். இன்று அந்த அன்புவழி தோற்றுவிட்டது. சுதந்திரம் அடைந்தது என்னமோ வெற்றிதான். ஆனல் அந்த வெற்றி, மகாத்மாவிற்கல்ல, அஹிம்சைக்கல்ல, தர்மத்திற்கல்ல" என்றேன்.

"மெய்தான். இந்த சுதந்திரத்தினல் தேசத்திற்கு வெற்றி. மகாத்மாவிற்குத் தோல்வி" என்ருர் தி. ஜ.

"முன்பு ஒருநாள் ஆனே, காந்திஜியைச் சந்தித்த போது, ஒரு சுலோகத்தைச் சொன்னரே, ஞாபகமிருக்கிறதா?" என்றேன்.

"ஞாபகமில்லையே, அது என்ன?" என்ருர் சுந்தரம்.

"மகாபாரதத்தை முடித்துவிட்டு, பகவான் வியாசர் கதறுகிறார் :

ஊர்த்வபாகுர் விரௌம்யேவு நகச்சித்ச்ருணோதிமே
தர்மாதர்தச்ச காமச்சகிம்தர்ம நஸேவ்யதே ?

அதாவது, 'இரு கைகளையும் தூக்கிக்கொண்டு கதறுகிறேன். ஒருவரும் செவி சாய்க்கவில்லையே ! தர்மம், பொருளையும் இன்பத்தையும் கொடுக்கிறது. பின் ஏன் தர்மம் பாலிக்கப்படுவதில்லை' என்றாராம். 'வியாசருக்கே ஜனங்களிடம் இவ்வளவு அவநம்பிக்கை ஏற்படுமேயானால், மற்றவர்களுக்கு ஏற்படுவதில் ஆச்சரியமென்ன ?' என்று கேட்டார் ஆனே" என்றேன் நான்.

"ஆகா, எவ்வளவு நன்றாகச் சொல்லியிருக்கிறார் ! அதற்கு காந்திஜி என்ன சொன்னார் ?" என்று கேட்டார் சுந்தரம்.

"காந்திஜி அதை ஒப்புக்கொண்டு சொன்னார்: 'நானும் அஹிம்சையாலும், அன்பாலும் எதையும் சாதித்துவிடலாம் என்று நம்பிக்கை கொண்டிருக்கிறேன். ஆனால், ஆசாபங்கம் ஏற்படாமல் இருக்காது போலிருக்கிறது' என்று தயங்கினார். அப்பொழுது நம் மக்கள் அஹிம்சை நெறியில், எந்த அளவில் கையாளக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் எடுத்துச் சொன்னார். 'அதிகாரவர்க்கத்திற்கு எதிரிடையாகக் கையாளப்படும் அஹிம்சை ஒன்று. அது ஓர் அளவு காங்கிரஸ்காரர்களிடம் நன்கு பதிந்திருக்கிறது. மற்றொன்று, நமக்குள்ளேயே இருக்கும் உள்நாட்டுத் தகராறுகள். இந்து – முஸ்லீம் கலகங்கள் போன்றவை. இந்த முனையில் அஹிம்சை முறைப்படி சாதனையின் வெளிப்படையான வெற்றியை இதுவரையில் காணவில்லை. உள்நாட்டுக் கலவரம் ஏற்பட்டால், காங்கிரஸ்காரர்கள் என்ன செய்ய வேண்டும் ? அடிக்கு அடி திருப்பிக் கொடுப்பார்களா ? மேலும் அடி வாங்குவதற்கு மகிழ்ச்சியுடன் சிரம்

தாழ்த்தி நிற்பார்களா? இதற்கு நாம் எளிதில் பதில் சொல்ல முடியாது. விஸ்தரிக்காமல் சுருங்கச் சொல்லு மிடத்து, காங்கிரஸ்காரர்கள் பிறர் உயிரை வாங்காமல் தங்கள் உயிரைக் கொடுத்து நிலையை சமாளிக்க வேண்டும். எவன் ஒருவன் ஓர் அடிகூடக் கொடுக்காமல் மரணத்தை எதிர்நோக்கி நிற்கிறானோ, அவன் நூற்றுக்கு நூறு கடமையைச் செய்தவனாகிறான். பலன் ஆண்டவன் கையில் இருக்கிறது' என்று அன்பு நெறியை விளக்கி யிருக்கிறார்'' என்றேன் நான்.

''ஆனால், அவர் விரும்பியபடி நடக்கவில்லையே. அவருடைய கனவு நனவாகவில்லையே. வியாசரைப்போல் அவருக்கும் ஏமாற்றம்தானே வந்து சேர்ந்திருக்கிறது'' என்றார் தி. ஜ.

''ஆனால், அவர் இன்னும் நம்பிக்கையை இழக்க வில்லை. இப்பொழுதுகூட அவர் என்ன சொல்லுகிறார்; 'நியாயத்திற்குத் தோல்வியே கிடையாது. மனித வர்க் கத்தின் மீதுள்ள நம்பிக்கையை இழக்கக்கூடாது. மனித சமூகம் ஒரு பெரும் சமுத்திரம். சமுத்திரத்தின் சில துளிகள் அசுத்தமாயிருந்தால், சமுத்திரமே மாசு பெற்ற தாக ஆகிவிடாது' என்று தம்நாட்டு மக்களை உற்சாகப் படுத்துகிறார்'' என்றேன்.

''அவருக்கு மீண்டும் வெற்றி கிடைக்கும் என்று நினைக்கிறீர்களா?'' என்றார் முத்து.

''அவர் வெற்றிபெற வேண்டும். அவருடைய வெற்றி யிலேதான் இருக்கிறது தர்மத்தின் வெற்றி; ஆத்மா வின் வெற்றி. உலகத்தின் நன்மை அதிலேதான் இருக் கிறது'' என்றேன்.

''மனிதனின் வெற்றி அதில்தான் இருக்கிறது'' என்றார் தி. ஜ.

# 29

பத்திரிகை, மெஷினிலிருந்து வந்தது. மேலெழுந்த வாரியாகத் தலைப்புக்களைப் பார்த்துவிட்டு, அதைச் சுருட்டிக் கையில் எடுத்துக்கொண்டு, பத்திரிகை ஆபீசின் வாசற்பக்கம் வந்தேன். நான் வருவதைப் பார்த்து வாடிக்கை ரிக்ஷாக்காரன், அவசரமாக வண்டியை இழுத்துக்கொண்டு என் அருகில் வந்து நின்றான். மாமூலாக வீட்டிற்குப் போய்க் குளித்துவிட்டு, அதற்குப் பிறகு பீச்சிற்குக் கிளம்புவேன். ஆனால், அன்று என்னவோ நேராகவே பீச்சிற்குப் போகலாம் என்ற எண்ணம் உண்டாயிற்று. ரிக்ஷாக்காரனிடம் "நீ போ, இப்பொழுது வண்டி வேண்டாம். காலையில் வழக்கம்போல் வந்துவிடு" என்று சொல்லிவிட்டு, எதிரிலே இருந்த காபி ஓட்டலில் ஒரு கப் காபி சாப்பிட்டுவிட்டு, வெளியே வந்தேன். காலாற பீச்சிற்கு நடந்தே போய்விடலாம் என்று நினைத்து வாலாஜா ரோடு பக்கமாகப் போய்க் கொண்டிருந்தேன். அவரவர்கள் தம்தம் காரியத்தில் ஈடுபட்டிருந்தனர். டிராம் சப்தம் ஒருபுறம், பஸ் சப்தம் ஒருபுறம். பரோட்டா பண்ணுவதற்காக இரும்புக் கல்லைத் தட்டும் சப்தம். வழக்கம்போல், கார்கள் வந்துகொண்டிருந்தன. நான் எதையோ நினைத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தேன். எதிரே யாரோ ஒருவர் வந்து கொண்டிருந்ததைக் கவனிக்கவில்லை. நல்லவேளை, மோதிக் கொள்ளவில்லை. ஏனென்றால் அவர் என்னைக் கவனித்துக்

கொண்டே வந்திருக்கிறார். அவருக்கு வழிவிட்டு நடக்க முயன்றேன். ஆனால், அவரே மேலும் நெருங்கி வந்து, "என்ன, காந்தி கொல்லப்பட்டாராமே!" என்று மெதுவாக பயந்து கொண்டே சொன்னார். "தெரியவில்லையே" என்று நகர்ந்தேன். ஆனால், அந்தச் செய்தி என்னைத் திடுக்கிடச் செய்தது.

'காந்தியாவது கொல்லப்படுவதாவது!' என்று என்னைக் கேட்டுக்கொண்டு நடந்தேன். மறுநிமிஷம், ஏன் நடந்திருக்கக்கூடாது என்ற பயமும்உண்டாகியது.அப்படியும் சிலர், சிலசமயங்களில் முயலவில்லையா? அதுவும்மக்கள் மதியிழந்து நிதானம் இழந்து இருக்கும் தற்கால நிலையில் எதுதான் நடக்காது என்று எண்ணினேன். சிறிது தூரத்திற்கப்பால் வேறு யாரோ ஒருவர் என்னிடம் வந்தார். என் கதராடைதான் அவர்களை என்பக்கம் இழுக்கக் காரணமாயிருந்திருக்க வேண்டும். அவரும் கேட்டார்; "காந்திஜி கொல்லப்பட்டதாகச் சொல்லிக்கொள்கிறார்களே? அது சரிதானா?" என்று கேட்டார்.

"எனக்குத் தெரியவில்லை. யார் சொல்லியதாகச் சொல்கிறீர்கள்?" என்று அவரையே கேட்டேன்.

"ரேடியோவில் சொன்னார்களாம்" என்றார். அவ்வளவுதான்; என் தலை சுழன்றது. பக்கத்தில் நின்ற டாக்ஸியில் ஏறிக்கொண்டு வீட்டை நோக்கிப் புறப்பட்டேன். 'காந்தி கொல்லப்பட்டார்', 'காந்தி கொல்லப்பட்டார்' என்ற ஒன்று, நூறு ஆயிரம் கோடிக் குரல்கள் கதறுவதுபோல் என் உணர்வில் விழுந்தன. 'இது உண்மையாக இருக்குமா?'. 'இது பொய்யாக இருக்கக்கூடாதா?' என்று நெஞ்சம் துடிதுடித்தது. டாக்ஸியும் வாசலில் நின்றது. உள்ளே போனேன்.

சரோஜாவின் முகம் வீங்கியிருந்தது. "ஆபீசிலிருந்து சிறிது நேரத்திற்கு முன்புதான் போன் வந்தது.

காந்தியை யாரோ பாவி சுட்டுவிட்டானும்'' என்றாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகக் கொட்டிக் கொண்டிருந்தது.

''காந்தியையா சுட்டான்— நாற்பது கோடி மக்களின் இதயத்திலே, காய்ச்சிய இரும்பை ஊற்றியிருக்கிறான்'' என்றேன்.

சுட்டவன் யார், சிக்கா? முஸ்லீமா? இந்துவா? மறுபடியும் வகுப்புக்களிடையே இரத்தக் களரியும், அனர்த்தமும் ஏற்படாமல் இருக்க வேண்டுமே!

கடைகள் ஒவ்வொன்றாக மூட ஆரம்பித்தன. பரோட்டா தட்டும் சப்தம் ஓய்ந்தது. சாயாக்கடை வெந்நீர் குளிர்ந்தது. வடையும், அப்பளமும் தயார் செய்துகொண்டிருந்த கிழவி, அடுப்பை அணைத்துவிட்டுக் கடையைக்கட்டினாள். மாலையில் ஏற்றப்பட்ட விளக்குகள் ஒவ்வொன்றாக அணைந்தன. ஜனங்கள் பித்துப்பிடித்தது போல் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தனர். ஒவ்வொரு வர் கண்ணிலும் இரத்தம் துளித்து நின்றது. 'காந்தி கொல்லப்பட்டார்', 'காந்தி கொல்லப்பட்டார்' என்று ஒவ்வோர் இதயமும் துடித்துக் கொண்டிருந்தது. ஒவ் வொரு நாடியும் துடித்துக் கொண்டிருந்தது.

செய்திகளைப் பரப்பும் ஒரு ஸ்தாபனத்திற்கு போன் செய்தேன். ''காந்தியைக் கொன்றது யார் என்று தெரிகிறதா?'' என்று கேட்டேன். ''கோட்ஸே என்ற ஒரு மராட்டிய இளைஞன்தான் சுட்டானும்'' என்றார்கள். நல்லவேளை, ஒரு சீக்கியனாகவோ, முஸ்லீமாகவோ இல்லையே என்று எண்ணிப் பெருமூச்சுவிட்டேன்.

கடைகள் எல்லாம் மூடப்பட்டு விட்டன. விலைமதிக்க முடியாத பொருள் போய்விட்டது. விற்பதற்கும் வாங்கு வதற்கும் என்ன இருக்கிறது? ரேடியோ பெட்டிகள் உள்ள கடைகளை மாத்திரம் லேசாகத் திறந்து வைத்துக்

கொண்டு செய்திகளுக்குக் காத்துக் கொண்டிருந்தனர். அங்கெல்லாம் ஒரு சிறு கூட்டம், கவலையோடும், துக்கத்தோடும், வரப்போகும் செய்திகளுக்காகக் காத்துக் கிடந்தது. ரேடியோவில் சோக ரசமாக வாத்யங்கள் முனகிக் கொண்டிருந்தன.

"எந்தப் படுபாவி, மகாத்மாவைப் போய்ச் சுட்டிருக்கிறான்?" என்று கேட்டுக்கொண்டே எதிர் போர்ஷன் அம்மாள் வந்தாள்.

"எவனோ பைத்தியக்காரன்" என்றேன்.

"பைத்தியக்காரன் என்றால், பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் அல்லவா இருக்க வேண்டும்?" என்றாள்.

"மகாத்மாவை நான் நேரில் கண்டபொழுது என்னையே மறந்திருக்கிறேன். அப்படிப்பட்ட புண்ணிய புருஷரைப் பார்த்துச் சுட வேண்டும் என்றால், அவன் நெஞ்சு மனித நெஞ்சல்ல; இரும்போ அல்லது கல்லோ" என்றாள் சரோஜா.

"'அன்பாக இரு,' என்று சொன்ன இந்தப் புண்ணிய புருஷன் குண்டுபட்டுச் சாக வேண்டும் என்று ஏற்பட வேண்டுமா?" என்று துக்கித்தாள் எதிர்ப் பக்கத்து அம்மாள்.

"அம்மா, உங்களுக்குத் தெரியாது. பெரிய மகான்களுக்கெல்லாம், மரணம், சாதாரணமாக எல்லோருக்கும் வருவதுபோல் ஏற்படுவதில்லை. அசாதாரண புருஷர்களின் வாழ்க்கையும் அசாதாரணமாயிருக்கும்; முடிவும் அசாதாரணமாகவே இருக்கும். ஏசு சிலுவையில் மாண்டார் என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். மகாத்மாஜியைப் போலவே, தாழ்த்தப்பட்ட நீக்ரோக்களுக்கு விடுதலை தந்த லிங்கன் என்ற புண்ணிய புருஷனும் ஒருவனால் கொல்லப்பட்டான். இப்படிப்பட்ட முடிவினால்தான் இவர்கள் தியாக வீரர்கள் ஆகிறார்கள். கௌபர் என்ற

துரை என் தகப்பனரிடம் சொல்வாராம்; 'எவன் ஒருவன், பிறருக்காக உயிரைக் கொடுக்கிருனே, அவன் தான் உண்மையிலே வாழ்ந்தவன்' என்பாராம். மகாத்மாஜீ, பிறருக்காகவே பிறந்தார்; பிறருக்காகவே வாழ்ந்தார்; பிறருக்காகவே மாண்டார். மகத்தான மனிதர், மகத்தான மரணத்தை அடைந்திருக்கிருர்'' என்றேன்.

"எனக்கென்னமோ, அந்தப் புண்ணிய ஆத்மாவிற்கு இப்படிப்பட்ட மரணம் ஏற்படுவதென்பது சிறிதும் சமாதானப்படவில்லை'' என்ருள் அந்தப் பெரிய அம்மாள்.

"அம்மா, கண்ணன் காட்டிய வழியான கீதையை வாழ்க்கை முறையாகக் கொண்டவர் மாகாத்மாஜி. வாழ்விலே எப்படிக் கண்ணனைப் பின்பற்றிஞரோ, அப்படியே மரணத்திலும் கிருஷ்ண பரமாத்மாவையே பின்பற்றியிருக்கிருர்'' என்றேன்.

"எதைச் சொல்கிறீர்கள்? கண்ணனுக்கு என்ன நேர்ந்தது?'' என்று கேட்டாள் அந்தப் பெரிய அம்மாள்.

"மகாபாரத யுத்தம் முடிந்தவுடன், பாண்டவர்களும் கிருஷ்ணனும் திருதராஷ்ட்ரன், காந்தாரி இவர்களிடம் துக்கம் விசாரிக்கச் சென்ருர்கள். காந்தாரி அளவுகடந்த புத்ர சோகத்தினுல், கோபத்துடன் கிருஷ்ணனைப் பார்த்துச்சொன்னுள்: 'கிருஷ்ணு, பாண்டவர்கள் திருதராஷ்டிரர்கள் இருதரப்பிலும் எல்லோரையும் அழித்துவிட்டாய். நீ ஏன் இப்படி அலட்சியமாக நடந்து கொண்டாய்? நீ மனம் வைத்திருந்தால், இந்த கோரமான கொலையையும் நாசத்தையும் நிறுத்தியிருக்கலாம். ஆனுல், வேண்டுமென்றே, இந்த நாசத்திற்கு உடந்தையாக இருந்திருக்கிருய். உன் அனுமதியின்பேரில் நிகழ்ந்த இந்த கோரச்செயலுக்கு நீயே முற்றும் பொறுப்பாளி. என் கற்பின் மகிமையால் என்னிடம்

சிறிது சக்தியிருக்கிறது. அதனால் உன்னை சபிக்கிறேன். எப்படி சகோதரர்கள் சண்டையிட்டுக்கொள்ள நீ காரணமாயிருந்தாயோ, அவ்விதமே உன் ஜனங்களும் முப்பத்தாறு வருஷத்தில் ஒருவருக்கொருவர் சண்டையிட்டு மடிந்து போவார்கள். நீயும் வனாந்தரத்தில் மனிதனால் கொல்லப்பட்டு மரணம் அடைவாய்' என்று சாபம் கொடுத்தாள். அதற்கு பகவான்: 'தாயே, எது நடக்குமோ அதைத்தான் நீ சொல்லியிருக்கிறாய். என் விருஷ்ணிகள் ஒருவராலும் ஜயிக்கப்படாதவர்கள். அவர்களுக்கு அழிவு அவர்களாலேயே தான் ஏற்பட வேண்டும்' என்று சொன்னார். அதன்படியே கண்ணனின் உறவினர்களான விருஷ்ணிகள் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு மாண்டனர். கிருஷ்ணனும் தம் காரியம் முடிந்துவிட்டதையும், தம் மறைவுக்காலம் நெருங்குவதையும் அறிந்து, வனத்தில் ஒரு மரத்தடியில் யோகத்தில் இருக்கும்பொழுது, ஒரு வேடன் அவருடைய பாதத்தை ஒரு பட்சி என நினைத்து அம்பு விட்டிருக்கிறான். அந்த அம்பே, அவரது முடிவுக்குக் காரணமாயிற்று. ஆனால், மகாத்மாஜி இந்தக் கொலைகளைத் தவிர்க்க எவ்வளவோ முயன்றார். அப்படியும் பிரிட்டிஷ் காந்தாரியின் சாபப்படி இந்தியர்கள் ஒருவரையொருவர் மாய்த்துக் கொண்டனர். மதிகெட்ட ஒரு துஷ்டன் அவரைச் சுட்டு விட்டான்" என்றேன்.

"கிருஷ்ணபரமாத்மாவிற்கும், மகாத்மாவிற்கும் ஒரே விதமான மரணம் ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னாலும், எனக்கும் அந்த மாமியைப் போலவே, மனத்திற்கு சமாதானம் ஏற்படவில்லை. ஏதோ ஒரு துஷ்டன் ஒரு கொலைகாரன் சுடப்பட்டால், அது அவ்வளவாகத் தெரியாது. அன்பே உருவான இந்தப் புண்ணிய மூர்த்திக்கு இப்படிப்பட்ட மரணம் ஏன் ஏற்படவேண்டுமென்பது எனக்கு விளங்கவில்லை" என்றாள் சரோஜா.

"சரோஜா, மரணம் என்பது மனிதனுக்கேற்படும் ஒரு சாதாரண விஷயம். அதில் அசாதாரணமான தன்மை ஒன்றும் இல்லை. பிறக்கும் ஒவ்வொருவரும் இறக்க வேண்டும் என்பது மாற்ற முடியாத ஒரு நியதி. மகாத்மாவிற்கும் மரணம் என்றோ வந்துதான் தீரும்; வியாதியினாலோ, மூப்பினாலோ இறந்திருப்பார். ஆனால், அவருடைய அசாதாரணமான வாழ்விற்கு ஒரு சாதாரணமுடிவு ஏற்பட்டிருக்கும். இப்பொழுது அவர் வாழ்க்கையை தேசத்திற்கு அர்ப்பணித்ததைப்போல, உயிரையும் தேசத்திற்குஅர்ப்பணித்து விட்டிருக்கிறார். அதற்கும் ஒரு பயன் இருக்கலாம். வாழ்க்கை மூலம் அவர் சாதிக்காத காரியத்தை மரணத்தின் மூலம் சாதிக்கக்கூடும். இதேமாதிரி நிகழ்ந்த ஒரு சம்பவத்தைப்பற்றி மகாத்மா காந்திஜியே என்ன சொன்னார் தெரியுமா ?"

"என்ன சொன்னார் ?" என்றாள் சரோஜா.

"ஸ்வாமி சிரத்தான்ந்தர், ஒருவனால் கொல்லப்பட்டார். அதைக் கேட்டு மகாத்மாஜி சொன்னார்; 'மரணம் கொடியதல்ல. நமக்கு மிகவும் நெருங்கிய நண்பனைப் போல. தூக்கத்தைப்போல, அது நம்மையே நமக்குத் திருப்பிக் கொடுக்கிறது. ஸ்வாமி சிரத்தானந்தஜி கம்பீரமான உடலுடன் நம்மிடையே உலவியதைப்போலவே, இன்றும் நம்மிடையே இருந்து வருகிறார். இவ்வளவு புகழ் தரும் மரணம் ஏற்பட்டதற்கு அவருடைய குடும்பத்திற்கும், அவர் பிறந்த தேசத்திற்கும், அளவற்ற பெருமை உண்டு. ஆனால் இந்தப் பதக்கத்திற்கு மற்றொரு பக்கமும் உண்டு. அந்த மதிப்பிற்குரிய மரணம், ஒரு வழி தவறிய, மதியிழந்த சகோதரனால் ஏற்பட்டது என்பது தான் வருத்தப்பட வேண்டிய விஷயம்' என்று சொல்லியிருக்கிறார். அவர் மற்றொருவருக்குச் சொன்ன இது முழுவதும் அவருக்கே பொருந்தும்" என்றேன்.

ரேடியோவில் 'நேரு பேசப்போகிறார்' என்ற செய்தி வந்தது. ரேடியோவின் எதிரே உட்கார்ந்துகொண்டோம். நேரு பேசினார் :

"நண்பர்களே, நம் வாழ்விலே இருந்த ஒளி அவிந்து விட்டது. எங்கும் இருள் சூழ்ந்திருக்கிறது. நான் என்ன சொல்ல வேண்டும், எப்படிச் சொல்ல வேண்டும் என்பது கூட எனக்குத் தோன்றவில்லை. நம் அருமைத் தலைவர், நாம் பாபு என்று கூப்பிடும் அருமைத் தந்தை, நம்மிடம் இல்லை. அப்படிச் சொல்வதுகூடத் தவறாக இருக்கலாம். இருந்தாலும், இவ்வளவு நாட்கள் நாம் அன்றாடம் பார்த்து வந்ததுபோல், இனி அவரைப் பார்க்கமுடியாது; அவருடைய ஆறுதலைப் பெற முடியாது. இது ஒரு மகத்தான துர்ப்பாக்கியம். எனக்கு மாத்திரமல்ல, நம் தேசத்துக்கு, கோடிக்கணக்கான மக்கள் எல்லோருக்கும்தான். இந்த அதிர்ச்சியை, நானோ வேறு யாருமோ, ஆறுதல் சொல்லிக் குறைத்துவிட முடியாது.

"ஒளி மறைந்துவிட்டது என்றேன். அது சரியல்ல. இந்த தேசத்தில் பிரகாசித்து வந்த ஒளி, சாதாரண ஒளி அல்ல. இவ்வளவு நாட்களாக நம் தேசத்தில் பிரகாசித்த ஒளி, இந்த தேசத்தில் இன்னும் பல்லாயிரக் கணக்கான வருஷங்களுக்கு வெளிச்சத்தைத் தந்து ஒளி வீசிக்கொண்டிருக்கும். உலகம் அந்த ஒளியைக் காணும். எவ்வளவோ இதயங்களுக்கு, அது இதத்தைக் கொடுக்கும். அந்த ஒளி நிகழ்காலத்தை மாத்திரம் பிரதிபலிக்கவில்லை. அது உயிரின் ஒளியாக விளங்கியது. அழியாத உண்மைகளின் சின்னமாக விளங்கியது. அற வழியைக் காட்டிச் சென்றது. தவறான வழியில் போகாதபடி நம் புராதன தேசத்திற்கு விடுதலையைக் காட்டியிருக்கிறது ..."

— என்றெல்லாம் சொல்லிக் கொண்டு போனார். அவருடைய தொண்டை கரகரத்தது. நாக்குக் குழறியது.

அஞ்சாமைக்கு இலக்கியமான அந்தச் சிங்க மனிதனின் நெஞ்சு பதறியது. பாரதத் தாயின் கண்களிலிருந்து பெருகிய கங்கையும், யமுனையும் கேட்பவர்களின் கண்கள் மூலமாகப் பெருக்கெடுத்து ஓடியது. சரோஜா தேம்பித் தேம்பி அழுதாள். எதிர்ப்பக்கத்து அம்மாள், கண்களைத் துடைத்தவண்ணம் இருந்தாள். நான் முகத்தைத்துடைக்கும் பாவனையில் கண்களைத் துடைத்துக் கொண்டேன். நெஞ்சிலே ஏதோ பாரம் அமுக்கிக் கொண்டதுபோல மூச்சுத் திணறியது; பெருமூச்சு விட்டேன்.

சில தினங்கள் கழித்து, அவருடைய அஸ்தி கரைப்பு. சென்னைக் கடற்கரையில் ஏற்பாடாகியிருந்தது. சென்னை நகரமே திரண்டு வந்து கடற்கரையில் குழுமியிருந்தது. அஸ்தி இருந்த ரதம், பல வர்ணங்கள் கொண்ட மாலைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. தேச சேவிகைகள் ஆரஞ்சுகலர் சேலைகள் க்கட்டிக்கொண்டு, அதை இழுத்து வந்தனர். தலைவர்கள் மௌனமாகப் பின்னே நடந்து வந்தனர். இரண்டு பக்கத்திலும் மக்கள் நின்று தங்கள் கண்ணீரை மாலைமாலையாகத் தொடுத்து, அந்த மகா புருஷனை அர்ச்சித்தனர்.

நான் பிரமை பிடித்தவன் போல், அதிர்ந்துபோய் நின்று கொண்டிருந்தேன். அஸ்தி இருந்த குடம் சமுத்திரத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. நான் எனக்குள்ளே சொல்லிக்கொண்டேன்:

'மண் போன்றிருந்த மக்களுக்கு உணர்வைக் கொடுத்த மகாபுருஷனின் அஸ்தி இந்த மண்பாண்டத்தில் மறைந்து கிடக்கிறது.

'உறங்கிக்கிடந்த தேசத்திற்கு விழிப்பை உண்டாக்கிய உத்தம புருஷனின் அஸ்தி, இந்த மண்பாண்டத்தில் உறங்கிக் கிடக்கிறது.

'உயிரற்றிருந்த மக்களுக்கு உயிரூட்டிய உன்னத புருஷனின் அஸ்தி, இந்த மண்பாண்டத்தில் உயிர் துறந்து கிடக்கிறது.

'குன்றின்மேல் விளக்குப்போல் ஒளி வீசி மக்களின் உள் ஒளி பெருக்கிய மகாத்மாவின் அஸ்தி, குடத்தில் இட்ட விளக்காகி மறைந்து கிடக்கிறது.'

நான் அவருடன் இருந்த சந்தர்ப்பங்களில் அவர் என்னிடம் காட்டிய அன்பும், கனிவும், பரிவும், ஞாபகம் வந்து உணர்ச்சிகளைக் கிளறிவிட்டன. மனம் வெதும்பி நின்றேன். மகாபுருஷனின் அஸ்தி மகாசமுத்திரத்தில் கரைந்தது.

மனித ரூபத்தில் நடமாடி நின்ற நித்ய வஸ்து, பரம்பொருளோடு கலந்து, அமரராகி நின்றது. கண்முன் தோன்றியதுதான் மறைந்தது. மறைந்தது யார்? மறைந்தது என்ன ?

ஒரு தனி மனிதனா மறைந்தான் ?

ஒரு மகாத்மாவா மறைந்தான் ?

ஒரு தலைவனா மறைந்தான் ?

ஒரு ஊழியனா மறைந்தான் ?

ஒரு கொள்கையா மறைந்தது ?

ஒரு தத்துவமா மறைந்தது ?

ஒரு வாழ்க்கை வழியா மறைந்தது ?

எல்லோருடனும் நானும் கடலில் ஒரு முழுக்குப் போட்டுவிட்டு வந்தேன். மாலைக் கதிரவன் மறைந்து அஸ்தமித்துக் கொண்டிருந்தான். மக்களின் கதிரவனும் மறைந்து போனான். உலகம் இருண்டுவிட்டது. என் உள்ளமும் இருண்டுவிட்டது ; ஒரே சூன்யமாயிருந்தது.

ஒரு சமயம், சட்டசபையில் எதிர் கட்சிக்காரர் ஒருவர் சொன்னார் ; "நீங்கள் எல்லோரும் சூன்யம். மகாத்மா

ஒருவர்தான் காங்கிரஸ்" என்றார். அப்பொழுது மேதை சத்யமூர்த்தி பளிச்சென்று சொன்னார்; "ஆம், அந்த ஒன்றுக்குப் பக்கத்தில் இணைந்து நிற்கும் கோடிக்கணக்கான சூன்யங்கள்" என்று பெருமையோடு சொன்னார். ஆனால், எந்த ஒன்று மற்றவைக்கு மூலாதாரமாக இருந்ததோ, அந்த ஒன்று போய்விட்டது. பாக்கி இருப்பது வெறும் சூன்யம்தானே ?

காந்தி மாத்திரம் மறையவில்லை ;

காந்தி யுகமும் மறைந்தது !

# 30

இராமலிங்க ஐயரிடமிருந்து கடிதம் வந்திருந்தது. முகவரியின் எழுத்திலிருந்து யாரிடமிருந்து வந்திருக்கக் கூடும் என்பதை ஊகித்துக்கொண்ட சரோஜா, "உங்கள் அப்பாவின் நண்பர் எழுதியிருக்கிறார் போலிருக்கிறதே. அப்பாவிற்கு உடம்புக்கு ஒன்றும் இல்லையே?" என்று விசாரித்தாள். முக்கியமாக இருந்தாலொழிய அங்கிருந்து கடிதம் வராது என்பதை, அவள் அறிந்திருந்தாள். கடிதத்தைப் படித்தேன்.

"நீ ஊகித்தது சரிதான். அப்பாவிற்குத்தான் உடம்பு சரியாக இல்லை. நீர்ப்பையில் ஏதோ கோளாறும். மதுரை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்போகிறார்களாம்" என்றேன்.

"பாவம், ஏன் இப்படிக் கஷ்டப்பட வேண்டும்! மதராசிலே வைத்திய வசதிகள் இன்னும் அதிகம் இல்லையா? நம் வீட்டில் பிள்ளையோடு, பேரனோடு அவர் இருக்கவேண்டாம். ஒரு நல்ல நர்சிங்ஹோமில் சேர்த்தால் நான் ஒரு நர்ஸ் மாதிரி, சிப்பந்தி மாதிரியாவது அவருக்கு உதவி செய்யலாமே" என்றாள்.

"அவர் அதற்கு இணங்க வேண்டுமே. முரட்டுப் பிடிவாதக்காரராச்சே. இங்கே வர அவர் ஒப்புக்கொள்ள மாட்டார்" என்றேன்.

"அப்பொழுது, நீங்களாவது அங்கே போய் இருந்து விட்டு வாருங்களேன்" என்ருள்.

"எனக்குச் சம்மதம்தான். ஆனுல், இப்போதும் அவர் பிடிவாதத்தைக் காட்டினுல், நான் போயும் பிரயோசனம் இல்லை. மனக்கசப்புத்தான் அதிகமாகும்" என்றேன்.

"ஏதாவது பணத்தையாவது அனுப்பிவையுங்கள்."

"அது அவருக்குத் தேவைப்படாது. அவரிடம் பணம் இருக்கிறது. என்னிடம் பணத்தை எதிர்பார்க்கும் நிலையில் அவர் இல்லை."

"பின் என்னதான் செய்யப்போகிறீர்கள்? பேசாமல் இருந்துவிடப் போகிறீர்களா? அது சரியா?"

"வேறு என்ன செய்ய முடியும்? இராமலிங்க ஐயருக்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். நீ சொன்னபடியே தந்தி கொடுத்து இருக்கிறேன். 'அப்பா இங்கு வருகிருரா? நான் அங்கு வரட்டுமா? பணம் ஏதாவது அனுப்பட்டுமா?' என்று கேட்டிருக்கிறேன். பதிலைப்பொறுத்து முடிவு செய்து கொள்ளலாம்."

மறுநாளே எனக்குப் பதில் தந்தி வந்துவிட்டது. 'ஒன்றும் தேவையில்லை' என்று இருந்தது.

"இப்படியும் மனிதர்கள் இருப்பார்களா? தந்தை மகன் என்ற உறவு இந்த உடல் இருக்கும் வரையில் தானே? உடல் வெந்து சாம்பலானவுடன் யாருக்கு யார் தந்தை? சாகும் தறுவாயில் இருக்கும் பொழுதுகூட அவர் கோபம் தணியவில்லை. உடல் எரிந்து போனுலும், நம் ஸம்ஸாரங்கள், ஜன்மாந்தர வாசனைகளாக நம்மைப் பின்தொடர்கின்றன என்று நீங்கள் சொல்வீர்களே; அது போல் கோபத்தையும் துவேஷத்தையும் அடுத்த ஜன்மத்திற்குச் சுமந்துகொண்டு போவார் போலிருக்கிறதே. வயதாகியும் பக்குவம் வரவில்லையே."

" அது சரிதான், சரோஜா. நீ எனக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு, அவர்மேல் குற்றம் சாட்டுகிறாய். அவருக்கும் ஒரு கட்சி இருக்குமல்லவா ? "

"என்ன கட்சி? எதற்கு உங்கள்மேல் வெறுப்பு? என்ன தகாத காரியம் செய்துவிட்டீர்கள். யாருக்காவது கெடுதல் செய்தீர்களா? யார் பணத்தையாவது அபகரித்திருக்கிறீர்களா? கெட்ட நடத்தையுள்ளவர்களாகி இருக்கிறீர்களா? இப்படியெல்லாம் செய்திருந்தால்கூட, சாகும் காலத்தில் மன்னிக்க வேண்டியது தகப்பன் கடமை. அஹிம்சா நெறியில் ' குற்றத்திற்குத் தண்டனை மன்னிப்பதுதான் ' என்று காந்தியே சொல்லியிருப்பதாக எவ்வளவுதரம் என்னிடம் சொல்லியிருக்கிறீர்கள். ஏன் இந்தக் கிழவரின் கல்நெஞ்சு பழுத்துக் கனியவில்லை? எல்லாம் ' நான் ' என்ற அகங்காரத்தின் விசுவரூபம்தானே? இந்த அகங்காரம் எல்லாம் ஆட்சி செய்வது மயானத்திற்கு மேலேகூடச் செல்லுமோ" என்று கோபத்துடனும் துக்கத்துடனும் கேட்டாள். இவ்வளவு படபடப்புடன் அவள் பேசியதை இதுவரை கண்டதில்லை.

" அவருடைய கட்சியைப்பற்றி அறிந்து கொள்ளாமலே, ஆள் வராமலே தீர்ப்புக் கொடுக்கிறாயே? நீ அவரைப் பார்த்ததில்லை. அவர் பொல்லாதவரல்ல; கல்நெஞ்சக்காரரல்ல. எல்லோருக்கும் அவரிடம் மதிப்பு உண்டு; வாய்மை தவறாதவர்; நேர்மை தவறாதவர். அவர் தமது வாழ்க்கையிலே மேல் படிப்புக்குப் போக முடியவில்லையே என்ற ஏக்கம் இருந்திருக்கிறது. அந்தக் குறையை என்மூலம் ஓரளவு பூர்த்தி செய்துகொண்டார். நானும் ஓரளவு அவரைத் திருப்தி செய்யும் முறையில் படித்து வந்தேன். அதனால் என்னை ஐ. ஸி. எஸ். காரனாக்க வேண்டுமென்ற எண்ணம் பலமாகப் பிடித்துக் கொண்டது. அவர் வாழ்வின் லட்சியமே நான் கலெக்டராக வேண்டும் என்பதாகிவிட்டது. இது ஒரு லட்சியமா

என்று கேட்டுப் பிரயோசனம் இல்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொன்றுக்காகப் பாடுபடுகிறார்கள். நகுஷன் மகத்தான தவம் செய்தான், இந்திர பதவிக்காக. பஸ்மாசுரன் கொடிய தவம் செய்தான், யார் தலைமேல் அவன் கை வைத்தாலும் எதிராளி சாம்பலாக வேண்டும் என்பதற்காக. 'இது ஒரு லட்சியமா? இதனால் என்ன லாபம்?' என்று கேட்கலாமா? ஒரு முனிவர் இருந்தார்; மகா தபஸ்வீ. சில கர்ம சேஷவங்களினால் ஒரு மாடாக இருந்தார். ஆனால் எப்பொழுதும் பகவத் தியானம்தான். பகவான் அவரைப் பரிசோதிக்க வேண்டி அவர் முன் தோன்றி, 'அப்பா உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்டார். அந்தத் தபஸ்வி சொன்னார்: 'பரந்தாமா, சதா நீ என் மனத்திலேயே இருக்கிறாய். நீயே என்னிடம் இருக்கும்பொழுது, வேறு எனக்கு என்ன வேண்டும்?' என்றார். பகவான், அவருடைய திட சித்தத்தை அறிய வேண்டி, 'இப்போது உனக்கு உபயோகப்படும்படியாக ஒரு வரம் கேள்' என்றார். அந்த மகரிஷி சொன்னார், 'நாராயணா, எனக்கு என்ன தேவை? நான் என்பதையே மறக்க முயல்பவனுக்கு எது தேவை. உன் சித்தம் அப்படியானால் இதை வேண்டுமானால் செய். நான் மலம் கழிக்கும்பொழுது, மலத்துவாரத்தில் சிக்கிக்கொண்டு சிரமப்படுத்துகிறது. அந்த நேரத்தில் நான் உன்னை மறந்து, இந்த அவஸ்தையில் மனத்தை ஈடுபடச் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே, மலம் கழிப்பதை சுலபமாகவும், அது என் தேகத்தில் ஒட்டாமலும் இருக்கும்படி செய்தால் போதும்?' என்றாராம். இப்படி அவரவரின் பக்குவப்படி அவரவரின் லட்சியத்தைத் தீர்மானித்துக் கொள்கிறார்கள். அப்பாவின் லட்சியம் ஐ. ஸி. எஸ். அது நிறைவேறாமல் போகவே, என் பேரில் இருந்த அன்பு, அப்படியே வெறுப்பாகிவிட்டது. அன்பின் மறுபக்கம் தானே துவேஷம். ஆசாபங்கத்தினால் அது திரும்பிக்

கொண்டது. இரண்டு பக்கமும் அன்பாகவே இருப்பது தான் அருள். பற்றில்லாமல் அன்பு செய்கிறபொழுது தான், அது அருளாக மாறுகிறது."

"சரி, கலெக்டராகவில்லை. அதாவது அவர் சொன்ன படி நீங்கள் கேட்கவில்லை. அதற்காகவா அவ்வளவு துவேஷம்?"

"கலெக்டராகவில்லை என்பதுமட்டுமல்ல. அதற்கு நேர் விரோதமான காரியத்தையும் செய்துவிட்டேன். சத்யாக்கிரகி ஆகிக் கைது செய்யப்பட்டேன். போராட்டத்தில் கலந்து கொண்டேன். கலப்பு மணம் செய்து கொண்டேன். ஒரு குறுகிய அளவில் தன் லட்சியத்தை வகுத்துக்கொண்ட ஒரு வைதிகப் பிராம்மணருக்கு இது போதாதா?"

"அவர் விருப்பப்படி நடக்கவில்லை என்பது ஒரு பெரிய குற்றமா? கலப்பு மணம் செய்து கொண்டது தான் ஒரு தவருன காரியமா?"

"தவரு இல்லையா என்பதை நாம் இன்று விவாதிக்க வேண்டியதில்லை. அவர் ஏற்றுக்கொண்ட மத சமூகக் கட்டுப்பாடுகளின்படி, தவருன காரியம்தான். அரசாங்கம் சட்டமியற்றுவதுபோல், சமூகமும் சில சட்ட திட்டங்களை வரையறுக்கிறது. ரயில்வேயில் மூன்றும் வகுப்பிற்குச் சீட்டு வாங்கிவிட்டு, 'நான் இந்த வகுப்பு வேற்றுமையை ஏற்றுக்கொள்ளவில்லை' என்று முதல் வகுப்பில் ஏறிஞல் அதிகாரி பிடரியைப்பிடித்துத் தள்ளிக் கோர்ட்டுக்கு அனுப்புவான். ஆனல், சமூக, மத, ஆசாரச் சட்டதிட்டங்களுக்கு உடனடியாக தண்டனைகிடையாது. ஆனல், சமூகம் பகிஷ்கரிக்கும். அதனுல்தான் சமூகக் கட்டுப்பாடுகள் இன்று இருந்து வருகின்றன. இந்தக் கட்டுப்பாடுகள் அவசியந்தாஞ? தனிமனிதனிலிருந்து சமூகம் என்ற அமைப்பு வரும்பொழுதே, சில கட்டுப் பாடுகள், திட்டங்கள் அமைந்து விடுகின்றன. இவை

நாளுக்குநாள் மாறலாம். ஆனால் இவை இருப்பதனால்தான் சமூகம் உருப்பெறுகிறது, வலுப்பெறுகிறது. இவை இல்லாவிட்டால், ஒவ்வொரு மனிதனும் அவனவனுடைய இஷ்டம்போல் வாழ்ந்து விடலாம். அப்பொழுது மண வாழ்க்கை, குடும்பம் என்பவையெல்லாம் சீர்குலைந்து, மனிதன் விலங்கைப்போல் நடந்துகொள்ள வேண்டியது தான். ஆகவே, சமூகக் கட்டுப்பாட்டை மீறிய நான், அப்பாவின் கௌரவத்தையும் குடும்ப தர்மத்தையும் குலைக்க வந்த கோடாலிக் காம்பு ஆகிவிட்டேன். அவருடைய வாழ்வைக் குலைத்தேன். குடும்ப தர்மத்தைக் குலைத்தேன். பரம்பரை தர்மத்தை அழித்தேன். அதனால்தான் அவருக்கு என்மேல் அவ்வளவு கோபம்.''

''இவற்றை யெல்லாம் முன்பே யோசித்திருக்க வேண்டாமா? என் தாய் எவ்வளவோ சொல்லியிருக்கிறாள். என்றால் உங்களுக்கு இப்படிப்பட்ட கஷ்டங்கள் எல்லாம் ஏற்படும்படி ஆகிவிட்டதே என்பதுதான் மனசுக்கு மிகவும் சிரமமாயிருக்கிறது.''

''சை, இதென்ன பேச்சு, சரோஜா. நான் என்ன குழந்தையா? அறியாத்தனமாக இக்காரியத்தில் இறங்கி விட்டேனா? முன்பின் யோசிக்காமல் செய்துவிட்டேனா? எல்லாவற்றையும் தீர ஆர அறிந்துதான் முடிவு கட்டினேன். நம் இருவர் லட்சியங்களும் ஒன்றாயிருந்தன. இருவர் மனமும் ஒன்றுபட்டு இருந்தன. உனக்கு நன்றிக் கடன்பட்டவனாகவும் இருந்தேன். அதனால்தான் அந்த முடிவிற்கு வந்தேன். 'என் வாழ்க்கை பெரிதா? பரம்பரை தர்மம் பெரிதா? தந்தை உறவு பெரிதா? மனச்சாட்சி பெரிதா?' — என்பதைச் சீர்தூக்கிப் பார்த்துத்தான் முடிவு செய்தேன்; போகிற போக்கில் ஒன்றும் முடிவு செய்யவில்லை. மனம்போன போக்கிலும் என் தீர்மானத்தைத் திருப்பவில்லை. தந்தையை மீறினது பாதகமில்லை, மனச்சாட்சியை மீற வேண்டாம் என்று முடிவு கட்டி

னேன். மனச்சாட்சிதானே கடவுள். இன்னும் நான் செய்த காரியத்திற்கும் நான் வருத்தப்பட வேண்டியவன் இல்லை. மனச்சாட்சிக்குப் புறம்பாக ஒன்றும் செய்யவில்லை. நான் ஏதாவது ஒரு காரியம் சரியானபடி செய்திருக்கிறேன் என்றால், அது நம் திருமணம்தான். அதைப் பற்றி எனக்குப் பெருமையே தவிர, சிறுமை இல்லை'' என்றேன். சரோஜாவின் முகத்தில் புன்னகை அரும்பியது.

ஒரு வாரம் கழித்து இராமலிங்க ஐயரிடமிருந்து தந்தி வந்தது. ''அப்பா இறந்துவிட்டார்'' என்றேன்.

''ஐயோ, இறந்துவிட்டாரா? பாவம்! தன்னந்தனியாக, ஓர் அன்பான வார்த்தையைக் கேளாமல், தம் மனிதர் என்று சொல்லப்படக் கூடியவர் பக்கத்தில் இராமல், அனாதையாக, 'இவர் இருந்தாலென்ன, போனாலென்ன, யாருக்கு லாபம், யாருக்கு நஷ்டம்' என்று குத்திக்காட்டுவதுபோல் அனாதரவாக, ஒரு கண் கலங்குவதைக்கூடப் பாராமல் போய்விட்டாரே!'' என்று சரோஜா சொல்லும்பொழுதே கண்ணீர் பொத்துக்கொண்டு வந்தது. எனக்கும் திடீரென்று மனம் வேதனை அடைந்தது; துக்கம் நெஞ்சைப் பிளந்தது. ''யார் சரியோ, யார் தப்போ? தந்தை மகன் என்ற உறவிற்குப் பங்கம் வந்துவிட்டது. கடைசிக் காலத்தில் அவருக்கு நான் செய்ய வேண்டிய கடமையைச் செய்யக் கூடாதவன் ஆகிவிட்டேன். பெற்ற கடன், வளர்த்த கடன், அன்புக் கடன் இவற்றுக்கெல்லாம் வட்டிகூடக் கட்ட முடியாத கடனாளியாகி விட்டேன். இந்தக் கடன் சுமையை ஏற்கத்தான் அவர் வயிற்றில் பிறந்தேன் போலும்!'' என்று சொல்லிவிட்டுக் குளிக்கப் போனேன். சரோஜாவும் நானும் முழுகிவிட்டு ஸ்வாமி படத்திற்குமுன் நின்றோம். ''பகவானே, அவர் உத்தமர்தான், பண்புடையவர்தான். நான் அவருடைய அமைதி குலையக் காரணமானேன்.

இனி அவருடைய ஆத்மாவாவது சாந்தியடையட்டும்" என்று பிரார்த்தித்தேன். இருவரும் படத்தின் முன் வெகு நேரம் நின்று கொண்டிருந்தோம்.

இராமலிங்க ஐயரிடமிருந்து மறுபடியும் ஒரு கடிதம் வந்தது. "என்ன, இரண்டு நாளைக்கொரு தரம் துரத்தித் துரத்திக் கடிதம் அவரிடமிருந்து வந்து கொண்டிருக்கிறது" என்றாள் சரோஜா.

"அப்பாவின் பிராவிடென்ட் பண்டு தொகை, இன்ஷூரன்ஸ் தொகை, ஏற்கனவே அவர் பாங்கில் போட்டிருந்த பணம், சில சாமான்களை விற்ற பணம், எல்லாம் சேர்ந்து சுமார் இருபத்திரண்டாயிரம் ரூபாய் பாங்கியில் இருக்கிறதாம். அப்பா அந்தப் பணத்தை தர்மத்திற்கு ஒதுக்கிவைக்க நினைத்தாராம். அது சம்பந்தமான பத்திரங்கள் தயாராவதற்குமுன், இறந்து போய்விட்டார். அது சம்பந்தமாகத்தான் கடிதப்போக்குவரத்து."

"நீங்கள் என்ன எழுதியிருக்கிறீர்கள்?"

"இதுபற்றி உன் அபிப்பிராயம் என்ன?"

"என்னை என்ன கேள்வி? ஆனால், ஒன்று. அவர் எப்பொழுது நம்மை வேண்டாமென்று ஒதுக்கிவிட்டாரோ, அவருடைய பணம் மாத்திரம் நமக்கு வேண்டுமா என்ன? வேண்டவே வேண்டாம்."

"ரொம்ப சரி. நீ கோபத்தால் சொல்கிறாய். சாந்தமாகவே நான் அந்த முடிவிற்கு வந்துவிட்டேன். எனக்கும் அந்தப் பணம் தேவையில்லை. அப்பாவின் பெயராலே அதைத் தரும சொத்தாக்கி, அதிலிருந்து வரும் வட்டியை, பள்ளி முடிவில் முதலில் தேறிய பையனுக்குக் கல்லூரிப் படிப்பு முடியும் வரையில், இனும் தொகையாகக் கொடுக்கும்படி எழுதி இருந்தேன். அப்பா, கௌபர் என்ற துரையின் பள்ளியில் இப்படிச் சம்பளம் பெற்றுப் படித்தவர். அதனால் அவர் சம்பாதித்த பணத்தை, அதற்கு அடிகோலிய அந்தப் பள்ளிக்கே

கொடுக்க சிபார்சு செய்திருக்கிறேன். ஆனால் இராமலிங்க ஐயருக்கு அது பிடிக்கவில்லை. அந்தப் பள்ளி மேல் நாட்டுக் கிறிஸ்தவ ஸ்தாபனங்கள்மூலம் ஏராளமாக நன்கொடைகள் அடைகிறதாம். ஆகவே இதையும் கொண்டு அதில் போடுவானேன் என்று ஆட்சேபித்திருக்கிறார். மற்றோர் ஆட்சேபம், முதலில் தேறிய பையன் பெரிய இடத்துப் பையனாக இருக்கலாம்; இந்த இலவசப் பணத்தை வேண்டாதவனாயிருக்கலாம்.''

"அது சரிதானே. கொடுக்கிற பணத்தை, பணக் கஷ்டத்தால் படிக்க முடியாமல் இருக்கும் பையனுக்குத்தான் கொடுக்க வேண்டும்; வசதியுள்ள பையனுக்குக் கொடுத்து வீணாக்குவானேன்?''

"உண்மையே. பணம் நல்ல முறையில் பயன்பட வேண்டும்.''

"நல்ல காரியத்தை நல்ல முறையில் செய்து முடியுங்கள்.''

"அப்பொழுது ஒன்று செய்கிறேன். இந்தப் பணத்திலிருந்து வரும் வட்டியிலிருந்துதான் இனாம் தொகை கொடுக்கப்பட வேண்டும். அந்தப் பள்ளியிலிருந்து தேறிய பையன்களில் மேல் படிப்புக்கு வசதியில்லாத — அதிக மார்க் வாங்கிய — பையனுக்குக் கொடுக்கப்பட வேண்டும். இந்தப் பையனைத் தேர்ந்தெடுக்கும் முடிவைச் செய்ய வேண்டிய தர்மகர்த்தாக்கள் மூன்று பேர்: ஒன்று, இராமலிங்க ஐயர்; இரண்டு, வேங்கடேஷ்; மூன்று, அந்தப்பள்ளித் தலைமை ஆசிரியர். இவர்களுடைய தீர்ப்பே முடிவானது. இந்த மாதிரி ஷரத்துக்களுடன் எழுதிப் பதிவு செய்யச் சொல்லிவிடுகிறேன். சரிதானே?''

"அப்படியே செய்யுங்கள்.''

"போகட்டும். நீயும் என் மாதிரியே நினைத்ததால், சிரமம் இல்லாமல் போய்விட்டது. நீ குறுக்கே தடை, செய்திருந்தால் சங்கடமாயிருக்கும்.''

"தடை செய்வதாவது! யார் பணத்துக்கு யார் தடை செய்வது? பணம் என்னுடையது என்று சொல்லிக்கொள்ளக்கூடாது என்று காந்திஜி உபதேசம் செய்ததை எவ்வளவு தரம் எனக்குச் சொல்லியிருக்கிறீர்கள். காந்தி தத்துவத்தின் சாரம் 'தேன த்யக் தேன புஞ்ஜீயாத்', தியாகத்தால் அதை அனுபவிக்க வேண்டும் என்று எவ்வளவு தரம் எனக்குச் சொல்லி இருக்கிறீர்கள். 'எவ்வளவு பணத்தை வேண்டுமானாலும் தேடலாம். ஆனால் அது நம்முடையதென்றோ, நம் சொந்த உபயோகத்திற்கென்றோ, இருக்கக் கூடாது. அதை சமூகத்திற்கே உபயோகப்படுத்த வேண்டும். இந்த உண்மையை ஒருவரும் பின்பற்றுவதில்லை. பணம் படைத்தவர்கள் இவ்விதம் நடந்து கொள்ளவில்லையானால், அவர்கள் ஆசாபாசத்துக்கும், பணத்துக்கும் அடிமைகள் ஆகிவிடுவார்கள். கடைசியில், அவர்கள் மேன்மையடைவதற்குப் பதிலாகத் தாழ்ந்துவிடுகிறார்கள்' என்று காந்திஜியின் தத்துவமான தர்மகர்த்தா முறையைப்பற்றி எவ்வளவு தரம் படித்துக் காட்டியிருக்கிறீர்கள். ஏதோ ஒரு சிறிதளவாவது அவர் காட்டிய வழியைப் பின்பற்றி நடக்கும்படியான சந்தர்ப்பம் கிடைத்ததே என்று நான் மிகவும் பெருமைப்படுகிறேன்."

"போகட்டும், காந்தி காட்டிய வழியின்படி நடக்க வேண்டும் என்று தீவிரமாயிருக்கின்றாயே. நான் அதில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்."

"பின் என்ன? காந்திஜியின் கொள்கைகள் படிப்பதற்கு மட்டுந்தானா? அல்ல; அவற்றை ஒவ்வொருவரும் பின்பற்றி நடக்கவேண்டும்."

"அப்படி எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? காந்திக் குல்லாய் போடுகிறார்கள். பிறந்த தினவிழாவில் அழகாகப் பிரசங்கம் செய்கிறார்கள். மூச்சுக்கு மூச்சு

காந்தியை ஜபம் செய்கிறார்கள். ஆனால், அவர் காட்டிய வழிக்கு எதிர் வழியில்தான் நடக்கிறார்கள்.''

''காந்தி காட்டிய வழியிலேயே எல்லோரும் சென்றால்?...''

''மண்ணில் தெரியும் வானம். ஏசு பகவான் 'பூமியில் கடவுளின் ஆட்சி' என்றார். மகாத்மாஜி 'ராமராஜ்யம்' என்றார். மண்ணிலே வானத்தை இறக்கும் வழியை அவர்கள் கண்டார்கள். அதைப் பிறருக்கும் காட்டினார்கள்.''

''ஆனால்?''

''ஆனால், மனிதன் மண்ணையே கிளறிக்கொண்டிருக்கிறான். வானத்தை அண்ணாந்து பார்க்க மறுக்கிறான்.''

''நம்மைப்போல் சிலர் அவர் வழியைப் பின்பற்றுவதில் ஆர்வம் காட்டுகிறார்கள் இல்லையா?''

''சிலர், பலர் ஆகவேண்டும். அப்பொழுது சீக்கிரமே மண்ணில் தோன்றும் வானம்.''

# 31

உள்ளே நுழையும்போதே, உதவி ஆசிரியர்கள் 'உர்' என்று இருந்தது, தெரிய வந்தது. ஏதோ நடந்திருக்கிறது என்பதை ஊகித்தறிந்து கொண்டேன். சுந்தரத்தைக் கூப்பிட்டேன்.

"என்ன சுந்தரம்? என்ன விஷயம்?"

"எல்லாம் மானேஜர் ஆர்ப்பாட்டம்தான்."

"என்ன நடந்தது?"

"ஆட்டைக்கடித்து, மாட்டைக்கடித்து, மனிதனைக் கடிக்கும் என்பதுபோல், நமது இலாகாவிலும் அவர் விஷமத்தனத்தைக் காட்டுகிறார்."

"என்ன சொன்னார்?"

"இருங்கள். ரங்கசாமியைக் கூப்பிடுகிறேன். ரங்கசாமியைத்தான் ஏதோ கேட்டுக் கொண்டிருந்தார்" என்று ரங்கசாமியைக் கூட்டி வந்தார்.

"என்ன ரங்கசாமி, மானேஜர் ஏதோ கேட்டாராமே?"

"ஒன்றுமில்லை. உதவி ஆசிரியர்கள் யார் யார் என்ன வேலை செய்திருக்கிறார்கள் என்று தெரிய வேண்டுமாம்."

"அதற்கு?"

"ஒவ்வொருவரும் சென்ற வாரத்தில் எவ்வளவு பத்திகள் எழுதி இருக்கிறார்கள் என்ற கணக்கு வேண்டுமாம்."

"அதற்கு நீங்கள் என்ன சொன்னீர்கள்?"

"'எங்கள் ஆசிரியர் வரட்டும், அவரிடமே கேளுங்கள்' என்று சொல்லிவிட்டு வந்தேன்."

"பேஷ், சரியாகச் சொன்னீர்கள். இப்பொழுது என்ன திடீரென்று, ஆசிரியர்கள் சரியாக வேலை பார்க்கிறார்களா என்ற சந்தேகம் வந்தது?"

"ஸார், இந்த மானேஜர் முதலாளிகளைக் கைக்குள்ளே போட்டிண்டிருக்கார். கடுதாசிக் கணக்கை அதிகப்படி எழுதிக் கறுப்புப்பணம் வாங்கிக்கொடுக்கிறார். வேலையாட்கள், போனஸ் பெறுதபடி நஷ்டக் கணக்குத் தயார் செய்கிறார். 'சிக்கனம்' என்று, நியாயமான செலவுகளைக்கூடச் செய்ய விடமாட்டேனென்கிறார். ஆனால், அவர் சம்பந்தப்பட்ட மட்டும் ஆபீஸ் கார், ஆபீஸ் செலவில் வீட்டுவாடகை; ஒவ்வோர் இலாகாவிலும் தலையிட்டு ஜரூர்ப்படுத்துகிறார். அச்சு இலாகா போர்மென் பேரில் ஏதோ குற்றச்சாட்டு. அது லேபர் ஆபீசரிடம் இருக்கிறது. ஏதாவது தவருக நடந்துகொண்டால், ஸ்ட்ரைக்கில் கொண்டுவந்து விட்டாலும் விடும். இத்தனைக்கும் அந்த 'போர்மென்' கரெக்ட்டான பேர்வழி. இவர் அதிகாரத்துக்கு இதெல்லாம் வேண்டியிருக்கிறது. முதலாளியும் இவர் பக்கம் சாய்கிறார்."

"இதனால் என்ன பிரயோசனம்?"

"பிரயோசனம் இல்லாமலா? சீர்திருத்தம் செய்கிறேன் என்பார்கள். நம் இந்திய முதலாளிகளின் மனோபாவம் தான் தெரியுமே. ஆயிரம் ரூபாய் ஓர் அதிகாரி சம்பளம் வாங்கிவந்தால், அவரை விலக்கினால் ஐந்நூறு ரூபாய்க்கு வேறு ஒருவரைக் கொண்டு வந்து விடலாம். இல்லை, அவருக்கு அடுத்த ஸ்தானத்தில் இருந்துகொண்டு முன்னூறு ரூபாய் வாங்குகிறவரை உயர்த்தி நானூறு ரூபாயாக்கி விட்டால், இரண்டு கைகளையும், இரண்டு

கால்களையும் தூக்கி சலாம் போட்டுவிட்டு வேலை செய்வார். பாக்கி ரூபாய் மிச்சந்தானே ?''

''வேலைக்காரனின் சம்பளத்தை மிச்சம்பிடித்தா லாபம் பெறுவது? தொழிலில் லாபத்தைப் பெருக்கிப் பயன் அடைய வேண்டும். இது விசித்திரமான பொருளாதார தத்துவமாயிருக்கிறதே !''

''இதுதான் இந்திய நிறுவனத்துக்கும், ஆங்கில நிறுவனத்துக்கும் உள்ள வித்தியாசம். ஆங்கிலேயன் சிப்பந்திகளின் ஊதியத்தை அதிகப்படுத்தி, வேலையின் திறனையும், தரத்தையும், அளவையும் அபிவிருத்தி செய்வான். நம்மவர்கள் சிப்பந்திகளின் சம்பளத்தை மிச்சப்படுத்தித் தொழிலையே மங்கச் செய்வார்கள்.''

''சரி ; இப்பொழுது நம் இலாகாவில் தலையிடக் காரணம் ?''

''எல்லா இலாகாவிலும் தலையிட்டதைப் போலத் தான் நம் இலாகாவிலும் தலையிட்டிருக்கிறார். ஒரு குழப்பத்தை உண்டு பண்ணினால், அதன் மூலம் சில குப்பைகள் கிளம்பும் அதை வைத்துக் கொண்டு, வம்பு செய்ய ஆரம்பித்து, பிடிக்காதவர்கள் யாராவது இருந்தார்களானால், அவர்களைத் தொலைப்பதற்கு வழிகோலலாம்.''

''நீங்கள் எல்லோரும் யூனியன் மெம்பர்களா ?''

''ஆம், ஜர்னலிஸ்ட் பெடரேஷன் மெம்பர்கள்.''

''சரி, மானேஜருடன் பேசுகிறேன்.''

''சின்ன விஷயத்துக்காகப் பகைத்துக் கொள்ள வேண்டாம்.''

டெலிபோனில் மானேஜரின் எண்ணைத் திருகினேன். மானேஜர் பேசினார். ''என்ன சார், ஏதோ விவரங்கள் கேட்டீர்களாமே ?''

''ஆமாம், எல்லா இலாகாக்களிலும் ரொட்டீன் (Routine) வழக்கமாகச் சில தகவல்கள் எடுப்பது என்று

தீர்மானித்தோம். அதன்படி சில தகவல்கள் கேட்டேன்.''

''எனக்கு மற்ற இலாகாக்களில் என்ன கேட்டீர்களோ தெரியாதே. ஆனால், வேறு இலாகாவில் கேட்க வேண்டியதை எங்கள் இலாகாவில் கேட்டுவிட்டீர்கள் என்று நினைக்கிறேன்.''

''எப்படி?''

''ஒன்று கேட்கலாமா? நம் பத்திரிகையின் மதிப்பை எப்படி எடை போடுவீர்கள்?'' என்று நிறுத்தினேன்.

பதில் இல்லை.

''பழைய பத்திரிகைகளைக் கிலோ கணக்கில் எடை போடுவோமே, அப்படியா?'' என்றேன். மானேஜர் சிரித்தார்.

''கம்பாஸிட்டர்கள் எவ்வளவு காலி எழுத்துக் கோத்திருக்கிறார்கள் என்ற கேள்வியை ஆசிரியர்களிடம் கேட்டு விட்டீர்கள்.''

''இல்லை, கம்பாஸிட்டர்களையும் கேட்டிருக்கிறேன்.''

''பேஷ், இரண்டு கணக்கும் அப்பொழுது ஒன்று தான். அவர்கள் பெட்டியில் இருக்கும் ஈய எழுத்தைக் கோக்கிறார்கள். ஆசிரியர் வார்த்தையைக் கோக்கிறார். உணர்ச்சியை உண்டுபண்ணுகிறார். ஆனால், உங்கள் பரீட்சைப்படி கம்பாஸிட்டர் ஜயித்துவிடலாம். அப்பொழுது, 'நாதஸ்வரக்காரர் விட்டுவிட்டு வாசித்தார்; அவருக்குக் கொடுக்காதே. ஒத்து ஊதியவர் விடாமல் வாசித்தார்' என்று ஒத்து ஊதியவருக்கு சம்மானம் செய்தாரே, அந்த ரசிகரைப்போல ஆக வேண்டியதுதான்.''

''மிஸ்டர் ராஜ், நிர்வாகிகள் பல விஷயங்கள் கேட்கக்கூடும். அதெல்லாம் வித்யாசமாக எண்ணி, அதில் சிக்கல் உண்டு பண்ணிவிடாதீர்கள். பீ எ ஸ்போர்ட்'' என்றார் மானேஜர்,

இத்துடன் அன்றைய விவகாரம் முடிந்தது. ஆனால் இதன் விளைவு என்னுவது வேறு ஓர் உருவத்தில் கிளம்பும் என்பதை ஆசிரியர் குழாத்தில் ஒவ்வொருவரும் எதிர் பார்த்திருந்தோம். எல்லா இலாகாக்களிலும் ஒருவித அரயசில் புகுந்துகொண்டு, நிர்வாகிகளின் ஆட்கள் சிலர், தொழிலாளிகளின் ஆட்கள் சிலர், நடுத்தரம் சிலர் என்று ஏற்பட்டது. ஒருவருக்கொருவர் குறை சொல்வதும் அவதூறும் மிகவும் சகஜமாகிக்கொண்டு வந்தன. ஒருவருக்கும் வேலையில் உற்சாகமில்லை. ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு விதத்தில் குறை. எல்லோருக்கும் அதிருப்தி. இது எங்கேபோய் நிற்குமோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம்.

இரண்டு மாதம் கழித்து, எனக்கு அழைப்பு வந்தது. நாய்க்கரின் ஆபீஸ் பையன், "சவகாசம் இருக்கும் பொழுது, ஐயா உங்களை வந்துவிட்டுப் போகச்சொன்னுங்க" என்று சொல்லிவிட்டுப் போனுன். "சரி" என்று சொல்லி அனுப்பினேன். இது எப்படிப்பட்ட அழைப்பு என்பதையும் ஊகித்துக்கொண்டேன். இப்படி நேர்ந்தால் இப்படிச் செய்வது என்ற முடிவுக்கும் வந்து விட்டேன். பத்திரிகை அச்சுக்குப் போனவுடன் நாய்க்கரிடம் சென்றேன்.

"வாருங்கள் நடராஜ்; உட்காருங்கள்" என்று உபசரித்து உட்காரவைத்தார். பையனைக் காபி கொண்டு வரச்சொன்னுர். என் பையன், மனைவி இவர்கள் சௌக்யமா என்று கேட்டார். என் பையன் எங்கே எந்த வகுப்பில் படிக்கிறுன் என்று அன்புடன் கேட்டார். எனக்கு இந்த விசாரணையெல்லாம் ஆத்திரத்தைத்தான் உண்டு பண்ணியது. 'ஏன் இந்தச் சுற்றிவளைப்பு, விஷயத்தை சொல்லித் தொலையுங்களேன்' என்று சொல்லி விடலாம் போல் தோன்றியது. பேசாமல் அவருடைய கேள்விகளுக்கு மாணவன் போலப் பதில் சொல்

விக்கொண்டு போனேன். அவருடைய சுபாவம் தெரியும்; பதினைந்து நிமிஷமாவது அவர் தமது அன்பைச் சொரிந்து விட்டுத்தான் எதிராளியின்மேல் தமது குற்றச்சாட்டை ஆரம்பிப்பார். ஆனால், இதற்கெல்லாம் எனக்குப் பொறுமை இல்லை. என் குடும்பத்தின் க்ஷேமங்கள், என் தேகநிலை, எல்லாவற்றையும் அறிந்துகொண்டபின், தொண்டையைக் கனைத்துக் கொண்டார். சரி. 'அட்டென்ஷன்' என்று உன்னிப்பாகக் கவனிக்கத் தொடங்கினேன்.

"ஒன்றுமில்லை, நடராஜ். நேற்று எழுதிய தலையங்கத்தைப் பற்றி பல ஆட்சேபங்கள் வந்திருக்கின்றன."

"யார் ஆட்சேபித்திருக்கிறார்கள்?"

"அநேகர். மந்திரிகள், காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் இப்படிப் பெரியவர்கள் ஆட்சேபிக்கிறார்கள்."

"அதில் ஆச்சரியமென்ன! அரசாங்கம், ஜெயிலில் இருக்கும் கைதிகளின்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்ததை ஜனங்கள் விரும்புவார்களா? கட்சித் தலைவர்கள்தான் விரும்புவார்களா?"

"அரசாங்கம், துப்பாக்கிப் பிரயோகம் பற்றி விசாரணை செய்ய ஒரு கமிஷன் ஏற்படுத்தியிருக்கிறதே. அதிலிருந்தே அதன் நேர்மை தெரியவில்லையா?"

"கமிஷன் யார்? ஓர் அரசாங்க அதிகாரியைத்தான் விசாரணைக்கு நியமித்திருக்கிறார்கள். ஓர் அரசாங்க உத்யோகஸ்தர் தமக்கு மேலிருப்பவர்களைக் கண்டித்து அறிக்கை கொடுப்பாரா?"

"கைதிகள் வன்முறையில் இறங்கினதால்தானே, இவர்கள் இப்படிச் சுடும்படி நேர்ந்திருக்கிறது?"

"கைதிகள் சிறைக்குள் இருக்கிறார்கள். அவர்களிடம் வன்முறைக்கு வேண்டிய கத்தியோ, துப்பாக்கியோ, குண்டாந்தடியோ எங்கிருந்து கிடைத்திருக்கும்? கும்ப

லாகக் கூடியிருக்கலாம்; கூச்சல் போட்டிருக்கலாம். கூட்டாக எதிர்த்து வந்திருக்கலாம். இதைத் துப்பாக்கிப் பிரயோகம் செய்யாமலே சமாளித்திருக்கலாமே. ஆறு கைதிகள் மரணமடைய வேண்டியதில்லையே!"

"அது சரி, மிஸ்டர் நடராஜ். நம் பத்திரிகை தேசியப் பத்திரிகை. காங்கிரஸ் அரசாட்சியை ஆதரிக்கும் பத்திரிகை. திடீரென்று அரசாங்கத்தை எதிர்த்து எழுதியிருப்பது முற்றிலும் சரியல்லவே."

"தேசிய பத்திரிகை என்பதனால்தான், நான் இதில் இத்தனைகாலம் வேலை செய்ய முடிந்தது. ஆனால் ஒன்று; சுதந்திரத்துக்கு முந்திய காங்கிரஸ் வேறு, சுதந்திரத்துக்குப் பிந்திய காங்கிரஸ் வேறு. சுதந்திரத்துக்கு முன்னால் அந்நிய ஆட்சியை எதிர்க்க வந்த ஒரே கட்சி, ஜனங்களின் கட்சி, தேசியக் கட்சி, காங்கிரஸ். சுதந்திரத்திற்குப்பின் காங்கிரஸ் கட்சி, அநேகம் கட்சிகளில் ஒன்று, பலமுள்ள கட்சியாயிருக்கலாம்; செல்வாக்குள்ள கட்சியாயிருக்கலாம். இதர கட்சிகளும், நம் ஜனங்களின் வாக்குரிமை பெற்ற கட்சிகளே. ஆகவே, அவையும் ஜனங்களின் கட்சிகள்தான். சுதந்திரத்திற்கு முன் 'காங்கிரஸ் வேறு, தேசம் வேறு' என்று சொல்ல முடியாது. ஆனால், 'இன்று காங்கிரஸ் கட்சி வேறு, தேசம் வேறு' என்று சொல்ல முடியும். கட்சி நலனுக்காக, தேச நலனைப் புறக்கணிக்கக்கூடும். நாம் தேச நலனைப் பற்றித்தான் கவலை கொள்ள வேண்டும். அரசியல் கட்சியின் நலனைப்பற்றி அல்ல."

"இதைத்தான் நீங்கள் காந்தியிடம் கற்றுக்கொண்டீர்களா? காந்தி பக்தர் என்று சொல்லிக்கொள்கிறீர்களே?"

"ஆம். மகாத்மாஜியே சொல்லியிருக்கிறாரே. 'காங்கிரஸின் வேலை முடிந்துவிட்டது. இனி அதைக் கலைத்து

விட வேண்டியதுதான்' என்றார். ஆனால், தலைவர்கள் அதை ஏற்கவில்லை."

"நேற்றைய தலையங்கம், மிஸ்டர் நடராஜ், உங்கள் தனிப்பட்ட அபிப்பிராயமாக இருக்கலாம். எங்கள் பத்திரிகையின் அபிப்பிராயமாக அது இருக்கக்கூடாது."

"நானும், பத்திரிகையும், நீங்களும் ஒன்று என்று நினைத்திருந்தேன்."

"இல்லை, நடராஜ். இனிமேல் உங்கள் தலையங்கங்களை என்னிடம் அனுப்புங்கள். நான் அனுமதித்த பின்பு பிரசுரிக்கப்பட வேண்டும்."

"அப்பொழுது, இன்று முதல் நீங்கள் பத்திரிகையின் ஆசிரியர்."

"சரியாய்ப்போச்சு. இது தெரியாதா? என்றுமே நான்தான் ஆசிரியர். பத்திரிகையில் என் பெயர்தான் அச்சாகி வருகிறது என்பது நினைவுக்கு வரவில்லையா? சட்டப்படி நான்தான் ஆசிரியர். ஏதாவது தகராறு ஏற்பட்டால் அனுபவிக்க வேண்டியவன் நான்தான். நீங்கள் அல்ல."

"ரொம்ப நன்றி. இவ்வளவு தெளிவாக நான் புரிந்து கொள்ளவில்லை. இப்பவே தங்கள் பார்வைக்கு அனுப்பி வைக்கிறேன்" என்று சொல்லிவிட்டுக் கீழே வந்தேன்.

நண்பர்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள்; "சுந்தரம், ரங்கசாமி, கதை முடிந்தது" என்றேன்.

"என்ன நடந்தது, விஷயத்தைச் சொல்லுங்கள்" என்றார்கள்.

சுருக்கமாகச் சொன்னேன்.

"இரண்டு மாதமாக கிருஷ்ணமாச்சாரியைத் தயார் செய்து வருகிறார்கள். அவர்தான் அநேக வருஷங்களாக

வேலையில்லாமல் திண்டாடுகிறவராயிற்றே. அவரும் வந்து விடுவார்" என்றார் சுந்தரம்.

"அவருடன் வேலை பார்ப்பது மிகவும் சிரமம்" என்றார் ரங்கசாமி.

"நாங்களும் ராஜிநாமா செய்து விடுகிறோமே" என்றார் சுந்தரம்.

ரங்கசாமியும் 'ஆமாம்' என்று தலையசைத்தார்.

"திடீரென்று அவசரப்பட்டு ஒன்றும் செய்து விடாதீர்கள். அவரவர்களுக்குக் குடும்பம் இல்லையா? என் கதை முடிந்தாலும், உங்கள் கதைகள் தொடர் கதைகளாகவே இருக்கட்டும்."

"நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம்?"

"திடீரென்று என்ன சொல்ல முடியும். இன்றைய விவகாரம் முடியட்டும். போகப்போகத்தான் யோசனை செய்ய வேண்டும்."

என் ராஜிநாமா கடிதத்தை நாய்க்கரிடம் கொடுத்தேன். நாய்க்கர் வாங்கிக்கொண்டார்; படித்தார். ஆச்சரியமோ, கோபமோ, அனுதாபமோ, அவர் முகம் காட்டவில்லை. மானேஜருக்கு போன் செய்தார். "நம் ஆசிரியர் நடராஜ், ராஜிநாமா செய்திருக்கிறார். அதை அங்கு அனுப்புகிறேன். அவருக்குச் சட்டப்படி சேரவேண்டிய தொகைகளை எல்லாம் கணக்குப்பார்த்துக் கொடுத்து, அவரை 'ரிலீவ்' பண்ணுங்கள். பாங்கியிலிருந்து பணம் எடுத்து வந்து, ரொக்கமாகவே கொடுத்து விடுங்கள்" என்றார்.

# 32

கையிலிருந்த காகிதக் கட்டை, சரோஜாவிடம் கொடுத்தேன்.

"என்ன இது, இவ்வளவு பணம்!" என்று ஆச்சரியப்பட்டாள்.

"என் கடைசிச் சம்பளம்."

"கடைசிச் சம்பளமா! என்ன நேர்ந்துவிட்டது?"

"முதலாளிகளுக்கு என்னைப் பிடிக்கவில்லை."

"பன்னிரண்டு வருஷமாகப் பிடித்திருந்தது. இப்பொழுது திடீரென்று பிடிக்காமல் போவானேன்?"

"பழகப்பழகப் பாலும் புளிக்கும். நானும் மாறிக்கொண்டு போகிறேன். அவர்களும் மாறிக்கொண்டு போகிறார்கள். இந்த வெவ்வேறு மாற்றங்கள் மனவேற்மையை வளர்த்து விட்டிருக்கலாம்."

"திடீரென்று இப்படிச் செய்து விடலாமா?"

"செய்தாகிவிட்டது."

"இனி?"

"இனிமேல்தான் அதைப்பற்றிச் சிந்திக்கவேண்டும்."

சரோஜாவின் முகத்தில் இருந்த வேதனை நன்றாக விளங்கிற்று. மாதாமாதம் சுளையாகப் பணம் வரும்

உத்தியோகத்தை உதறிவிட்டு வருவது ஒரு புத்திசாலித் தனமான காரியமா? அதன் விளைவு எப்படியெல்லாம் வந்து சேரப்போகிறதோ?

"என்ன கவலைப்படுகிறாய், சரோஜா?"

"வருங்காலத்தைப் பற்றித்தான்."

"நான் எவ்வளவு தரம் சொல்லியிருக்கிறேன். காந்திஜி வறுமையை விரும்பி மேற்கொண்டார். வறுமை இப்பொழுது வலுவில்அடைக்கலமாக வருகிறது. காந்திஜியின் வழியைப் பின்பற்றிச் செல்ல இதுவும் ஓர் அனுகூலமல்லவா?"

"நாம் மாத்திரம் காந்தியைப் பின்பற்றுகிறோம், காந்திவழி நடக்கிறோம் என்று சொன்னால் போதுமா? பெரிய பெரிய தலைவர்கள் அதற்கு மாறான வழியில் போகிறார்கள். நாம் பின்பற்றுவதால் மாத்திரம் என்ன பயன்?"

"பிறர் என்ன செய்கிறார்கள், எப்படிச் செய்கிறார்கள் என்பதில் நமக்கு என்ன அக்கறை? நம் வரையில் நம் மனச்சாட்சிப்படி நடந்து கொண்டால் போதும். எல்லோரும் தகாத காரியங்கள் செய்கிறார்கள் என்பதற்காக நாமும் அப்படிச் செய்துவிடலாமா?"

"காந்தியைப் பின்பற்றுவதில் எனக்குச் சிறிதும் தயக்கமேயில்லை. வீட்டு வாடகை, ரேஷன் அரிசி, பால் பணம், துணிமணி இவற்றுக்கெல்லாம் வகை செய்து விட்டுத் தானே காந்தியைப் பின்பற்றியாக வேண்டும். அதற்கு வழி?"

"அதற்கும் வழி செய்யலாம். வடக்கத்தி தினசரி என்னை அடிக்கடி எழுதச் சொல்லியிருக்கிறது. பத்திரிகையில் இருந்ததால் ஒப்புக்கொள்ளவில்லை. 'மதராஸ் கடிதம்' என்று வாராவாரம் எழுதி அனுப்புகிறேன்.

மேலும் சில பத்திரிகைகளுக்கும் அவ்வப்பொழுது அரசியல் கட்டுரைகள் எழுதி அனுப்புகிறேன். மொழிபெயர்ப்புக்கள் சில செய்கிறேன். ஏதோ அரைவயிற்றுக்கு சம்பாதித்து விடுகிறேன்.''

''அப்படியானால் கவலையில்லை. முதலில் என்னவோ ஏதோவென்று கலங்கினேன். யோசனை செய்கையில், சமாளிக்கலாம் என்று தோன்றுகிறது. பாக்கி அரை வயிற்றுக்கு நான் சம்பாதித்து விடுகிறேன்.''

''ஏன், நீ உத்தியோகத்துக்குப் போக விரும்புகிறாயா?''

''ஆம், போனால் என்ன?''

''ஒன்றுமில்லை. வெகு நாட்கள் வீட்டிலேயே இருந்து விட்டு, இப்பொழுது வேலை செய்வதென்றால் சிரமமாயிருக்குமே என்றுதான் யோசிக்கிறேன்.''

''வெகுநாள் வேலை செய்துவிட்டு இப்பொழுது வீட்டிலிருப்பது சுலபமா? அதுபோலத்தான். பரவாயில்லை. எனக்குச் சிரமம் ஒன்றும் இல்லை. வீட்டில் வேலையில்லாமல் இருப்பதுதான் கஷ்டமாயிருக்கிறது.''

''ஆனால், நீ நினைப்பதுபோல வேலை கிடைத்து விடுமா?''

''அது கைமேலேயே இருக்கிறது. நான்தான் அதை வெகு நாட்களாக ஏற்றுக்கொள்ளாமல் ஒத்திப்போட்டு வந்திருக்கிறேன்.''

''அட, எனக்குத்தெரியாமல் ரகசியமாக மனத்திற்குள்ளேயே வைத்திருக்கிறாயா?''

''பரம ரகசியம் ஒன்றும் இல்லை. உங்களுக்கு ஓரளவு தெரிந்த விஷயந்தான். யோகானந்தஜிக்கு அவர்கள் பள்ளியில் என்னைச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பது

வெகுநாளைய விருப்பம். நான் சரி என்றால், உடனே கிடைத்துவிடும்.''

''அப்பொழுது எனக்குக்கூட ஒரு வேலை வாங்கிக் கொடுத்துவிடேன்.''

''பார்க்கலாம். அதுவும் நடந்தாலும் நடக்கலாம் முயற்சி செய்கிறேன். நடந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.''

ஸ்வாமி யோகானந்தஜி, சென்னை ராமகிருஷ்ண மடத்தின் தலைவர்; சிறந்த மகான். மக்களுக்குத் தொண்டு செய்வதில் அளவு கடந்த உற்சாகம். ராமகிருஷ்ண மடத்தின் சார்பில் பல நற்பணிகள் செய்யப்பட்டுவருகின்றன என்பதை யாவரும் அறிவர். ஒரு வைத்தியசாலை, ஓர் ஆண்கள் பள்ளி, ஒரு பெண்கள் பள்ளி, ஒரு பதிப்பகம் இப்படிப் பல அரிய நிறுவனங்கள் நடந்து வருகின்றன. சரோஜா, அவர்கள் பள்ளியில்தான் படித்தாள். அப்பொழுது ஸ்வாமிஜி ஹாஸ்டல் வார்டனாயிருந்தார். சரோஜாவைச் சிறு பிராயத்திலிருந்து அறிவார். அவளிடம் அலாதியான அன்பு. படிப்பு முடிந்ததும், அந்தப் பள்ளியிலேயே வேலைபார்த்து, வாத்தியார் பரீட்சைக்குப் போய் அந்தப் பட்டத்தையும் பெற்றாள். ஸ்வாமிஜிக்கு அவளுடைய குணமும், திறமையும் பற்றி நன்கு தெரியும். எத்தனையோ தடவை என்னையும் அழைத்துக்கொண்டு ஸ்வாமிஜியிடம் சென்றிருக்கிறாள். ஸ்வாமிஜி அன்பாக நடந்து கொள்வார். பொதுப்படையாக எல்லாவற்றையும் பேசுவோம். என் மகாத்மா பக்தியும், காந்தி தத்துவத்தில் உள்ள ஈடுபாடும் அவருடைய பிரியத்தைச் சம்பாதித்துக் கொடுத்தன. நாயன்மார்களையும், ஆழ்வார்களையும் பற்றி நான் சொல்லும் விஷயங்களைக் கேட்டு அவர் அப்படியே மெய்மறந்து நிற்பார்.

டெலிபோனில் ஸ்வாமிஜியைக் கூப்பிட்டாள் சரோஜா.

"நானும் என் புருஷனும் தங்களைப் பார்க்க விரும்புகிறோம். எப்பொழுது வரலாம்?" என்று கேட்டாள்.

"என்னம்மா, நீங்கள் இருவரும் வருவதற்கு நேரம் என்ன? எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம். ஆனாலும் நான் பிற்பகல் மூன்றரை மணிக்கு ஓய்வாயிருப்பேன். அப்பொழுது இடைஞ்சல் இல்லாமல் பேசலாம்" என்றார்.

சரியாக மூன்றரை மணிக்கு மடத்துக்குச்சென்றோம். ஸ்வாமிஜி புன்சிரிப்புடன் எங்களை வரவேற்றார். நாங்கள் அவரை வணங்கினோம். அவர் ஆசீர்வதித்தார். மூவரும் உட்கார்ந்து கொண்டோம்.

"பத்திரிகை எப்படி இருக்கிறது?" என்றார் ஸ்வாமிஜி. நான் சரோஜாவைப் பார்த்தேன். சரோஜா என்னைப் பார்த்தாள்.

"ஸ்வாமிஜி, உத்தியோகத்தை ராஜிநாமா செய்து விட்டார்" என்றாள்.

"அப்படியா? என்ன கஷ்டம்? வேறு என்ன செய்யப்போவதாக உத்தேசம்?"

"ஏதாவது தனிப்பட்ட முறையில் பத்திரிகைகளுக்கு எழுதிக் கொண்டிருக்கலாம் என்று நினைக்கிறேன். சில புத்தகங்கள் எழுதலாம் என்றும் நினைக்கிறேன். ஆனால், சரோஜா ஒரு யோசனை தெரிவித்தாள். சரோஜா, வாத்தியார் வேலைக்குத் திரும்பவும் போவதாகச் சொன்னாள். அப்பொழுது எனக்கு ஒரு புது யோசனை உதயமாயிற்று."

"என்ன யோசனை என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?"

"தாராளமாக. அதற்குத்தானே இங்கு வந்திருக்கிறோம். சரோஜாவும் நானும் முடிந்த அளவில் காந்தி சென்ற வழியில்தான் போய்க்கொண்டிருக்கிறோம்.

சரோஜா வாத்தியார் என்றவுடன், எனக்குக் கல்வி விஷயம் ஞாபகம் வந்தது. காந்திஜி, இப்பொழுதுள்ள கல்வி முறையைச் சிறிதும் ஏற்கவில்லை.

"இன்றைய கல்வியில், வாழ்க்கை இரண்டு துண்டாகப் பிரிக்கப்படுகிறது. படிக்கும்பொழுது, வாழ்க்கையில் பிடிப்பு இல்லை; வாழும்பொழுது படிப்பில் பிடிப்பு இல்லை. தவிரவும் இன்றைய முறையில் படிப்புக்கும், தொழிலுக்கும் சம்பந்தமில்லாமல் இருக்கிறது. படிக்கிற வர்க்கம் உடலை வருத்தி வேலைசெய்ய முன்வருவதில்லை. வேலை பார்க்கும் வர்க்கத்திற்கும் படிப்பால் பலன்கிடைப்பதில்லை. அதனால்தான் இரண்டையும் பிணைக்கும் முறைதான் சரியானது என்றார் காந்திஜி. தொழிலுடன் சேர்ந்த கல்விதான் சரியான கல்வி என்று கூறினார் மகாத்மாஜி. அதுவே மூலாதாரக் கல்வி என்றார். ஓர் அடிப்படைத் தொழில், போதனைக்குக் கருவாகிறது. அந்தத் தொழில், கல்விக்குச் சாதனமல்ல, கருவியுமல்ல; அதன் பிரிக்க முடியாத பகுதியாயிருக்கிறது. அந்தத் தொழிலின் மூலம் பின்கண்டவை மாணவனுக்குச் சாத்தியமாகின்றன:

"1. மாணவனின் எல்லாச் சக்திகளையும் மலரச் செய்தல்.

"2. மாணவனின் வாழ்க்கைக்குப் பயன்படும் பலவேறு வகையான அறிவை வளர்த்தல்.

"3. பையன் வாழ்வதற்குப் பயன்படும் தொழிலைக் கற்பித்தல்.

"இந்தக் கல்வி முறையில் அறிவின் சேவைக்கும், உடலின் சேவைக்கும் வித்தியாசம் கிடையாது.

"மற்றுமொரு முக்கிய வித்தியாசமிருக்கிறது. இன்றைய கல்வி முறையில் அதிகமான செலவு ஏற்படுகிறது. ஆனால் காந்தீய முறை வருமானத்தோடு இருக்கிறது.

இதனால் நஷ்டம் ஏற்படுவதில்லை. சமூகத் தேவையும், பூர்த்தி செய்யப்படுகிறது. உதாரணமாக, தச்சுவேலை சொல்லித் தந்தால், அதனால் உற்பத்தியாகும் மரச் சாமான்களை விற்கலாம். அதுபோலவே நெய்த துணிகள், பின்னிய பிரம்பு சாமான்கள், வளைந்த மண்பாண்டங்கள் இப்படிப் பல பொருள்களை உற்பத்தி செய்து விற்க முடியும். காய்கறித் தோட்டம் போட்டாலோ, விற்க வேண்டியதில்லை. சொந்த உபயோகத்திற்கே வைத்துக் கொள்ளலாம். இப்படியெல்லாம் காந்திஜி உபதேசித்திருக்கிறார். வடக்கே சில இடங்களில் இந்த முறையைப் பின்பற்றிப் பள்ளிகள் நடக்கின்றன. ஆனால், இங்கு இந்த முறையைக் கொண்டுவர முயன்றபொழுது, வருணாசிரம தர்மத்தை ஸ்தாபிக்க முயல்கிறார் என்று பயந்து, அதை மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால், உங்கள் ஸ்தாபனம் மிகவும் பெரியது. அதில் இம்மாதிரி விஷயங்களில் ஈடுபட்டுப் பரீட்சை செய்ய இடமுண்டு.''

''உங்களுக்கு ஆர்வமிருக்கிறது. இந்த ஆர்வத்தைச் செயலில் காட்ட முடியும் என்று நினைக்கிறீர்களா?''

''ஸ்வாமிஜி, காந்திஜி சொன்னவையெல்லாம் நடைமுறையில் சாதிக்கக் கூடியவை என்று நம்புகிறேன். மகாத்மா ஒருபொழுதும் விண்ணிலே பறந்ததில்லை; மண்ணிலேதான் இருந்தார். ஆனால், விண்ணை மண்ணிலே கொண்டுவர முயன்றார். அந்தரங்க சுத்தியோடு செய்தால், இது வெற்றிகரமாக நடக்கும் என்று என் அந்தராத்மா சொல்லுகிறது.''

''உண்மைதான். மகாத்மா என்றுமே ஆகாசத்தில் பறந்ததில்லைதான். தாம் செய்ய முடியாததையோ, செய்ய விரும்பாததையோ பிறரைச் செய்யச் சொன்னதில்லை. வடக்கே, இந்த முறையில் இயங்கிக் கொண்டிருக்கும் சில பள்ளிகளை நானே பார்த்திருக்கிறேன்.''

"அப்பொழுது அதைச் செயல்படுத்தலாம் என்று நினைக்கிறீர்களா?"

"மிஸ்டர் நடராஜ், எனக்கே சில காலமாக இத்தகைய பள்ளி நடத்த வேண்டும் என்று எண்ணம் இருந்து வருகிறது. ஆனால், இப்பொழுது நடந்துவரும் பள்ளிகளில் இந்த முறையைப் புகுத்த முடியாது. புதிதாக ஆரம்பிக்கப்படும் ஒரு ஸ்தாபனத்தில்தான் இதைச் செயல்படுத்த வேண்டும் என்றிருந்தேன். எப்படிப்பட்ட ஸ்தாபனத்தில் இதைப் புகுத்துவது என்று முடிவு செய்ய முடியாமல் இருந்தேன். சில நாட்களுக்கு முன்புதான் ஒரு தீர்மானத்திற்கு வந்தேன். கீழ்க்கடைக்கும் கீழேயிருக்கும் சில சிறுவர்கள் தகாத காரியங்களில் ஈடுபடுகிறார்கள். இப்படிப்பட்ட சிறுவர்களுக்கு ஒரு பள்ளி ஏற்படுத்த நினைத்திருக்கிறேன். அதில் இந்த முறையை அமலுக்குக் கொண்டு வரலாம் என நினைக்கிறேன்."

"ஸ்வாமிஜி, ரொம்ப நல்ல காரியம்."

"ஆனால், இப்படிப்பட்ட சிறுவர்களிடையே வேலை செய்வதற்கு உங்களுக்கு ஏதும் ஆட்சேபம் இல்லையா?"

"அதென்ன, ஸ்வாமிஜி, அப்படிக் கேட்கிறீர்கள்? நான் சொல்வதற்கு மன்னிக்க வேண்டும். மகாத்மா என்னவோ அவருடைய தலைமையினால் மக்களின் ஆத்மபலத்தையும், அறநெறியையும் உயர்த்தியிருந்தார். ஆனால் இப்பொழுதுள்ள நிலை வேறு. நீங்கள் சொல்லும் சிறுவர்கள், தாங்கள் செய்யும் தவறுகளை ஒளிவுமறைவில்லாமல் பகிரங்கமாகச் செய்கிறார்கள். வயது வந்த மக்கள், தலைவர்கள், பெரிய சீமான்கள் ஆகியோர் தாங்கள் செய்யும் தகாத காரியங்களை மறைமுகமாகச் செய்கிறார்கள். இவ்வளவுதான் வித்யாசம். என்னைக் கேட்டால், சிறுவர்களைத் திருத்துவது சுலபம்."

"உண்மைதான். பொதுமக்களிடையே இப்பொழுது அறநெறி மிகவும் தாழ்ந்து போயிருக்கிறது என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். அதை உயர்த்துவதற்கு முன்வருவாரில்லை."

"ஆனால், எங்கு ஆரம்பிப்பது, எப்படி ஆரம்பிப்பது என்பதுதான் ஒருவருக்கும் புரியவில்லை."

"அதற்குத்தான், நடராஜ், சொல்ல வந்தேன். அடிமட்டத்திலிருந்து ஆரம்பியுங்கள். எல்லோராலும் ஒதுக்கப்பட்டு, புறக்கணிக்கப்பட்டு, வெறுக்கப்பட்டிருக்கும் சிறுவர்களை வைத்துக்கொண்டு ஆரம்பிப்போம். அஸ்திவாரம் பலமானால், கட்டிடத்திற்கு பலம். வேர் பலமானால், மரத்திற்கு பலம். அதர்மர்கள் என்பவர்களை உயர்த்திவிட்டால், உத்தமர்கள் அதற்கு மேலும் உயர்ந்துதானே ஆகவேண்டும். நாம் ஏணியின் கடைசிப் படியிலிருந்து ஆரம்பிப்போம். சிறிது சிறிதாக மேலே ஏறிப் போகலாம். சம்மதம்தானே?"

"காத்துக் கொண்டிருக்கிறேன். இப்பவும் என் அதிருஷ்டம் கைவிடவில்லை. சொல்லி வைத்தாற்போல் நடக்கிறது."

"இது ஆண்டவன் செயல்."

"எப்பொழுது தொடங்கலாம்?"

"தாமதம் ஏன்? இப்பொழுதே. பூந்தமல்லி போகும் வழியில் நிறைய இடமுள்ள ஒரு கட்டிடத்தை ஒரு செல்வந்தர் மடத்திற்கு அளித்திருக்கிறார். அங்கே ஆரம்பித்துச் சிறிதுசிறிதாக வளர்க்கலாம்."

"அப்படியே, ஸ்வாமிஜி."

இருவரும் ஸ்வாமிஜியை வணங்கினோம்.

# 33

முப்பது சிறுவர்களுடன் பள்ளி ஆரம்பமாயிற்று. ராமகிருஷ்ண மடத்தார், குடிசை வாழ் மக்களிடையே தொடர்பு கொண்டிருந்தனர். புயல் நிவாரணம், பஞ்ச நிவாரணம், தீ நிவாரணம் — இப்படி அந்த மக்களுக்கு ஆபத்து ஏற்பட்ட காலங்களில் எல்லாம் அவர்களால் இயன்ற உதவிகளை அளித்து வந்திருந்தனர். ஆகவே, அந்த மக்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு இருந்தது. இந்தமாதிரி பள்ளி ஆரம்பிக்க எண்ணியிருப்பதை அந்த மக்களிடம் தெரிவித்தபோது, அவர்கள் இதை மிகவும் ஆதரித்தனர். அந்தச் சமூகத்தினர் கூட வேண்டாத சிறுவர்களை, எங்களுக்கு அன்பளிப்பாக அளித்தனர். நடத்தை கெட்டுச் சமூகத்திற்கு இடைஞ்சலாக இருக்கும் சிறுவர்களை, காந்தீய முறையில் திருத்தி, சமூகத்திற்கு உபயோகம் உள்ள மனிதர்களாக ஆக்க வேண்டும் என்பதே எங்கள் குறிக்கோள்.

அநேகம் சிறுவர்கள் அனாதைகள். சில சிறுவர்கள் தாய் தந்தையர் இருந்தும், அவர்களால் கைவிடப்பட்டவர்கள். சிலர் தந்தை தாய்மார்களை உதறிவிட்டுத் தங்கள் வழியே சென்றவர்கள். அடிப்படையில் இவர்கள், வாழ்க்கையில் அன்பைக் கண்டிராதவர்கள்; குடும்பம் என்ற அரவணைப்பின் இனிமையை அனுபவிக்காதவர்கள்; நல்ல மனிதர்களுடன் பழகும் சந்தர்ப்பம் கூட வாய்க்கப்பெறாதவர்கள்; ஒருவிதக் கட்டுப்பாட்

டுக்கும் உட்படாமல் வளர்ந்தவர்கள். இப்பேர்ப்பட்டவர்களை, ஒரு ஸ்தாபனத்தின்கீழ், ஒன்றுசேர வைத்து, ஒழுங்குடனும், கட்டுப்பாட்டுடனும் கொண்டு வருவது மிகவும் சிரமமாக இருந்தது. ஒவ்வொரு சமயங்களில் 'இது வீண் பிரயாசையோ' என்று அயர்ந்து விட்டுவிடக் கூடிய நிலை வந்தது. ஆனால் பொறுமையும், விடாமுயற்சியும், சிறிதுசிறிதாக எங்களுக்கு நம்பிக்கையூட்டின. மொத்தத்தில், எங்கள் முயற்சி வீண்போகாது என்ற நம்பிக்கை ஏற்படுவதாயிற்று.

தினசரி காலை ஐந்தரை மணிக்கு எழுந்திருக்க வேண்டும். எழுந்திருந்தவுடன் பல் விளக்கிவிட்டுப் பிரார்த்தனை. ஆறு மணியிலிருந்து ஏழு மணிக்குள், இயற்கைக் கடன்களை முடித்துக்கொண்டு, குளித்துவிட்டு, ஏழு மணியிலிருந்து எட்டு மணி வரையில் சர்க்காவில் நூற்க வேண்டும். எட்டுமணிக்குக் காலை ஆகாரம். எட்டரை மணியிலிருந்து, பதினொன்றரை மணி வரையில் பள்ளிப் பாடம். பன்னிரண்டு மணிக்குச் சாப்பாடு. பிற்பகல் இரண்டு மணியிலிருந்து ஐந்து மணி வரையில் தொழில் பயிற்சி. அதற்குப் பிறகு ஏழு மணி வரையில் தேகப் பயிற்சி, விளையாட்டு. ஏழரை மணிக்குச் சாப்பாடு. இது தினசரி கால அட்டவணை. சுதந்திரமாக ஊர் சுற்றிக் கொண்டு, இரவில்லை, பகலில்லை, கண்ட நேரத்தில் கண்ட இடத்தில் திரிந்து கொண்டிருந்த சிறுவர்களுக்கு இந்தக் கட்டுப்பாடு ஆரம்பத்தில் சிறை மாதிரி தோன்றியது. ஆனால் நாட்கள் ஆக ஆக, அவர்களுக்கும் இந்தக் கட்டுப் பாடு பிடிக்க ஆரம்பித்துவிட்டது. மனிதனின் நடத்தையே ஓர் அளவு வழக்கத்திலிருந்தும், பழக்கத்திலிருந்தும் உண்டாவதுதானே ?

ஆனால், அவர்களுடைய குணத்தையும் மனோபாவத்தையும் திருப்புவது என்னவோ, அவ்வளவு சுலபமான காரியமாக இருக்கவில்லை. சமூகம் ஒப்புக்கொண்டு,

அந்தஸ்தோடும், கௌரவத்தோடும் இருக்கும் மனிதர்களே இன்னும் திருந்த வேண்டியிருக்கிறதே. அப்படியிருக்க, இவர்கள் திருந்துவது என்பது முயற்கொம்பைப் போன்ற வீண் முயற்சிதானே என்று ஆயாசப்படுவேன். ஆனால், எங்கள் விடாமுயற்சியும், அன்பும், ஆதரவும், கருணையும் வீண்போகவில்லை. துஷ்டச் சிறுவர்களைத் திருத்துவது, பித்தளையைப் பொன்னுக்கும் ரசவாதம் போன்றதுதான். ஆனால், எவ்வளவுதான் கொடியவனாயிருந்தாலும், அவனிடம் சிறிது இதயமும் இருக்கிறது என்பதை அனுபவத்தில் கண்டுகொண்டேன். 'There is a soul of goodness in things evil' என்றார் ஷேக்ஸ்பியர். எத்தனையோ கொடுமையிருந்தாலும், அதிலும் ஒருதுளி நன்மை இருக்கத்தானே செய்கிறது என்றார். அந்த உயிர் நாடியைத்தான் நான் கண்டுபிடித்து அதைப் பெரிதாக்க முயன்றேன். ஒவ்வொரு சிறுவனின் முன்னேற்றமும், ஒரு பரிசோதனைதான். ஆனால், காபாலி, பெருமாள், கோவிந்து என்ற சிறுவர்களின் சீர்திருத்தம், எனக்கே ஒரு புது அனுபவத்தைக் கொடுத்தது.

காபாலி சண்டைக்காரன். ஒவ்வொருவருடனும் எப்படியோ சண்டைக்குக் கிளம்பிவிடுவான். அவனுடைய அகராதியில் வார்த்தைகள் அனந்தம். சரமாரியாகத்தான் வார்த்தைகளைப் பொழிவான். அவன் நாக்கிற்கு ஓய்வே கிடையாது. அவன் வைதால், எதிராளி சும்மா இருப்பானா? திருப்பி வைதால் அடிதடி. வந்த புதிதில் எல்லோரும் அவனை வெறுக்க ஆரம்பித்தனர்.

"ஸார், இந்தப் பையனைச் செம்மையா உதைக்கணுங்க; காரணமின்றி என்னைத் திட்டிக்கிட்டேயிருக்கான்" என்று புகார் செய்தான் தோட்டக்கார முத்து. ஒருசமயம் பலசரக்குக் கடைக்காரப் பையன், மளிகைச் சாமான்களைக் கொண்டுவந்து கொடுக்கையில், அவனை இவன் கண்டபடி திட்டியிருக்கிறான். அவன் புகார் மனு

ஒன்று எழுதி எனக்கு அனுப்பி வைத்து, மடத்துக்கும் ஒரு நகல் அனுப்பிவிட்டான். அப்படிப் பல தடவைகளில் புகார்கள் மேலும் மேலும் வரவே, காபாலியைக் கூப்பிட்டேன்.

"ஏன் காபாலி, எல்லோரையும் வைது கொண்டு சண்டைக்கு இழுத்துக் கொண்டிருக்கிறாய்?"

"இல்லீங்க ஸார். அவங்கதான் முதல்லே சண்டைக்கு வர்ராங்க. அப்புறம் என்மேல் போடறாங்க. அது சரியா, ஸார்?"

"அவங்க ஏன் உன்னுடன் அனாவசியமா சண்டை பிடிக்க வர்றாங்க?"

"தெரியாது, ஸார்."

"அப்ப நீ அவங்களுடன் சண்டை போடாதே. திரும்பி வையாதே. சரிதானா?"

"ஏன் ஸார் வையக்கூடாது?"

"காபாலி, உனக்கு ஒன்று சொல்கிறேன். நீ எதற்கு வைகிறாய் தெரிகிறதா? அதனால், உனக்கு முக்கியத்துவம் ஏற்படுகிறதாக நீ நினைக்கிறாய். உன்னைப்பற்றிப் பேசுகிறவர்கள் உன்னைப்பற்றிக் குறைசொல்கிறார்கள் என்றால், அது உன் கௌரவத்தை உயர்த்திவிட்டதாக நீ எண்ணிக் கொண்டிருக்கிறாய். நான் எல்லோருக்கும் சொல்லி விட்டேன். ஒருவரும் நீ எது சொன்னாலும் காதிலேயே போட்டுக்கொள்ளப் போவதில்லை! அப்பொழுது என்ன ஆகும்? ஒரு பழமொழி கேட்டிருக்கிறாயா? 'சூரியனைப் பார்த்து நாய் குரைக்கிறது' என்று. அதுபோல உன் வசவை யாரும் லட்சியம் செய்ய மாட்டார்கள். நீ பைத்தியக்காரன் மாதிரி வைது கொண்டு இருக்க வேண்டியது தான். புரிகிறதா?"

"கேட்காத போனாப் போறாங்க."

"அது மட்டுமல்ல, காபாலி. நீ எனக்கு ஒரு பழம் கொடுக்க நினைக்கிறாய். பழத்தை என் முன் நீட்டுகிறாய். நான் என் கையை நீட்டி வாங்கிக்கொள்ளவில்லை. அப்பொழுது பழம் யாருடையது?"

"என்னுடையதுதான்."

"அதுபோலத்தான் உன் வசவுகளும். யாரும் உன் வசவுகளைக் கவனிக்காவிட்டால், அவை உன்னிடம் இருக்கும். அதாவது நீ வேறு ஒருவரையும் வைவதாக ஆகாது. உன்னையே நீ வைது கொள்கிறாய். இப்பொழுது புரிகிறதா?"

காபாலி சிறிது நேரம் பேசாமல் யோசனையில் நின்றான்.

"காபாலி, இனிமேல் ஒருவரையும் வையாதேப்பா" என்று அன்புடன் சொன்னேன்.

"இல்லை, ஸார்" என்று அவன் மெதுவாகக் கூறினான். அன்றிலிருந்து வைவதை நிறுத்திக்கொண்டான்.

பெருமாள் போக்கு வேறு தினுசு. அவன் ஜேப்படி நண்பர்களிடையே வளர்ந்தவன். ஆகவே திருடுவதில் கைதேர்ந்தவன். பேனவைத் திருடுவான். யாராவது வெளி மனிதர்கள் வந்தால், அவர்களுடைய செருப்பு, குடை இவற்றைத் திருடுவான். பள்ளிக்கு வெளியேயுள்ள கடைகளில் ஏதாவது திருடுவான். அவன் எப்பொழுது வெளியே போகிறான், எப்பொழுது வருகிறான் என்பதைக் கண்டு பிடிக்க முடியாது. திருட்டுப் பொருளைப் பணமாக்கி, சிகரெட் குடிப்பான். பிரியாணி வாங்கித் தின்பான். சூதாடித் தொலைப்பான். இவனுடைய அட்டகாசங்கள் மிகவும் தொந்தரவாகத்தான் இருந்தன. ஒரு நாள் அவனைக் கூப்பிட்டேன்.

"என்ன பெருமாள், எப்பொழுதும் உன்மேல் குற்றம் சாட்டுகிறார்களே?"

"என்ன ஸார், சொல்றுங்க?"

"நீ திருடுகிறாயாம். ஜேப்படி அடிக்கிறாயாம்."

"யார் ஸார் பாத்தாங்க?"

"பாத்தா விட்டிருப்பாங்களா?"

"பாக்காமச் சொல்லலாங்களா?"

"பெருமாள், நீ புத்திசாலி. அதனால்தான் இப்படி சாமர்த்தியமாகப் பேசுகிறாய். பார்க்காமல் சொல்லக் கூடாதுதான். ஆனால் அவர்கள் அபாண்டமாக உன்மேல் புகார் செய்யவில்லை. தக்க ஆதாரங்களைக் கொண்டு ஊகித்துத்தான் உன்மேல் புகார் செய்கிறார்கள். ஆனால் உன்னைத் திருடன் என்று ருசிப்பிக்க உன்னை இங்கே சேர்க்கவில்லை. உனக்குத் தெரியும். திருடுவது சுலப மான காரியமல்ல. அதற்கும் தந்திரம் வேண்டும். புத்தி சாலித்தனம் வேண்டும். நீ கெட்டிக்காரன். அதனால்தான் அகப்பட்டுக் கொள்ளவில்லை. அகப்பட்டுக் கொண்டால், தண்டனை, அவமானம். இதே சாமர்த்தியத்தை நல்ல வழியில் திருப்பினால், நிரந்தரமான வருவாய், புகழ், மகிழ்ச்சி. உனக்கு தண்டனை, இகழ், பழி வேண்டுமா? சுகம், புகழ், மகிழ்ச்சி வேண்டுமா?"

"சுகம்தான் வேண்டும், ஸார்."

"அப்பொழுது நீ நல்லவனாக மாறணும். நீ ரெயில் எஞ்ஜின் பார்த்திருக்கியா?"

"ஆமாம், பூதாகாரமாக நெருப்பைக் கக்கிக்கொண்டு சீறிக்கொண்டு வரும்."

"அதை ஓட்டறவரைப் பார்த்திருக்கியா?"

"பார்த்திருக்கேன், ஸார்."

"அவர் மாதிரி ஆகணும்னு ஆசைப்பட்டிருக்கியா?"

"ஆமாம், ஸார்."

"சர்க்கஸ் பார்த்திருக்கியா?"

"ஆம், ஸார்."

"அதிலே புலி, சிங்கம் இவற்றை அடக்கி விளையாடுறாரே மாஸ்டர், அவரைப் பார்த்திருக்கியா?"

"ஆம், ஸார்."

"அவருமாதிரி இருக்கணும்னு ஆசைப்பட்டிருக்கியா?"

"ஆம், ஸார்."

"மாஜிக் வேலை பார்த்திருக்கியா?"

"ஆமாம், ஸார்."

"குல்லாயிலிருந்து புறா, வாயிலிருந்து நூல் இப்படி அதிசயங்கள் செய்வாரே. அவர் மாதிரி செய்யணும்னு ஆசைப்பட்டிருக்கியா?"

"ஆமாம், ஸார். அதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?"

"நீ புத்திசாலி. யார் எல்லாம் சிரமமான, மற்றவர்வர்கள் செய்ய முடியாத காரியத்தைச் செய்தார்களோ, அதை எல்லாம் செய்ய ஆசைப்பட்டிருக்கிறாய். அது போலத்தான், உன் நண்பர்கள் திருடுவதைப் பார்த்து அதுவும் ஓர் அரிய பெரிய காரியமென்று செய்து வந்திருக்கிறாய். அதிலே ஒன்றும் சாமர்த்தியம் இல்லை. நல்லவனாக இருப்பதுதான் சாமர்த்தியம் என்றால், நீ அதை விட்டுவிடுவாய். சந்தேகமில்லை. நம் ஹாலில் இரண்டு படங்கள் இருக்கே, அவை யாருடைய படங்கள் சொல்லு, பார்க்கலாம்."

"தெரியாதா, ஸார். ஒன்று, மகாத்மா காந்தி; மற்றொன்று, ராமகிருஷ்ண பரமஹம்ஸர்."

"அவர்களின் படத்தை ஏன் மாட்டி வைத்திருக்கிறது தெரியுமா?"

"தெரியாது, ஸார்."

"அவர்கள் காட்டிய வழியிலே நடப்பதற்குத்தான்."

"அப்படியா, ஸார்!"

"நல்லவர்களாக இருக்க வழிகாட்டியிருக்கிறார்கள். அப்படி நடக்க வேண்டும். அது சுலபம் என்று நினைக்காதே. எஞ்ஜின் டிரைவர், ரிங் மாஸ்டர், மந்திரவாதி இவர்கள் செய்வதையெல்லாம் கற்றுக்கொண்டுவிடலாம். காந்தி, ராமகிருஷ்ணரைப் பின்பற்றி நல்லவர்களாக வாழ்வது, சுலபமான காரியமல்ல."

"ஏன் ஸார்?"

"எஞ்ஜின் பூதம் இருக்கே, அதைவிட மனோபூதம் வேகமானது. அதை அடக்கியவர்கள். எங்கே, ஒரு நிமிஷம் ஒன்றையும் நினைக்காமல் சும்மா இருந்து பார்."

"முடியவில்லை, ஸார்."

"இந்த இருவரும் கோபம், ஆசை என்ற காட்டு மிருகங்களை வென்றவர்கள். நான் உன்னை வைகிறேன், அடிக்கிறேன்; என்மேல் கோபம் கொள்ளாமல் இருப்பாயா?"

"முடியாது ஸார்."

"அந்த மந்திரவாதியைப் பார்த்திருக்கியே, அவரை விடப் பெரிய மந்திரவாதிகள் இவர்கள்."

"அப்படியா?"

"இவர்கள் செய்த அற்புதம் எப்படிப்பட்ட மனிதர்களையும், நல்லவர்களாக்கியதுதான். அதனாலே, ரிங் மாஸ்டர் போட்டோவை வைக்கவில்லை; மந்திரவாதி போட்டோவை வைக்கவில்லை; ரொம்ப ரொம்ப புத்தி சாலித்தனமாகத் திருடறவங்க போட்டோவையும் வைக்கவில்லை. இவர்களை நன்றாகப் பார்த்துக்கொண்டு நில். நீ நல்லவனாகாமல் இருக்கிறாயா, பார்ப்போம்."

பெருமாள் ஒரு நிமிஷம் பார்த்துக் கொண்டே நின்றான். அந்த மகாபுருஷர்கள் அவனுக்கு எப்படி

அருளிஞர்களோ, என்னவோ; அவன் முகத்தில் சிறிது மாறுதல் தோன்றியது.

"இனிமேல் திருடமாட்டேன், ஸார்" என்று சொன்ஞன். சொல்லிவிட்டு, அந்த இரு படங்களுக்கும் தண்டம் சமர்ப்பித்தான். உள்ளே சென்ருன். அதற்குப் பிறகு அவனைப்பற்றிய புகார்கள் சிறிதுகூட எழவேயில்லை. இதுவும் ராமகிருஷ்ணரும், மகாத்மாஜியும் நிகழ்த்திய எத்தனையோ அற்புதங்களில் ஒன்று என்றே முடிவுகட்டினேன். பெருமாளின் மாறுதல் எனக்கே ஆச்சரியத்தைக் கொடுத்தது.

கோவிந்துவின் வரலாறு மற்ருருவிதம். அவன் தந்தை மிகவும் கொடியவன். குடிகாரன். வேலை செய்ய மாட்டான். வேலை செய்து மனைவி கொண்டுவரும் பணத்தைப் பிடுங்கிக்கொண்டு குடிக்கப் போய்விடுவான். குடித்துவிட்டு வந்து மனைவியையும் மகனையும் நையப் புடைப்பான். கோவிந்து சிறு வயதிலிருந்தே சுகத்தைக் கண்டதில்லை: சிரிப்பைக் கண்டதில்லை; மகிழ்ச்சியைக் கண்டதில்லை. தகப்பன் வந்துவிட்டானே என்று கோவிந்து கதி கலங்குவான். இவ்வளவு தொல்லைகளையும் கொடுத்துவிட்டுக் கடைசியில் வேருெரு பெண்பிள்ளையைக் கூட்டிக்கொண்டு தகப்பன் போய்விட்டான். அதிலிருந்து கோவிந்துவுக்குச் சிறிது நிம்மதிதான். ஆனுல் தாய் நோய்வாய்ப்பட்டுவிட்டாள். வேலை செய்ய முடியவில்லை. படுத்த படுக்கையாகக் கிடக்கவேண்டி வந்துவிட்டது. கோவிந்து ஏதோ வேலை செய்து இரண்டு காசு கொண்டு வருவான். ஏதோ ஒருவிதமாய்க் கஷ்டத்துடன் வாழ்க்கை நடந்தது. ஒருநாள், கோந்தையும் போஸ்டரையும் எடுத்துக்கொண்டு, ஒவ்வொரு சுவராய் ஒட்டிக்கொண்டிருந்தான். ஏதோ விளம்பரக் கம்பெனியில் வேலை. அவன் அன்று வீடு திரும்பியபொழுது பக்கென்று அவன் நெஞ்சம் துணுக்குற்றது. சேரிக்குடிசைகள்

எல்லாம் தீக்கு இரையாகிச் சாம்பலாயிருந்தன. உடல் நோயால் படுத்த படுக்கையாகக்கிடந்த அவன் தாயின் எலும்புக்கூடு படுத்தபடி கிடந்தது. அந்த எலும்புக் கூட்டைப் பார்த்தபடியே நின்றான். அவன் கண்ணி லிருந்து நீர் பெருகவில்லை. அதற்குப் பதிலாக நெருப்புத் தான் பிறந்தது. அப்பொழுது முதற்கொண்டு உலகத் தையே எரித்துவிட வேண்டும் என்ற எண்ணம்தான் அவன் மனத்தில் தலைதூக்கி நின்றது. அது முதற் கொண்டு உலகத்துக்கு 'என்ன தீங்கு செய்யலாம். எப்படித் தீங்கு செய்யலாம், யாரை ஹிம்சிக்கலாம், எப்படி ஹிம்சிக்கலாம்' என்பதே அவன் நினைவில் சதா ஊறிக்கொண்டு நின்றது. கொடுமையின் வேலையைக் கூட விஸ்தரித்துக்கொண்டு போக ஆரம்பித்தான். தீக்கொளுத்த நல்ல இடம் தேடி, நெருப்பு வைப்பான். ஆட்டுக்குட்டி அகப்பட்டுக்கொண்டால், அதன் வயிற்றை இரண்டாகப் பிளந்து வேடிக்கை பார்ப்பான். தெரு விலே போகும் நாய்க்குட்டியைப் பிடித்துச் சித்திரவதை செய்வான். இதைப் பார்த்தவர்கள் யாராவது அடித்து விட்டால், அதைப் பொருட்படுத்த மாட்டான்; அழவும் மாட்டான். இன்னும் அடிக்க மாட்டார்களா என்று எதிர்பார்ப்பதுபோல் நிற்பான். சூடுபோட்டால்கூட ஆவென்று கூச்சல் போடமாட்டான். இப்படிப் பட்டவனை எப்படிச் சீர்திருத்துவது?

கோவிந்துவை அடிக்கடி கூப்பிடுவேன். எனக்கு வந்த பலகாரங்களை அவனுக்குத் தருவேன். பேச்சுக் கொடுப்பேன். அவன் வாயைக் கிண்டுவேன். என்னிடம் அவனுக்கு நம்பிக்கை ஏற்பட என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்வேன். அன்பையும் ஆதரவையும் கண்டிராத அவன் சிறிது சிறிதாகத் தன் கவசத்தைக் கழற்ற ஆரம்பித்தான். அவன் காட்டிய வெறுப்பு, கொடுமை எல்லாம் ஒரு முகமூடி போன்ற

கவசந்தான். தற்காப்புச் செய்துகொள்ள வேண்டும் என்ற பயத்தின் அடிப்படையில் ஏற்படக்கூடியதுதான்.

"கோவிந்து, உன் மனோபாவம் எனக்கு நன்றாக விளங்குகிறது. உன்பேரில் குற்றம் ஒன்றுமில்லை. உன் தகப்பன் சரியாக நடந்து கொள்ளவில்லை. உன் தாயாரிடம் உனக்கு அன்பு இருந்தது. அவளோ நோயாளி. இருந்தாலும் அன்பையும் ஆதரவையும் காட்டிய அந்த ஒரு ஜீவனையும் நெருப்புக் கொண்டுபோய்விட்டது. ஆகவே உலகத்தில் ஒருவரையும் உனக்குப் பிடிக்கவில்லை. உலகத்தின்மேலேயே வெறுப்பாகிவிட்டது. உலகத்தையே நெருப்பு வைத்து அழித்துவிடலாமா என்று உனக்குத் தோன்றுகிறதில்லையா?"

கோவிந்து பதில் பேசவில்லை. பேசாமல் நின்று கொண்டிருந்தான்.

"அப்படி நீ வெறுப்பதில் தப்பு ஒன்றுமில்லையே."

அப்பொழுதும் கோவிந்து பேசாமல் இருந்தான்.

"ஏன் தெரியுமா?"

அப்பொழுது தலைநிமிர்ந்து என்னை ஊடுருவிப்பார்த்தான்.

"நீ அப்படி இருப்பதனாலேயே நீ நல்லவனாக முடியும் என்று நம்புகிறேன்" என்றேன்.

"என்ன ஸார்?" என்றான் கோவிந்து.

"பொய்யில்லை, கோவிந்து, நான் எதற்காக உன்னிடம் பொய் சொல்ல வேண்டும்? வெறுப்பு என்பது என்ன தெரியுமா? அது அன்பின் மறுபக்கமேதான். தீவிரமாக வெறுப்பவன் தீவிரமாக அன்பு செய்ய முடியும்; அதைத்தான் சொல்ல வந்தேன்."

"எப்படி, ஸார்?"

"நான் ஒரு பானையை உடைக்கிறேன். பதிலுக்கு நீ ஒரு பானையை உடைக்கிறாய். அப்பொழுது கணக்குச்

சரியாயிருக்கிறது. ஆனால் உன் பாஷை உனக்குத் திரும்பி வருகிறதா ?''

"இல்லீங்க, ஸார்."

"உன் தந்தை உனக்கும் உன் தாய்க்கும் கெடுதல் செய்தார். சமூகம் உனக்குக் கெடுதல் செய்தது. அதற்காக நீ சமூகத்திற்கு, உலகத்திற்குக் கெடுதல் செய்ய வேண்டுமென்கிறாய். ஆனால் நடப்பது என்ன தெரியுமா? உலகத்தை உன்னால் அழிக்க முடியப்போவதில்லை. ஆனால் நீ அழிந்து போகிறாய். 'தன்வினை தன்னைச் சுடும்' என்று கேட்டதில்லையா? அதுபோல உன் வெறுப்பு, உன்னையே கெடுத்துக் கொண்டிருக்கிறது. ஆனால் உன்னை வேறு ஒருவரும் காப்பாற்ற முடியாது; அது உன்னால்தான் முடியும்."

"ஆ......" என்று சந்தேகத்துடன் கேட்டான் கோவிந்து.

"உன் தீய செயல்களை விட்டுவிட்டால், நல்லவனாக ஆக முடியும். அப்பொழுது உன் வாழ்விலே அமைதி உண்டாகும்; உன் வெறுப்பு அன்பாகும். தந்தைக்கு எதிரிடையாக நல்வாழ்வு வாழ்ந்து காட்ட முடியும். உலகத்திற்கும் நீ நல்லது செய்ய முடியும். உன்னையும் உயர்த்திக்கொண்டு, உலகத்தையும் உயர்த்த முடியும். அன்பினால். அது உன்னால் முடியும். செய்வாயா?'' என்றேன். கோவிந்துவின் கண்களில் இரு நீர்த் துளிகள் தோன்றின. அதுமுதல் சிறிது சிறிதாக அவன் மாறினான்.

இப்படி அந்தப் பள்ளி எனக்கும், சரோஜாவிற்கும் ஒரு புது ஊக்கத்தையும் இன்பத்தையும் கொடுத்தது; மனத்திற்கு மகிழ்ச்சியையும் சாந்தியையும் கொடுத்தது.

# 34

மோகன் ஓர் அழைப்புக் காகிதத்தைக் கொண்டு வந்தான். "என்னடா அது?" என்றேன்.

"எங்கள் பள்ளியின் ஆண்டு விழா. அதற்குப் பெற்றோர்களுக்கு அழைப்பு. உங்கள் இரண்டு பேரை யும் அழைத்து வரச்சொல்லி, என்னிடம் இந்த அழைப் பைக் கொடுத்திருக்கிறார் ஆசிரியர்."

"பரிசுகள்கூட வழங்குகிறாப்போல இருக்கிறதே" என்று சொல்லிவிட்டு, சரோஜாவிடம் பத்திரிகையைக் கொடுத்தேன்.

"பெரிய விழாதான். கல்வி மந்திரியே வருகிறாப் போல இருக்கே."

"ஆம், அம்மா, ரொம்ப விமரிசை. பெரிய பந்தல். அழகான அலங்காரம். ஏகப்பட்ட நாற்காலிகள், பாண்டு வேறு..." என்று குதூகலத்துடன் சொன்னான் மோகன்.

"உனக்கு ஏதாவது பரிசு உண்டா?" என்றாள் சரோஜா.

"இல்லை" என்றான் மோகன்.

"அப்பொழுது ஊரார் வீட்டுப் பிள்ளைகளுக்குக் கொடுக்கிற பரிசைப் பார்ப்பதற்கு நாங்கள் வருவானேன். நீ ஏன் பரிசு வாங்கவில்லை?"

"அதிர்ஷ்டமில்லை."

"பார்த்தியளா? எதற்கெடுத்தாலும் அதிர்ஷ்டம் என்று சொல்லக் கற்றுக்கொண்டு விட்டான். தன் தோல்விக்கு அதிருஷ்டத்தைக் கூப்பிடுவது, கையாலாகாதவன் காரியமல்லவா?"

"அதிர்ஷ்டந்தான், அம்மா. வேறு ஒன்றுமில்லை போன வருஷம் மூன்றே மார்க்குகள் அதிகம் வாங்கியிருந்தால், இரண்டாவது பரிசு எனக்குக் கிடைத்திருக்கும். இந்த வருஷம் ஒரே மார்க் வித்தியாசத்தில் வேறு ஒருவன் அடித்துக் கொண்டு போய்விட்டான். இதற்கு அதிர்ஷ்டம் என்று சொல்லாமல் வேறு எதைச் சொல்வது?"

"இன்னும் அதிக முயற்சி எடுத்துக்கொண்டு படிக்க வேண்டும். ஒரு மார்க் வித்யாசத்தில் ஏன் போக வேண்டும்? இந்த வருஷம் அவனை விடப் பத்துப் பதினைந்து மார்க் அதிகம் வாங்கும்படியாக முனைந்து படி. அப்பொழுது அதிர்ஷ்டம் குறுக்கிடுகிறதா பார்க்கலாம். இந்தக் காலத்தில் எல்லாவற்றிலும் முதல்வனாக இருந்தாலே ஒன்றும் கிடைக்கவில்லை. அரைகுறையாக இருந்தால் உருப்பட முடியாது?"

மோகனின் முகத்தில் சோக ரேகை படர்ந்தது.

"சரி, நேரமாகிவிட்டது. இனிமேல் நன்றாய்ப் படி. பள்ளிக்கு நேரமாகிவிட்டது. தயார் செய்து கொள்" என்றேன். அவனும் தயார் செய்துகொண்டு உடனே கிளம்பினான்.

"சரோஜா, மோகன் இருக்கையில் நான் அவன் பக்கமாகவும் உன்னை எதிர்த்தும் பேச விரும்பவில்லை. நீ சொல்வது என் அப்பாவை நன்றாக ஞாபகப்படுத்துகிறது. அவரும் இப்படித்தான். 'மார்க் வாங்கினாயா? முதல்வனாக வந்தாயா' — இதையே ஜபித்துக்கொண்டிருப்பார். நானும் பெரிய பரீட்சைகளில் முதல் வகுப்பில் தேறியிருக்கிறேன். முதல்வனாக வந்திருக்கிறேன்.

அதனால் என்ன? பரிசு வாங்குவதும், மார்க்குகள் வாங்குவதும்தானா படிப்பின் பயன்?"

"படிப்பின் பயன்தான் என்ன என்று சொல்லப் போகிறீர்கள்?"

"நான் இரண்டாம் படிவத்தில் படித்துக்கொண்டிருந்த காலத்தில், காஞ்சிப் பெரியவர்கள் பள்ளிக்கு விஜயம் செய்தார்கள். அப்பொழுது அவர்கள் மாணவருக்குக் கொடுத்த அறிவுரை இன்னமும் என் மனத்தில் பசுமையாக இருக்கிறது."

"என்ன சொன்னார்கள்?"

"சம்ஸ்கிருதத்தில் உள்ள ஒரு சுலோகத்தை எடுத்துச் சொன்னார்கள். 'வித்யா ததாதி விநயம்-விநயாத் யாதி பாத்ரதாம் பாத்ரத்வாத் தனம் ஆப்னோதி-தனாத் தர்மம் ததஸ்ஸுகம்?' அதாவது வித்தை விநயத்தைக் கொடுக்கிறது. விநயம் நல்ல குணத்தைத் தருகிறது. நல்ல குணம் செல்வத்தைக் கொடுக்கிறது. செல்வத்திலிருந்து தர்மம், தர்மத்திலிருந்து சுகம். எல்லோரும் வாழ்க்கையில் விரும்புவது சுகந்தான். அது தன்னடக்கத்திலிருந்தே உண்டாகிறது. வினோபா பாவே, பண்பு இருந்தால் போதும், படிப்புக்கூடத்தேவையில்லை என்பதற்கு ஓர் அழகான உதாரணம் கொடுத்திருக்கிறார்."

"என்ன சொல்கிறார்?"

"முகம்மது பைகம்பர் என்பவர் சிறந்த பக்தர். அவர் கடவுளை நேரில் காண விரும்பினார். கடவுள் அவருக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினாராம். பைகம்பருக்குப் படிக்கத் தெரியாதாகையால், 'ஆண்டவனே, நீங்கள் எனக்குக் கடிதம் எழுதி அனுப்பியிருக்கிறீர்களே; படிக்கத்தெரியாதே' என்று இறைஞ்சிக் கேட்டுக்கொண்டாராம். உடனே கடவுள் அவருக்குக் காட்சி அளித்தாராம். அப்பொழுது முகம்மது பைகம்பர் சொன்ன

ராம்; 'எனக்கு எழுதப் படிக்கத் தெரிந்திருந்தால், கடவுள் காட்சி கிடைத்திருக்காது. கடிதத்தைப் படித்து விட்டிருப்பேன். எழுத்து வாசனை இல்லாததால்தான் கடவுளை நேரிலேயே கண்டேன்' என்றூராம். இதன் உட்பொருள், ஒருவரும் படிக்க வேண்டாமென்பதில்லை. படிப்பு வேறு, பண்பு வேறு என்பதைக் காட்டவே இந்த உதாரணம். நல்ல அறிவையும், ஒழுக்கத்தையும் கொடுக்காத படிப்பு, ஒரு படிப்பு ஆகாது. பார்க்கப்போனுல், படித்தவனே கற்க வேண்டிய அநேகம் பாடங்கள் இருக்கின்றன. தாயுமானவர் பாட்டு ஞாபகமிருக்கிறதா? ஞாபகப்படுத்துகிறேன், கேள்.

கல்லாத அறிவு மேற்கேளாத கேள்வியும்,
கருணை சிறிதேதுமிலாக்
காட்சியும், கொலை களவு கட்காமம் மாட்சியாக்
காதலித்திடு நெஞ்சமும்
பொல்லாத பொய் மொழியும் அல்லாது நன்மைகள்
பொருந்துகுணம் ஏதும் அறியேன்
புருடர் வடிவானதேயல்லாது கனவிலும்
புருடார்த்தம் ஏதுமில்லேன்
எல்லாம் அறிந்த நீ அறியாததன்றெனக்
கெவ்வண்ணம் உய்வண்ணமோ
இருளை இருள் என்றவர்க்கொளிதாரகம்
எனக்கு நின் அருள் தாரகம்
வல்லான் எனும் பெயருனக்குள்ளதேயிந்த
வஞ்சகனையாள நினையாய்
மந்த்ர குருவே, யோக தந்த்ரகுருவே, மூலன்
மரபில் வருமௌன குருவே.

ஆகவே படித்தவன் என்பதைவிட நல்லவன் என்பதே மேல். வல்லவன் என்பதைவிட நல்லவன் என்பதே மேல். அதனுல்தான் 'நல்லாரொருவர் உளரேல் அவர்

பொருட்டெல்லார்க்கும் பெய்யும் மழை' என்று சொல்லியிருக்கிறார்கள்."

"நல்லவனாயிருந்தால் மாத்திரம் போதும் என்கிறீர்களா?"

"நல்லவனாக இருப்பது என்பது அவ்வளவு சுலபமான காரியமல்ல. ஒரு சீனப் பழமொழி சொல்கிறது. 'உலகத்திலே இரண்டே பேர்தான் நல்லவர்கள். ஒருவன் இறந்துவிட்டான். மற்றவன் பிறக்கவில்லை' என்று. மகாத்மா இறந்தவுடன் பெர்னார்ட் ஷா சொன்னார்; 'நல்லவனாயிருப்பது எவ்வளவு ஆபத்தானது?' என்றார். திறமையா பண்பா, வல்லவனா நல்லவனா— என்பதற்கு, காந்திஜியின் உதாரணம் ஒன்றே போதும். அரசியலில் அவரைவிட நிபுணர்கள் இருந்திருக்கிறார்கள். பேச்சில் அவரைவிட வல்லவர்கள் இருந்திருக்கிறார்கள். புலமையில் அவரைவிடப் பெரியவர்கள் இருந்திருக்கிறார்கள். ஒரு சமயம், மகாத்மாஜி, சீனிவாச சாஸ்திரிக்கு எழுதிய கடிதத்தில் உள்ள பிழைகளைப் பழைய வாத்தியாரானசாஸ்திரி சுட்டிக்காட்டியிருந்தார். அதையும் காந்திஜி 'ஹரிஜன்' பத்திரிகையில் பிரசுரித்தார். ஆனால் இவ்வளவு திறமைசாலிகளும், வல்லவர்களும், காந்திஜிக்குக் கட்டுப்பட்டு இருந்தார்கள். ஏனென்றால், மகாத்மா நற்பண்புகளைக் கொண்ட நல்லவராயிருந்ததால்தான். நாம் இருவரும், இயன்ற அளவு காந்தி காட்டிய வழியில் போகிறவர்கள். நம்முடைய பையனும், அந்த வழியில் வர வேண்டுமென்பதுதான் என் கவலை. வாழ்க்கையில் இன்றியமையாத சத்யம், அஹிம்சை என்ற இரண்டையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, மகாத்மா வழி காட்டியிருக்கிறார். இவற்றைப் பின்பற்றி நம் மோகனும் நல்லபையன் என்று பெயரெடுப்பானாகில் அதில்தான் நான் பெருமைப்படுவேன். அவன் வாங்கும் மார்க்குகளினால் அல்ல."

"ஏன், அதில் என்ன சந்தேகம்? அவனும் நம்மைப் போலத்தானே இருப்பான். நம் வாழ்க்கை முறையைத் தானே அவனும் பின்பற்றுவான்."

"அப்படிச் சொல்லிவிடாதே. இந்தக் காலத்து லட்சியங்கள், மதிப்புகள் எல்லாம் வேகமாக மாறிக்கொண்டு வருகின்றன. நல்லவனுயிருப்பது கேவலம் என்று நினைப்பவர்கள்கூட இருக்கிருர்கள். சாது என்ருல், அசடு என்பதற்கு மறு பெயர் என்ற அளவுக்கு இருக்கிறது."

"நம் வாழ்க்கையின் லட்சியமும், நாம் இப்பொழுது செய்து வரும் சேவையும், இந்தக் குறிக்கோள்களை அடிப்படையாகக் கொண்டதாகத்தானே இருக்கின்றன?"

"அதனுல்தானே, எனக்கு மனநிறைவும் ஆத்ம திருப்தியும் இருக்கின்றன."

நேரமாகிவிட்டபடியால், எங்கள் விவாதத்தை இத்துடன் முடித்துக் கொண்டோம். சரோஜா ஏதோ குறிப்புகள் எடுத்துக் கொண்டிருந்தாள். நான் ஒரு பத்திரிகைக்குக் கட்டுரை எழுதிக்கொண்டிருந்தேன்.

இரவு பள்ளியிலிருந்து திரும்பி வந்த மோகன் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஓடோடியும் வந்தான் "எனக்கும் பரிசு உண்டு. அப்பா" என்று சொல்லிக்கொண்டே, ஒரு புத்தகத்தை நீட்டி, "இது எனக்குக் கிடைத்த பரிசு, அப்பா" என்ருன். புத்தகத்தைப் பிரித்தேன். 'மோகன் பத்தாவது படிவம். நன்நடத்தைக்காக' என்றிருந்தது.

"இது என்னடா, புதிராயிருக்கு. அப்பொழுது சொல்லவில்லையே?"

"எனக்குத் தெரியாதப்பா. பல நாட்களுக்கு முன்பு எங்கள் வகுப்பிலே யார் நல்லவன் என்பதைச் சீட்டில் எழுதிக் கொடுக்கச் சொன்னுர்கள். எங்கள் வகுப்பில் எல்லோரும் என் பெயரையே குறிப்பிட்டிருக்கிருர்கள்

ஆனால் முதலில் சொல்லவில்லை. பரிசு கொடுக்கு பொழுது என் பெயரைக் கூப்பிட்டதைக் கண்டு எனக்கே ஆச்சரியமாயிருந்தது.''

''போகட்டும். நல்லவன் என்று பெயர் எடுத்து விட்டாய். அதுதான், நான் வேண்டியது. அதைத்தான் அம்மாவிடம் காலையில் சொல்லிக்கொண்டிருந்தேன் சரோஜா, உனக்கும் உன் பிள்ளை வெறுங்கையாக வரவில்லை, பரிசுடன் வந்திருக்கிறான் என்பதில் திருப்தியாக இருக்கும் இல்லையா?''

''சந்தோஷந்தான். ஆனால் படிப்பிலும் அடுத்த வருஷம் அவன் பரிசு வாங்கட்டும்.''

''சரிதான், என் நீள உபன்யாசம் வீண்தான்.''

''இல்லை, இல்லை. அதிலும் முன்னேறட்டுமே.''

''ஆதிசங்கரர் என்ன சொன்னார் தெரியுமா?''

''என்ன?''

''லோகஸ்ய உன் மார்க்கப் ப்ரவிருத்தி நிவாரணம் லோக ஸங்க்ரஹ :—உலகத்திற்கு நன்மை என்பது என்ன தெரியுமா? மக்கள் தவறான பாதையில் போவதைத் தவிர்ப்பதே. மனித நாகரிகத்தின் கதை என்ற சிறந்த புத்தகத்தை எழுதிய வில் டூராண்ட் என்ற தத்துவஞானி சமீபத்தில் சொல்லியிருக்கிறார்; 'இந்தக் காலத்தில் அறிவிலேதான் அளவற்ற மதிப்பை வைக்கிறோம்; குணத்திலே சிறிதளவுதான் வைக்கிறோம். நாம் புத்தியைத் தீட்டுகிறோம்; கட்டுப்பாடுகளைத் தளர்த்துகிறோம் எண்ணத்திலும், செயலிலும் உள்ள புதுமைகளின் மதிப்பை மிகைப்படுத்துகிறோம். அசட்டுத்தனமாக ஒரு புதிய காரியத்தைச் செய்து விடலாம். அறிவோடு இணைந்த புதுக்காரியத்தைச் செய்வது சுலபமல்ல. நம் பழக்க வழக்கங்கள், நம் முன்னோர் பல நூற்றாண்டுகள் பரிசோதித்து ஏற்றுக்கொண்டவை. ஒரு மனிதன், அவன்

வ்வளவு மேதையாயிருந்தாலும் எவ்வளவு அறிவாளியாயிருந்தாலும், அவற்றைச் சோதிக்கும் திறன் உடையவனுக ஆகமாட்டான். மனிதனைவிட மனித குலம் மேலான அறிவைக் கொண்டது ' என்றிருக்கிறர்."

" அழகாகச் சொல்லியிருக்கிறர்."

" இன்னென்று பார், சரோஜா. நானும் நீயும் பிறந்த காலத்தில் ஜெட் விமானம் கிடையாது ; அணுக் குண்டு கிடையாது; விண்வெளிப் போக்குவரத்து இல்லை. இவையெல்லாம் மனிதனின் வளர்ச்சியைக் காட்டுகின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனாலும் மனிதனின் புற வளர்ச்சியைத்தான் காட்டுகின்றன. மனிதனுடைய நன்மை, இந்த வளர்ச்சியில் இல்லை; அவனுடைய அக வளர்ச்சியிலேதான் இருக்கிறது. பெரியாழ்வார் சொன்ஞர் :

பொன்னைக் கொண்டு உரைகல் மீதே
நிறம் எழ உரைத்தான்போல
உன்னைக்கொண்டு என் நாவகம்பால்
மாற்றின்றி உரைத்துக்கொண்டேன்
உன்னைக்கொண்டு என்னுள் வைத்தேன்
என்னையும் உன்னில் இட்டேன்
என் அப்பா. என் இருடீகேசா
என் உயிர்க்காவலனே.

எப்படி இந்த மகா பக்தர் தம்மையே பொன்னுக்கிக் கொண்டாரோ, எப்படித் தம்மையே கடவுளாக்கிக் கொண்டாரோ, அந்த மனமாற்றம் வேண்டும். எல்லோரும் தேவ... க வேண்டும், கடவுளாக வேண்டும்."

" அது சாத்தியமா ?"

"தேவன், கடவுள் என்ற வார்த்தையைக் கண்டு மிரளாதே. எல்லோரும் நல்லவராக வேண்டும். அவ்வளவுதான். அப்பொழுதுதான், புத்தர், ஏசு, காந்தி

இவர்கள் கண்ட கனவு நனவாகும். அப்பொழுது மண்ணில் தோன்றும் வானம்.''

'' நன்றாய்ச் சொன்னீர்கள் ?''

''நீட்சே என்ற அறிஞன் சொன்னான்; 'புழுவிலிருந்து மனிதனாக மாறியிருக்கிறாய். இன்னும் உனக்குப் புழுவின் மனப்பான்மை இருக்கிறது. அதை மாற்றிக் கொண்டு, தேவனாக மாறு' என்றான்.''

'' அழுத்தமாகச் சொல்லியிருக்கிறானே.''

'' அந்த அக வளர்ச்சியில்தான் மனித வளர்ச்சியிருக்கிறது; மனிதனுடைய நன்மையும் இருக்கிறது. யந்திர வளர்ச்சியில் அல்ல.''

மோகன் வாங்கிய பரிசுப் புத்தகத்தை அவனிடம் கொடுத்து, ''ஜாக்கிரதையாக வைத்துக்கொள்'' என்றாள் சரோஜா. மோகன், அம்மாவை மகிழ்ச்சியுடன் பார்த்தான். சரோஜா என்னைப்பார்த்தாள். நான் அவளைப் பார்த்தேன். ''சரோஜா, இந்தப் பரிசு, நமக்குத் தான்'' என்றேன்.

சரோஜா புன்னகையுடன் உள்ளே சென்றாள்.

முற்றும்.

# 1[illegible]9-ஆம் ஆ[illegible] பிரசுரத் திட்டம்

## வழக்க வெளியீடுகள்

**25. மண்ணில் தெரியுது வானம் :**

பிரபல நாவலாசிரியர் ந. சிதம்பர சுப்பிரமணியன் 10 ஆண்டுகளுக்குப் பிறகு எழுதும் புதிய நாவல்.

**26. ஆடும் நாற்காலிகள் ஆடுகின்றன :**

'ஜெயகாந்தன்' தம்முடைய சிறு நாவலை முழுநீள நாடகமாக்கியிருக்கிறார்.

**27. பூனைக் கண் :**

கன்னட நாவலாசிரியர் காலஞ் சென்ற ஸ்ரீமதி திரிவேணி எழுதிய பிரபல நாவலின் தமிழாக்கம்.

**28. தமிழில் உரை நடை :**

இலக்கியம் படைப்பவனின் கலைத்திறனைப் பற்றி தி. ஜ. ர. ஆழ்ந்து ஆராய்கிறார்.

**29. சாயாவனம் :**

எஸ். கந்தசாமி — புது எழுத்தாளர் எழுதும் புதிய நாவல். இதில் ஒரு காடே கதாநாயகன் !

**30. எல்லைக் காவல் :**

நாடு காக்கும் நற்பணி மேற்கொண்டிருக்கும் முப் படைகளைப் பற்றிய வரலாற்றுச் சித்திரம் — படங் களுடன்.

## சிறப்பு நூல்கள் :

**புத்ர – II :** லா. ச. ரா. வின் இந்நூல் உருவாகிக் கொண் டிருக்கிறது.

**நடந்தாய் ; வாழி, காவேரி !** — **தி. ஜானகிராமன், சிட்டி** எழுதிய நூல்.

கலாஸாகரம் ராஜகோபாலின் ஓவிய அழகுடன் உன்னத முறையில் அச்சாகிவருகிறது.

**வீணையே தனம் !**

ஆம், ஓர் இசைக் கனவு ! விரைவில் நனவாகும்.

---

பதிப்பாளர் : BOOKVENTURE, MADRAS-17